4-3

# திருவாய்மொழித் திறன்


பேராசிரியர்

டாக்டர் கு. தாமோதரனுர்

எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,






விற்பனை உரிமை :

பாரி நிலையம்

184, பிராட்வே, சென்னை-600001

முதற்பதிப்பு—ஏப்ரல், 1981

5/28, மாருதி நகர், திருப்பதி—517502
விலை—ரூ. 20.00




## ஆசிரியரின் பிற நூல்கள்

1. வாழ்க்கை விளக்கு
2. Acārya Hṛdayam—A critical Study in English
3. ஆழ்வார் திருவுள்ளம்
4. The Literary Value of Thiruvāymoḻi (Ph. D. Theses)

---

நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ், சென்னை-600 014. தொலைபேசி 82731

4-3

# மதிப்புரை

டாக்டர் வ. சுப. மாணிக்கம்
துணைவேந்தர்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

பேராசிரியர் டாக்டர் தாமோதரன் நன்மரபிற் பழுத்த தமிழறிஞர். முறையாகப் பயின்றபுலமையும் உணர்ச்சி பொதிந்த அறிவு வேட்கையும் வாய்ந்தவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நான் பேராசிரியனாக இருந்தபோது உடன் பணி யாற்றியவர். டாக்டர் பட்டத்திற்குரிய ஆய்வினை என் பார்வையில் முடித்தார். அண்ணாமலைநகரில் தொடங்கிய அவர்தம் ஆய்வுப் பட்டத்து முயற்சி திருப்பதிப் பல்கலைக்கழகம் சென்ற பின்னரே நிறைவெய்தியது. விடாமுயற்சியுடையவ ராதலின் திருப்பதியினின்று அண்ணாமலைநகர் வந்து சிலநாள் தங்கியிருந்து என்னொடு கலந்துரையாடி ஆராய்ச்சியினைச் செம்மை நலம்பெறச் செய்து உரியகாலத்தில் டாக்டர் பட்டம் பெற்றனர். அந்தப் பட்டத்துத் தலைப்பு 'திருவாய்மொழித் திறன்' என அச்சு நூலாக இன்று பிறக்கின்றது. நூல் உருவைக் காணும்போது மகிழ்கின்றேன். நூலாசிரியன் செம்மாந்த உருவத் தினை நூல் காணப் பெறவில்லையே என்று நினைக்கும்போது உள்ளம் கலங்குகின்றேன்.

மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே

என்ற தமிழ்க் கொள்கைப்படி, ஆய்வுப் பெரும் பனுவலை அன்னைத்தமிழுக்கு அருங்கலனாக்கிப் புகழ் கொண்டு மறைந் தனர் தாமோதரனார்.

'திருவாய்மொழித் திறன்' என்ற இந்நூல் இலக்கிய நோக்கில் நம்மாழ்வாரின் தமிழ்மறையை ஆராய்கின்றது. இவ்வாழ்வாரைப் 'புரட்சிக் கவிஞர்' என்று இக்காலத் தொட ரால் அழைப்பர் தாமோதரர். இலக்கியப் பார்வையில் ஆய்வு செய்யினும், திருவாய்மொழி உயிர்நூல் என்ற அடிப்படை

யுணர்வை ஆசிரியர் மறக்கவில்லை. ‘‘மிக்க அவலத்தின் போதும், உள்ளக்களிப்பின் போதும், அளவுக்கு மீறிய செருக்குத் தோன்றிய நிலையினும் எந்நிலையிலும் எனக்கு இந்நூல் நெறி காட்டத் தவறியதில்லை’’ என்று தாமோதரர் தம் வாழ்க்கை யொடு வாய்மொழியை இணைத்துப் பேசுகின்றார். எனவே இவர்தம் இலக்கியநோக்கு வறட்டு நோக்கன்று; வாழ்வுநோக்கு என்ற அடித்தளம் பெறப்படும்.

ஆய்விற் சிலபகுதிகள் நடைமுறைக் கருத்துக்கு மறுப்பாக வும் மாறாகவும் உள்ளன. சமயநூல் என்பதற்காகவோ, முன்னோர்மொழி என்பதற்காகவோ, ஆய்வைத் தாமோதரர் முடக்கிக் கொண்டிலர். நம்மாழ்வார் முறையான நூலறிவு பெற்றவர் என்பதும் உலகியலறிவு நூற்கல்வி முதலியவற்றை அவர்தம் முயற்சியாலேயே பெற்றிருக்க வேண்டும் என்பதும் கதைகள் தெய்வத் தன்மையைக் காட்ட எழுந்தனவே என்பதும் நூலாசிரியர் முடிவாகும். ஆழ்வார் வேறு எந்த திவ்விய தேசத் திற்கும் சென்று சேவிக்கவில்லை என்ற பரம்பரை வரலாறு தாமோதரனார்க்கு உடன்பாடில்லை. ஆழ்வார்கள் பிறந்தநாள் பற்றியவை பின்னையோர் செய்த கற்பனைகளே என்று கூறிக் குருபரம்பரை நூல்களை ஒவ்வார். இவையெல்லாம் தாமோதர னாரின் செவ்விய ஆய்வுரைகளை வெளிப்படுத்துகின்றன.

நம்மாழ்வாரின் அகப்பொருட் பாடல்கள் இந்நூலில் விரிவாக ஆய்வு பெற்றுள. தூதுநெறிகள் வகைபெற்று விளங்கு கின்றன. ஆசிரியரின் பரந்த ஒப்பியற்புலமை அகப் பொருளாய்வில் புலனாகக் காண்கின்றோம். இயற்கைப் புனைவுகளும் உவமைகளும் தெய்வப் பாசுரங்களை இலக்கிய மாக்குகின்றன என்ற திறக்கொள்கை நன்னர் எடுத்துக்காட்டப் பெற்றுளது.

சொல்லுந்திறன், நடையியல் என்ற தலைப்பில் வருங் கருத்துக்கள் மிகையான ஒரு புதிய கோட்பாட்டினை உரப் படுத்த முனைகின்றன. திருவாய்மொழி ஒரு சில தனிப்பாடல் களின் தொகுப்பன்று எனவும் பாடியவரின் ஆன்மீக வளர்ச் சியைக் காட்டும் காப்பியம் எனவும், பொருட்டொடர்நிலைச் செய்யுளாக மட்டுமல்லாமல் சொற்றொடர் நிலையுடைய தாகவும் திருவாய்மொழிக் காப்பியம் பிறந்திருக்கின்றது எனவும் தாமோதரனார் நிலைநாட்ட முயலும் திறங்கண்டு ஆய்வின் கிளர்ச்சியை மதிக்கின்றோம்.

இலக்கிய ஆய்வுக்கு உறுப்பான சொல்லாட்சிகளும் இலக்கண மாட்சிகளும் அணிகளின் நிழல்களும் யாப்பின் ஓசைகளும் பாவினத்தின் ஒலிகளும் தக்க மேற்கோள்களொடு இடம் பெற்றுள. உறழாய்வும் ஒப்பாய்வும் ஆய்வின் நாடிகளாம். ஒருசார் ஒப்பாய்வு என்ற பகுதிக்கண் ஆய்வுப்பரப்புகள் அகலப் படுவதை அறிகின்றோம்.

"திவ்வியப் பிரபந்தப் பாடல்களின் இலக்கியநயம் போதிய அளவு எல்லாத் தமிழர்களாலும் உணரப் பெறவில்லை; அக் குறையின் ஒரு பகுதியைச் சிறிதேனும் நீக்கவேண்டும் என்பது இவ்வாய்வின் குறிக்கோள் என்பர் டாக்டர் தாமோதரனார். அக் குறிக்கோள் செயற் கோளாகி இருப்பதற்குத் திருவாய் மொழித் திறன் ஓர் எடுத்துக்காட்டு.

மதுரை - 21.
5.6.1981.

வ. சுப. மாணிக்கம்

# முன்னுரை

என் கணவர் தம் வாழ்நாளெல்லாம் தம்முடைய ஆத்ம நிறைவுக்காகவும் வைணவ உலகத்துக்காகவும் இந்நூலை உருவாக்கிப் படைக்கவேண்டும் என்ற எண்ணத்தில் முனைந்த பணியே இது. ஆனால் இப்படி அவர் படைத்த இந்தப் படைப்புக்கு முன்னுரை ஒன்று நான் எழுதும் சூழ்நிலை உருவாக்கப்பட்டு இந்த 1981-ஆம் ஆண்டு எனக்காகக் காத்திருக்கிறது என்பதை நான் கனவிலும் எதிர்பார்க்கவில்லை. விதியின் கைப்பாவையாகத் தனித்து ஆக்கப்பட்ட நிலையில் இன்று இந்நூல் உருவாகிறது. ஆனால் அவர் உருவம் நிழல் படமாகி நினைவுகளின் களஞ்சியமாக ஆக்கப்பட்டுவிட்டது.

'சொற்காத்துச் சோர்விலாள் பெண்' என்னும் வள்ளுவர் வாக்கின்படி அவர் செய்யவேண்டிய கடமையை—அவர் எழுத வேண்டிய முன்னுரையை அவருக்காக நான் எழுதுகிறேன்.

'தமிழ் வேதம்' என்றும் தெளியாத மறை நிலங்களையெல்லாம் தெளிவிக்கும் ஞானநூல்' என்றும் சான்றோரால் போற்றி வணங்கப் பெற்ற திருவாய்மொழியின் கலை நலங்களையும் மெய்ப்பொருள் உண்மைகளையும் தெளிவாகத் தருவதே இத்திருவாய்மொழித் திறனாகும். இந்நூல் அச்சு வடிவு பெறத் திருமலை, திருப்பதி தேவஸ்தானத்தார் பெரிதும் உதவினர். அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றி உரித்தாகும்.

மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், இந்த ஆய்வுக்கு மேற்பார்வையாளர் பேராசிரியர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்களுக்கு என் நன்றியும் வணக்கமும் உரியன.

இந்நூலைச் சிறப்புற உருவாக்கித் தந்த நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ்சாருக்கு நன்றியும் பாராட்டும் உரியன.

இந்நூல் இத்தகைய சீரியமுறையில் உருவாகி விளக்கம் பெறப் பல வகைகளிலும் உறுதுணையாக இருந்து அன்போடு உதவிய சகோதரர் திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத்தலைவர் திரு. பொன். சௌரிராஜன் அவர்கட்கு என் அன்பும் நன்றியும் உரியன.

தமிழ் உணர்ந்த குடும்பத்தில் பிறந்து வளர்ந்த என்னை மணந்து என் நெஞ்சில் என்றும் நின்று கமழ்கின்ற என் தெய்வத்துக்கு, குடும்பப் பொறுப்போடு இந்நூல் உருவாக்கி வெளிக்கொணரும் பொறுப்பும் தந்து மறைந்த என் கணவருக்கு நான் அர்ப்பணிக்கும் பூசனை மலரான இந்நூலைத் தமிழ் கூறும் நல்லுலகம் ஏற்று வாழ்த்த வேண்டுகிறேன்.

தா. ஜானகி

## பேராசிரியர் டாக்டர் கு. தாமோதரனாரின் வாழ்க்கைக் குறிப்பு



1980-ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 26-ஆம் நாள் செவ்வாய்க்கிழமை விடியற்காலை 4 மணி அளவில் 'ஐயா ஐயா' என்ற ஓசை கேட்டுப்படுக்கையை விட்டு எழுந்து விளக்கைப் போட்டுவிட்டுக் கதவைத் திறந்தேன். மாணவர் ஒருவர் தேம்பித் தேம்பி அழுதவாறு 'பேராசிரியர் நிலை கவலைக்கிடமாகி விட்டது; மருத்துவ நிலையத்தில் இதய நோயில் துடித்துக் கொண்டிருக்கின்றார்' என்று கூறினார். நண்பர் தேவசங்கீததம்தாடு நிலையம மெசனமறன். அதற்குள், 'வீட்டில் சிறிது ஓய்வு கொள்கிறேன்' என்று நண்பகல் இரண்டு மணிக்குக் கூறிய பேராசிரியர் திரு. தாமோதரனார் மாண்டு கிடந்த காட்சியைக் கண்டேன். தெலுங்கு தமிழ் ஒப்பிலக்கிய ஆராய்ச்சி ஆர்வமும், வைணவ இலக்கியத் தொண்டில் பற்றும்கொண்டு எண்ணற்ற செயல்கள் பல செய்து முடிக்கவேண்டுமென்று கூறிக் கொண்டிருந்த அவரது வாய் மூடிக் கொண்டதைக் கண்டேன். '1971-ஆம் ஆண்டு துவங்கி 1983-ஆம் ஆண்டு வரை தொடரவேண்டிய அவர் ஆசிரியப் பணி இவ்வாறு இடையில் முடிவுற்றதே' எனப் பல்கலைக் கழக ஆசிரியர் குழுவெல்லாம் வாடிவருந்த ஆசாரியன் திருவடியை அவர் அன்று அடைந்துவிட்டார்.

1971-ஆம் ஆண்டு என்னைச் சித்தூரில் சந்தித்த தமிழ் நண்பர் ஒருவர் "பேராசிரியர் தாமோதரனார் அவர்களை அறிவீர்களா?

அவர் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் பதினெரு ஆண்டுகள் பணி புரிந்தவர். 'வாழ்க்கை விளக்கு' என்ற சீரிய நூல் படைத்தவர்; தமிழறிவும் தெலுங்கு ஆர்வமும் கொண்டவர். நம் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கு வந்துள்ளார். நீங்களும் வந்து, நாமெல்லாம் அங்குத் தமிழ் வளர்க்கவேண்டும்' என்று கூறினர்.

இவ்வாறு பதினெரு ஆண்டுகள் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கள் தலைமையின்கீழ் ஆசிரியராகவும் எம்.லிட் ஆராய்ச்சியாளராகவும் தொடர்ந்து பணியாற்றி 'அகன்ற ஆழ்ந்த தமிழ்மொழி இலக்கிய அறிஞர்' 'தற்கால இலக்கியங்களை மேலும் மேலும் கற்கும் ஆர்வலர்' என்றெல்லாம் டாக்டர் தெ.பொ.மீ. அவர்கள் பாராட்டுதலுக்கு உரியவராகி இங்கு வந்த தாமோதரனர் மாணுக்கர்கட்குக் கற்பித்த இலக்கிய இலக்கணத்தொண்டு ஒருபால் இருக்க, அவர் இயற்றிய 'Acharya Hrutayam' 'ஆழ்வார் திருவுள்ளம்' Literary Value of Thiruvoimozhi' ஆகிய சிறந்த வைணவ ஆய்வு நூல்கள் அவர்தம் சமய ஆய்வுப் பணிக்கு அரணுக நின்று என்றும் அவர் புகழை நிலைநாட்டுகின்றன.

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் சேர்வதற்கு முன்னர் தூத்துக்குடி வ. உ. சிதம்பரனர் கல்லூரியில் 1951-ஆம் ஆண்டி லிருந்து 1959-ஆம் ஆண்டுவரை எட்டு ஆண்டுகள் தமிழ்ப் பேராசிரியராகவும் நூலகப் பொறுப்பாளராகவும் பணியாற்றி யுள்ளார். அவர் அங்கே ஆற்றிய தமிழ்ப் பணியின் சிறப்பை, அக்கல்லூரித் தலைவர் பேராசிரியர் எ. எஸ். சீனிவாசராகவன் அவர்கள் திரு. தாமோதரனர் பிரிந்து அண்ணுமலைக்கு வருகின்ற பொழுது உரைத்த பின்வரும் உரைகள் உணர்த்தவல்லன. "அளவற்ற அறிவுடைமையையும் உயர்தரக் கல்வி நிலையையும் அவர் பணியில் இங்குக் கண்டேன்; சிறந்த பேச்சாளர்; மனச் சான்றுடைய ஆசிரியர்; தெளிந்த திட்டமான, முறையான சொல்லாலும் செயலாலும் மாணவரிடத்தும் நிர்வாகத் திடத்தும் புகழோடு விளங்கியவர்; நூலகப் பொறுப்பாளராகவும் இருந்து இந்நிலையத்திற்குச் சிறப்பான சேவை செய்துள்ளார். நல்ல அறிஞராகவும் வல்ல ஆசிரியராகவும் நேர்மையான நன்றியுடைய பணியாளராகவும் திரு. தாமோதரனர் அமைந்து

எங்கள் ஆசிரியர் குழுவுள் முதன்மை பெற்றார். அவரைப் பிரிய இந்தக் கல்லூரி வருந்துகிறது; இவரைப் பெறுகின்ற கல்விக் கழகம் புண்ணியம் செய்ததே ஆகும்.'

இவர் தூத்துக்குடியில் பணிபுரிந்த காலத்தில்தான் தமிழார் வமும் தமிழ்ச் சான்றோரிடத்தே பரிவும் கொண்டு விளங்கிய திருவாளர். என். இராமகிருஷ்ண நாயுடு அவர்களின் மகளார் செல்வி ஜானகியை மணந்து இல்வாழ்வைத் துவங்கினார். அது நல்வாழ்வாக அரும்பி உமா, கண்ணன், கோதை, யசோதா என்னும் நான்கு குழந்தைச் செல்வங்களை நல்கிற்று. விருந்து புறந்தரும் பொன் வாழ்வாகப் பூத்தது; தமிழ்ப் பேராசிரியராகக் காய்த்து வைணவச் சான்றாண்மையாளராகக் கனியும் வாழ் வளித்தது.

வ. உ. சிதம்பரனார் கல்லூரிக்கு வருவதற்கு முன்னர் கோவை, பீளமேடு சர்வ ஜன உயர்நிலைப் பள்ளியில் 1944-ஆம் ஆண்டிலிருந்து ஏழு ஆண்டுகள் தலைமைத் தமிழாசிரியராகத் தமிழப்பணி புரிந்துள்ளார்கள். இந்த நாட்களில்தான் B. O. L. கற்று M.A. பட்டமும் பெற்றார்கள். இதற்கு முன்னர் 1940-ஆம் ஆண்டிலிருந்து 44-ஆம் ஆண்டு வரை திருவையாற்றில் தமிழ் வித்துவான் பயின்று அத்தேர்வில் முதல் தரத்தில் வெற்றி பெற்று ஐந்தாம் ஜார்ஜ் அரசரின் பரிசாகிய ரூபாய் ஆயிரத்தை யும் பெற்றார்கள். அந்நாட்களில் அவருடன் பயின்ற நண்பர் களுள் திரு. எஸ். டி. சுந்தரம் அவர்களும் பேராசிரியர் கு. இராச வேலு அவர்களும் குறிப்பிடத்தக்கவர்கள். மறைந்த நாடக மேதை எஸ். டி. சுந்தரம் அவர்களைச் சொற்பொழிவு ஒன்றுக்கு அழைத்து வந்து, மகிழ்வோடு வருவார் என்று திரு. தாமோதர னார் காத்திருந்த வேளையில் அவர் மறைவுச் செய்தி வந்தது குறித்துப் பெரிதும் கண்கலங்கினார்கள். தான் தலைமைப் பதவி ஏற்ற குறுகிய காலத்தில் தம் நண்பர் திரு. கு. இராசவேலு அவர்களோடு நண்பர் பிறரையும் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்திற்கு அழைத்துப் போற்றிய அவருடைய நட்புணர்வு பாராட்டுதற்குரியது.

1940-ஆம் ஆண்டிற்கு முன்னர் இவர் கல்வி வாழ்க்கை இரு பகுதிகளாக அமைந்துள்ளது. எட்டாம் வகுப்பிலிருந்து பெரிய நாயக்கன்பாளையம் ஸ்ரீஇராமகிருஷ்ண மிஷன் வித்தியாலயத்தில்

பயின்றார். பேரறிஞர் திரு. பெ. தூரன் அவர்களிடம் கற்கும் பேறு பெற்றார். வித்தியாலய நிர்வாகி பேரறிஞர் அவினாசி லிங்கம் செட்டியாரவர்கள் போற்றுகின்ற நல்மாணாக்கராய்த் திகழ்ந்தார். "நீ நல்ல பிள்ளை; வாழ்க்கையில் சில நல்ல இலட்சியங்களைப் பின்பற்றி வாழ்பவர்கட்கு வாழ்க்கையில் ஒரு சமாதானமும் இன்பமும் உண்டு. ஆனால் சிரமங்களும் இருக்கும். அத்தகைய வாழ்க்கைக்கு உதவக்கூடிய மாதிரி உன் வாழ்க்கைத் துணை கிடைத்தது; சௌக்கியமாக வாழ்வீர்களாக" என்று பிற்காலத்தில் 1954-ஆம் ஆண்டு செட்டியார் எழுதிய இந்த வாழ்த்துக் கடிதமும் 1978-ஆம் ஆண்டு டிசம்பரில் பழைய சிறந்த மாணவர்களைப் பாராட்டும் முறையில் இவரை அழைத்துப் பொன்னாடை போர்த்தியதும் இவர் அன்று அங்குப் பயின்ற மாணவப் பண்பை விளக்க வல்லனவாகும். இதற்கு முற்பட்ட கல்வி தன் சொந்த ஊரிலேயே அமைந்தது.

இவரை ஈன்றெடுத்து இவ்வையகத்திற்குவழங்கிய சான்றோர் திருவாளர். என். குருசாமிநாயுடு அவர்களும் நாச்சியம்மாள் அவர்களும் ஆவர். இவர் பிறந்த ஊர் கொள்கையிற் சிறந்த கோவைக் கருகிலுள்ள அ. நாகூர் என்பதாகும். 1923-ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 16 ஆம் நாள் தமிழகத்து, கோவை நாகூரில் தோன்றிய இவர் வாழ்வு 1980 ஆம் ஆண்டு பிப்ரவரி 26 ஆம் நாள் வைகறையாமத்தில் ஆந்திர மாநில திருப்பதி திருவேங்கடவன் ஏழுமலைகளின் அடிவாரத்தில் மறைந்து அவன் திருவடியில் கலந்தது.

பொன். சௌரிராசன்

## பொருளடக்கம்

# நூன்முகம்

தமிழ் மொழியின் இலக்கியக் கூறுகளில் பக்தியிலக்கியம் தனிச் சிறப்புடையதொரு பகுதியாகும். தமிழை 'அன்பு அல்லது பக்தியின் மொழி' என்று சிறப்பிப்பவர்களும் உளர். 'தமிழ்மொழி, பக்தி இலக்கிய வகையில் உலக இலக்கியங்களிடையே தனித்த தொரு உயர்நிலை பெற்றிருக்கிறது என்பதை யாரும் மறந்து விட முடியாது' என்பது புகழ்பெற்ற அறிஞரும் இந்தியாவின் அரசியல் நிபுணருமான சர். சி. பி. இராமசாமி ஐயர் அவர்களின் உரை.[1] தரத்திலும் பரப்பிலும் முதலிடம் பெறத்தக்க பக்திப் பாடல்களைப் பாடின ஆழ்வார்களும் சைவ சமயக் குரவர்களும் வாழ்ந்தது கி.பி. 6ம் நூற்றாண்டு முதல் 10ம் நூற்றாண்டுக்குட்பட்ட இடைக் காலத்தி லேயே யாகும். இவர்கள் பக்திச் சுவை மிக்கதும், இசையுடன் பாடக் கூடியனவுமான செந்தமிழ்ப் பாடல்கள் பல பாடிச் சமய எழுச்சி உண்டாக்கிப் பக்தி வெள்ளம் எங்கும் பரவும்படி செய் தனர். அப்போது தமிழ் நெகிழ்ச்சியும் எளிமையும் பெற்று உள்ளத்தைத் தொடும் கவிதைகட்கு இடமாயிற்று. அவர்தம் பாடல்களைக் குறித்துத் 'தமிழரின் சமுதாயத்தில் சமய உணர்ச்சி உரத்தால் செழித்து வளர்ந்த பக்தியில் காய்த்துப் பழுத்த தீஞ்சுவைக் கனிகள் அப்பாடல்கள்; அக்காலத்தில் சமயமும், இலக்கியமும் வெவ்வேறாகக் கருதப்படாத அளவுக்குப் பிணைக்கப் பட்டிருந்தன,[2] என்ற கூற்று மிகவும் பொருத்த முடையதாகும்.

பக்திப்பாடல்கள் தனிப்பாடல்கள் என்ற முறையிலேயே அவ்வப்பொழுது சமய அறிஞரால் பெரும்பாலும் பாடப்பெற்றன. பின்னர்த் தமிழ் மன்னர் ஆட்சி சோழநாட்டில் தொடங்கி வீறு நடை போட்ட காலத்தில் தமிழ் வளர்ச்சிக்கு ஊக்கமும் ஆக்கமும் கிடைத்தன. தேவாரமும் திவ்வியப்பிரபந்தமும் தக்க பெரியவர் களால் தொகுக்கப் பெற்றன.

'தமிழ் இலக்கியத்தில் உள்ள மிகச் சிறந்த இசைப்பாக்களைக் கணக்கிட்டால் அவைகளில் மூன்றில் ஒருபங்கு திவ்வியப் பிரபந்தத்திலும், மற்றொரு பங்கு திருமுறைகளிலும் மீதமுள்ள ஒரு பங்குதான் மற்றெல்லா நூல்களிலும் காணப்பெறும்'[3] என்று விருப்பு வெறுப்பற்ற முறையில் 'தமிழ் இலக்கிய ஆராய்ச்சியின் வளர்ச்சி' என்ற நூலின் ஆசிரியர் கூறுவர். இவற்றில் முதலில் குறிக்கப் பெறும் திவ்வியப்பிரபந்தப் பாடல்களின் இலக்கிய நயம் போதிய அளவு எல்லாத் தமிழர்களாலும் உணரப்பெறவில்லை. அக் குறையின் ஒரு பகுதியைச் சிறிதேனும் நீக்கவேண்டும் என்ற ஆர்வத்தாலேயே இம் முயற்சி மேற்கொள்ளப் பெறுகின்றது.

ஆழ்வார்கள் பாடலும் சைவ சமயக் குரவர் பாடலும் ஏறக் குறையச் சமகாலத்தில் தோன்றியவை. அதனால் அவற்றிடையே சில பல ஒற்றுமைகள் இருத்தல் இயல்பே. நாயன்மார்கள் பாடல் என்று பொதுவாக வழங்கும் வழக்கும் பிழைபட்டது. ஏனெனில் 63 நாயன்மார்களில் பக்திப் பாடல் பாடியவர் எழுவர் மட்டுமே, ஆழ்வார்கள் எனப் பெறுபவரில் அனைவரும் பாடல் இயற்றிய வராவர். பிற்காலத்தவருக்குக் குழப்பம் ஏற்படாதிருக்கவும், தெளிவு கருதியும் சைவ சமயக் குரவர் பாடல் என வழங்குவதே சிறப்பாகும். எண்ணிக்கை அளவில் ஆழ்வார்கள் பாடல் சைவ சமயக் குரவர் பாடலினும் மிகவும் குறைந்தனவே. அவற்றின் தொகை ஏறக்குறைய நாலாயிரம் என்பது நாலாயிர திவ்வியப் பிரபந்தம் என்னும் வழக்காறு கொண்டும் இதனை அறியலாம். அவற்றுள்ளும் ஆழ்வார்களில் தலைமையானவர் எனக் கருதப் பெறும் நம்மாழ்வார் பாடிய நூல்கள் தனியிடம் பெறுகின்றன. அவர் பாடியவற்றுள்ளும் அவர் தமது பழுத்த அனுபவத்தை வெளியிடுவதும், தத்துவ விளக்கம் செய்வதால் மற்றவற்றினும் தலையானது எனக் கருதப் பெறுவதுமான 'திருவாய்மொழி' யின் இலக்கிய நயத்தை அறுதியிடுவதே இப்போது எடுத்துக் கொள்ளப் பெற்ற முயற்சியாம்.

'தத்துவ நிலையிலும் ஆன்மீக நோக்கிலும் பார்த்தால்-'மாறன்' அல்லது நம்மாழ்வாருடைய பனுவல்கள் தமிழ் இலக்கியத்தில் முதலிடம் பெறுவனவாகும்' என்கிறார் தமிழின் இக்காலப் பெருங் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார்.[4]

வைணவ சமயத்தவர்களுள் நம்மாழ்வார் பாடல்களைச்-சிறப் பாகத் திருவாய் மொழியை மற்றவர் பாடல்களினும் முதன்மை யாகக் கருதிப் போற்றி வருவது மரபாக உள்ளது. திருவாய் மொழி பற்றி எழுதுகின்றவர் பலரும் அதன்கண் காணப்பெறும் தத்துவக் கருத்துகளும் ஆன்மீக நெறியும் கருதியே

அதனைப் போற்றி உரைத்து வருகின்றனர். தமிழ் நாட்டிலும் ஏன், உலகிலும் எத்துணையோ தத்துவ ஞானிகள் இருந்திருக் கின்றனர்; சிறந்த புலவர் பெருமக்களும் இருந்திருக்கின்றனர். நம்மாழ்வார் இரண்டு இயல்புகளும் இணைந்த ஒரு பெருமகனாகத் திகழ்கின்றார். அவர் பெருமைக்கு அவர்தம் கவிதைப் புலமை எந்த அளவு உதவி உள்ளது? அக் கவிதையின் சிறப்பு எத்த கையது? என அறிய இதுவரை எவரும் தனிப்பட்ட முறையில் முயலவில்லை எனத் தெரிகின்றது. சாதாரணப் பொருளைச் செஞ் சொற் கவிதைகளில் அமைப்பவர் சிறந்த கவிஞராகலாம். அதனால் அவர் தரும் பொருளும் சிறந்ததாக-மேன்மையானதாக-அமையும் போது அத்தகைய கவிஞர் 'வான்கவிஞலாம்' ஆகின்றார். நம்மாழ்வார் அத்தகைய வான் கவிஞரில் இடம் பெறத் தக்கவராவர். தத்துவ ஞானிகள் கவிஞராக இருக்க வேண்டுமென்பது இல்லை. ஆனால் ஒரு மிகச் சிறந்த கவிஞர் எவரும் தத்துவ ஞானியாகவும் இருக்க வேண்டுவது இன்றியமையாதது. அத்தகைய சிறப்பு நம்மாழ் வாருக்கு இருக்கின்றது, என்பது அவர்தம் கவிதையை ஆராயும் போது நம்மால் உணர முடிகின்றது. ஆழ்வார் தன்னைக் கவிஞராக கூறிக் கொள்ளுகின்றாரே அன்றி எங்கும் தத்துவ ஞானியாகக் கூற வில்லை. மற்ற கவிஞர்களினும் தனக்குள்ள ஏற்றம் தோன்றுமாறு அவர் தன்னை 'உலகம் படைத்தான் கவி' (3-9 10) என்றும், தன்னூலை ''இருந்தமிழ் நூல், (10-6-4) 'வழுவிலா ஒண் தமிழ்கள் (4-7-11) 'வாசகமாலை', (3-8-10) முதலிய பெயர்களாலும் குறிப்பிடு கின்றார். எனவே அவர் தம்மைக் கவிஞராகக் கண்டு ஆராய்வது ஆழ்வார்க்கு மிக உகந்ததொரு செய்கை என உறுதிபாக நம்பலாம்.

## திருவாய்மொழியின் பெருமை

திவ்விய பிரபந்தத்தின் முடிமணியாய் விளங்குவது திருவாய் மொழி. மற்ற பகுதிகளைக் காட்டிலும் இதற்கு மிகப் பல உரைகள் உள. ஐந்து வியாக்யானங்கள் பழைய காலத்திலேயே எழுதப் பெற்றன. அவற்றின் அளவு பற்றி அவை 'ஆறாயிரப்படி' 'ஒன்பதாயிரப்படி' 'பன்னீராயிரப்படி' 'இருபத்திநாலாயிரப்படி' 'முப்பத்தாறாயிரப்படி' அல்லது 'ஈடு' எனப் பெயர் பெறுகின்றன. எல்லாப் பாடல்களும் பகவானைப்பற்றியே பேசினாலும் திருவாய் மொழிக்கும் அதன் உரைகளுக்கும் மட்டுமே 'பகவத்விஷயம்' என்ற பெயர் தொன்றுதொட்டு வழங்கி வருகிறது. ஆழ்வார்தம் 'ஈரச் சொற்களில்' ஈடுபட்டுப், பின் வந்த ஆசாரியர்கள் பலநூல் கள் எழுதித்திறனுப்வு செய்தும், அவற்றை விளக்கியும் போற்றி யும் வந்துள்ளனர். 'ஆசாரிய இருதயம்' சிறப்பாகத் திருவாய்

மொழியை எடுத்து ஆராய்ந்து ஆழ்வாராகிய சடகோபரின் உள்ளத்தைத் தெளிவுறுத்தும் அருமைசான்ற நூல். ஆழ்வார் (ஆசாரியர்களின்) கருத்துக்களின் அடிப்படைகொண்டே பிள்ளை லோகாசாரியாரின் 'ஸ்ரீவசன பூஷணம்' முதலிய இரகஸ்ய கிரந் தங்கள் எழுந்துள்ளன. வேதாந்த தேசிகர் வடமொழியில் இரு நூல்கள் எழுதித் திருவாய்மொழியின்சாரத்தைத் தமிழறியாதாரும் உணரும்படி செய்தார். மணவாள மாமுனிகள், திருவாய்மொழி யின் பொருளைச்சுருக்கித் 'திருவாய்மொழி நூற்றந்தாதி' பாடினர் கோனேரி தாஸ்யை என்ற அம்மையார் 'திருவாய்மொழி வாசக மாலை' என்றதொரு நூல் எழுதித் திருவாய்மொழி முதற்பாடலின் சிறப்பை நிலைநாட்டுகின்றார். ஸ்ரீராமாநுசர் திருவாய்மொழியின் மேல் கொண்ட பெருமதிப்பும் அதன் துணைகொண்டு 'ஸ்ரீபாஷ்யம்' செய்தமையும் பின்னர் விளக்கப் பெறும். இவை வைணவப் பரம் பரையினர் போற்றியவகை.

## ஆழ்வார் அடிச்சுவட்டில்

கம்பன் முதற்கொண்டு சுப்பிரமணிய பாரதி ஈறுகத் தமிழ்ப் பெரும் புலவர் சிலரும், பரிமேலழகர் முதலிய உரையாசிரியர்களும் திருவாய்மொழியின் சொல்லையும், பொருளையும் போற்றி உரைத் திருப்பது அவர்தம் நூல்களில் காணலாம். கம்பர் 'சடகோபர் அந்தாதி'யில் நம்மாழ்வார் நூலையும் அவரையும் உளமாரப் பாராட்டுவர். மணவாளதாசர் என்கிற பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் தம் அஷ்டப் பிரபந்தங்களிலும் நம்மாழ்வாரின் துதி அமைப்பதோடு அவர் சொற்களையும் பொருளையும் எடுத்தாண்டு மகிழ்வது காண்கிறோம். தெலுங்கு, வங்காளம், மகாராட்டிரம் முதலிய மொழியினரும் தம்தம் மொழி எழுத்துக்களில் திருவாய் மொழியை எழுதிக்கொண்டு ஓதி வருவதாக அறிஞர் கூறுவர்.

## இன்றைய நிலை

முன்னர் நாதமுனிகள், ஸ்ரீராமாநுசர் முதலியவர்களால் ஏற்படுத்தப்பட்ட நியமனப்படி இன்றும் திவ்வியப் பிரபந்தத்தின் குறிப்பிட்ட பாடல்கள் வைணவக் கோயில்களில் வேதத்திற்கும் ஒப்பாக—ஏன்? சில வகைகளில் உயர்வாகவே—ஓதப்பெற்றுவரும் முறை வேறு எந்நூலுக்கும் இல்லாத சிறப்பாகும். 'திருவாய் மொழித் திருநாள்' என்று ஆண்டுதோறும் கோயில்களில் மார்கழி யில் பத்துநாள் விழா நடை பெறுவதும் உண்டு. இவ்வளவு இருந்த போதிலும் வைணவர்களாகிய ஒரு சாரார் மட்டுமே தான் அதனை ஓதிவருகின்றனரே தவிர, மதநூல் என்ற அளவில் அது போற்றப் பெற்று வருகின்றதே அன்றி, இலக்கியம் என்ற வகை

யில் தமிழரிடையே பெரிதும் பரவவில்லை. திருவாய்மொழிக்கு விரிவுரை எழுதிய சிறப்பாசிரியர்கள் அதன் இலக்கிய நயங்களைப் பதசாரங்களை மிக அழகாக எடுத்துக் காட்டிச் சென்றுள்ளனர் ஆனாலும் அவை பெரும்பாலான தமிழர்க்கு மூடு மந்திரமாகவே உள்ளன. அவ்வுரைகள் மணிப்பிரவாள நடையில் இருப்பதால் அவை இன்றைய நிலையில் தனித்தமிழ் அறிந்தவர்க்கோ தனிவட மொழி தெரிந்தவர்க்கோ எவர்க்கும் பயன்படாதனவாக உள்ளன இராமாநுசர் இருமொழி அறிவு குறித்து வற்புறுத்தி 'உபயவேதாந்திகள்' என்ற பட்டம் வழங்கிச் சிறப்பிக்க வழிவகுத்தற்கு முயன்றார் என்றாலும் இன்று பலர் பெயரளவில் அப்பட்டம் தாங்கி உள்ளனரேயல்லாமல் அதன் நோக்கம் நிறைவேறவில்லை. இராமாநுசர் நோக்கம் நிறைவேறாதது போலவே யாவற்றையும் தமிழாக்கி அனைவர்க்கும் பயன்படுமாறு செய்ய வேண்டுமென்று ஆழ்வார் கொண்ட பெருநோக்கமும் தடைப்பட்டு நிற்கின்றது. அவ்வுரைகளைத் தமிழாக்கம் செய்யும் நன்முயற்சிகள் அண்மையில் நடைபெற்று வருகின்றன.

## நடந்துள்ள பணி

திருவாய்மொழியின் முதல் பதிப்பு நமக்குத் தெரிந்த அளவில் 1859ஆம் ஆண்டிலேயே அச்சில் வந்துள்ளது. அதனை, கோவிந்த பிள்ளையும் செங்கல்வராய நாயகரும் சேர்ந்து, பூர்வாசாரியர் செய்த பதப்பொருளுடன் வெளியிட்டுள்ளனர். அதனை அடுத்துப் பதிப்புக்கள் வந்திருக்கின்றன. தெலுங்கு எழுத்திலும் வெளியிட்டுள்ளனர். அண்மையில் மணலி அறநிலைய நிதிகொண்டு மாதவ தாசன் என்பவர் வெளியிட்ட திவ்வியப் பிரபந்தமும், மர்ரே கம்பெனி சார்பில் எஸ். ராஜம் அவர்கள் வெளியிட்ட மலிவுப் பதிப்புத் திருவாய் மொழியும் பலர்க்கும் பயன்படுகின்றன. திருவாய்மொழியையும் அதன் உரைகளையும் பரப்பப் பலர் முயற்சி செய்திருந்தபோதிலும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர்களில் திருவாய்மொழிக்கும் மற்ற அருளிச் செயல்களுக்கும் 'தீபிகை' என்ற பெயரில் உரை விளக்கங்கள் எழுதியும், சொற்பெருக்குகள் ஆற்றியும் வரும் காஞ்சிபுரம் மகாவித்வான் அண்ணங்கராச்சாரியார் முதன்மையானவராவர். மணிப்பிரவாள நடையில் உரைகளுடனும், தனிமூல நூல்கள் மாத்திரமும் வெளியிட்டவர், சே. கிருஷ்ணமாச்சாரியார் ஆவர். உயர்திரு வித்வான். பு. ரா. புருடோத்தும நாயுடு அவர்களால் எழுதப்பெற்று 'ஈட்டின் தமிழாக்கம்' என்ற பெயரில் சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள பதிப்பு ஒரு முக்கிய மைல் கல் ஆகும். டி. டி. இராமசாமி நாயுடு என்பவர்

முயற்சியால் வடமொழி மேற்கோள்களுக்கு விளக்கம் தரும் 'பிரமாணத் திரட்டு நூல்கள்' வெளிவந்துள்ளன. அவர் 'அகப் பொருளும் அருளிச்செயலும்' என்ற நூலும் 1939-ல் எழுதியிருக் கிறார். 'ஸ்ரீபகவத்விஷயம் என்ற பெயரில் ஆ. அரங்கநாத முதலியார் என்பவர் அதே ஆண்டில் 450 பக்கங்களில் ஒரு நூலைப் பதிப்பித்திருக்கின்றார்.

திருப்பதி தேவத்தானத்தார் திரு. பாலசுந்தரநாயகர் என்பவ ரால் எழுதப்பெற்ற 'திருவாய்மொழி அகப்பொருட் பாசுரவிளக்கம்' இரு பகுதிகளை வெளியிட்டுள்ளனர். அவர்கள் வித்வான் பூவராகம் பிள்ளை அவர்களுடைய 'திருவாய்மொழி விளக்க' உரைக் கோவையையும் வெளியிட்டுள்ளனர். இராஜாஜி அவர்கள் எழுதியுள்ள 'பக்திநெறி'யும் புகழ்பெற்ற எழுத்தாளர் பி. ஸ்ரீ. அவர்கள் எழுதிய 'திருவாய்மொழித் தெளிவுரை' முதற்பகுதியும் மிக்க பயனுள்ள வெளியீடுகள்.

ஸ்ரீராமகிருஷ்ண மடத்தார் வெளியிட்ட 'திரு அருள்மொழி'யில் சில பாடல்கள் விளக்கப் பெற்றுள்ளன. பி. ஸ்ரீ. அவர்களும் எதிராஜுலு என்பாரும் 'திவ்விய பிரபந்த சாரம்' என்றும், 'பக்திப்பூங்கா' 'வைணவப்பூங்கா' என்றும் எழுதியுள்ள உரை நடை நூல்கள் பொதுமக்கட்குப் பெரிதும் பயன்படுபவை.

ஆங்கிலத்தில் வந்துள்ள இருநூல்கள் குறிப்பிடத் தக்கவை. அவை சென்னை வழக்கறிஞர் டி. இராமசாமி அய்யங்கார் வெளியிட்டுள்ள 'மெய்யுணர்வின் உட்பார்வை' (Peeps into Mysticism) என்பதும், ஆர். எஸ். தேசிகன் அவர்களும், பி. எல். ரங்கநாதன் அவர்களும் வெளியிட்டுள்ள 'பொன்மணிகள், Grains of Gold) என்ற நூலும் ஆகும். ஜே. எஸ். எம். கூப்பர் என்ற ஆங்கிலேயர் சில பாடல்களை மொழிபெயர்த்துள்ளார். இவற்றில் அரங்கநாத முதலியார் பதிப்பித்த நூல் தவிர மற்ற எந்த ஒரு நூலும் திருவாய்மொழியை முழுக்க எடுத்து ஆராய வில்லை. முதலியார் நூலும் ஆராய்ச்சி நோக்கில் எழுதப் பெற்றதன்று. மற்றப் பகுதிகளைப் பின் வெளியிடுவதென்ற நோக்குடன் முன் பகுதிகளை வெளியிட்டவர்கள் முயற்சியும் அவ்வளவிலேயே நின்று போனது வருந்தத் தக்கதே. ஆழ் வார்கள் கால ஆராய்ச்சிபற்றி எம். சீனிவாச அய்யங்கார், மு. இராகவையங்கார், கோபிநாதராவ், டாக்டர் இராசமாணிக்கனார் முதலியோர் பயனுள்ள குறிப்புக்களை எழுதியுள்ளனர்.

இலக்கிய சம்பந்தமான முழுநூலாராய்ச்சி தனிப்பட இது வரை ஒன்றுகூட வரவில்லை. ஓரிருவர் சில தனித் தனிக் கட்டுரைகள் எழுதியுள்ளனர். முன்னரே, 'இந்தியாவின் பழைமை ஆய்'விலும்

(Indian Antiquary) 'செந்தமி'ழிலும் சில கட்டுரைகள் வெளிவந் துள்ளன. ஆக்ரா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர். சே. பார்த்தசாரதி என்பார் 'ஆன்ம வாழ்வுப் பெருங் காப்பியம்' என்ற தலைப்பில் எழுதியுள்ள கட்டுரையும்,[5] பிரெஞ்சுக் கல்லூரிப் பேராசிரியர் பிரான்சில் நம்மாழ்வார் பற்றி எழுதியுள்ள கட்டுரையின்தமிழ் மொழிபெயர்ப்பும்[6] குறிப்பிடத் தக்கன எனினும், அவை மிகச் சுருக்கமான அளவிலேயே உள்ளன. இக் கட்டுரையின் ஆசிரியர் எழுதியுள்ள 'ஆழ்வார் உள்ளம்—திறனாய்வு' என்பதும், அண்மையில் வேங்கடவன் பல்கலைக் கழகத்தில் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் என்பார் வழங்கியுள்ள 'நம்மாழ்வார் தம் சமய, தத்துவ ஆய்வு' என்பதும் குறிப்பிடத் தக்கவை.

'தமிழ்நாடும் நம்மாழ்வாரும்' என்ற பெயரில் திரு. வி. க. அவர்கள் எழுதியுள்ள சிறுநூலும், 'திருவாய் மொழிப்பாடல்களில் காணும் இயற்கை' என்று திரு மைக்கேல் இருதயம் என்பார் எழுதிய சிறு கட்டுரையும், ஆராய்ச்சித் தன்மை வாய்ந்த சிறு வெளியீடுகளாம். பாண்டிச்சேரி திருமால் திருநெறி மன்றத்தினர். சென்னை ஸ்ரீராமாநுசமிஷனைச் சார்ந்தவர் ஆகியோர் வெளியிட்டுள்ள சிறப்பு மலர்களிலும், நிகமாந்த மகாதேசிகனின் 7வது நூற்றாண்டு விழா மலரிலும் ஒரு சில நல்ல கட்டுரைகள் இடம் பெற்றிருக் கின்றன. எப்படியும் முழுநூலையும் ஒன்று சேர நோக்கி அதன் இலக்கிய நயம் காணும் முயற்சி இதுவரை யாராலும் மேற் கொள்ளப் பெறவில்லை. இப்பொழுதே முதலாவதாகச் செய்யப் பெறுகின்றது என்று நம்புகின்றேன்.

## ஆய்வுரையின் போக்கு

திருவாய் மொழியின் ஆசிரியரான நம்மாழ்வார் வரலாறு குறித்தும், அவர் வாழ்ந்த காலம் குறித்தும் ஆராய்ந்து முடிவு காண்பது அவர் நூலை நன்கு புரிந்துகொள்வதற்கு உதவும். எனவே, இதுவரை அவர்பற்றி எழுதப்பெற்றுள்ள வரலாறு, கால ஆராய்ச்சி இவைகளை மனத்திற் கொண்டும், அகச்சான்றுகளைப் பெரிதும் ஆதரவாகக் கொண்டும் வரலாற்றை அறிய முனைந்துள் ளேன். பெற்றோர் இட்ட பெயர் எது? சிறப்புப் பெயர் எவை? என்பன துணியப் பெற்றுள்ளன. பதினாறுண்டுகள் பேசாது மௌனத் தியானத்திலிருந்தார் என்ற கருத்து எந்த அளவு பொருந்தும் என ஆராயப் பெற்றுள்ளது. அவர் நூலறிவு பெற வில்லை என்பதனை ஏற்றுக் கொள்வதற்கில்லை என்று காட்டப் பெற்றுள்ளது. அவர் சென்று கண்டு வழிபட்ட திவ்விய தேசங்கள் எவை? சமய ஆசாரியர் என்ற வகையில் அவர்க்குரிய

இடம் எத்தகையது? உலக மக்கள்பால் அவர் கொண்டிருந்த தொடர்பு எந்தகையது? அவர்தம் உள்ளத்தின் தூய்மையும் பரந்த நோக்கும் எத்தகையன? அவர்தம் அறிவுரைகளின் தெளிவு என்ன? என்பன முதல் அத்தியாயத்தில் காட்டப் பெற்றுள்ளன.

அடுத்த பகுதியில், கவிஞராக விளங்கும் ஆழ்வார், கொண்டிருந்த கவிதைபற்றிய அரிய கருத்துக்கள் சில அவர் நூலிலிருந்து காட்டப் பெற்றுள்ளன. சிறந்த கவிவாணர் பலரும் தாம் பாட வில்லை என்றும், ஏதோ ஒரு ஆற்றல் தங்களைப் பாட வைத்தது என்றும் கூறுவது போன்றே ஆழ்வார் கூறும் கருத்தும் அமைந்துள்ளமை விளக்கப் பெற்றுள்ளது. தாம் கவிதை பாடியதனுல் பெற்ற குதூகலமும், மற்ற கவிஞரையும் தம் வழி வருமாறு அவர்க்கு அறிவுரை வழங்கும் அழகும் எடுத்து விளக்கப் பெற்றுள்ளன. ஆழ்வார் அந்த நூற்ருண்டின் 'புரட்சிக் கவிஞர்' என்பது தெளிவிக்கப் பெற்றுள்ளது.

ஆழ்வார் தம் கவிதை, சிறப்புறுவதற்கு அவர் கையாளும் முறைகளில் சிறப்புற விளங்குவனவாகிய தத்துவம் கூறுவதும் தோத்திரம் பாடுவதும் ஆகிய இரண்டுடன் நில்லாது, தமிழ் அகப் பாடல் நெறியை ஒட்டிப் பாடல்கள் அமைப்பதும், அறிவுரைப் பகுதிகளை இடை இடையே அமைப்பதும் ஆகும் என்பதை உணர்த்தி அம்முறைகள் எந்த அளவில் அவரால் பின்பற்றப் பட்டுள்ளன என்பதும் தெளிவுற ஆராயப் பெற்றுள்ளது. தம் சிறு வயதிலிருந்தே தம் எல்லா நோக்கமும், கண்ணன் என்று இருந்தவராயினும், அவர் தமிழர் தம் தூய காதல் நெறியை ஒட்டிப் பெண் நிலையராக நின்று, கவிதை புனையும் பெற்றியையும், அது காலை, பழைய தமிழ் நெறியை ஒட்டிச் செல்லும் முறையையும்— விலகிச்செல்லும் சில இடங்களையும் விளக்க முனைந்துள்ளேன் ஆழ்வார் அதில் வெற்றி பெற்றுள்ளமை தெரிகின்றது. எப்படித் தொல்காப்பிய இலக்கணத்திற்குச்' சிறிது மாருகத் திருமுருகாற்றுப்படை சங்ககாலத்தே எழுந்ததோ அவ்வாறே சங்க அகப்பொருட் பாடல் கூறுகளைத் தழுவி, ஆழ்வார் புதுமையை இணைத்துத் தெய்வக் காதலைப் பாடுகின்ருர் என்பது காட்டப் பெறுகின்றது இப்பகுதியில்.

அடுத்து, அவர் கவிதைகளில் காணப்பெறும் பொதுவான இலக்கிய நயங்கள் ஆராயப் பெறுகின்றன. அவர் கதைத் தொடர்பான காவியம் பாடவில்லை. எனினும், காவியத்திற்கு இருக்க வேண்டிய மற்ற முக்கிய பல இயல்புகளை அவர் நூல் பெற்றுள்ளது. பாத்திரங்கள், நுதலும் பொருள், முதலும் முடிவும்

மாறுகோளின்மை, நடை, புராணக்கதைகளை ஆளும் முறை ஆகியவை பற்றி விளக்கப்பெற்றுள்ளன. தத்துவத்தை எளிமையுறப் பாடல்களில் அமைக்கும் திறனும், தோத்திரத்தை உள்ள முருக்கும் வகையில் பாடும் வகையும் தக்க எடுத்துக் காட்டுக்கள் காட்டி நிலைநாட்டப் பெறுகின்றன.

கவிதைக்கு அழகு செய்வது அதன்பால் அமைந்த அணிகளே. பொருள் புலம்பாட்டிற்கும் அவை இன்றியமையாதனவாகின்றன. தொல்காப்பியர் குறிக்கும் உவமை உருவகம் என்ற அணிகளையும், பிற அணிகளையும் ஆழ்வார் எடுத்தமைத்துக் கவிதையை அழகுசெய்யும் பான்மையை ஆராய்வது அடுத்தபகுதி.

ஒரு புலவன் ஆளும் அணிகளின் போக்கு அவனது உள்ளத்தை — புலமையை — உயர்வைக் காட்டுமென்பர். அந் நுட்பம் ஆழ்வார்பால் எவ்வாறு புலனாகின்றது? ஐம்புலன்களும் அடக்கி ஆளுபவர்; சமய நெறிச் செல்பவர்; ஆயினும் நல்ல கவிஞராக ஆழ்வார் உலகைக் கூர்ந்து நோக்கி உவமைகளை எடுத்தாளும் இயல்பு இங்கே எடுத்துக் காட்டப்பெறுகின்றது; இதிலே தனிச் சிறப்புடைய ஒரு பகுதி, பாடலில் அமையும் குறிப்புப் பொருள்—தொனி அல்லது உள்ளுறை பற்றியது. அது அகப்பொருட் பாடலில் சிறப்பான இடம்பெறும்; ஆழ்வார் பாடலில் அமைந்துள்ள குறிப்புப் பொருள் நுட்பங்கள், வகைக் கொன்றாக எடுத்துக் காட்டப் பெறுதலோடு மற்ற இடங்களும் சுட்டப் பெற்றுள்ளன.

இயற்கையை நுகர—அதனை வருணிக்க—அறியாத ஒருவன் கவிஞனாக இருக்க முடியுமா என்று ஐயப்படுமளவுக்குப் புலவர்தம் பாடல்களில் மிகுதியாக இயற்கை வருணனைகள் இடம் பெற்றுள்ளன. சங்க இலக்கியங்களில் இயற்கையைப் பின்னணி என்ற முறையில் அழகுற எடுத்துப் பாடியுள்ள இயற்கைக் கவிஞர்களை நாம் காணுகிறோம். அவற்றின் பின்தோன்றிய நீதிநூல்களில் இயற்கை பேரளவில் அமைய இடமில்லை. பக்திப் பாடல்களில் இயற்கை பெறும் இடம்-சிறப்பாக நம்மாழ்வார் தம், கண், மூக்கு, செவி இவற்றால் இயற்கையை நுகர்ந்து அதனைத் திருவாய் மொழியில் எடுத்து விளக்கும் திறம் 'இயற்கை வருணனைகள்' என்ற தலைப்பில் அலசப் பெறுகின்றது. நானிலங்களில் பாலையும், முல்லையும் நீங்கலாக மற்ற மூன்று இடங்களும் பாடலில் இடம் பெறுகின்றன. முல்லை பற்றியும் சில குறிப்புக்கள் வருகின்றன. அவரது பக்தி உள்ளம் இயற்கையைக் காணும் பாங்கு எத்தன்மையது? சில சமயங்களில் தம்மைப் போலவே, பிற பொருள்களும் இருப்பதாகக் கருதி அவர் அவற்றிற்காகவும் துன்புறும் இயல்பை

யும், சில சமயங்களில் இவரது ஆற்ருமையை இயற்கை நிகழ்ச்சி கள் மிகுவிக்கும் பெற்றியையும் பாடுவதைக் காணுகின்ருேம். பெரும்பாலும் தம்பால் அன்பு காட்டும் ஒரு பொருளாகவே இயற்கையை அவர் காணுகின்ருர். அதனேடு தம் கடவுளும் ஒன்றி நிற்பதாகக் கூறி மகிழ்கின்ருர். அதன் பல கூறுகள் இங்கு எடுத்துக் காட்டப் பெறுகின்றன.

பொருளும், உணர்ச்சியும் என்பன கவிதைக்கும், உரை நடைக்கும் பொதுவானவை; கவிதையின், தனித்த உடைமை அதன் சொற்சேர்க்கையும், இன்னேசையும் என்ப. ஆகையால் கவிதைக்கு வடிவம் முக்கியம். அதன் தன்மை, யாப்பமைதி, ஒலி நயம்—தொடைநயம் என்ற பகுதியில் ஆராயப் பெறுகின்றது. திருவாய்மொழியில் இவைபற்றி ஆராய இதுவரை யாரும் முயல வில்லை. சீர்கள் கூடப் பிரிக்கப்படாமல் திருவாய் மொழி நூல்கள் பல வெளியிடப்பெற்றுள்ளன. ராஜம் பதிப்பு போன்ற ஒரு சில படிப்பதற்கு எளிமையாக இருத்தற்பொருட்டுத் தனித் தனிச் சொற்களாகப் பிரித்தும், மற்றும் சில பாடல்கள் கோயில்களில் பாடப்பெறும் முறைக்கேற்பப் பிரித்தும் அச்சிடப்பெற்றுள்ளன. சில பதிப்புக்களில் மட்டும் பாவகைகளின் பெயர் குறிப்பிடப் பெற் றுள்ளது. அதிலும் ஒரு பதிப்பிற்கும் மற்ருெரு பதிப்பிற்கும் வேறு பாடுகள் காணப்பெறுகின்றன. பாவினங்களைச் சேர்ந்த பாடல்களை இவ்வினத்திற்குத்தான் அவை உரியன என்று அறுதி யிட்டுரைப்பது சில சமயங்களில் முடியாது. ஏனெனில் ஒரே பாட்டினை இருவேறு வகையாகக் கொள்ளப் பெறுதலும் கூடும். இவை பற்றி ‘யாப்பருங்கலம்’, ‘காரிகை’ முதலிய நூல்களின் துணை கொண்டும், ‘விருத்தப்பாவியல்’ என்ற நூலின் முறையை ஒட்டியும் ஆராய்ந்து யாப்பமைதி ஓரளவில் முடிவு காணப் பெற் றுள்ளது. இசைப்பாடல்கள் இயற்றமிழ் இலக்கணத்திற்கு முற் றிலும் கட்டுப்பட வேண்டுமா என்பதும் நினைந்துபார்க்க வேண்டிய கருத்தாகும். திவ்வியப் பிரபந்தம் தொகுத்தகாலை நாதமுனிகள் இதற்கு இசை வகுக்க ஏற்பாடு செய்தார் என்பர். பழைய பண் பற்றிய குறிப்பும் சில பதிப்புக்களில் உள்ளது. கோயில்களில் பாடப்பெறும் முறைக்கும் இதற்கும் உள்ள தொடர்பு விளங்க வில்லை. எனவே, இத்துறையில் செய்ய வேண்டும் பணி மிக் குளது என்பது தெளிவிக்கப் பெறுகிறது.

ஒரு தனிப் பகுதியில் ஆழ்வார் புராணக்கதைகளைப் பயனுள்ள முறையில் எடுத்தாண்டுள்ள திறம் விளக்கப்பெற்றுள்ளது. பழை மையான பல கதைகள் எவ்வாறு கருத்தை விளக்க உதவுகின்றன என்பது காட்டப் பெறுகின்றது. அவற்றைச் சரிவர உணராமல், கவிதையை முழுமையாகச் சுவைத்தல் இயலாது. அவை

உணர்த்தும் குறிப்புப்பொருள் பாடல்கட்குத் தனிக் கவர்ச்சியை அளித்து அவற்றின் சிறப்பை உயர்த்துகின்றன.

இறுதியாகத் திருவாய் மொழியை அதன் சமகால இலக்கியங்களோடும் முன் தோன்றிய நூல்களோடும் நூற்றாண்டுவாரியாக, ஒப்பிட்டுக் கண்டால்தான் அதன் தன்மையை நன்கு உணர்தல் கூடுமாகையால் சங்க நூல்களுடன், சிறப்பாக அவற்றுள் பரிபாடலுடனும், பின் நீதி நூல்களில் திருக்குறளுடனும், சமய நூல்களில் திருமூலர் அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலியோர் தம் பாடல்களுடனும், ஓரளவு ஒப்பிட்டுத் திருவாய்மொழிக்கும் அவற்றிற்கும் உள்ள சொல், பொருள் ஒப்புமைகளைக் காணும் முயற்சி மேற்கொள்ளப் பெற்றுள்ளது. பல ஒற்றுமைகளும், சில வேற்றுமைகளும் கண்டு அவற்றிற்கான காரணமும் முடிந்த அளவு காட்டப் பெற்றுள்ளன. பின் தோன்றிய நூல்கள் பல ஆழ்வாரை அடி ஒற்றி எழுந்துள்ளன. கம்பர் போன்றோர், பல சொற்களையும் கருத்துக்களையும் ஆழ்வார்பால் இருந்தே எடுத்திருக்க வேண்டும் என நினைக்கும்படி பாடியுள்ளனர். அவை தனி ஆராய்ச்சிக்கு உரிய பொருளாமாகையால் இங்கு ஆராயப் பெறவில்லை. மற்ற ஆழ்வார்களுக்கும் நம்மாழ்வார்க்கும் ஒற்றுமைகள் பல. அவற்றைத் திருவாய்மொழியின் வழிவந்த நூல்களிலும் வாய்மொழியின் விரிவுரைகளிலும் காண்கின்றோமாகையால் இங்குத் தனியாக எடுத்துக் காட்டப்பெறுதல் வேண்டுவதின்று என விடப்பெற்றுள்ளது.

## முடிவு

மேற்காட்டியவாறு பகுத்துக்கொண்டு முழுமையாகத் திருவாய்மொழியின் இலக்கிய நயம் காணும் நோக்குடன் ஆராய்ச்சிப் பொருளாகக் கொண்டது, முன் செய்யப்பெறாததும், இன்றியமையாது செய்யத்தக்கதுமான செயல்ஆகும். ஆசிரியன் நோக்கிலும், முடிவுகளிலும், 'வடகலை', 'தென்கலை' என்ற சமயப்பிரிவுகள் இடம் பெறவில்லை. ஆராய்ச்சி மாணவன் ஒருவன் மேற்கொள்ள வேண்டிய போக்கினை ஒட்டியே சில முடிவுகள் கூறப்பெறுகின்றன. கவிதை நயம்பற்றிய முடிவுகள் நிலைத்து நிற்கக்கூடியன என்பது தெளிவு. "கவிதை வெறும் ஓசையின்பம் (Verbel music) மட்டுமன்று. அதில் ஒரு பொருளிருக்கின்றது; உணர்ச்சி இருக்கின்றது. வாழ்க்கை நேர்மையைக் காட்டக்கூடிய ஓர் அம்சமிருக்கிறது. இவை எல்லாம் அதில் திகழ்கின்றன. இத்தனை அம்சங்களையும் நம்மாழ்வார் பாடல்களில் பார்க்கலாம். அக்காரணம் பற்றி அவருடைய பாடல்களில் குடைந்து குடைந்து பார்க்கும் போதெல்லாம், புதியபுதிய முத்துக்களும் மாணிக்கங்களும் கிடைக்கின்றன

விலையுயர்ந்த பண்டங்கள் பதுங்கிக் கிடக்கின்ற கடல் அவை என்று சொன்னால் மிகையாகாது.[8] என்று ஆங்கிலப் பேராசிரியர் ஆர்.எஸ். தேசிகன் கூறும் கூற்று முற்றிலும் உண்மை என்பதை உணர முடிகின்றது. இம்முடிவுகட்குப் பலவகைகளில் ஒப்புமை உடையதொரு முடிவை ஆங்கில நாட்டு அறிஞர் ஒருவர் சில ஆண்டுகட்கு முன்ஒரு இதழில் எழுதியிருப்பதை அண்மையில் பார்த்ததும் வியப்புற்றேன்.[9]

''உலகெங்குமுள்ள அறிஞரால் போற்றப்பெறும் ஜெயதேவரது 'கீத கோவிந்தம்' என்னும் நூலும், நம்மாழ்வாரின் திருவாய் மொழிக்கு ஒப்பாகாது...... திருவாய்மொழியின் ஆயிரம் பாடல் களில் ஒவ்வொரு பாடலும் அதன் முன் அமைந்த பாடலின் இறுதிச் சொல்லால் தொடங்கப் பெற்று அந்தாதியாக அமைந் துள்ளது என்ற ஒரு குறிப்பைச் சுட்டுவதே போதியதாகும். அதன் அமைப்பு விதிகளின் நுணுக்கம் அதன் அருமையை மிகுவிப்பது போலத் திருவாய்மொழியின் முழு அமைப்புத் திட்டம் அதற்குக் கலையழகோடு கூடிய ஒருமைப்பாட்டைத் தருகின்றது. இது கலையைப் பொதிந்து வைத்தால் அது தன்னைப் புலப்படுத்தும் என்ற அடிப்படை விதியை விளக்குகின்றது. பாடல்கள் பத்துப்பத்து ஒவ்வொரு தொகுதியாக-பதிகமாக-உள்ளன. அத்தொகுதியின் பதினொன்றுவது பாடல் அதனைப்பாடிய ஆசிரியனின் நோக்கப்படி அதன் சாரத்தைச் சுட்டுவதாம். இப்பதிகங்கள் பத்துச் சேர்ந்து நூறு என்று ஒரு தொகுதியாகின்றது. இம் முழு அமைப்பு முறை இக்காலத்து மேல்நாட்டு இசைக் காவிய அமைப்பைப் பெரிதும் ஒத்து அமைந்துள்ளது. அவற்றில் பல கருத்துக்களும் அவற்றின் எதிர் கருத்துக்களும், உட்பொருள்களும் வலியுறுத்தப்படுகின்றன. அவை பல்வேறு வளமான வேறுபாடுகளுடன் அமைந்துள்ளன. அது சொல்லுதற்கரிய இனிமையும் ஓசை நயமும் முதலாய நுண்ணிய வேறுபாடுகளுடன் கூடிய கருநாடக இசைபோல் உள்ளது. அதனை இடைக்காலத்து மாதாகோவில் வீறுடன் வளமாக விளங்கும் வண்ணக் கண்ணடிப் பலகணிக்கு ஒப்பிடலாம்.

இந்நூலினை ஒத்த ஒன்றினை உலகத்துப் பக்தி இலக்கியங்களுள் எங்கும் இதுவரை நான் கண்டதில்லை. கிறித்துவின் நீதியுரைகள் ஜொராஸ்ட்ராவின் பாடல்கள்—ஏன் பகவத் கீதை கூட இதனை வெற்றிகொள்ள முடியாது. என்று கூறத் துணிவேன். ஆன்மிக வாழ்வு வாழ ஆர்வம் கொண்ட எந்த மனிதனும் அறிய விரும்பும் அனைத்தும் இதன்கண் ஒரு நூல்வடிவில் உள்ளன. மிக்க அவலத்தின் போதும், உள்ளக் களிப்பின் போதும், அளவுக்கு மீறிய செருக்குத் தோன்றிய நிலையினும், எந்நிலையிலும் எனக்கு இந்நூல் நெறிகாட்டத் தவறியதில்லை. இதில் பிற நூல்கட்கு

இல்லாத கலையழகும் செம்மைத் தன்மையும் உள்ளன. மற்ற மெய்யுணர்வு நூல்களில் கூறப்பெருத அறவுரைகள் நிறைந்துள்ளன. சான்ருக இசுலாமிய சுபிக்களின் நூல்களிலும், 'கீதா கோவிந்தத்'திலும் அக்குறையுண்டு. தலையாய புத்தமத அறவுரைக் கொள்கைகளினும் இதன்கண் மனத்தத்துவ நுட்பத்திற்குக் குறை வில்லை. எந்த யோகிக்கும் இது தக்கதொரு வழிகாட்டி நூலாகும். எனினும், இத்தகைய விளக்கங்களால் இது மிக விரைந்து நேரடியாக உயிர்த் தத்துவமுடைய இறைவனின் உள்ளத்தை எட்டி விடுகின்றது. மதக்கொள்கை விளக்கத்தில் செம்மையும் முழுமையும் பெற்றிருக்கின்றது. அதே நேரத்தில் வரட்டு வற்புறுத்தலின் சாயலும் இதன்கண் இல்லை. சமயநூல், வழிபாட்டுநூல், தோத்திரமாலை, தத்துவ விளக்கநூல், தியானத்திற்கும் பக்திக்கும்வழி காட்டிடும் நூல்—ஆகிய இவையெல்லாம் ஒன்ருக இணைந்த ஒரு தொகுதி இது; தூய ஆழ்ந்த அனுபவத்தில் எழுந்த ஒரு மாணிக்கம்; இது எதிர்காலத்தில் வரக்கடவ உலகச் சமயநூல் தொகுதியில் சேர்க்க முழுத் தகுதி வாய்ந்ததொரு பனுவல்."

## அடிக்குறிப்புகள்

(நூற்பெயர்-ஆசிரியர் பெயர்- வெளியீடு-ஆண்டு-பக்கம் அல்லது பாடல் என்ற முறையில் பின்பற்றப்பெற்றுள்ளது)

1. ஆசாரிய இருதயம் - திறனாய்வு - தாமோதரன், டாக்டர் கு. (திருமலை திருப்பதி தேவத்தான ஆங்கில வெளியீடு 1976). முன்னுரை.
2. தமிழ் ஆராய்ச்சியின் கதை - ஏ. வி. சுப்ரமணிய ஐயர்., 1971 பக். 131
3. ,, ,, பக். 189
4. ஆங்கிலக் கட்டுரைகள்-சி.சுப்ரமணிய பாரதி.,1937,பக்.56
5. தமிழ் இலக்கிய யாத்திரை-பார்த்தசாரதி., டாக்டர். ஜே., 1957, 'ஆன்ம வாழ்வின் பெருங்காப்பியம்'
6. திருமால் திருநெறி மன்றம் - பாண்டிச்சேரி - 9வது ஆண்டுமலர், 1966., 'நம்மாழ்வார்'
7. துரை-அரங்கசாமியின் ஆற்றுப்படை பற்றிய கட்டுரை- அன்பு நெறியே தமிழர் நெறி—பார்க்க.
8. கவிதைக்கலை II—தேசிகன். ரா. சி, 1967, பக். 149
9. இந்திய தத்துவமும் பண்பாடும்- உத்தரபிரதேசம்- தொகுதி I எண் 1 (ஆங்கிலம்) — பக்கம். 34-42

# நம்மாழ்வாரின் வாழ்வும் காலமும்

நூல் எழுதிய ஆசிரியரின் வாழ்க்கை, ஆளுமை ஆகியவை பற்றி அறிந்து கொள்வது இலக்கிய ஆராய்ச்சிக்கு மிக இன்றியமை யாத பகுதியாகத் தொன்று தொட்டு அமைந்துள்ளது. ஆகவே, திருவாய்மொழி இயற்றிய நம்மாழ்வார் வரலாறுபற்றி ஆராய்வது பயனுடைய செயலாகும்.

சில சமயங்களில் நூலாசிரியன் வாழ்விற்கும் அவன் நூலுக்கும் பொருத்தமான தொடர்பு அமைகின்றது. வேறு சில சமயங்களில் தொடர்பில்லாமலும் அமைகின்றது. ஆசிரியரின் வாழ்வு நிலைமை நேரடியாக அவன் பாடலில் வெளிப்பட வேண்டுமென்பதில்லை. ஆயினும், வேறு ஏதேனும் ஒரு வகையில் அதன் விளைவு, அவன் கவிதை அமைப்பில் மறைந்திருப்பதை நுணுகி ஆராய்ந்தால் தெளியலாம். ''ஒரு புலவனின் தனிப்பட்ட வாழ்க்கை முறைக்கும் அவன் படைப்பிற்கும் இடையே அமைந்துள்ள உறவு, காரண காரிய முறையின்படி அமைந்த உறவன்று.[1] 'ஒரு கலைப்படைப்பு அதை ஆக்கியவன் வாழ்ந்த வாழ்வை ஒட்டியதாகாது, அவன் கனவின் வடிவமாக அமையலாம்; அல்லது அது அவனை மறைத்து வைக்கின்ற மூடியாகவும், அவன் இயல்பிற்கு எதிரிடையான தாகவும் அமையலாம். அதனுள் அவனது உண்மைத் தன்மை மறைந்திருக்கலாம்; அல்லது ஆசிரியன் எதிலிருந்து தப்ப வேண்டுமென்று விரும்பினனோ அந்த வாழ்வின் ஓவியமாகக்கூட அது இருக்கலாம்''[2] இக்கருத்துக்கள் உண்மையே. எனினும் தன்னுணர்வுப் புலவனின் (Subjective poet) பாடல்களிலிருந்து மற்ற புலவர்களைப் போலன்றி ஓரளவு அவன் வாழ்வு நிலை புலப் படுதல் கூடும். சில சமயங்களில் வாழ்வு, அவனுடைய பாடற்

போக்கை உருவாக்குவதாகக் கூட அமையலாம். நுண்ணிய ஆய்வின் மூலமே அதனை நாம் தெளிதல் இயலும்.

### வரலாற்றுக்குரிய ஆதாரங்கள்

நம்மாழ்வார் பற்றி நாம் அறிந்து கொள்வதற்கு நமக்குக் கிடைக்கும் சான்றுகள் மூவகையன. முதலாவது அவர்தம் நூல்கள்; அவைகள் அன்றி வேறு சமகாலக் குறிப்புக்கள் நமக்குக் கிட்டவில்லை. இரண்டாவது வகையாக அவர் காலத்திற்கு ஏறக்குறைய 300 ஆண்டுகட்குப் பின் வாழ்ந்தவர்களாகக் கருதப் பெறும் சில சான்றோர்கள் எழுதிய நூல்களில் ஆழ்வார் வரலாறு பற்றிய சில செய்திகள் உள. 12ஆம் நூற்றாண்டில் இராமாநுசர் காலத்தில் வாழ்ந்தவரென அறியப்பெறும் கருடவாகன பண்டிதர் என்பவர் வடமொழியில் எழுதியுள்ள 'திவ்விய சூரிசரிதம்' என்னும் நூலும், அதன்பின் அதனையொட்டி எழுதப்பெற்ற பல நூல்களில் முக்கியமானதாக விளங்கும் பின்பழகிய பெருமாள் ஜீயர் எழுதியுள்ள மணிப்பிரவாள நடையில் உள்ள 'ஆறாயிரப்படி குருபரப்பராப் பிரபாவம்' என்னும் நூலும், 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த கடைசி ஆசாரியரான மணவாள மாமுனிகள் பாடியுள்ள 'உபதேச ரத்தினமாலை' என்னும் நூலும், முக்கியமான புறச் சான்றுகளாம். மூன்றாவதாக 8, 9ஆம் நூற்றாண்டுகளில் அமைந்த ஒரு சில கல்வெட்டுச் செய்திகளும் முக்கிய சான்றுகளாகக் கொள்ளத்தக்கவை. இவை மூல ஆதாரங்கள் என்ற பிரிவில் அமையும்.

இவற்றின் அடிப்படையில் பின்காலத்தில் சுமார் 50 ஆண்டுகளுக்கு முன் பல அறிஞர் பெருமக்கள் எழுதிய கால ஆராய்ச்சிக் கட்டுரைகள் உள்ளன. அண்மையில் எழுதியவைகளும் உள. இவற்றின் வழி நின்று ஆழ்வார் வாழ்வு பற்றியும் காலம் பற்றியும் ஆய்வோம். (சில ஆண்டுகளுக்கு முன் அண்ணாமலை, வேங்கடேசுவரா ஆகிய பல்கலைக்கழக ஆராய்ச்சியாளர் இப்பொருள் பற்றி ஆராய்ந்த டாக்டர் பட்ட ஆய்வுரைகள் இன்னும் வெளியிடப் பெறாததால் அவற்றில் காணும் ஆராய்ச்சி முடிவுகள் அறியும் வாய்ப்பு இக்கட்டுரையாளருக்குக் கிட்டவில்லை.)

### வாழ்வுக் குறிப்பு : மரபு வழிச் செய்தி

ஆறாயிரப்படி குரு பரம்பரை கூறும் வரலாறு கற்பனை கலந்துள்ளதாகத் தெரிகிறது. எனினும் அதனின்றுதான் நாம்

உண்மைகளை ஊகித்தறிய வேண்டியுள்ளது. அதில் காணும் கருத்துக்களின் சுருக்கமாவது:

இறைவன் பல அவதாரங்கள் எடுத்து உலகினரைத் திருத்த முயன்றும் அச்செயல் முற்றுப்பெருமையால், மனிதர்களைத் திருத்த அவர்களைப்போன்று ஒரு சாதாரண மனிதனுக அவதரிப்பது நலமென்று கருதித், தன் பரிவாரங்கள் பலவற்றையும் உலகில் அவதரிக்கச் செய்து, தானும் நம்மாழ்வாராக வந்ததாக ஒரு நம்பிக்கை தெரிவிக்கப் பெறுகின்றது. ஆழ்வார்கள் வாழ்க்கையையும் செயல்களையும் பார்த்து அவற்றில் ஈடுபட்டவர்கள் இவ்வாறு நம்பிக்கை கொள்வதில் வியப்பில்லை.

நம்மாழ்வார் பாண்டிய நாட்டில் தாமிரபரணி ஆற்றுக் கரையில் உள்ள திருக்குருகூர் என்ற ஊரில் பிறந்தார்; இவர் பரம்பரை வைணவ சமயத்தைச்சார்ந்த வேளாளர் குலத்தவர். இவரது பரம்பரையில் திருவழுதி நாடர், அறந்தாங்கியார், சக்கரபாணியார், அச்சுதர், செந்தாமரைக் கண்ணர், பொற்காரியார், காரியார் என்று எழுவர் பெயரைக் குறிப்பிட்டு அவர்களில் கடைசியில் காணும் காரியார்க்கும், அவர்தம் இல்லத்தரசியான திருவண் பரிசாரத்தைச் சார்ந்த 'உடையநங்கை' அம்மையார்க்கும் பிறந்தவரே நம்மாழ்வார். இவர் திருக்குறுங்குடி 'நம்பி'யின் வரத்தால் பிறந்தவர் என்று அவ்வரலாறு செப்புகின்றது. அந் நம்பி 'தாமே வந்து பிறப்பதாகக்' கூறிப்,பின் சேனை முதலியாரை அவ்வாறு பிறக்கச் செய்ததாகவும், பிறந்த ஆண்டு கலியுகம் தொடங்கிய 43வது நாளான வெகுதான்ய வருடத்து (பிரமாதி வருடத்து?) வைகாசி மாதம் பௌர்ணமியன்று கடக லக்னம் அமைந்த வெள்ளிக்கிழமை என்றும் கூறப்பெற்றுள்ளது. மற்ற ஆழ்வார்கள் பிறப்பைப்பற்றி இவ்வாறு விளக்கமாய்க் கூறப்பெறவில்லை.

அந் நூலில் முன்னோர் எழுவர் பெயர் தரப் பெற்றுள்ளது. ஏழு தலைமுறை என்று குறிப்பது ஒரு மரபு. கடவுள் அருளால் பிறந்தவர் என்று பெருமை சான்றவரைச் சொல்லுவதும் ஒரு மரபு. மற்றும் புத்தர் போன்றவர் வரலாற்றிலும் (வைகாசி) விசாக பௌர்ணமி நாள் குறிக்கப் பெறுவதும் நமக்கு நினைவிற்கு வருகின்றது.

பிள்ளை, சாதாரணமாகப் பிறக்கும் குழந்தைகளைப் போன்று அழுதலும், பாலருந்தலும் செய்யாது இருப்பது கண்டு, பெற்றோர்

கலங்கி, அதனை அவ்வூர் ஆதிநாதர் ஆலயத்தைச் சார்ந்த புளிய மரத்தடியில் சேர்த்து, இறைவனை இரந்து நின்றனர். இந்நிலை 16 ஆண்டுக்காலம் நீடித்தது. பின்னர் அவ்வூரை அடுத்த திருக் கோளூரில் அந்தணர் குலத்திற் பிறந்தவரும் வடக்கே அயோத்தி சென்று தங்கியிருந்தவருமான மதுரகவி என்பவர் தெற்கே ஒரு ஒளி தெரிவது கண்டு வியப்புற்று அதன் காரணமறிய ஆவல் கொண்டு தென்திசை நோக்கி வர, அவர் குருகூர் வந்தபின் இக் குழந்தையால்தான் இவ்வொளி என்று உணரலானுர் என்று தெரிவிக்கப்பெற்றுள்ளது. ஏசுநாதர் வரலாற்றில் வரும் நட்சத்திர ஒளிபற்றிய செய்தி இத்துடன் ஒத்துளது. மதுரகவி இக் குழந்தையின் நிலை கண்டு அதனைச் சோதிக்க ஒரு கல்லை எடுத்து அருகிலிடத் தியான நிலையிலிருந்த குழந்தை கண் விழித்து நோக்கியதென்றும், பின் 'சத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந் தால் எத்தைத்தின்று எங்கே கிடைக்கும்' என்று கேள்வி கேட்க, ஆழ்வாராம் அக்குழந்தை உடனே 'அத்தைத் தின்று அங்கே கிடைக்கும்' என்று முதன்முதல் வாய்திறந்து விடையிறுத்ததா கவும் சொல்லப்பெற்றுள்ளது. வியப்புற்ற மதுரகவி, ஆழ்வாரையே குருவாக ஏற்று இவர்தம் சீடராய் அவர் பாடல்களை எழுதிக் கொண்டு அங்கேயே தங்கினுர்.

108 திவ்விய தேசப்பெருமான்களும் அங்கு எழுந்தருளி நம்மாழ்வாருக்குக் காட்சி தந்ததாகவும், ஆழ்வார் நான்கு பிரபந்தங்களை இயற்றி உலகைத்திருத்திப் பின் தம் 35ம் ஆண்டில் பரமபதம் எய்தியதாகவும் சொல்லப் பெற்றுள்ளது.

இத்துடன் நம்மாழ்வார் கவிகளைச் சங்கப்புலவர் ஏற்றுக் கொள்ளவில்லை என்றும், மதுரக்கவிகள் 'கண்ணன் கழலிணை' (10-5) என்ற திருவாய்மொழிப்பாடலை எழுதிக் கொடுக்க, அதற்குச் சங்கப்பலகை இடம் தர, அதனை உணர்ந்து புலவர்கள் ஆழ்வாரைக் கொண்டாடினர்; அவர் தம் நூல்களை ஏற்றுக் கொண்டனர் என்றும் தெரிய வருகின்றது. இவ்வற்புதச் செயலா லேயே அவர்கள் ஆழ்வார் பெருமையை அறிந்தனர் போலும்!

## பெயர்கள்

மாறன் என்பது இவரது இயற்பெயர். ஏன் இப்பெயர் வந்தது? உலகநடைக்கு மாருகக் குழந்தை இருந்ததனல் இப்பெயர் இடப் பெற்றுள்ளது என்பது ஒரு கருத்து. ஆனுல், இவரது தந்தையார்

பாண்டிய நாட்டின் மன்னர்பால் மதிப்புடையதொரு பணியாள ராக இருந்தார். பாண்டியர்க்குரிய 'மாறன்' என்ற பட்டப் பெயரும் வழி வழியாக இவர் குலத்திற் குரியதாக வந்தது. எனவே காரியார் இவர்க்கு இப்பெயர் இட்டார் என்று ஊகிக்கின்றனர். அது பொருத்தமுடையதாகத் தோன்றுகின்றது. ஆழ்வார் தம்மை வழுதிவளநாடன் என்று கூறிக்கொள்வதும் அதற்கு ஒரு சான்று.[3] ஆனைமலைக் கல்வெட்டின் அடிப்படையில் இவர்தம் பட்டாளுரும் மாறன் என்ற பெயரினராக இருந்தார் என்று திரு டி. ஏ கோபி நாதராவ் அவர்கள் துணிவதும் காணலாம். பாண்டியனின் முதன் மந்திரிக்கு அடுத்த உத்தர மந்திரியான காரி பற்றியும், நம்மாழ்வார் பற்றியும் குறித்த வரலாற்றுக் குறிப்புச் செய்திகள் நம்மை நம்மாழ் வார் உத்தர மந்திரி காரியின் மகன் என்று கொள்ளலாமென எண்ண வைக்கின்றது. இவ்வாறு முடிவு எடுத்தால் நம்மாழ்வார் வரலாற்றில் வேறு வகையில் முடிவு கூற முடியாத பல சிக்கல்கள் நீங்கிவிடுகின்றன. இம்முடிவு சரி என்ருல், நம்மாழ்வார்க்கு 'மாறன்' என்ற பெயர் அவர்தம் பாட்டன் வழியாக வந்ததாகும் என்று எளிதில் அறியலாம்.[4] அவர்க்குரிய வேறுபெயர்கள் 'சடகோபன்', 'பராங்குசன்!' 'வகுளாபரணர்', 'வழுதிநாடர்' என்பன.

சடம் என்பது ஒரு வாயு; அது ஒரு குழந்தை பிறந்தவுடன் அதனை அஞ்ஞானத்திற்கு உள்ளாக்கி அழுதல், அரற்றுதல் முதலிய செயல்களைச் செய்யும் தன்மையது. இக்குழந்தையோ அவ்வாயுவை ஒறுத்து ஓட்டிவிட்டது. அக்காரணம் பற்றி இதற்குச் 'சடகோபன்' என்று பெயர் இடப்பெற்றது என்பது ஒரு கருத்து. இப்பெயரையே திருவாய்மொழியில் மிகப் பல இடங் களில் தனக்குரிய பெயராக ஆழ்வார் குறிக்கின்ருர். இதுவே அவர்க்குப் பெரியோர் இட்ட பெயராக இருக்குமென்று கூட நினைக்க வேண்டியுள்ளது. இப்பெயர் 'குருகூர்ச் சடகோபன்' என்று ஊருடன் சேர்க்கப் பெற்று வழங்குகின்றது. 'சடகோபன்' என்பதனுடன் 'மாறன்' என்ற பெயர் முன்னும் பின்னும் சேர்த்து வழங்கப் பெறுகின்ற காரணத்தால் இதனை இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகக் கொண்டு மாறனுகிய சடகோபன் என்ருே சடகோபனுகிய மாறன் என்ருே கொள்வதன்றி வேறுவகையாகக் கோடல் இயலாது.

'வழுதிநாடன்' என்ற பெயரும் இரு இடங்களில் (3-6-11) (9-2-11) திருவாய்மொழியில் அமைந்துள்ளது. இவர் வாழ்ந்த

பாண்டிய நாட்டின் பகுதி 'வழுதி நாடு' என அழைக்கப்பெற்றது. இவர் குலம் அப்பகுதியை ஆட்சி செய்யும் உரிமையுடையதாக இருந்தமை பற்றி இவர்க்கு மேற்குறித்த 'வழுதி நாடன்' என்ற பெயர் வந்திருக்கலாம். அதனுல் தான் ஆழ்வார் தன்னைக் குருகைக்கோன்' (3-6-11) என்றும் கூறிக் கொள்ளுகின்ருர்.

'வகுளாபரணர்' என்ற பெயர் வகுளத்தை ஆபரணமாக உடையவர் என்று பொருள்படும். வகுளம் என்பதற்குத் தமிழில் 'மகிழ்' எனப் பொருள். திருவாய்மொழியில் 'நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்'(4-10-11) என்று ஆழ்வார் குறிக்கப் பெற்றிருக்கின்ருர். 'மகிழ்மாலை மார்பன்' என்ற தொடரின் வட மொழி அமைப்பு 'வகுளாபரணர்' எனப் பின்னேரால் வழங்கப் பெற்றிருத்தல் இயல்பே. ஆழ்வார்க்கு அல்லது அவர் குலத்திற்கு அம்மாலை அடையாள மாலையாக இருந்திருக்கலாமென்றும் நாம் எண்ண இடமிருக்கின்றது.

ஆழ்வார் தம்வாழ்வின் பிற்பகுதியில் தம் பாடல்களின் தத்துவ விளக்கத்தின் மூலம் பிற மதங்களாகிய யானைகளின் செருக்கை அடக்கியதால், யானையின் செருக்கை அடக்கும் அங்குசம் என்ற கருத்தில் பராங்குசர் (சிறந்த அங்குசம் போன்றவர்) என்ற பெயரால் பிறர் அவரை அழைக்கலாயினர் போலும்!

வேறு ஒரு கருத்தும் கூறப் பெறுகின்றது. பராந்தக பாண்டியனின் தந்தை பராங்குச பாண்டியன். அப்பாண்டியன் பெயர் மீதுள்ள பற்றுதலால் அப்பெயரை இவர் தந்தையார் தம் மகனுக்கு இட்டிருக்கலாமென்று திரு.டி.ஏ.கோபிநாதராவ் அவர்கள் கூறுகின்ருர்கள். அப்படியிருக்கவும் இடமுண்டு. ஆனுல் அதற்கு ஒரு தடை எழுகின்றது. தந்தை இட்ட பெயராயின் இவரது பாடல்களில் அப்பெயர் வழங்காதது ஏன் என்ற கேள்விக்கு விடை காணமுடியவில்லை. இவர்தம் பெருமை கருதி மற்றவர் இட்ட பெயர் என்னும்போது ஆழ்வார் தம் பாடல்களில் வழங்காமை இயல்பே என்று அறியலாம்.

நம்மாழ்வார் என்பது இவருக்கு இன்று தமிழர் அனைவரும் பொதுவாக வழங்கும் பெயர். இறைவன் இவர் தம்பால் சிறப் பான அன்புகாட்டி ஆட்கொண்டு 'நம் ஆழ்வார்' என்று ஏற்றுக் கொண்ட காரணத்தால் வந்தது என்பர்: நம் என்ற அடைமொழி தனிச்சிறப்பும் அதன் காரணமான அன்பும் தோன்ற வழங்கப்

பெறுவது ஆம். 'உபதேச ரத்தினமாலை'யும் இதனைத் தெரிவிக்கின்றது.[5] அடியவர் தம் அன்பு மிகுதியால் அழைத்த பெயராதலும் கூடும்.

ஆகச்'சடகோபன்', 'மாறன்' ஆகிய இரண்டும் காரணம் பற்றிய இயற்பெயர்கள்; 'வகுளாபரணர்', 'வழுதி நாடன்' ஆகிய இரண்டும் காரணம் பற்றி வந்த பெயர்கள்; 'பராங்குசன்', 'நம்மாழ்வார்' என்பன சிறப்பு அறிந்து பின்னோர் வழங்கிய பெயர்கள் என்று ஒருவகையாக ஊகிப்பதல்லது வேறு செயலாவதில்லை.

## பெற்றோர்

இவரது தந்தை காரி என்பவர் என்பது திருவாய்மொழிப் பாடல்களில் வரும் 'காரி மாறன் சடகோபன்' போன்ற தொடரால் அறியலாம். தொல்காப்பியர் காலம் தொடங்கித் தந்தை மகன் பெயர்களை முன்பின் இணைத்து வழங்கும் மரபு இருந்தமையால்[6] காரியின் மகன் மாறன் என்று கொள்வது பொருத்தமே. 'மாறன்' 'வழுதிநாடன்', 'குருகைக்கோன்' என்ற வழக்குக்கொண்டு காரி பாண்டிய மன்னன்பால் பொறுப்புள்ள பதவியில் இருந்தவர் என்ற கருத்தை நாம் ஏற்றுக் கொள்ளலாம். திரு. டி. ஏ. கோபிநாதராவ் அவர்கள் காட்டும் ஆனைமலைக் கல்வெட்டு நம்மாழ்வார் தம் தந்தையைக் குறிக்கின்றது என்பதை ஒத்துக் கொண்டால்-அது நல்ல ஊகம் என்பது முன் குறிக்கப்பெற்றது - காரி உத்தரமந்திரி (முதல் மந்திரிக்கு அடுத்தவர்), அவர்தம், தந்தையும் 'மாறன்' என்ற பெயரினர் அவர்க்கு 'மதுரகவி' என்று வேறொரு பெயர், அவரது சொந்த ஊர் 'கரவந்தபுரம்' என்னும் 'களக்காடு'. அவர் ஒரு வைணவக் கோயிலைக் கற்குகையில் அமைத்தார் என்று கொள்ளவேண்டும் இதன்படி நம்மாழ்வாரின் தாத்தா பெயரும் 'மாறன்' என்பதாக வேண்டும். ஆனால் மரபுவழிச் செய்தியில் இது குறிக்கப்பெறவில்லை. பொற்காரியாருக்கு 'மாறன்' என்னும் பெயர் இருந்திருக்காது என்று கூறுவதற்கும் இயலாது.

கரவந்தபுரம் பிறந்த ஊராயினும் காரியார் வழுதிநாட்டின் ஆட்சிப் பொறுப்பில் இருந்த காலத்து அங்கு அவர்க்கு மகன் பிறந்திருத்தல் கூடுமென்றும், தான்தன் மகனுக்குத் தன் மன்னன் பெயரை இட்டது போன்று நம்மாழ்வாரும் தம் சீடருக்குத் தம் தந்தைக்குரியதாக இருந்த சிறப்புப் பெயராகிய 'மதுரகவி' என்னும்

பெயரை இட்டிருப்பது பொருத்தமே என்றும் கருதுகின்றார் மேற் குறித்த பேராசிரியர். மரபுவழிச் செய்தி சான்றுகளற்றது; கல்வெட்டுச் செய்தி சமகாலத்தது. எனவே, கல்வெட்டுச் செய்தி யையும் மரபுவழிச் செய்தியையும் இணைப்பதற்குச் சில ஊகங்களைச் செய்யத்தான் வேண்டியுள்ளது. இன்றுள்ள நிலையில் வேறு என்றும் உறுதியாகச் சொல்லுதற்கு இயலாது.

தம் ஊகம் சரியே என்று அவர் துணிந்து கூறுகின்றார். அதற்கு அவர் காட்டும் சான்று இது:மற்ற ஆழ்வார்கள் பாடாததும் மலைநாட்டில் அணுகுதற்கு அருமையுடையதுமான சில திருப்பதிகளை நம்மாழ்வார் மட்டுமே பாடியிருக்கின்றார்; அவை திருவாட்டாறு என்னும் பதியும்; திருச்சிற்றாற்றுத் திருச்செங் குன்றூர், திருப்புலியூர், திருவண்வண்டூர், திருக்கடித்தானம், திருவல்லவாழ், திருவாறன்விளை என்னும் ஆறு திருப்பதிகளும்; திருக்காட்கரை, திருமூழிக்களம், திருநாவாய் என்னும் மூன்றும் ஆகிய பத்துத் திவ்விய தேசங்களாம். அவை, காடடர்ந்த மலை விலங்குகள் வாழ்கின்றன பகுதியில் உள்ளன. அதனால் பிறர் அங்குச் செல்லவில்லை. நம்மாழ்வாருக்கு அவர்தம் தந்தையின் பதவிகாரணமாக அரச உதவியிருந்ததால் அவர் அவ்வூர்கட்குச் செல்ல முடிந்திருக்கலாம் என்கிறார் அவர்.

பரம்பரை வரலாறு ஆழ்வார் வேறு எந்த திவ்விய தேசத் திற்கும் சென்று சேவிக்கவில்லை; 108 திவ்விய தேச எம்பெரு மான்கள் இவரிடத்திற்கு வந்து இவர்க்குக் காட்சி நல்கினர் என்று கூறுகின்றது. காட்சி தந்தமை உண்மையென்று கொண்டாலும் இவர் வேறு இடங்கட்குப் போகவில்லை என்று எவ்வாறு துணிவது? 108 என்ற எண்தானும் ஆழ்வார் காலத்தில் ஆட்சியில் இருந் திருக்க முடியாது. இது திவ்விய பிரபந்தம் தொகுக்கப்பெற்றபின் அதன் அடிப்படையில் அமைக்கப் பெற்ற ஒரு எண்ணிக்கையே. இக்கதை ஒரு கற்பனையே. எனவே பேராசிரியர் தரும் ஊகம் சரியென்றே கொள்ளத் தோன்றுகின்றது.

## கல்வி

ஆழ்வார் பதினாறு ஆண்டுகள் சமாதி நிலையில் பேசாது இருந் தவர்; இறைவன் அருளால் பிறந்த உடனேயே சேனை முதலியார் தனியாக வந்திருந்து எல்லா மந்திரங்களின் நுண்பொருளையும்

அறிவுறுத்தியதாகக் கூறுகின்றனர். ஆனால் அவர்தம் பாடல்களை நோக்கினால் தத்துவப்பொருளை மட்டுமன்றித் தமிழ்நூல் மரபுகளையும் அன்னார் அறிந்திருந்தமை தெளிவாக விளங்குகின்றது. ஆகவே தெய்வத் தன்மையை அவர்பால் ஏற்ற இக்கதை புனையப் பொற்றிருக்கலாம். ஆழ்வார்க்கு மந்திரங்களின் பொருள் விளக்கமும் தத்துவ ஞானமும் இறையருளால் வந்திருக்கலாம். மற்ற படி உலகியலறிவு நூற்கல்வி முதலானவற்றை அவர் தன் முயற்சியாலேயே பெற்றிருக்கவேண்டும். அவர்தம் பாடல்களை விருப்பு வெறுப்பின்றிக் கற்றுணர்ந்தவர்கள் இம்முடிபிற்கே வருதல் கூடும்.

## நூல்கள்

மதுரகவிகளைச் சந்தித்த பின்னரே ஆழ்வார் பேசவும், தொடர்ந்து பாடவும் செய்தார். இவர் பாடிய நூல்கள் நான்கு. 'திருவிருத்தம்' 'திருவாசிரியம்' 'பெரிய திருவந்தாதி' என்ற மூன்றும் அளவால் சிறியன; அவை மூன்று வேதங்களின் சாரம் என முன்னோர் மொழிகின்றனர். நான்காவதான 'திருவாய்மொழி' மிகவும் பெரியது. அதனைச் சாம வேதத்தின் ஒப்பு என்றும், 'பண்ணார் பாடல்' என்றும் பகர்வர். பாடல்களை நம்மாழ்வார் கூற அருகிருந்த அவர்தம் முதன்மைச் சீடர் எழுதினார்; அதற்கு நாலரை ஆண்டுகள் ஆயின என்பர். மதுரகவிகள் தம்பாடலில் 'அடியவர் இன்புற அருளினான் அவ்வரு மறையின் பொருள்... ஆயிரம் இன்தமிழ் பாடினான்'[27] என்று பாடுகின்றார். வயதில் முதிர்ந்த சீடரும் மறைஉணர்ந்த வேதியரும் இவ்வாறு கூறினாலும் ஆழ்வார் தம்நூலில் எங்கும் வேதத்தைத் தமிழில் செய்ததாகப் பாடாதது குறிப்பிடத் தக்கது. இது ஒரு உண்மையை உணர்த்தும். "ஞானம் அல்லது வேதத்தின் உண்மைகள் எக்காலத்தும் உள்ளவை; சில முனிவர்கள் அவற்றை உணர்ந்து வடமொழியில் வெளியிட்டார்கள்; அவை வடமொழி வேதங்கள். அவ்வாறே என்றுமுள்ள அவ்வுண்மைகளை ஆழ்வார் தமிழில் வெளியிட்டார்."[8] அவ்வகையால் ஆழ்வார் தமிழ் வேதங்கள் தந்தவராகின்றார். 'வேதம் தமிழ் செய்த மெய்யன் எழில் குருகை நாதன்'[29] என்பர் மணவாள மாமுனிகள்.

'சங்கப் புலவர்' இவர் பாடல்களை ஏற்றுக் கொள்ளவில்லை, என்ற செய்தியும், மதுரகவிகள் நிகழ்த்திய அதிசயச் செயலும் முன் குறிக்கப் பெற்றன, சங்கம் இருந்த காலமும் திருவாய்மொழி

தோன்றிய காலமும் முற்றிலும் வேருனவை. அப்படியிருக்கவும் இவ்வாறு ஒரு கதை எழுந்ததன் கருத்து யாது? திருக்குறள் பற்றியும், கம்பன் காவியம் குறித்தும் இதுபோன்ற கதைகள் வழங்குகின்றன. சங்கப் புலவர் பாடல்கட்கு மாருன கருத்துக்கள் சிலவற்றை வலியுறுத்திக் கூறுவன இந்நூல்கள்; புகழுடனும் திகழ்வன. எடுத்துக் காட்டாகச் 'சொன்னல் விரோதம் இது ஆகிலும் சொல்லுவன் கேண்மினே' (3-9-1) என்று தொடங்கி மானிடம் பாடுதலை ஆழ்வார் கடிதலைக் கூறலாம். தமிழ்ச் சங்கம் பலராலும் மதிக்கப்பெற்ற ஒன்று; அதனல் போற்றப் பெருத எதுவும் தகுதியுடையதாகாது என்ற எண்ணம் பரவலாக இருந்தமை இதனல் தெரியலாம். அவ்வாறு எண்ணியவரால் திருவாய்மொழியின் பெருமையை நிலைநாட்ட இக்கதை புனையப் பெற்றிருக்க வேண்டும். இதற்கு அடிப்படையாக ஏதேனும் ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்திருத்தலும் கூடும். சங்கப் புலவர்க்கிருந்த பெரு மதிப்பும், தொடக்கத்தில் சிறிது தயக்கம் காட்டிப் பின், புதுக் கருத்துக்களுடன் தோன்றிய திருவாய்மொழி போன்ற நூல்கள் போற்றப் பெற்ற தன்மையும் இக்கதை விளக்குவதாகக் கொள்ள வேண்டும். வேதக் கருத்துக்களைத் திருவாய்மொழி விளக்குகின்றது என்றவர் அதனைத் தமிழ் நெறியாளரும் ஏற்றிப் போற்றினர் என்று தெரிவிப்பது அன்றைய சூழலில் சாலவும் இன்றியமையாததாக இருந்தது போலும். இவ்வளவே இக்கதையால் நாம் அறியலாவது.

காலம்

ஆழ்வார்கள்—இறைவனின் கலியாண குணங்களில் ஆழ்ந்தவர்கள். பதின்மர் என்றும், பன்னிருவர் என்றும் இருவகையாகக் கொள்வதுண்டு. நம்மாழ்வாரின் சீடரும் அவரையே தெய்வமென்று போற்றியவருமான மதுரகவிகளையும், பெரியாழ்வாரின் வளர்ப்புத் திருமகளான ஆண்டாளையும் இந்த எண்ணிக்கையில் சேர்க்காதவர் 'பதின்மர்' என்பர். பத்து என்ற எண்ணுக்கு ஒரு சிறப்புத் தந்து இப்படிச் சொல்வது ஒரு மரபு.

ஆழ்வார்களின் காலம் குறித்துக் குருபரம்பரை நூல்கள் தெளிவாக ஒன்றும் சொல்லவில்லை. அவை குறிக்கும் காலக் கணக்கு ஏற்கத் தக்கதன்று என்பது பெரும்பாலோர் கருத்து. வரலாற்று உணர்வுடன் நோக்குகின்றவர் அனைவரும் ஆழ்வார்களின் காலம் கி.பி. 5 முதல் 10 ம் நூற்ருண்டு முடிய என்பர்[10]

''சைவ சமயக் குரவரும் வைணவ ஆழ்வார்களும் சுமார் ஆறும் நூற்றுண்டிலிருந்து பத்தாம் நூற்றுண்டுக்குட்பட்ட காலத்தில் தோன்றியவர். இது ஆராய்ச்சியாளரின் தெளிந்த முடிவு சமய உணர்ச்சி மேலீட்டால் இம் முடிவுக்கு இழுக்குக் கூறலாமே யொழியச் சரித்திர ஆராய்ச்சிச் சான்றுகளால் அசைக்க முடியாது[11] என்பது ஏற்றுக் கொள்ளத்தக்க உண்மையே.

பத்தாம் நூற்றுண்டு முதல் பதினைந்தாம் நூற்றுண்டு முடிய நாதமுனிகள் தொடங்கி மணவாள மாமுனிகள் ஈருக ஆசாரியர் பரம்பரை ஒன்று வைணவர்க்கு உண்டு. 'ஆழ்வார்கள் இறைவனுல் மதிநலம் அருளப்பெற்றுப் பல சாதியினராகவும் விளங்கிய முனிவர் என்றும், ஆசாரியர்கள் அந்தணர் குலத்தில் பிறந்து முயன்று தவம் செய்து ஞானம் பெற்றவர் என்றும் கூறுவர்.[12] ஆழ்வார்களில் நம்மாழ்வார் தலைவர்; ஆசாரியர்களில் இராமாநுசர் தலைவர். இவ்விரு வகையினரையும் இணைத்து நம்மாழ்வாரையே முதலாசாரியராகக் கூறுவதும் திருமாலையே அவ்வாறு கொள்வதும் தொன்றுதொட்ட மரபு. இராமாநுசரைப் பற்றி அவர்தம் சீடர் அமுதனுர் பாடுகையில் 'மாறன் அடிபணிந்து உயர்ந்தவன்'[13] என்று தெளிவிக்கின்றுர். ஆசாரிய பரம்பரையைச் சேர்ந்த சில பெரியோர்கள் எழுதிய தனிப்பாடல்களும் விரிவுரைகளும் நமக்கு ஆழ்வார்களைப்பற்றி அறிந்து கோடற்கேற்ற கருவிகளாக அமைகின்றன. அதனுலேயே அவர்களைப் பற்றி இங்குக் குறிக்கப் பெற்றது.

ஆழ்வார்களின் அவதாரமுறை குறித்து வெவ்வேறு வகையான செய்திகள் கிடைக்கின்றன. முக்கியமானவை இரண்டு. ஒரு கருத்து. முதலாழ்வார் மூவர் அடுத்து அமைபவர் திருமழிசையாழ்வார். இவர்கள் நால்வருக்கும் அடுத்தபடி ஐந்தாவது இடம் பெறுபவர் நம்மாழ்வார் என்ற முறையில் அமைவது. மற்றொரு கருத்து: எல்லா ஆழ்வார்க்கும் பிற்பட்டவர் நம்மாழ்வார் என்பது. உலகெங்குமே பெரிய மனிதர்களில் ஒருவர் பெரியவரா என்பது அவர் பிறந்து வளர்ந்து பெருமை எய்திய பின்னரே தெரியும்—இறுதிநாள் வரலாற்றுசிரியர்கட்கு நன்கு தெரிந்திருக்கும். பொதுவாக, அவர்களின் பிறந்த நாள் பல சமயங்களில் சரிவரத் தெரியாமற் போவது இயல்பே. அதுவும் வரலாற்றுணர்வும் தம்மைப் பற்றிய செய்திகளைக் குறித்து வைக்க வேண்டுமென்ற எண்ணமும் இல்லாத காலத்தில் இது பெரிதும் நிகழக் கூடும். ஆகையால்

ஆழ்வார்களின் பிறந்த நாள் பற்றி எழுதி வைத்திருப்பது பின்னவர் செய்த கற்பனையே என்று எண்ண வேண்டியுள்ளது. இப்பின்னணியுடன் நாம் நம்மாழ்வார் காலம் குறித்து வரலாற்று ஆசிரியர்கள் கண்ட முடிவுகளை நோக்குவோம்.

திரு டி ஏ. கோபிநாதராவ்தாம் 1906-இல் கண்ட ஆனைமலைக் கல்வெட்டுக்களின் அடிப்படையில் நம்மாழ்வார் காலம் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி என்று நிறுவுகின்றார். 'நம்மாழ்வார் காலம் குறித்துப் பல்வேறு நோக்கில் நாம் ஆய்ந்ததன் முடிவு அவர் வாழ்ந்ததும் திருவாய்மொழி பாடியதும் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியாம் என்பதே'[14] இது தவிர மற்றொரு கருத்துமுண்டு. அது ஆழ்வார் திருவாய்மொழியில் வரகுணமங்கை, சீவரமங்கலம் ஆகிய திவ்விய தேசங்களைக் குறித்துப்பாடுவதால் இவ்வூர்களின் தோற்றம் பற்றிய அடிப்படையில் கூறப்பெறுவதாம். 'வரகுணமங்கை' பற்றி ஆழ்வார் ஒரு இடத்தில் மட்டுமே குறிக்கின்றார். (9-2-4) இவ்வூர் வரகுணன் என்ற பாண்டிய மன்னன் (792—835) காலத்தில் இப்பெயர் பெற்றதாகத் தெரிகின்றது. சீவரமங்கலம் என்பது நாங்குநேரி என்றழைக்கப்பெறும் ஊராகும். இப்பதி பற்றி ஒரு பதிகம் உள்ளது (5—7) இப்பதி சீவரன் என்னும் பெயருடைய நெடுஞ்சடையன் (765-790) காலத்து அமைந்தது என்று சீவரமங்கலச் செப்பேடுகள் குறிக்கின்றன. இவ்வூரைச் சீவரமங்கலம் எனக் குறிக்கும் நம்மாழ்வார் கி.பி. 790ஐ ஒட்டியோ, அதன் பின்னரோதான் இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு. முன் காட்டிய ஆனைமலைக் கல்வெட்டின் செய்தியையும் இத்துடன் சேர்த்துப் பார்க்க முடிகின்றது. மற்றும் குருபரம்பரை குறிக்கும் பிறப்பு ஆண்டுச் செய்தியும் கி.பி. 798க்கு ஒத்து வருகின்றது என்று கோபிநாதராவ் குறிக்கின்றார். எனவே, நம்மாழ்வார் வாழ்ந்த காலம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கமாகக் கொள்ளுவது சாலவும் பொருந்துவதாகும்.

### அகச் சான்றுகள்

மேலே கூறப்பெற்ற வரலாற்றை உறுதிப்படுத்த ஆழ்வாரது திருவாய்மொழியிலும் மற்ற நூல்களிலும் எவையேனும் குறிப்புக்கள் உள்ளனவா என நோக்குவது இன்றியமையாதது. ஒரு சில சான்றுகளே உள, அவற்றைக் காண்போம்,

## இறையருளாற் பெற்ற பிள்ளை

ஆழ்வாரின் தாய் 'உடையநங்கை' திருவண்பரிசாரம் என்னும் ஊரினர். அவ்வூரை ஆசாரிய இருதயம் 'ஆய்ச்சேரி' என்று குறிக்கின்றது.[15] அதற்கு மணவாள மாமுனிகள் தரும் விளக்கத்தால் இவ்வுண்மை தெளியலாம். தாய் தந்தையர் திருக்குறுங்குடி சென்று அவ்வூர் இறைவனான 'நம்பி'யைத் தமக்குப் பிள்ளைப் பேறு வேண்ட அவன் அருளியதாக வரலாறு.

இக்கருத்திற்கு அரண் செய்வதாகத் திருவிருத்தப் பாடலில் ஒரு குறிப்பு வருகின்றது. உடன் போக்கிற்கு ஒருப்பட்டுச் சென்ற தலைவியைக் காணாது தவிக்கும் தாய் கூற்றாக அமைந்த பாடலில் அவள் தன் மகளின் இளம் பருவத்தையும், மென்மைத் தன்மையையும், அழகையும் எண்ணி இரக்கப்படுகின்றாள். அப்போது அவ்வருமைப் பெண்ணைப் பெறுதற்குத்தான் மேற் கொண்ட முயற்சிகளை அவள் தெரிவிக்கின்றாள்.[16] ஆழ்வார் தம் தாய் செய்த வழிபாடுகளை மனத்தில் எண்ணியே இவ்வாறு பாடுவதாக ஊகிப்பது தவறாகாது. அப்பாடலின் கருத்து: 'தீவினையுடையேன் நீண்ட காலம் கண்ணனெம் பெருமானது சிறந்த மலர்ப்பாதங்களை ஏத்தி வணங்கியதால் பெற்ற பெண் இவள்; மெல்லிய இடையை உடைய இளமான் போன்றவள்' என்பது.

## இளமையில் அருள் பெற்றமை

ஆழ்வார் குழந்தையாக இருந்த போது மற்றக் குழந்தைகளைப் போல் இல்லை; பிறந்த உடனேயே இறைவனால் சிறப்பாக அருள் செய்யப் பெற்றார். இச்செய்தி 'மயர்வற மதிநலம் அருளினன் எவனவன்' (1-1-1) என்று திருவாய்மொழி முதல் பாடலிலேயே தெரிவிக்கப்பெற்றுள்ளது. இக்கருத்தே பின்னும் 'திருமாலால் அருளப்பட்ட சடகோபன்' (8-8-11) என்று குறிக்கப்பெற்றுள்ளது. மலர் மலர்ந்தவுடன் மணம் வீசுகின்றது; ஆனால் துளசி தோன்றும் போதே மணத்துடன் விளங்குகின்றது. அது போன்று ஆழ்வார் பிறக்கும் போதேயோ பிறந்த சில காலத்திலேயோ ஞானம் பெற்றவரானார். அக்காரணத்தாலேயே அவர் மற்றவரினும் சிறந்தவராக, உயர்ந்தவராகப் போற்றப் பெறுகின்றார். இக்கருத்துக்கும் அகச் சான்று இருக்கின்றது.

''அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து
அறியா மாமாயத்து அடியேனை வைத்தாயால்'' (2.3.3).

இறைவன் தனக்குச் செய்த நன்மையைப் பேசுகையில் ஆழ்வார் அறியாமையை உண்டு பண்ணும் மிகக் கொடிய பிறவியில் அகப் பட்டிருக்கும் தன்னை, ஒன்றையும் அறியாத மிகச் சிறுவயதிலேயே அவன்பால் அடிமை செய்வதில் மிக்கதொரு அவா உடையனாகச் செய்து வைத்ததாகப் பேசுகின்றார். இதனால் ஆழ்வார் இளமை யிலேயே இறையருள் பெற்றவர் என்பது விளங்கும். இதனை வலி யுறுத்த இன்னும் இரண்டு எடுத்துக்காட்டுகள் தருதல் கூடும்.

1. திருவிருத்தத்தில் தன் மகளின் நிலையை வருணிக்கும் ஒருதாய் இவ்வாறு பேசுகின்றாள். "அவட்கு முலைகள் இன்னும் முழு தாக அமைந்தில; குழலும் செறிந்து நீண்டு முழு வளர்ச்சி பெறவில்லை; அரையில் ஆடை கூட இல்லை: பேச்சு இன்னும் குழறுகின்ற நிலைதான். இருப்பினும் அவள் பேசுகின்ற பேச்சு 'எம்பெருமானது இருப்பிடம் திருவேங்கடமே' என்பதாக உள்ளது.[17] இப்பகுதி குறிக்கும்பெண், ஆழ்வாராதல் கூடும். அவர் தம் நிலையையே இதில் குறிக்கின்றார் என்று கொள்ளலாம்.

2. திருவாய் மொழிப்பாடல் ஒன்றில் (8-3-2) — அது ஆழ்வாரது தாயின் ஊராகிய திருவண்பரிசாரத்தைப் பற்றியது—ஆழ்வார் தம் நிலையை இவ்வாறு பேசுகின்றார். 'நான்கு வேதங்களும், மற்ற சாத்திரங்களும் உலகத்தாரை நல்வழிப்படுத்துவதற் கேற்ற புகலிடங்கள்; ஆயினும் நாங்கள் அவற்றின் துணை யின்றியே இறைவன் அடியவராதலின் மூலம் இறப்பு பிறப்பு வெந்நோய் மூப்பு முதலாயவற்றைப் போக்கிக் கொண்டோம்! இப்பாடலாலும் ஆழ்வார் சாத்திரங்கள் கற்று ஆன்மஞானம் பெற்றவரல்லர் என்பதனை நாம் அறியலாம்.

### வாழ்வின் போக்கு

முதல் பதினாறு ஆண்டுகளை ஆதிநாதர் கோயில் புளிய மரத் தருகில் தியானத்தில் கழித்தார் ஆழ்வார். பின் அவர் வாழ்ந்த காலம் பத்தொன்பது ஆண்டுகளே. ஏறக்குறைய ஐந்து ஆண்டுகள் பாடல் பாடுவதில் கழிந்ததாகக் கூறப்பெறுகின்றது. பல திவ்விய தேசப் பயணத்தில் சில ஆண்டுகள் கழிந்திருக்கலாம். மற்றபடி அவர் வாழ்வு இறைவனைப் பற்றிய எண்ணத்திலும் தன்னை அடைந்தார்க்கும், இறைவனை மறந்து உழலும் உலகினர்க்கும்,

அறிவுரை கூறுவதிலும், இறைவன் புகழ்பாடுவதிலும் கழிந்திருக்க வேண்டும். திருமணம், மக்கட்பேறு, பதவி முதலியன பற்றி அவர் சிந்தித்திருக்க வழியில்லை என எண்ண வேண்டியுள்ளது. சமயப் பாடல் பாடிய வேறு புலவர் நூல்களில் அன்னார் தம் தம் அறியாமைப் பருவத்தில் செய்த குறைகளைப் பாடுவர்; உலகில் காணும் குறைகளை எடுத்து மொழிவர்; பிறர்க்கு இரங்கிப்பாடுவர்; காம இன்பம், வெகுளி, மயக்கம் இவற்றால் பட்ட துன்பத்தைச் சிலர் பாடல் செப்பும்; இறைவனருளால் தாங்கள் அவற்றிலிருந்து தப்பியதாகப் பாடுவர். மற்ற ஆழ்வார் பாடல்களில் கூட அவர்தம் முன்வாழ்வின் இயல்புகளை விளக்கி மற்றவரை எச்சரிக்கும் பான்மை உண்டு. அத்தகைய குறிப்பொன்றும் நம்மாழ்வார் பாடலில் காணப் பெருமை அறியத்தக்கது.

இறைவன்பால் முறையிடுகையில் தன் தன்மை பற்றிக் கூறுவர்; அங்கெல்லாம் மிகவும் பணிவு தோன்றப் பேசுகின்றார். 'மயர்வற மதிநலம் அருளப்பெற்ற' தன்மையை முதலிலேயே தெரிவித்திருந்தாலும் பின்னர்ப் பல இடங்களில் சமய அறிஞர் பாடும் பொது முறையை ஒட்டித் தன்னை 'நீசனேன், நிறைவொன்றுமிலேன்' (3-8-4) என்றும், 'அடியேன் சிறிய ஞானத்தன்' (1-5-7) என்றும், 'சீலமில்லாச் சிறியன்' (4-7-1) என்றும், 'நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்' (5-7-1) என்றும் தாழ்வு தோன்றப் பேசுகின்றார். இறைவனாகிய 'உயர்வற உயர்ந்த பொருள்' தன் குறிக்கோளாக முன்னிற்பதால் தன்னிலைபற்றி இவ்வாறு கூற நேர்தல் ஏற்புடையதே. இங்கெல்லாம்கூட நெறியல்லா நெறியிற்சென்று கெட்டழிந்ததாகக் குறிப்பில்லை. அவ்வாறு செய்தவேயன்றிப் பேசுதலும் கூடாததொரு தூயஉள்ளம் ஆழ்வார் உள்ளம் என்று துணிந்து கூறலாம்.

இறைவனுக்குச் சொன் மாலைகள் சாத்தி அவனை ஏத்தும் பேறு பெற்றமையை எண்ணும் போது அவர்க்கு ஒரு பெருமித உணர்வு உண்டாகின்றது;எனவே தனக்கு இனியாவர் நிகர் அகல் வானத்தே(4-5-8) என்று பாடுகின்றார்.அவனுடைய மாயச் செயல்களையே எப்பொழுதும் நினைக்கும் நெஞ்சு பெற்றமைக்குக் களிப்புற்று 'எனக்கு இனியார் நிகர் நீணிலத்தே'(6-4-7) என்றும்,'மாறுளதோ இம் மண்ணின் மிசையே' (6-4-9) என்றும், விண்ணிலும் மண்ணிலும் தனக்கு யாரும் ஒப்பில்லை என்றும் குதூகலத்துடன் பாடுகின்றார்.

ஆழ்வார் தம் பக்தி மிக ஆழமானது. அதனால் இறைவனை நினைந்து 'அவ்வண்ணல், எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை' (3-3-2) என்று ஏழு தலைமுறைக்கும் முன்னதாக அவனைக் கொண்டு செல்வர். தன்னை 'மூவுலகுக்கும் நாயகன் தன்னடிமை நேர்பட்ட தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்' (8 9-11) என்று நான்கு தலைமுறையார்க்கும் தான் தொண்டனாக இருப்பதாகக் கூறிப் பெருமைப்படுகின்றார். மற்றும் 'எந்தை பிரான் தனக்கு அடியார் அடியார் தம் அடியார் அடியார் தமக்கு அடியார் அடியார் தம் அடியார் அடியோங்களே' (3-7-10) என்று ஏழு தலைமுறையினர்க்கும் மேல் கூறி அத்தகைய அடியவர் தமக்குத் தலைவர் என்று அறுதியிட்டு உரைக்கின்றார்.

ஆழ்வார்தம் வாழ்வின் ஒரே நோக்கம் இறைவனே.

'உண்ணும்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம்
கண்ணன் எம்பெருமான் என்றென்றே கண்கள்நீர் மல்கி'
(6-7-1)

என்று ஒருதாய் தன்மகளின் தன்மை கூறுவதாக அமைந்த பாசுரம் ஆழ்வாரின் தன்மையையே குறிப்பதாகையால் அது இனிது புலப்படும். அதனால்தான் இவரை 'எம்பெருமான் கண்ணன்பாலுள்ள காதலே வடிவெடுத்தவர்' என்று அழகுறப் பராசரபட்டர் என்ற அறிஞர் கூறுவாராயினர்.[18]

### ஆழ்வாரும் உலகமும்

உலகத்தைப் பற்றிய சிந்தனையே இன்றியும், சூழ்நிலை பற்றிய கவலையே இல்லாமலும் ஆழ்வார் வாழ்ந்தாரா என்றால் அவ்வாறு இல்லை என்பதே அதற்குவிடை. அவர் உலகின் பல இயல்புகளையும் அறிந்திருந்தார்; மக்களின் குறைகளையும் நிறைகளையும் உணர்ந்திருந்தார். அதனாலே ஒரு இடத்தில்

''நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க
எண்ணாராத் துயர்விளைக்கும் இவையென்ன உலகியற்கை
(4-9-1)

என்று பாடுகின்றார். ஒருவனுக்கு ஒரு கெடுதி வந்தால் அவனுக்கு வேண்டாத சிலர் அதனால் மகிழ்ச்சிகொண்டு முறுவலிக்கின்றார்களாம். அவனுக்கு உறவினர்களான வேண்டிய சிலர், அவன் நிலைகண்டு மனம் கலங்குகின்றார்கள். இந்நிலை எல்லை காணமுடியாத துயராகத் தோன்றுகின்றது ஆழ்வார்க்கு. இவையென்ன உலகத்தின் தன்மை என்று இரக்கப்படுகின்றார். எனவே 'அடி

யேனைச் சார்மாறு ஒருசொல் கூறுக' என்று வேண்டுவதாகப் பாடல் முடிகின்றது. பதிகம் முழுவதும் இப்போக்கில் அமைந்துள்ளது. செல்வ நிலையாமை, இளமை யாக்கை நிலையாமை இவை பற்றியும் அழகுறப் பாடுகின்றார் (4-1)

'துணையும் சார்வும் ஆகுவார் போல் சுற்றத்தவர் பிறரும்
அணையவந்த ஆக்கமுண்டேல் அட்டைகள் போல் சுவைப்பர்'
(8-1-2)

தாயாதிகளும் மற்றையோரும் இன்பதுன்பங்களை ஒருசேர அனுபவிக்கும் துணைவர் போலவும், போக்கற்ற நிலையில் புதுவிடமாவார் போன்றும் காட்டி, நிறைந்தசெல்வம் இருக்குமானால் இரத்தத்தை உறிஞ்சும் அட்டைகளைப்போன்று ஈரப்பசையறச் சுவைத்து விடுவார்கள் என்றுஉலகத்தவர் இயல்பைஎண்ணி உணர்ந்து பிறர்க்கும் அறிவுறுத்துகின்றார்.

'மாரியனையகை மால்வரை யொக்கும் திண்தோள் என்று
பாரிவோர் பற்றையைப்பச்சைப்பசும்பொய்கள் பேசும்'(3-9-7)

புலவர் இயல்பையும் இகழ்ந்து பேசுகின்றார். மேலும் ஐம்புலன்களின் ஆற்றலை 'விண்ணுளார் பெருமாற் கடிமைசெய்வாரையும் செறும் ஐம்புலன்'(7-1-6)என்று விரித்துரைக்கின்றார். இக்காரணம் பற்றியே இவ்வுலகைக் 'கொடு உலகம்' (4-9-7) என்றும் கூறுகின்றார். ஆனால் இவற்றை இறைவன் அருளின் துணையால் வென்று இன்பமெய்தலாம் என்பதே அவர் துணிபு. இதுபல இடங்களில் எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.[19]

இறைவனைப் பாடி உள்ளம் குழைந்து ஆடி மகிழ்வாரைக் கொண்டாடிப் பாடுகின்றார். (3-5). அவர்களையே 'முழுதுணர் நீர்மையர்' (3-5-6) என்கின்றார். அல்லாதாரை 'நரகத்து அழுந்திக் கிடந்துழல்கின்றவம்பர்' என்றும், உடல் தடித்து வயிற்றைப் பெருக்குவதிலே கருத்தாயிருப்பவர் என்றும், அன்பால் இகழ்கின்றார். இறைவன் அடியவர்களாய் அவன்பாதம் பணிந்து ஏத்தவல்லவர்களை, அன்னோர் நான்கு சாதிகளிலும், கீழான சாதியில் பிறந்தவராயினும் சண்டாளர்களினும் இழிந்தவராயினும் அவர்கள் மட்டுமன்றி அவர்தம் அடியார்க்கு அடியவரானவர்களும் தமக்குத் தொழுதற் கேற்றவராவர் என்று உளம் நெகிழ்ந்து பாடுகின்றார் (3-7-9). மேலும் அத்தகையோர்க்குக் குடிகளாகும்

நல்ல கொள்கை தமக்கு வாய்ப்பதாகுக என்றும் வேண்டுகின்ருர் (8-10-10).

இளமையிலேயே தூய உள்ளம் கொண்ட முனிவராகத் திகழ்ந்த அவர் தமிழ்க் காதல்நெறி பற்றிய நுணுக்கங்களை உணர்ந்து கடவுட் காதலே அருமையாகப் பாடியுள்ள திறன் வேறு பகுதியில் காணலாம்.

## அருள் உள்ளம்

ஆழ்வார் பட்ட துன்பம் மூன்று வகையானது என்பது திருவாய்மொழியை ஆராய்ந்த முன்னோர் கருத்து. ஒன்று பிரகிருதி சம்பந்தமான துன்பம். அதாவது வினைக்கட்டுக்களால் அருகிலே இருக்கும் இறைவனை அனுபவிக்க இயலாது அவர் படுகின்ற துன்பம் (3-2); இரண்டாவது இறைவனைப் பிரிந்ததனாலான துன்பம் (4-7) மூன்ருவது உலகமக்கள் இறைவனை அனுபவிப்பதற்கு உரியராயினும் அதனை இழந்து வேறு நெறியிலே செல்வது கண்டு அவர்கள் இழவுக்காகப் படுகின்ற துன்பம் (4-9). உலகத் துன்பங்களிலே உழன்று இறைவனை மறந்து வாழ்பவரைக் காண ஆழ்வார்க்கு அவர்பால் இரக்கம் உண்டாகின்றது. அதனல் அவர்களை நோக்கிப் பலகாலும் அறிவுரை கூறித் திருத்த முயல்கின்ருர். அவர்க்காக இறைவன்பால் தாமும் மன்ருடுகின்ருர். தம் முதல் நூலான திருவிருத்த முதல் பாடலிலேயே இறைவனிடம் விண்ணப்பம் செய்கையில் தனக்கு மட்டுமன்றித் தன்னைச் சேர்ந்தார்க்கும் தான் விரும்பும் நன்மைகள் வர வேண்டுமென்று வேண்டுகின்ருர். இது 'யான் செய்யும் விண்ணப்பம்' என்று தொடங்கிப் பயன் பெறுதலைக் குறிக்கையில் 'யாமுருமை' என்று பன்மையில் பிறரையும் உளப்படுத்திப் பாடுவதினல் தெளிவுற அறியலாம்.[20] திருவாய்மொழியின் இரண்டாவது பதிகமே பிறர்க்கு அறிவுரை கூறுவதாக அமைகின்றது. அதற்குக் காரணம் 'கண்டு ஆற்றேன் உலகியற்கை' (4-9-3) என்றபடி உலகமக்களின் துன்ப நிலைகண்டு ஆற்ருமை கொண்டவராய் அவர்கள் திருந்த வேண்டும். நன்மை பெறவேண்டும் என்று அவர் கொண்ட மிக்க அருள் நோக்கேயாகும். தான் பெற்ற நல்லின்பம் தகுதியுடைய பிறரும் பெறவேண்டுமென்று விரும்பி அதற்குத் தன்ருலியன்றதைச் செய்தல்லது தரியாதவராக ஆழ்வார் இருக்கின்ருர். எனவே தன்னை நாடி வந்து உபதேசம் செய்யுமாறு கேட்காத பிறர்க்கும், 'வம்மின்' என்று அவர்களை

அழைத்துச் 'சுருங்கச் சொன்னோம் கேண்மின்' (9-1-7) என்று கூறத் தொடங்கி விடுகின்றார்; அவர்க்கு வழிகாட்ட முனைகின்றார். சொல்லளவால் மட்டுமன்றித் தானும் இன்னவாறு செய்வதாகக் கூறிச் செய்முறையுடன் கூடிய அறிவுரை வழங்குவதைக் காணு கின்றோம். எது செய்ய வேண்டும்; எது தவிர்க்கவேண்டும் என்று தொடக்கத்திலேயே பதட்டத்தோடு அறிவுரை கூறுதலில் புகு கின்றார் (1-2).

இறைவனது அடியவர்களின் பணி எத்தகையது? இறை வனைப் பாடிக்கொண்டே போது போக்குவதுதானே என்று அவரைக் கேட்டால் அதற்கு ஆழ்வார் தரும் விடை நம்மை வியப்பிலாழ்த்துகின்றது. இன்று இந்த இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழும் நாம் எதை எதிர் பார்க்கின்றோமோ அத் தகைய முற்போக்கான கருத்தை நம்மாழ்வார் தருகின்றார். இறை யன்பர் எங்கும் பரவியுள்ளனர். எதற்காக? உலகிலுள்ள தீமை களெல்லாம் அழிவதற்காக எத்தகைய தீமைகள்? உயிர்களைக் கொல்லும் தீய பெரு நோய்கள், தீய பகை உணர்வு, கொடிய பசி-சுருங்கச் சொன்னால் உலகை வாட்டிவதைக்கும் எல்லாத் தீமைகளையும் இவ்வுலகிலிருந்தே நிலையாக நீக்குதற்காகவே நேமிப்பிரான் தமரான அடியவர் வந்துள்ளனர் என்கின்றார். அவர்கள் பெரிதும் இறை புகழ்பாடிக் கொண்டும் அவ்வின்பத் தால் ஆடிக்கொண்டும் உலகெங்கும் பரந்துள்ளனர். நீங்களும் அவர்பால் சென்று, அவர்களைத் தொழுது, நும்சிந்தையை நேர்மை நெறியில் நிறுத்தித் தொண்டர்களே! உய்வுபெறுங்கள் (5-2-6) என்று அறிவுறுத்துகின்றார். ஆழ்வாருடைய உள்ளம் எவ் வளவு பரந்ததாகவும், உயர்வுடையதாகவும், அருள் நிறைந்த தாகவும் உள்ளது. அவர் காணும் உலகம் எத்தகையது! அவர்தம் அறிவுரை பெரிய அளவுக்குப் பயன்தந்த காரணத்தால் அவர் கீழ்க்காணுமாறு பாடுகின்றார்.

'உயிர்களைப் பற்றிய பாவம் அழிவுற்றது; அதனால் நரகத் திற்குச் செல்வோர் இல்லை; அது நலிவுற்றது; எமனுக்கு வேலை சிறிதுமில்லை. கெட்டகாலம் கழிந்தது. இது உறுதி. இறைவனடி யவர்கள் பூமிக்கு வந்து அவன் குணங்களைப் பாடி யாடி உலாவு தலைக் கண்டோம். இந்நிலைமை பொலிக! பொலிக! பொலிக! (5-2-1) என்று பூரிப்புடன் பாடுகின்றார்.

## பாடிய தலங்கள்

திருவாய்மொழியின் சில பதிகங்கள் தனித்த திவ்விய தேசத்து இறைவன் மீது பாடப்பெற்றுள்ளன. அவை தவிரவும் சில திவ்விய தேசங்கள் ஆங்காங்கே குறிக்கப்பெற்றுள்ளன. (அ) பரத்துவம்—வைகுந்தத்திலுள்ள நிலை (ஆ) வியூகம்—வாசுதேவன், சங்கருடனன், பிரதியும்நன், அநிருந்தன் எனும் நால்வகை வியூகநிலை. (இ) விபவம்—அவதாரநிலை; (ஈ) அந்தர் யாமித்வம்—எல்லாப் பொருள்களுள்ளும் மறைந்துள்ள நிலை. (உ) அர்ச்சை—கோவில் அமர்ந்தநிலை ஆகிய ஐந்து நிலைகளில் இறைவனின் அர்ச்ச நிலையைச் சிறப்பித்துப் பாட எழுந்தனவே அருளிச்சொல்லும் அதன் பகுதியாக அமைந்த நம்மாழ்வார் நூல்களும் என்பர்.[21] அர்ச்சையில் அமைந்த இறைவனைப் பற்றிக் குறிக்கையில் ஒவ்வொரு திவ்விய தேசத்திலும் ஒவ்வொரு தனிக் குணம் சிறந்து விளங்குகின்றது என்று சொல்நயம் அமைய ஆசாரிய இருதயம். விளக்குகின்றது.[22] நாம் நம்மாழ்வார் பாடிய தலங்களை மட்டும் இங்குக் காண்போம்.

திருவாய் மொழியில் பாடப்பெற்றுள்ள திவ்விய தேசங்கள் முப்பத்து மூன்று. வைகுந்தம் பாற்கடல் இவற்றை நீக்கின் இவ்வுலகத்து இடங்கள் முப்பத்து ஒன்றும். கண்ணன் பிறப்பைக் குறிக்கும் வகையில் 'வடமதுரைப் பிறந்தான்' என்று ஒரு பதிகத்திலும் (9-1), மற்ருெரு பாசுரத்திலும் (7-10-4) வடமதுரை குறிக்கப் பெறுகின்றது. மற்ற முப்பது திருப்பதிகளில் ஆழ்வார் மிகுதியாகக் குறிக்கும் பதி திருக்குருகூரேயாம். அது அவரது பிறந்த ஊர். ஒரு பதிகத்தில் (4-10) அவ்வூர் இறைவன் பொலிந்து நின்ற பிரானைப் பாடுகையில் அவ்விறைவனின் பரத்துவத்தை நிலைநாட்டுகின்ருர். மற்ற பதிகங்களில் ஒவ்வொன்றின் பதினென்ருவதான பலன் கூறும் பாடலில் 'குருகூர்ச் சடகோபன்' என்று தன் பெயர் கூறுகையில் குருகூரின் பல இயல்புகளும் சிறப்புக்களும் அவரால் குறிக்கப் பெற்றுள்ளன.

## தென்மலையும் வடமலையும்

இரண்டிரண்டு திருவாய்மொழிகளில் பாடப் பெறுவன திருமாலிருஞ் சோலைமலையும் திருவேங்கடமும் ஆம். இவற்றுள்ளும் திருவேங்கடம் பற்றி இருபதிகங்களோடு மற்றும் பதினெரு இடங்

களில் குறிப்பிடுகின்றார். இருபதிக இடங்கள் இருபத்தி ஒன்றுடன் இவை சேர்த்துக் கூடுதல் முப்பத்து இரண்டு இடங்களில் திருவேங்கடம் குறிக்கப் பெறுவதால் ஏறக்குறைய எத்துணைத் தலங்களை ஆழ்வார் பாடுகின்றாரோ அத்துணைத் தடவை வேங்கடம் பாடப் பெற்றதாகின்றது. எனவே அவர் மனத்தில் ஊன்றி நின்ற நினைவு வேங்கடம் பற்றியது என்று கொள்ளுதலில் தவறில்லை. அதனைப் பாடும்போது அதன் 'மாரி மாறுத தண் அம்' தன்மை (4-5-11), 'மணிபொன் முத்தலைக்கும் தண்ணல் அருவிகள்' (6-10-3), 'அமரர் முனிக்கணங்கள் விரும்பும்' வெற்பாதல் (6-10-10), 'திணரார் மேகாமனக்களிறு சேரும்' இயல் (6-10-5) இவை சுட்டப் பெறுகின்றன. அம்மலை தன்னை அடைவார் வினைதீர்ப்பது (3-8-8) என்றும், 'உலகிற்குத் திலதமாய் நிற்பது (6-10-1) என்றும் கூறப்பெறுவது உணரத்தக்கது. களிறு சேருதல் தவிர மற்ற எல்லா இயல்புகளும் இன்றும் அம்மலை பெற்றிருப்பது காண்கிறோம்.

திருமாலிருஞ்சோலை 'மருள்கள் கடியும் மணிமலை' (10-7-7); வளரிளம் பொழில்களையும், மதிதவழ் குடுமியையும், மறுவில் வண்சுனைகளையும் உடையது; மான் களிறு மயில் முதலியன இணை இணையாக வாழும் மலை (2-10). திருமாலாகிய அழகர் விரும்பி யுறையும் மலை. இதனைத் தென்கொள் திசைக்குத் திலகம்' (10-7-4) என்கிறார் ஆழ்வார். மலை உச்சிபற்றி அவர் பாடுவதாகவே பாடலிலிருந்து கொள்ள வேண்டியுளது. கோயிலை உடைய சோலை என்கிறார். அயன் மலையும், புறமலையும், அடைவதும் செய்யத் தக்கது என்கிறார். இன்று கோயில், மலையடிவாரத்தில்தான் உள்ளது. இளமை கெடுவதன் முன் போக வேண்டும் என்று குறிப்பதாலும் மலைஉச்சி பற்றிப் பாடுவதாலும் மலையை அவர் நினைப்பதாகவே தோன்றுகின்றது. இருமலைகளையும் ஆழ்வார் பார்த்திருத்தல் கூடும். திருமாலிருஞ்சோலைத் திசை கை கூப்பிச் சேர்ந்த யான் (10-7-3) எனவரும் அடியால் இத்துணிபு வலியுறுகின்றது.

## குறுங்குடியும் குடந்தையும்

அடுத்த இடம் பெறுவன ஆழ்வார் பிறத்தற்கு அருள்புரிந்த 'நம்பி' வீற்றிருக்கும் திருக்குறுங்குடியும், பின்னர் ஆழ்வார் பாடல்கள் தொகுக்கப் பெறுதற்குக் காரணமானதாகக் கூறப்பெறும் ஆராவமுதாழ்வார் உறையும் திருக்குடந்தைப்பதியும் ஆகும்.

இவை பற்றி ஒவ்வொரு பதிகத்தில் பாடுவதோடு இடைஇடையே வேறு இரு இடங்களிலும் பாடியிருக்கின்றார். முதல் பத்தில் இடம் பெறும் இருதிவ்விய தேசங்களில் பாண்டியநாட்டுத் திருக் குறுங் குடியும் ஒன்று (1-10-9). பின்னால் ஐந்தாம் பத்தில் இப்பதி பற்றிய பதிகம் (5-5) ஐந்தாம் திருவாய்மொழியாக அமைகின்றது. அவ்வூர் புகழ்மிக்க தென்றும், சோலை சூழ்ந்ததென்றும் குறிக்கப் பெறுகின்றது.

ஐந்தாம் பத்தில் எட்டாவது பதிகம் சோழநாட்டுத் திருக் குடந்தை பற்றியது. இன்றைய கும்பகோணமே அது. அதன் இயற்கைச் செழிப்பை அழகுற ஆழ்வார் விளக்குகின்றார். பத்துப் பாடல்களிலும் நீர்வளப்பமும் நல்லார் இருப்பும் உடையது அது என்று தொடுத்துப் பாடுகின்றார். இக் குடந்தை ஆராஅமுதத்தின் ஏரார் கோலம் ஆழ்வார் உள்ளத்தில் பின்னும் மறுவவிடுகின்றது போலும். அதனால்தான் கடைசிப் பகுதியில் அடியவர் வைகுந்தப் பயணத்தை வருணிக்கையிலும் 'குடந்தை எங்கோவலன் குடியடி யார்' (10-9-7) என்று குடந்தை தனிப்பட எடுத்து மொழியப் பெற்றுக் கடைசியாக இடம்பெற்ற திவ்விய தேசம் என்ற சிறப்புக் குரியதாக விளங்குகின்றது. கோவலன் என்பது திருக்கோவலூர் இறைவனைக் குறிப்பதாகக் கொள்வது வலிந்து பொருள் கொள்வ தாம். 'ஆராவமுது' என்ற தொடர் அடுத்த இறுதித் திருவாய் மொழியிலும் வருகின்றது.

மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றில் திருவித்துவக்கோடு நீங்கலாக மற்ற பன்னிரண்டும் இவர்தம் பாடல் பெற்றுள்ளன. அவை மலை நாட்டு இயற்கை அழகுக்கு ஏற்ற வருணனை பெறுதல் இன்பமளிக்கின்றது. சோழ நாட்டுப் பதிகளில் திருக்குடந்தை யுடன் திருவரங்கம் பெரிய கோயில், திருவிண்ணகர், திருக் கண்ணபுரம், திருப்பேர்நகர் நான்கும் பாடல் பெறுகின்றன. பாண்டி நாட்டுத் திவ்விய தேசங்களில் மாலிருஞ்சோலை, குறுங்குடி, திருக்குருகூரை அடுத்த நவதிருப்பதிகள் இவற்றோடு சீவர மங்கல நகர், திருமோகூர் என்ற இரண்டும் பாடப் பெறு கின்றன. ஆக, மலைநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டு, பாண்டிய நாட்டின பன்னிரண்டு, சோழநாட்டின ஐந்து வடவேங்கடம் ஒன்று ஆக முப்பது தலங்களும் ஆழ்வார் சென்று பார்த்த திருத் தலங்கள் அல்லது மனத்தால் எண்ணிப் போற்றிய திருத்தலங்கள் எனலாம்.

இவை பற்றிப் பாடும்போது அமைக்கும் தொடர்கள் உயர்வு நவிற்சியற்றனவாகவும், தலங்களின் உண்மை யியல்பை அறிந்து பேசப் பெறுவனவாகவும் உள்ளன. எனவே ஆழ்வார் இவற்றில் பலவற்றை நேரில் கண்டிருத்தல் கூடுமென்றே ஊகிக்கலாம்.

திருவாய்மொழியில் பதிகப்பாடல்பெறும் 26 திவ்விய தேசங்களில் எவற்றை ஆழ்வார் நேரில் கண்டிருத்தல் கூடுமென்பதை அவர் பாடலின் துணை கொண்டு ஆய்தல் ஏற்புடையதாம். அம்முறையில் காணும்போது, 'கண்டேன்' என்றும், 'அடைந்தனம்' என்றும், இப்பொருள்தரும் வேறு சொற்களாலும் அவர் தெளிவுறக் குறிக்கும் தலங்களை அவர் நேரில் சென்று கண்டிருப்பர் என்று கொள்ளுவது சாலவும் பொருத்தம்.[16] திவ்விய தேசங்களை அவர் கண்டதாகப் பாடுகின்றார்.

1. திருக்குறுங்குடி-நம்பியை நான் கண்டபின் (5-5)
2. சீவர மங்கலம்- கைதொழ இருந்தாய் அது நானும் கண்டேன் (5-7-5)
3. திருக்குடந்தை-ஏரார் கோலம் திகழக் கிடந்தாய் கண்டேன் (5-8-1)
4. தொலைவில்லி மங்கலம்- கொண்டுபுக்கு-கண்டபின் (6-5)
5. திருக்கோளூர்- திருக்கோளூர்க்கே நேரிழை நடந்தாள் (6-7-9)
6. திருவரங்கம்-இவள் அணுகி அடைந்தனள்-அடியே (7-2-10)
7. திருப்பேரையில்-என்னெஞ்சம் கண்டதுவே கண்டேன்(7-3-7)
8. திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு - அதனுள் கண்டேனே (8-4-6)
9. திருப்புலியூர் - மல்லலஞ் செல்வக்கண்ணன் தாளடைந்தாள் இம்மடவரவே (8-9-7)
10. திருமோகூர் - நாம் அடைந்தனமே (10-1-9)
11. திருவனந்தபுரம்-திருவனந்தபுர நகர்புகுதும் இன்றே(10-2-1)
12. திருவாட்டாறு - வாட்டாற்றான் குரைகழல்கள் குறுகினமே (10-6-6)
13. தென்திருப்பேர் - அடிசேர்வது எனக்கு எளிதாயினவாறே (10-8-3)
14. திருமாலிருஞ்சோலை- திசைகை கூப்பிச் சேர்ந்தயான் (10-7-3)
15. திருவேங்கடம்- அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன் (6-10-10)
16. திருக்குருகூர் - அவரது பிறந்த ஊர் (4-10)

திருப்புளிங்குடி ஆழ்வாரது பிறந்த ஊருக்கு அண்மையில் இருப்பது. அதனைப் பாடுகையில் இறைவனை நோக்கி உன் திருவுடம்பு வருந்துமாறு எவ்வளவு காலம் கிடப்பாய்; எங்கட்கு அருளித் தாமரை மங்கையும் நீயும் இருந்தருள வேண்டும் (9–2-3) என்று வேண்டுகின்றார். கோயிலுக்குச் சென்று நேரில் நின்று கொண்டு பாடுவதுபோலவே உள்ளமையால் அப்பதிக்கு ஆழ்வார் போயிருத்தல் கூடுமென்றே கொள்ளலாம். அவ்வாறே சோழ நாட்டுத் திருக்கண்ணபுரம் பற்றிப்பாடுகையில் 'திருக்கண்ணபுரம் பணிமின் பரமேட்டிதன் பாதமே' (9-10-8) என்று அறிவுரை கூறுகின்றார். தான் செய்யாத ஒன்றைப் பிறரைச் செய்யுமாறு கூறுபவரல்லர் ஆழ்வார். ஆகவே அத்தலத்திற்கும் அவர் சென்று வழிபாடு செய்திருத்தல் வேண்டுமெனக் கொள்ளல் தகும். எஞ்சிய எட்டில் திருவண் வண்டூர், திருமூழிக்களம் என்ற மலை நாட்டுத் திருப்பதிகள் இரண்டும் இரண்டாவது நாலாவது தூதுக்குப் பொருளான திருவாய் மொழிகளில் பாடப் பெறுவன. கண்டு திரும்பிய இடத்திற்குத் தூது அனுப்புவதே முறை; எனவே அப்பதிகளையும் ஆழ்வார் பார்த்திருத்தல் வேண்டும்.

### பார்க்காத பாடல்பெற்ற தலங்கள்

மலைநாட்டைச்சேர்ந்த திருவல்லவாழ், திருவாறன்விளை, திருக்கடித்தானம் இவற்றையும் திருக்காட்கரை, திருநாவாய் இவற்றையும் ஆழ்வார் பார்த்திருப்பரா என்பது ஐயத்திற்குரிய செய்தியே. தூதுவிட்ட பதிகள் பற்றிக் கூறியது போன்று, திருவல்லவாழ் பதிபற்றியும் சொல்லத் தோன்றுகின்றது. இதன் இயற்கை வருணனையை நோக்கினுல் ஆழ்வார் நேரில்சென்று கண்டிருத்தல் கூடுமென முடிவு செய்யத் தோன்றுகின்றது. பாடலில் அப்பிரான் தன்னைத் 'தொழக் கூடுங்கொல்' (5-9-7) என்றும், 'பாதங்கள் காண்பது எஞ்ஞான்று கொலோ' (5-9-6) என்றும் பாடுகின்றார். ஆழ்வார் தம் ஆசை நிறைவேறிற்று என்று கொண்டாலும் கொள்ளலாம்.

'திருவாறன் விளைமேவி வலஞ் செய்து கைதொழக் கூடுங்கொல்' (7-10-9) என்றும், திருநாவாய் 'கண்ணாரக் களிக்கின்றது இங்கு என்றுகொல் கண்டே' (9-8-5) என்றும், அதனை 'யாவர் அணுகப் பெறுவார் இனி அந்தோ' (9-8-9) என்றும் பாடுதலால் அத்தலங்கட்கு ஆழ்வார் போகும் வாய்ப்புப் பெறவில்லை போலும்.

அவர் எண்ணம் நிறைவுறவில்லை எனத் தெரிகின்றது. திருக்கடித் தானம், திருக்காட்கரை இப்பதிகளையும் அவர் நேரில் கண்டாரா இல்லையா என்பதற்குப் பாடலில் எவ்விதச் சான்றும் கிட்டவில்லை. சோழநாட்டுத் திருவிண்ணகர் பற்றியும் அப்படித் தான். இவ் வைந்தும் நீங்கலாக மற்றையன ஆழ்வார் நேரில் சென்று, கண்டு வணங்கிய தலங்கள் எனத் துணியலாம்.

## ஆழ்வார்-சமயபோதகர், தத்துவ அறிஞர்

வைணவர்கள் நம்மாழ்வாரை முதன்மையான சமயபோதக ராகப் பெருமதிப்போடு கொண்டாடுகின்றனர். அதற்குரிய முக்கிய காரணங்களை அறிதல் தக்கதாம்.

### தத்துவக் கருத்துக்கள்

திருவாய்மொழி நூல் சமயக் கருத்துக்களைத் தருகின்றது; ஆன்மா இறைவனை அடையும் நெறியில் உளதாம் தடைகளையும் சாதனைகளையும் விளக்குகின்றது; அதற்கும் மேலாக, உயர்ந்த தத்துவக் கொள்கைகளையும் தன்னுள்ளடக்கியுள்ளது. அது உணர்த்தும் தத்துவம், வடமொழி வேத உபநிடதங்கள் உணர்த்து வதற்கு முரணானதன்று. உபநிடதங்களின் பிழிவாகக் கருதப் பெறும் பிரம்ம சூத்திரம் விளக்கும் கருத்துகளே முதல் இரு பதிகங் களில் தெளிவாக நம்மாழ்வாரால் உணர்த்தப் பெற்றுள்ளது.[28] காஞ்சி அண்ணங்கராச்சாரிய சுவாமிகள் ஆழ்வார் அருளிச் செயல் களையும், சிறப்பாகத் திருவாய்மொழியையும் கற்றுணர்ந்த தன் மையும், அதனால் பெற்ற உணர்ச்சியுமே இராமாநுசர் பிரம்ம சூத் திரத்திற்கு மற்ற உரைகட்கு மாறாகச் சிறந்ததொரு விரிவுரை எழுத முதன்மையான காரணம் என்று தம்கட்டுரைகளில் விளக்கி யுள்ளார்.[24] திருவாய் மொழியின் இறுதிப் பகுதியிலும்[25] அக் காலத் தெழுந்த பிற நூல்களைக் காட்டினும் மிகுதியான தத்துவ விளக்கம் காணலாம்,

இரண்டாவதாக இறைவனுடைய புகழ்பாடுவது பக்திப் பனு வலின் முக்கியக் கூறுகளில் ஒன்றாகும். நம்மாழ்வார் தம் திருவாய் மொழி முதல் பாடலையே இவ்வாறுதான் தொடங்குகின்றார்.

'உயர்வற உயர்நல முடையவன் யவன் அவன்'

தேவர்கள் முதலிய மற்றையோருடைய மேன்மைகள் முழுவதும் இல்லை என்று கூறலாம்படி மேன்மேல் உயர்ந்து கொண்டேயிருக்

கின்ற நற்குணங்களை உடையவன் யாவனோ அவன் என்பது பொருள். எடுத்த எடுப்பிலேயே முதல் அடியிலேயே இறைவன் நிர்க்குணன் - குணமற்றவன் - என்று கூறும் தத்துவ அறிஞரின் கொள்கையை ஐயத்திற்கு இடமின்றி மறுத்துரைக்கின்றார் ஆழ்வார் என்று உரையாசிரியர் காட்டுவர். பரத்வம், எல்லா உலகங்கட்கும்காரணமாயுள்ளமை,உயிருள்ளனவும்இல்லனவுமான எல்லாவற்றுள்ளும் பரவியுள்ளமை, அவற்றை நியமிக்கும் தலைமை யுடைமை, அளவற்ற கருணையுடைமை, யாவர்க்கும் புகலளிக்கும் தன்மை, அளவில் ஆற்றலுடைமை, மெய்ம்மையை விரும்பும் தன்மை, ஆபத்துக்கு உதவும் தன்மை, அடியவர் துன்பம் போக்கும் இயல்பு, எளிவரும் தன்மை இவை முதலான பண்புகள் விரிவாகத் திருவாய்மொழியில் விளக்கப்பெற்றுள்ளன.[26] இதனைக் காட்டிலும் வேறு அடிப்படையில் எந்த உண்மையான சமயமும் இருக்கமுடியாது. இறைவன் குணங்களைப் பாடுவதன்றி எவ்வாறு அடியவர் தம் போதுபோக்க இயலும்? அவர்தம் வழிபாட்டிலும் தோத்திரங்களிலும் இறைவனின் உருவ அழகும் பல அவதாரங் களில் ஆற்றிய அருஞ்செயல்களுமே பாடப்பெறும். இறைவன் இயல்புகளை எடுத்துரைத்தும், அவன் உயிர்கள் பால் காட்டும் காரணமற்ற அருட்பார்வையும் தன்னைஏற்றுக்கொண்ட கருணையும் எடுத்துக் கூறியும் தன் உள்ளத்திற்கு அவன் அடி பணிந்து உய்யுமாறு அறிவுரை கூறுகின்றார் ஆழ்வார். கடவுளுண்மையைப் பல்வேறு வகையால் ஐயத்திற்கு இடமின்றி நிலைநாட்டுகின்றார்; இறைவனுக்கும் உயிர்கட்கும் உள்ளதொடர்பு உயிர்க்கும் உடம்புக்கும் உள்ள தொடர்பு போன்றது என்று தெளிவுறச் செப்புகின்றார் (1-1-7).

## அறிவுரைகள்

ஆழ்வார் கூறும் அறிவுரைகளின் சுருக்கமாவது: இறைவன் அடியவர்க்கு எளியவன் (1-3-1). ஒரு இறைவன்பாலே ஒருவன் தன் உள்ளத்தினை உறுதியாக நிறுத்துவது நலம் செய்யும் (1-3-7) இறைவன் அடியவர்களிடமிருந்து கைம்மாறாக எதனையும் எதிர் நோக்குபவனல்லன் (1-6-1). அவனது அநுபவம் மட்டுமின்றி, அவனை அடையும் வழியும், இனியதும், விரும்பத் தக்கதுமாம் (1-7). வளரும் இளமை கெடுவதன் முன்னமே அவனை அணுகவேண்டும் (2-10-1). அவன் அழகு கவர்ச்சி மிக்கது; அவன் பெயர் கூறிய அளவில் வினைஒழிதல் உறுதி; மூப்புப் பிறப்பு இறப்புப் பிணி வீயும்

(3-3-9). மானிடர் அடையத்தக்க பேறு ஒழிவில் காலமெல்லாம் உடனுய் மன்னி அவனுக்கு எல்லா வகையான அடிமைகள் செய்வதே (3-3-1).

இறைவனடியார் நடுவே பிறப்பு கல்வி இவற்ருல் வரும் உயர்வு தாழ்வு வேறுபாடுகள் கிடையா. யார் ஒருவன் பக்தியிற் சிறந்தவனே அவனே உயர்ந்தவன் (3-7) இவ்வுலக வாழ்வு நிலை யற்றது (4-1-6). செல்வமும் அழியும் பான்மையது (4-1-1,3) ஆத்ம அநுபவமான 'இறுகல் இறப்பு' அளவிற்குட்பட்டது (4-1-10). ஒருவன் கண்ணன் திருவடித் தாமரைகளை இடைவிடாது வழிபடும் வழக்கத்தை வளர்த்துக் கொள்ளவேண்டும்; அதுவே உய்யும் ஆறு (4-1-11).

இறைவன் அடி அடைவது மட்டுமன்று; அவன் அடியார் குழாங்களுடன் கூடியிருக்கும் இன்பமும் விரும்பத்தக்கது (8-10-7). இறைபால் உண்மையான பக்தியுடையவன் யாவராலும் தொழத் தக்கவன் (8-10-10). இறைவன் அடியில் சரண் அடைந்து அவனையே புகலாகப் பற்றுதல் வேண்டும் (10-1-6). மக்கள் ஒன்றிய உள்ளத்தினராய்ப் புனலொடு மலர்கள் தூவி எந்தை நாமம் எண்ணினுல் அமரராதல் கூடும். (10-2-5)

### சாரம் அல்லது தெளிவு

தூயபக்தியும் இறைவனை முழுமையாகச் சரண் அடைதலுமே அவனை அடையவழி என்று ஆழ்வார் வலியுறுத்துகின்ருர். அவன் கருத்தினை இவ்வாறு தொகுத்துச சுருக்கமாகக் கூறலாம்.

1. உலக இன்பங்கள் யாவும் நிலை
2. பாசங்களின் நீங்கி வீடுபெறுவதால் கிட்டும் பேரின்பம் மட்டுமே நிலையானது.
3. பரம்பொருளான இறைவனேடு தொடர்பு கொள்வதால் உலகியல் துன்பங்கள் நீங்குகின்றன.
4. இறைவனேடு உறவுகொள்ளத் தன்னை அவன்பால் ஒப்புவித்துவிடுதல் முழுமையாகச் சரணுகதியடைதல் ஒன்றே சாதனமாம்.
5. பக்திநெறிக்கு எல்லா மக்களும் எவ்வித வேறுபாடு மின்றித் தகுதியுடையவராவர்.[27]

ஆழ்வார் தாம் தகுதியானவர்கட்கு ஒன்றும் இடவில்லை என்றும், தம்மால் இயன்ற சிறு உதவியும் எவர்க்கும் செய்ய வில்லை என்றும், தாம் ஐம்புல இன்பங்களை விட்டுவிடவில்லை என்றும், நாளும் மலரிட்டு வழிபாடு செய்தலைத் தம் கடமையாகக் கொள்ளவில்லை என்றும் பாடுகின்றார். ஆனாலும் சக்கரத் தண்ணலை அடையும் அவா மிக்கவராக உள்ளார் (4-7-9). இப்பாடலில் பொதுவாக இறைவனை அடைதற்காக மேற்கொள்ளத்தக்க மூன்று வழிகளையும் குறிக்கின்றார். அவை: கருமயோகம், ஞான யோகம், பக்தியோகம் என்பனவாம். எந்த ஒரு யோகத்தையும் தான் செய்யவில்லை எனத் தெளிவுறக் கூறுகின்றார்; எனினும் இறைவன் அடி அடையும் ஆர்வம் மட்டும் அவர்பால் இல்லாம லில்லை. இதனால் அவர் உணர்த்தும் கருத்து: இவ்வெவ்வேறான வழிகள் இறைவனை அடைதற்கான ஏதுக்கள் என்று கொள்ள வேண்டா என்பதாம். இதே பதிகத்தில் முன்னர்க் கைகளார அவன் திருபாதங்கள் மேல் எண்திசையும் உள்ள பூக்கொண்டு உகந்து உகந்து ஏத்தித் தொண்டர்கள் பாடியாட, அவன் தங்கள் பால் வர வேண்டுகின்றார் (4-7-8). இதனால் மலரிட்டு வணங்கு தலும், பாடுதலும், ஆடுதலும் அவனை அடைதற்கு ஏதுக்களாகச் செய்ய வேண்டுவன அல்ல; ஆனால் அவை அவன்பால் கொண்ட எல்லையற்ற அன்பால் வந்த ஆனந்தத்தின் போக்குவீடாகச் செய்யத் தக்கன என்பது விளங்கும். அவனது ஈடும் எடுப்பும் இல்லாத ஒப்பற்ற இன்பம், தன்னளவில் இயல்பாக வருவது; அது அவன் தானாகத் தன் அடியவர்பால் காரணமின்றியே பொழிவது.

'வெறிதே அருள்செய்வார் செய்வார்கட்கு உகந்து' (8-7-8)

என்பது இதனைத் தெளிவாக்கும்.

இறைவனைப்பற்றிப் பேசுகையில்

"தன்னுள் அனைத்துலகும் நிற்கத் தானும் நெறிமையால்
அவற்றுள் நிற்கும் பிரான்" - (9-6-4) என்று பாடுகின்றார்.

இறைவனது அருட்டிறம் அடியவரது ஆர்வத்தினும் மிகுதியாக அவர்பால் விரைந்துவரும் பான்மையது:

"வாரிக் கொண்டு உன்னை விழுங்குவன் காணில் என்று
ஆர்வுற்ற என்னை ஒழிய என்னின் முன்னம்
பாரித்துத் தானென்னை முற்றப் பருகினான்' (9-6-10)

என்ற பாடல் காண்க. இறுதியில் அடியவர்கள் எவ்வாறு அவன் இருப்பிடமான வைகுந்தத்திற்குக் கோலாகலமாகவும் மகிழ்ச்சி யாகவும் அழைத்துப் போகப் பெறுகின்றனர் என்ற வருணனை யுடன் ஆழ்வார் தம் நூலை முடிப்பது நினைவு கொளத்தக்க தாம். (10.9).

## அடிக்குறிப்புகள்

1. இலக்கியக் கொள்கை (ஆங்கிலம்) - ரெனேவெல்லக் - ஆஸ்டின்வாரன்., 1963. பக் 77
2. ,, பக் 78
3. திருவாய்மொழி - (2-8-11), (5-6-11), (10-4-11)
4. சுப்ரமணிய அய்யர் சொற்பொழிவுகள் (ஆங்கிலம்)- சென்னைப் பல்கலைக் கழகம் டி. ஏ. கோபிநாதராவ் பக். 19
5. உபதேச ரத்தினமாலை - மணவாள மாமுனிகள் - பாடல் 50
6. தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்-நச்சினார்க்கினியர் உரை, சூ 350
7. கண்ணிநுண் சிறுத் தாம்பு - மதுரகவி - பாடல். 8
8. ஆசாரிய இருதயம்-திறனாய்வு-தாமோதரன்.சூ;
9. உபதேச ரத்தினமாலை-மணவாள மாமுனி- பா. 14
10. திவ்விய பிரபந்தம் - மாதவதாசன்பதிப்பு - முன்னுரை பக். 30
11. தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி-சுப்பிரமணிய அய்யர் ஏ.வி. 1971, பக். 128
12. மெய்யுணர்வாளரும் மெய்யுணர்வும் - சீனிவாசாச்சாரி பி. என்; (ஆங்கிலம்) பக். 176-177.
13. இராமாநுச நூற்றந்தாதி-அமுதனார்-பா-1.
14. சுப்ரமணிய அய்யர் சொற்பொழிவுகள் (ஆங்கிலம்); பக்.27
15. ஆசாரிய இருதயம்-மணவாள நாயனார். மணிவாள மாமுனி உரை-சூ. 175

16. திருவிருத்தம் - நம்மாழ்வார் - பா-37
17. ,, ,, பா-61
18. ஆசாரிய இருதயம்-மணவாள நாயனுர்- சூ. 60, 77
19. திருவாய்மொழி - (10-1-7), (7-10-5), (4-5-3), (3-10)
20. திருவிருத்தம்-நம்மாழ்வார்-பா-1.
21. ஆசாரிய இருதயம்-சூ. 70
22. ,, சூ 158 முதல் 186
23. ஸ்ரீ நிகமாந்த மகா தேசிகன் 7ம் நூற்ருண்டு நினைவுமலர் (ஆங்கிலம்)-இராமானுசாச்சாரியார் கட்டுரை. பக். 48-57
24. திரமிடோபநிஷத் ப்ரபாவ சர்வஸ்வம் - அண்ணங்கராச் சாரிய சுவாமிகள்., 1964
25. திருவாய்மொழி - (8-8), (10-7-10), (10-10)
26. ஆசாரிய இருதயம் - சூ. 218
27. இராமானுசரின் தத்துவம் - (ஆங்கிலம்) பாரத்வாஜ் கே. டி. டாக்டர்., 1958, பக். 20

# கவிதையின் இயல்பும் பயனும்பற்றி ஆழ்வார்

கவிதைக்குப் பலர் பலவகையாக விளக்கம் தந்துள்ளனர். ஆனால் எந்த ஒரு விளக்கமும் கவிதையை முழுவதும் விளக்கிக் காட்டவில்லை. பலரும் கூறிய பல இயல்புகளையும் பெற்றுத் திகழ் வனவற்றை நல்லகவிகள் என்னலாம். ததும்பும் உணர்ச்சிக்குப் போக்கிடம் கொடுப்பது அல்லது ஒரு பூரணமான கற்பனை ஓடுவதற்கு வழிவகுத்துத் தருவதுதான் கவிதை என்று கேபிள் என்ற பிரெஞ்சு ஆசிரியர் சொல்லுகின்றார்.[1]

'ஏதோ ஒன்று பேசுகின்றது; அதை நான் எழுது கின்றேன்.'[2] தத்துவ ஆராய்ச்சியோ மிக்க கடினமாகும். கவிதையோ தத்துவத்தை நமக்கு இன்பச் சொற்களால்-உள்ளங் கவரும் இசையால் - தருகின்றது - என்பர்.[3] ஆங்கில நாட்டு பென்ஜான்சன் மரங்களில் இலைகள் தோன்றுவது போலக் கவிதை பிறக்கட்டும்; அப்படிப் பிறக்காத கவிதை கவிதையாகாது. கருக் குழியில்குழந்தை உருவெடுப்பது போல்,மலர்களில் மணம் விரிவது போல், விளக்கில் ஒளி எழுவது போல் கவிதை இயற்கையாய் வர வேண்டும் என்று ஜான்கீட்ஸ் கூறுவர்.[4]

இவ்வாறாகப் பல நல்லறிஞர் எடுத்துக் கூறும் இயல்புகளை யெல்லாம் திருவாய்மொழிக்கவிதை—மாறன் சடகோபன் சொன்ன தீதிலாத ஒண் தமிழ்கள் ஆயிரமும் (9-1-11) பெற்றுத் திகழ் கின்றது. ஒவ்வொரு திருவாய் மொழியின் பதினோராவது பாடலும் நூல் பாடியவர் பெயரையும் அது கற்றார் பயனையும்

தெரிவிக்கும். 'குருகூர்ச் சடகோபன்' என்ற தொடர் 88 திருவாய் மொழிகளிலும், 'சடகோபன்' என்ற தொடர் 97 திருவாய் மொழி களிலும் கூறப்பெறுகின்றன. 3 திருவாய் மொழிகள் சடகோபனைக் குறிக்கும். வேறு பெயர்களான வழுதி நாடன் (2-8-11, 10-4-11) குருகூர் மாறன் (10-2-11) என்ற பெயர்களைக் கொண்டுள்ளன. ஆனால் 99 திருவாய் மொழிகளிலும் ஆயிரம் என்ற எண்ணும், ஒன்றில் மட்டும் (6-7-11) அப்பொருள் தரும் 'பத்து நூறு' என்ற கணக்கும் குறிக்கப் பெற்றுள்ளன. பாடல்களின் இயல்பையும் அத்தொடர்கள் குறிக்கின்றன. அவற்றால் விளங்கும் முக்கிய செய்திகள் இவ்வாயிரம் பாடல்களும் 'நிரல்நிறை' (1-1-11) யாக உள்ளன என்பதும், 'சீர்த்தொடை (1-2-11) அமைந்தன என்பதும், அளவியன்ற அந்தாதி' என்பதும், (1-4-11), இவை ஒண் தமிழ்' (4-7-11) என்பதும், 'சொல்லிசைமாலை' (4-8-11) என்பதும், 'பார்கொளாயிரம்' (6-1-11) என்பதும், வேட்கையால் சொன்ன பாடல்' (4-10-11) என்பதும், 'நாவியல் பாடல்' (9-2-11) 'பொய்யில் பாடல்'(4-3-11) 'பணிசெய் ஆயிரம், (1-10-11) என்பதும் ஆழ்வார் கருத்தாக இருந்தது என அறியலாம். பாடல்களை நிரல் நிறையாகச் சீர்தொடைகளோடு அந்தாதி ஆக அமைக்க வேண்டுமென்பது அவர் எண்ணமாக இருந்ததெனத் தெரிகின்றது. இசை கூட்டிப் பாடுதற்கேற்ப அமைக்கவேண்டு மென்பதும் அவர் கருத்தாக இருந்ததென்பது நினைவு கொள்ளத் தக்கது. இறைவன் மீது இவர் கொண்ட 'வேட்கையால்' அவனுக்குச் செய்கின்ற 'சொல் தொண்டாக' இப்பாடல் அமைகின் றன என்பதும் அவர் சொல்லில் தெளிவாகின்றது. பாடல்கள் ஒண் தமிழில் 'வழுவிலாத ஒண்தமிழில்' அமைகின்றன என்பதும், 'பொய்யில் பாடலாக' விளங்கும் என்பதும் அவர் எண்ணம் என்பது உறுதிப்படுகின்றது. 'நாவியல் பாடல்' என்பதால் இவர்தம் எண்ணமின்றியே நா இப்பாடல்களைப் பாடிய தாகக் கொள்வதற்கும் இடமிருக்கின்றது. ஆகையால்தான் ஆழ்வார் தாம் இப்பாடல்களைப் பாடவில்லை என்றும், 'நம் பெருமான்' தமக்குச் செய்த அருள்தான் இது என்றும், அவனே தம் நெஞ்சத்துள் இருந்து இங்கு 'இருந்தமிழ்நூல்' இவை மொழிந் தான் என்றும் பாடுகின்றார் (10-6-4).

## திருவாய் மொழி பாடிய கவிஞன் யாவன்?

இக்கருத்தை அவர் ஒரு திருவாய்மொழி (பதிகம்) முழுவதும் திரும்பத் திரும்பச் சொல்லுகின்றார். முதலிலேயே இறைவன்—

அமரர்கள் அதிபதி தமக்கு மயர்வற மதிநலம் அருளியிருந்த போதிலும் தம்மை உடனே தன்பால் அழைத்துக்கொள்ளாததற்குக் காரணம் தம்மைக் கொண்டு தன் மீது கவிபாடுவித்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணமே போலும் என்றும், எத்துணையோ பல் இன்கவி பாடும் மேலான கவிஞர்கள் இருக்கவும் அவர்களைக் கொண்டு தன் செயலை நிறைவேற்றிக் கொள்ளாது இன்று நன்றாக வந்து (நான் வாழ்வு பெறுதற்குத் தகுதியாக வந்து) உவப்போடு என்னைக் கருவியாகக் கொண்டு என்னால் தன்னைச் சொற்செறிவு பொருட் செறிஅன்ன கவிகளை நன்றாகப் பாடிக் கொண்டான் என்று பாடுகின்றார் (7-9–6).

இவ்வாறு பாடும் இடத்தில் 'கவிதைகளை இன்கவி' என்றும், 'வண்தீங்கவி' (7-9-7) (மிருதுத்தன்மை வாய்ந்த இன்கவி-திராட்சா பாகமானது), பதவிய இன்கவி (7-9-10) என்றும் தவறாது குறிப்பிடுகின்றார். தனக்கு அவன் புகழ்களைப் பாடும் நீர்மை (ஞானம்—ஆற்றல்) இல்லாவிட்டாலும் தகுதியற்ற தன்னைப் பக்தி உடையனாகும்படி செய்து, என்னால் தன்னைப் பாரெல்லாம் புகழும் கவிகளைப் பாடுகின்ற பரமன் அவன் என்று பாடுகின்றார் (7-9–5) இவ்வாறு தனக்குப் பெருமை தந்துதவிய செய்கைக்குக் கைம்மாறாகத் தன்னால் செயற்பாலது ஒன்றுமில்லை என்று ஏக்கத்தோடு மொழிகின்றார். இங்கே ஒரு ஐயப்பாடு எழலாம். கவிபாடியது சடகோபரா அல்லது இறைவனா என்று? அதற்கு அவரே விடையும் கூறுகின்றார். 'என் சொல்லால் யான் சொன்ன இன்கவி' என்று பெயர். ஆனால் இது உண்மையன்று. 'தன் சொல்லால் தான் தன்னைப் புகழ்ந்து கொண்டவன்' மாயவன் என்பதே உண்மை என்கின்றார் ஆழ்வார் (7-9-2) இவர் கருவி மாத்திரமாக நின்றார் என்பது இதன் கருத்து. கருவியாகக் கொண்டு கவிபாடினபடி எவ்வாறு என்ற கேள்வியை எழுப்பிக் கொண்டு வியாக்யான கருத்தா கூறும் விளக்கம் இங்கு நினைத்தல் தகும். 'இறைவன் முன்னே பாடல் கூறப், பின்பற்றி ஆழ்வார் சொன்னாராம். அவனே சொன்னால் அது கீதையைப் போன்று வரட்சியுடையதாக இருக்கும். அதற்குத் தனிப் பெருமையும் கிடையாதாம். ''இறைவன் இவ்வாறு செய்தலை இயல்பாக உடையவன். உலகைப் படைத்து அதனைப் பிரமன் செய்தான் என்றும், தானே முப்புரங்களை எரிவித்து அதனைச் சிவன் செய்தான் என்றும், அவர்கள் பால் ஏறிட்டுக் கூறல் போலத் திருவாய்மொழியைத் தானே செய்து விட்டு அதனை ஆழ்வார்

செய்ததாக அவர் மீது ஏறிட்டு அவர்க்கு ஒரு பெருமையைத் தந்தான்" என்பது அதன் சாரம்.

ஆனால் ஆழ்வாருடைய இன்னொரு பாடல் (7-9-3) தன்னை இறைவன் இவ்வுலகினைத் திருத்துவதற்கு ஏற்ற முதல்வன் என்று தெளிந்தார் என்றும், அல்லது இறைவனே இவ்வுலகிற்கு ஒரு முதல்வன் ஆம் என்ற தெளிவினைத் தனக்கு உண்டாக்கினான் என்றும், இருபொருள் தரும் ஒரு தொடரைப் பெற்றுள்ளது. அதன் பின் தன் நாவின் பால் வந்து புகுந்து நல்ல இனிய கவிகளைத் தூய பக்தர்க்காகப் பாடினான், இறைவன் என்கிறார். கலைமகள் கவிஞர் வாக்கில் அமைய, அக்கவிஞர்கள் கவிபாடும் ஆற்றல் பெற்றதாகக் கம்பர், காளிதாசர், வால்மீகி போன்ற கவிஞர் பற்றிய வரலாறுகள் உள. ஆனால் இங்கு இறைவனே நேராக வந்து அமர்ந்ததாக ஆழ்வார் பாடுகின்றார். இவ்வாறு நிகழ்தல் கூடுமா என்ற ஐயத்தைச் சிலர் எழுப்பலாம். அது நியாயமான கேள்வியே.

இதற்குரிய விடையைத் திருவாய்மொழியின் துணை கொண்டே நாம் காணலாம். அடியவர்களுடன் சேர்ந்து அவனைக் கவிபாடிப் பெறுவதனால் வரும் இன்பத்திற்கு அவன் திருவடி இன்பமும் ஈடாகாது என்று ஆழ்வார் கூறுகின்றார் (8-10-5) அவ்விடத்தில் தாழ்வுக்கு எல்லையான இழிந்த இவ்வுடலில் பிறந்து இறைவனுடைய எல்லையற்ற மங்கள குணங்களை அறிந்து அவ்வுணர்வு உள்ளடங்காமையால் சொல்லாய் வெளிப்படுகின்ற கவியாகிய அமிருதம் (8-10-5) என்று தெளிவான ஒரு கருத்து அமைந்துள்ளது. கேபிள் (Keble) என்பவரும் ஜான் கீட்ஸ் என்பவரும் கூறுகின்ற முறையில் இதுவும் அமைந்துள்ள தன்றோ? ஆழ்வார் தான் பாடவில்லை; இறைவனே பாடினார் என்கின்றார். மி..டன் 'ஏதோ ஒன்று பேசுகின்றது; அதை நான் எழுதுகின்றேன்' என்று கூறுவதும் இதுவும் ஒத்ததன்மையானதன்றோ? பிளேக் (Blacke) என்கின்ற ஆங்கில நாட்டு mystic (மெய்யுணர்வு பெற்ற சான்றோர்) 'ஆண்டவன் தன்னை ஒரு கருவியாகக் கொண்டு பெரும் இரகசியங்களை வெளியிட்டார்; தாம் பாடவில்லை. தம் மூலம் இறைவன்தான் பாடினார்'[5] என்ற கருத்தில் வேரூன்றி நின்றவர் என நாம் அறிவோம். ஒரு படைப்பு ஆவேசத்தில் பிறக்க வேண்டும். அப்படிப் பிறக்காதது கலையாகாது. ஆவேசத்தில் பிறந்தது ஆண்டவன் அருளியது என்றுதான் கருத

வேண்டும். அது ஆண்டவன் தந்த வளம்[6] என்பர் அறிஞர் ரா. ஸ்ரீ தேசிகன். அவரே 'கருத்துக்கள் ஆவேசத்தில் பிறந்தாலும் அவைகளுக்குத் தக்க உருக் கொடுக்கின்ற நிலையில் மனிதனின் முயற்சிகள் தேவை என்பதில் சந்தேகமில்லை' என்பர். அதன்படி பாட்டின் புறவடிவத்திற்கு மட்டும் நாம் கவிஞரை...ஆழ்வாரைப்— பொறுப்பாக்கலாம் என்பதாகின்றது. கருத்துக்களையும் உணர்வை யும் இறைவன் அளித்து விட்டபின் புறவடிவம் அமைப்பது அருமையன்றே. 'உள்ளத்தொளி சொல்லில் வீசுவதே கலை'[7] என்று கிரோச்சே என்ற இத்தாலி நாட்டுத் திறனாய்வாளர் மொழிகின்றார். 'உள்ளத்தில் உண்மை ஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும்'[8] என்பர் தமிழ்க் கவி பாரதியார். எனவே உள்ளத்து அமைந்த ஆழமான உணர்வு வாக்கினில் செம்மையான வடிவத்தைத் தானே பெற்றுவிடும் என்பதும் தெளி வாகின்றது. அதனாலேயே ஆழ்வார் 'மொழிபட்டோரும் கவிய முதம்' (8-10-5) என்று கூறுவது மிகப் பொருத்தம் நிறைந்ததாக உள்ளது. நாவியல் பாடல் (9-2-11) என்ற தொடர் மனத்தின் துணை இல்லாமலே சொல்லப்பெற்ற பாடல் என்று பொருள்படும். உணர்வு மிகுதியால் அது தானே ஒரு நல்ல உருப்பெற்றது என்பது தானே இதன் கருத்து.

## பாடியது எப்படி?

இறைவன் இவர் கவிபாடினதற்குக் காரணமானது எவ்வாறு என்று வினவில், 'ஆதியாய் நின்ற என் சோதியை' (7-9-1) என்பதன் மூலம் அவன் தன் வடிவழகைக் காட்டி இவரைப் பாடுவித்தான் என ஆயிற்று. முன் கூறியபடி குணங்களை உணர்ந்த உணர்வு மட்டுமன்றி அவனுடைய ஒப்பற்ற திவ்விய மங்கள விக்கிரகத்தின் தோற்றமும், அழகுமிக்க ஒளியும் இவரைக் கவி பாடுவித்தது என்று கூறப் பெறுகின்றது. வால்மீகி பகவான் கண்ட காட்சியின் சோக வேகத்தால் இராமாயணம் தோன்றியது போல் ஆழ்வாரும் தாம் கண்ட அழகிய தோற்றத்தின் ஈடுபாட் டால் கவிபாடுகின்றார் என்பதாகும். 'கிருஷ்ணத் வைபாயதர் என்னும் பெயரை உடைய வியாசரைச் சுவாமியான நாராயணன் என்று தெரிந்துகொள்; செந்தாமரைக் கண்ணனை அவனைத் தவிர வேறு யார்தான் மஹாபாரதம் செய்தவராக ஆவார்?'[9] என்பது போல இங்கும் இறைவனே திருவாய்மொழி பாடினான் என்று கூறப்பெறுகின்றது. மிக்க உணர்வும் அழகு ஈடுபாடும்

காரணமாகத் தானாக எழுந்த -இயல்பாகத் தோன்றிய -கவி வெள்ளத்தை இறைவனால் தோன்றியது என்று கூறுவது ஒரு மரபு-இயற்கை-என்பதே பொருத்தமாகும். இதுவே நாம் உணரத் தக்கது. அதனாலேயே வேட்ஸ்வொர்த் (Words worth) என்ற ஆங்கிலக் கவிஞரும், 'ஆழ்ந்த உணர்ச்சியானது பொங்கித் தன்னியல்பாக வெளிப்படுவதே கவிதை'[10] என்கிறார். நாம் வியக்கின்ற பாடல்களைப் பாடிய கவிஞர்கள் தம் நுண்ணறிவால் வகுத்துக் கொண்ட சட்டதிட்டங்களால் இத்தகையசிறப்பை அடையவில்லை. ஓர் ஆவேசத்தில் சொற்களைக் கொட்டுகின்றார்கள். அவர்களை ஒரு அபூர்வ சக்தி ஆட்டுகின்றது என்பர் வங்கக் கவிஞர் தாகூர்.[11] இது ஆழ்வார் கவிபாடியதனோடு எவ்வளவு ஒத்து விளங்குகின்றது! நம் ஐய வினாவிற்கு ஏற்ற விடை இதுதானேயன்றோ? இவ்வபூர்வ சக்தி படுத்தும் பாட்டையே ஆழ்வார் இவ்வாறு வருணிக்கின்றார். திருமாலிருஞ் சோலையில் உள்ள 'வஞ்சக் கள்வன்' மாமாயன் வஞ்சனை மிக்க கவியாக வந்து என் நெஞ்சினுள்ளும் உயிரினுள்ளும் கலந்து, எவரும் அறிந்து கொள்ள முடியாதவாறு நெஞ்சினையும் உயிரினையும் உண்டு, முழுவதும் அவனேயாகி நிறைந்து விட்டான் (10-7-1). அவன் தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகத் தனக்குத் தித்தித்தான் என்றும், தான்யான் என்ற வேறுபாடின்றித் தன்னைத்தானே துதித்தான் (10-7-2) என்றும் பாடுவதோடு கவிஞர்களை நோக்கிச் 'செஞ்சொற் கவிகளே! நீங்கள் அவனது அழகில் உங்களை இழப்பீர்கள்! எனவே அவனது அழகும் குணச்சிறப்பும் உங்களை நீராக்காதவாறு உங்கள் உயிரைக் காத்துக் கொண்டு அவனுக்கு அடிமை செய்யுங்கள்' என்கின்றார். இதனால் கவிகட்குப் பொருளாக இருப்பவன் அவனே என்பதும், கவிஞர்கள் தங்கள் செஞ்சொற்களை அவனது அழகினையும் சீலத்தினையும் அனுபவித்துப் பாடுவதற்குப் பயன்படுத்த வேண்டும் என்றும் ஆழ்வார் குறிப்பாகக் கூறினாராயிற்று.

வேறொரு இடத்தில் பேசும்போது (3-8-6) 'என் உயிரானது செவிகள் நிறையுமாறு உன் புகழின் வடிவமான கனி என்னும் கவிதைகளை அவ்வக் காலத்திற்குரிய பண்களாகிய தேனைக் கலந்து நுகர்ந்து' என்று கூறுகிறார் இறைவனின் புகழே கவிதைக்குரிய பொருள்; கவிகள் பக்குவமடைந்த கனிகளைப் போன்று உண்ணுதற்கு ஏற்றவை; கனிகளின் சுவை அவற்றுடன் கலந்த தேன் மிகுவிக்குமாறு போலப் பாடல்களின் இன்பத்தைப் 'பண்' மிகுவிக்கும் என்பன ஆழ்வார் தம் கருத்துக்கள் என்று அறியலாம்.

**புலவர்க்கு அறிவுரை**

வேறு ஒரு திருவாய்மொழி முழுவதும் (3-9) (பதிகம்) ஆழ்வார் புலவர்களை விளித்து அவர்களுக்கு அறிவுரை கூறும் முறையில் அமைத்துள்ளார். அதனுல் ஆழ்வார் கருத்தின்படி கவிஞரால் பாடல் பெறுதற்கேற்ற பொருள் எதுஎன்பதும், அதற்குரிய காரணம் என்ன என்பதும் தெளிவுற விளங்குகின்றது. ஆழ்வார் அதனை வெளிப்படுத்தும் முறையும் வேகம் மிக்கதாகவும் நயமுடைய தாகவும் உள்ளது. ஆழ்வார்க்கும் அவர்தமக்கு முன்வாழ்ந்த புலவர்க்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளையும் நாம் அதனுல் அறிந்து மகிழ முடிகின்றது.

ஆழ்வார் தன்னை 'உலகம் படைத்தான் கவி' (3-9-10) என்று கூறிக் கொள்ளுவதில் பெருமித மடைகின்ருர். தான் வாய்கொண்டு 'மானிடம் பாடவந்த கவி' (3-9-9) அல்ல என்றும் தெளிவுறப் புகல்கின்ருர். இதுவே அவர்க்கும் அவர் காலத்திற்கு முன்னும் அவர் காலத்தும் இருந்த வேறுபல கவிஞர்க்கும் உள்ள வேறுபாடு. அவரே கவிஞரை நோக்கிக் கேட்கின்ருர், என்றும் எனக்கு மற்ருெருவர் கவி-பாடல் எப்படி ஏற்புடையதாகும்?- பொருத்தமுடையதாகும்? என்று வினவுகின்ருர். தன் கவிதை தனக்குத் தந்தது எதனை?கவிதையால் பெறும் பயன் யாது? என்று கேட்டால் அவர்விளம்புகின்ருர்:'சாய்கொண்ட இம்மையும்சாதித்து வானவர் நாட்டையும் நீ கண்டு கொள்ளென்று வீடும் தரும் நின்று நின்றே"(3-9-9) ஒளியை உடைய இவ்வுலக இன்பத்தையும் தந்து, பின் நித்திய சூரிகளோடு கூடி இருக்கும் பரமபதப் பேற்றையும் நீ கண்டு கொள் என்று கூறி அங்குக் கைங்கரியம் செய்யும் இன்பப் பேற்றையும் முறையாகக் கொடுப்பான் என்கிருர். கவிதையை நல்ல வழியில் பயன்படுத்திஞல் பெறும்பயன் இது. "ஒரு கவி தோன்றிஞல், முன்பு சொல்லப்படாத ஒன்றை அவன் உலகத்திற்கு முரசடிக்காமற் போகான்; எதுகை மோனையில் மட்டும் ஒரு கவிதை பிறந்து விடாது. ஒரு புதிய கருத்துத் தோன்றுகின்றது. அதற்குத் தகுந்த உருவமும் அமைகின்றது. ஒரு புதிய அனுபவத்தைக் கவி உலகிற்கு அவிழ்க்கின்ருன்."[12] என்பர் அமெரிக்க நாட்டு அறிஞர் எமர்சன். அவ்வாறே தனக்கு முன் அமைந்த பல கவிஞர் சென்ற வழியில் செல்லாது சடகோபர் தமக்கென ஒரு புது வழியை அமைத்துக் கொள்ளுகின்ருர். பல பழைய இலக்கிய நெறிகளை அவர் பின்பற்றிய போதிலும் தமதாகக் கொண்ட புதிய

நெறியை அழுத்தம் திருத்தமாக வற்புறுத்தி உரைக்கத்தவறவில்லை கவிஞர்கட்கு அவர் கூறும் உபதேச உரைகளில் அது நன்கு புலனாகும்.

அவர் நன்கு உணர்கின்றார் தாம்கூறுவது புலவர்க்கு உகப்பாக இராது என்று. எனினும் சொல்லுவது தமது கடமை என்ற முறையில் அதனைப் பொருத்தமுறப் புகல்கின்றார். 'சொன்னால் விரோதம் ஆகிலும் சொல்லுவன் கேண்மினோ' (3-9-1) என்பது அதனால்தானே. எடுத்த எடுப்பில் நீங்கள் இப்படிச் செய்யுங்கள் என்று புகலாது கேட்கின்றவர்க்கு ஏற்கும் முறையில் தான் இவ்வாறு அன்றி வேறு செய்யேன் என்று கூறுவதின் மூலம் மற்றவர்க்கும் இதுவே ஏற்புடைய தென்பது மனத்தில் படுமாறு செப்புகின்றார். 'வண்டுகளும் மதுவுண்ட களிப்பின் வெளிப்பாடாகத் தென்னதென என்று பாடும் திருவேங்கடத்து உள்ள என்னப்பன் எம்பெருமானை விட்டு நான் என் நாவில் இன்கவியை மற்றொருவர்க்கும் கொடுக்க மாட்டேன் (3-9-1) என்று தொடங்குகின்றது அறிவுரை. அடுத்து எதனைச் செய்யக் கூடாது என்பதனைக் குறிப்பிடுகின்றார். 'அந்தப் பரம்பொருளைத் தவிரப் பலவகைப் பட்ட பொருள்களும் ஒன்றும் இல்லை'[13] என்பது உண்மை. அப்படியிருக்கவும், அவனை நினையாத போதும் தன்னை உள்ளவனாகவே நினைத்து, அதற்கு மேலும் தன் செல்வத்தை மிக உயர்ந்ததாக மதித்திருக்கும் இம்மானிடத்தைக் கவிபாடி வரும் பயன் யாது? என்கிறார். அவர்களைக் கவி பாடுவதென்பது அவர்கள் பால் மறைந்திருக்கும் குற்றங்களை நூலாக வெளியிடுவதே யன்றோ என்பது கருத்து. அதற்கு அடுத்தபடியாகப் 'புலவர்காள்!' என்று அவர்கள் அறிவுடைமை தோன்ற விளித்து, 'நீங்கள் சிறந்த பேறு நல்கும் வானவர் ஈசனை விட்டுப் புறம்பே பாடுதற்கேற்ற பொருளை நாடிச் சென்று உமது மிக நல்ல வான்கவி (சொற்செறிவுடைய சிறப்பான கவிதைகளைக்) கொண்டு கவிக்குத் தகுதியற்ற இழிந்த நிலைக்குச் சென்று சிறுமை வாய்ந்த மனிதனைப் பாடுதலால் யாருக்கு நன்மை? அவர்கட்கும் நன்மை இல்லை. உங்கட்கும் பயன் இல்லை; அது உங்கள் அறிவுக்கும் பொருந்தியதாகாது; கவிதைக்குமே இழுக்குத் தருவதாகும். பின் ஏன் செய்கின்றீர்கள்?' என வினவுகின்றார். கவிதைக்கு ஆழ்வார் தரும் ஏற்றமும் அவர் உண்மைப் புலவர்பால் வைத்துள்ள மதிப்பும் இதனால் வெளிப்படும்.

பின்னர் மனிதர்க்கும் இறைவனுக்கும் உள்ள வேறுபாடுகளை விரிவாக ஆழ்வார் எடுத்து விளக்குகின்றார். மனிதரைப் பாடுதலால் பயனில்லை; சிறிது கிடைக்கலாமாயினும் அவர்களே நிலையில்லாதவர் என்றும், அதற்கு மாறாக இறைவன், கவி பாடினார்க்குக் கொடுக்க முடிசூடியுள்ளான் என்றும், பாடுகின்றவர் களையும் தன்னை ஒக்கச் செய்யும் பண்பினன், ஆற்றவன் என்றும், பாடிப் பிழைக்கும் தொழிலே போமாறு சன்ம நீக்கமும் அவன் தருவான் என்றும், இரு நிலைகளையும் ஒப்பிட்டுக் காட்டுகின்றார். மற்றும் மனிதரைப் 'புகழ்தலால் பயனில்லை; அவர்கள் செல்வம் (புகழ்) குப்பையைக் கிளறினாற் போன்றது; புகழ்தலால் புலவர் வாய்மை தவறும்; இறைவனைப் பாடினால் கொள்ளும் பயனும் நிறைய உண்டு; அவன் செல்வமும் புகழும் நிறைவுடையன; எல்லா நற்குணங்களையும் உடையவன் அவன்; எதனையும் தருதல் அவனுக்குக் கூடும். எனவே கோதில் (குற்றமில்லாமல்) கொடுக் கின்ற, என் அனுபவத்தால் நான் உணர்ந்த வள்ளலாகிய என்னு டைய மணிவண்ணனாகிய அழகனையே கவிபாட வாருங்கள் என்று அழைக்கின்றார். இறைவனின் பொருள் சேர் புகழும் விட முடியாத வடிவழகுமே கவிதைக்கு ஏற்ற பொருளாம் என்பதாம்.

கவிபாடிப் பிழைக்கும் புலவர்களை விளித்து 'உடல் வருந்த உழைத்தும், கைத்தொழில் செய்தும் வாழ்க்கை நடாத்துங்கள்' என்று கூறும் அறிவுரை மிக வியக்கத் தத்கதாக உள்ளது. இன் றைக்கு ஏறக்குறைய 1200 ஆண்டுகட்கு முன்னரே தெய்வீகக் கவிஞரான ஒரு புலவர் மற்ற புலவர்களுக்கு உயிர் வாழ்வதற்கு உழைப்பும், தொழிலும் செய்யுமாறு கூறும் அறிவுரை காலம் கடந்த ஒரு கருத்தாக விளங்குகின்றது. இவர்க்குச் சம காலத்தில் அல்லது முன்காலத்தில் இவ்வாறு அறிவுரை கூறும் புலவர் வேறு யாரேனும் இருக்கின்றார்களா என்பது ஐயமாகவே உள்ளது. இவ் வளவு தெளிவாகவும், அழுத்தமாகவும் பேசிய புலவர் இல்லை என்றே கூறலாம். 'பாடித்தான் பிழைப்போம்' என்று புலவர்கள் சொல்வதாக இருந்தால் மானிடர்களில் கொடுக்கும் செல்வர் இல்லை என்றும், தேவர்களில் எத்தெய்வத்தைப் பாடினும் எல்லாமாக விளங்குகின்ற செம்மையான ஒளியுடைய தலைமைக்கு அறிகுறி யாக முடிசூடிய திருமகள் கேள்வனையே அவை சேரும் என்றும், திருமாலின் சிறப்பினை ஆழ்வார் அன்னோர்க்கு அறிவுறுத்து கின்றார். அவரவர் இஷ்ட தேவதைகளை ஏசாது ஒரு தெய்வத்

திற்குப் பரத்துவம், முதன்மை, கூறும் முறையும் இங்கு மிக அருமையாக அமைதல் காணத்தக்கது.

பின்னர்த் தகுதியான கொடையால் உண்டான புகழ்க்கு எல்லை இலாதவனும், கவிபாடுதற்கு ஏற்ப ஒன்றிரண்டல்ல ஆயிரம் பேருடையவனும் ஆகிய தன் உபகாரகனையே தன்னால் பாட இயலும் என்கிறார். மற்ற புலவர் பாடும் முறைகளை எடுத்துக் காட்டி அவ்வாறு பயனற்ற கஞ்சர்களைப் பற்றிப் பச்சைப் பசும் பொய்கள் பேசத் தாம் தகுதியற்றவர் என்று கூறுவதின் மூலம் அவர்களுடைய தகுதியின்மையை நயமுறக் கடிகின்றார்; இறுதியில் தான் பாட விரும்பினும் பிறரைத் தன்வாய் பாடாது என்பதாகக் கூறி மனத்தொடு படாமை பேசவும் தன்னால் இயலாது, கூடாது என்று அழுத்தமுற இயம்புகின்றார், உலகம் படைத்தான் கவியாகிய ஆழ்வார். இவ்வாறு பேசுவதால் இப்பத்து (பதிகம்) பெரும் புகழுடையதாக விளங்குகின்றது.

### வான் கவிதை எது?

திருவாய்மொழி தோன்றுதற்கு முன் இருந்த தமிழ்க் கவிதைப் பரப்பை எண்ணிப் பார்த்தால்தான் சடகோபர் பாடும் இப்பாடல்களின் சிறப்பு நமக்கு விளங்கும். தமிழ் இலக்கியத்தின் சிறப்பான ஒரு காலம் சங்க காலம் எனப் பெறுவது. அவ்விலக்கியம் தமிழர்களோடு பிற இனத்தவர் மிகுதியும் கலவாத காலத்தில் எழுந்ததென்றும், தமிழரின் தனியியல்புகளை வெளிப்படுத்துவதென்றும், உலகின் மிகச் சிறந்த இலக்கியங்களோடு ஒப்பிடும்போது அவற்றினோடு ஒத்த தன்மையது என்றும் அறிஞர் பலரும் ஒத்துக் கொள்கின்றனர். அவ்விலக்கியத்தின் புறப்பொருள் பற்றிய பகுதியின் பெரும்பான்மை, புலவர்கள் வள்ளல்களைப் பாடிப் பாராட்டிய தன்மையதாகும். அக்காலத்தில் புலவர்கள் பெரும் மதிப்புடையராகவே போற்றப்பட்டனர் என்பதும், அவர்கள் பொய் கூறி வாழ்த்தும் பண்பினர் அல்லர் என்பதும் உண்மையே. ஆனால் பிற்காலத்தில் இந்நிலை பெரிதும் மாறுபட்டு விட்டது. ஆழ்வார், பரிசில் பெறும் பொருட்டு மானிடர்களைப் பாடி வாழும் வாழ்க்கையை உயர்ந்ததாகக் கருதவில்லை என்பதும், இறை அறிவு பெறுதலும் அவனை மனம் மொழிமெய்களால் இறைஞ்சி ஏத்தி வழிபடலும் இன்றியமையாததென்று கொண்டார். எனவே உலகு திருந்த மிக்க அன்பால் பலர்க்கும் தம் கவிதையால் உபதேசம்

செய்யும் ஆழ்வார், கவிதையின் உயர்வை—ஆற்றலை உணர்ந்தவர் ஆகையால் கவிஞர்களைத் திருத்த விழைந்து அவர்க்கு அறிவுரை கூறுவது சாலப் பொருத்தமேயாகும்.

மேலே காட்டிய எடுத்துக்காட்டுகளிலிருந்து—கருத்துக்களிலிருந்து ஆழ்வாராகிய கவிஞர்—கவிதையை இறைவனது பொருள் சேர் புகழ் (உண்மைப் புகழ்) பேசுதற்கே பயன்படுத்த வேண்டுமென விரும்பினர். இழியக் கருதி ஒரு மானிடம் பாடுவது தாழ்வு என உறுதிப்படுத்தினர் எனவும் அறியலாம்.

இவரது காலம் சைவ வைணவ எழுச்சி மிக்க காலம்; அப்போது சமய வழிபாடும் அநுட்டானமும் (ஒழுக்கமும்) மற்ற எவற்றினும் உயர்ந்தன எனப் போற்றப்பெற்றன. நம்மாழ்வார் அந்நெறிக்குத் தனிப்பட்ட முறையில் ஏற்றம் நல்கிய பெருங் கவிஞர் ஆவர். ஓரளவு இவரைப் போன்று கவிதையைப் பொருள் பெற—இம்மை வாழ்வு நலம்பெறப் பயன்படுத்தக் கூடாது என்ற கருத்தைச் சைவ சமயச்சாரியர்களில் ஒருவரான சுந்தரர் கூறுவதைக் காணுகின்றோம். முதலாழ்வார்களும் திருமழிசைப் பிரானும் ஆண்டாளும், மானிடம் பாடாத கொள்கையினர். இதனைப் பிறர்பால் காணமுடியாது. சுந்தரர் கூட இவ்வளவு அழுந்தந்திருத்தமாகவும் தெளிவாகவும் எடுத்து விளக்கவில்லை. தனக்கென்று ஒருதனி வழி வகுப்பதுதான் சிறந்த கலைஞனுக்கு அழகாகும் என்பர். அப்படிப் பல தனித்தன்மைகள் நம்மாழ்வார்பால் உண்டு. அதில் 'மானிடம் பாடலாகாது' என்பதும், 'இறைவனைப் பாடுவதே வான்கவிதை' என்பதும் ஒன்றெனக் கோடல் பொருத்தமே.

இங்கே இனியொரு கேள்வியும் எழுதல் கூடும். நம்மாழ்வாரை வழிபட்டு அவர் பாவின் இன்னிசையையே பாடி வாழ்ந்தவர் அவர்தம் சீடரான மதுர கவிகள். நம்மாழ்வாரையன்றி இறைவனையும் பாட விரும்பாதவர் அவர். இறைவனைப் பாடினால் அது நம்மாழ்வார்க்கு உகந்தது என்ற காரணத்தாலேயே ஆகும் என்பர். இது என்ன பொருத்தமின்மை! என்று சிலர் கருதலாம். ஆனால் மதுரகவிகளின் பாடலின் தன்மை முற்றிலும் வேறானதாகும். நம்மாழ்வார் இழியக் கருதி மானிடம் பாடலாகாது; அதனால் கொள்ளும் பயனில்லை என்று வற்புறுத்தினர். மதுர கவிகள் இறைவனைத்தான் போற்றினர். அவர்க்கு இறைவன் குருகூர்

நம்பியாகிய நம்மாழ்வாரேயன்றி வேறு பிறரில்லை. அதனால் அவர் தம் பாவின் இன்னிசை பாடித் திரிவான்[14] என்று பாடலானார். எனவே இவ்விரண்டிற்கும் முரண் இல்லை என அறிதல் வேண்டும்.

'பொன்னுக்காகப் பாடாதே'[15] என்றார் பாய் போ என்ற அறிஞர். 'என் எழுத்துக்களிலிருந்து இலாபத்தையோ புகழையோ நான் எதிர் பார்ப்பதில்லை. கவிதையே எனக்கு ஒரு பரிசாய்த் திகழ்கின்றது; என்னுடைய துன்பங்களைத் துடைக்கின்றது; இன்பங்களைப் பெருக்குகின்றது.[16] என்பர் கோல்ரிட்ஜ். நம்மாழ்வாரும் மதுரகவிகளும் பின்பற்றியது இக்கொள்கையே. ஆகவே 'கியாதி, இலாபம், பூஜை என்ற மூன்றிலும் விருப்பமற்றவராகக் கவி பாடிய தீர்க்கதரிசியே,[17] ஆழ்வார் என்பது தேற்றம்.

### அடிக்குறிப்புகள்

1. கவிதைக் கலை I—தேசிகன் ,, ரா. சி., 1966, ப. 15
2. ,, ,, ப. 50
3. ,, ,, ப. 79
4, ,, ,, ப. 166
5. ,, ,, ப. 121
6. ,, ,, ப. 124
7. ,, ,, ப. 116
8. பாரதி நூல்கள்—(காவியங்கள்)—சுப்ரமணிய பாரதி. சி. 1940., ப. 108
9. விஷ்ணு புராணம்—(3-4-4)
10. இசைப்பாடல்கள்வேர்ட்ஸ்வொர்த்(ஆங்கிலம் முன்னுரை(12)
11. கவிதைக் கலை—I—தேசிகன்., ரா.சி 1966, ப. 24
12. ,, ,, ப. 186
13. கடோபநிடதம்—(2-4-11)
14. கண்ணிநுண் சிறுத்தாபு-மதுரகவியாழ்வார்–ப. 2
15. கவிதைக் கலை—I—தேசிகன் ,, ரா.சி ப. 66
16. ,, ,, ப. 161
17. ஆசாரிய இருதயம்—அழகிய மணவாள நாயனர் சூ. 205

# அகப்பொருள் நெறி-பகுதி-1

நான் முதன் முதலில் தமிழின் பழமையான இலக்கியமான சங்க இலக்கியத்தின் சில பகுதிகளை (ஆங்கில மொழி பெயர்ப்பின் வாயிலாகப்) படித்த போது அதன் புதுமை கண்டு வியப்புற்றேன். வடமொழி இலக்கியத்தும் அதனை ஒட்டியனவான பிற இந்திய மொழி இலக்கியங்களிலும் இல்லாத ஒரு புதுமை இதனபால் இருந்தது. தொல்காப்பிய மரபை ஒட்டிய முறையில் விளக்கப் பெற்ற காதற்பாடல்கள் பெரிதும் புதுமை நிறைந்தன; இந்தியா வெங்கும் பரந்த வடமொழிப் பின்னணிக்கு மாறுன தனித்தன்மை பொருந்தியன என்று கண்டேன்'' என்று புகழ்பெற்ற பன்மொழிப் பேரறிஞர் வங்கநாட்டுச் சான்ருேர் டாக்டர் சுனித் குமார் சட்டர்ஜி அவர்கள் தாம் அண்ணுமலைப் பல்கலைக்கழகத்து ஆற்றிய சொற் பொழிவொன்றில் குறிப்பிட்டுள்ளார்.[1]

காதல் பற்றிய-அகத்திணை குறித்த பாடல்கள் தமிழின் தனித் தன்மை வாய்ந்த சிறந்ததொரு கூறு எனக் கருதப்பெறுகின்றது. நம்மாழ்வார் இறைவனுல் மதிநலம் அருளப்பெற்று வேதம தமிழ் செய்த வித்தகர் என்று போற்றப் பெறுபவர். அவர் தம் கவிதைத் திறம் பற்றி ஆராய்கையில் அகத்திணைக்கு அவர் தந்துள்ள இடம் பற்றி அறிவது-ஆராய்வது சாலவும் பொருத்தமானது- இன்றியமை யாதது. அகத்திணை நெறிகளை எந்த அளவிற்குத் தம பக்திப் பாடல்களில் அமைத்துள்ளார்; அதனுல் அவர் பாடல் பெற்றுள்ள சிறப்பு அல்லது குறைவு எத்தகையது எனக் காண்போம்.

## (அ) பொது விளக்கம்

### அக இலக்கியத்தின் மேன்மை

''காமமும் வீரமும் அல்லது சிறந்த வாழ்க்கை உணர்ச்சிகள் வேறில்லை. இவ்விரண்டிற்கும் இரண்டு இலக்கியங்கள் கண்ட

தமிழ் மொழியின் முழுத்திறம் நமக்குப் பெருமிதம் தருவதாகும். இவ்விரண்டு உணர்ச்சியுள் வீரம் ஒரு பாலார்க்கிடையே நிகழ்வது; காமம் பால்மாறி நிகழ்வதாகலின், ஓவியக் காட்சிக்கும் கற்பனைத் தொகுப்புக்கும், சுவை மிகுதிக்கும் அகத்திணையிலக்கியமே இடங் கொள்வது என்று புலவோர்கள் போற்றினர். வீரத்தினும் காத லுக்குத் தலைமை நல்கினர். திருவள்ளுவரும் காமக் கூறுகளை அகத்திணை நெறிப்படி பாடியுள்ளதும் அதனாலேயே யாதல் வேண்டும்''[2] மற்றும் ''கடவுட் காதலைப்பாடியருளிய ஆழ்வார்கள் சைவ சமய குரவர்கள் மக்கட் காதலுக்கென்று வகுத்த அகத்திணை உலகச் சுவடுகளைப் பின்பற்றியதாலன்றோ - தெய்வ அன்பு அக இலக்கியத் தடத்துப் பாய்ந்ததாலன்றோ தமிழகத்தின் இறைப் பாசுரங்கள் புதுமையும் தனிமையும் பெற்ற ஓர் இலக்கிய உலகமாக விளங்குகின்றன.[3] இது பொதுவுண்மை. ஆயினும் நம்மாழ்வார் இத்துறையில் தனியிடம் பெறுதற்குரியராக விளங்குகின்றார். திரு விருத்தத்தில் பெரும் பகுதியும் திருவாய் மொழியில் ஏறக்குறைய நாலில் ஒரு பகுதியும் அகப்பாடல் வகையினவாம். எம்முறையில் அவை அமைந்துள்ளன என ஆய்வதன் முன்னர் ஆழ்வார் பெண் நிலைமை ஏறிட்டுக் கொண்டு பாடும் பாடல்கள் அகப்பாடல் வகை எனக் கூறுவது பொருந்துமா என்ற ஐயப்பாட்டிற்கு விடை காண்பது நலமாகும்.

## அகம் என்பது என்ன?

'அகம் என்பது காதற்காமம். அது உள்ளப் புணர்ச்சியும் மெய்யுறு புணர்ச்சியும் சேர்ந்தது. உள்ளம் இயைந்த உடலுறவும் உடல் இயைந்த உள்ள உறவுமே அதன் பொருள்'[4] இவ்வகையில் நோக்கும்போது ஆழ்வார் பெண்ணிலை மேற்கொண்டு பாடும்பாடல் அகத்திணையாகாது. ஏனெனில் அதில் மெய்யுறல் இல்லாமையால் என்று எண்ணத் தோன்றும். ஏன்? அகத்திணை பற்றி அருமை யாக ஆய்ந்து நல்ல பல விளக்கங்களைத் தெளிவுறத் தந்துள்ள டாக்டர். வ. சுப. மாணிக்கம் அவர்கள் இப்படி எழுதுகின்றார்கள். ''ஆண்டாள் காதல் அகத்திணை ஆகாது மெய்யுறல் இன்மையின், மாருத வேகன் சுதமதியைக் கூடியதும் அகத்திணையாகாது உள்ளி சைவு இன்மையின்[5]''

## அகப்பாடலும் சமய நெறிப்பாடலும்

பேராசிரியரவர்களின் முழுக் கருத்தையும் எடுத்துக் கொண்டு நாம் இங்கு ஆராய்வது தேவையில்லை. சங்க இலக்கியத்தைப்

பற்றிய வரையில் அவர் கூறும் விளக்கம் சரியானதாகலாம். ஆனால் காலம் மாறும்போது—பின்னால் வேறு ஒரு சூழ்நிலையில் வரும் இலக்கியத்திற்கும் அவ்விலக்கியத்தை அப்படியே பொருத்த வேண்டுமென்பதில்லை. அதன் இன்றியமையாத கூறுகள் இருப்பின் ஏற்றுக் கொள்ள வேண்டுவது தானே.

அறஞ்சாலும் அகத்திணைக் களவு புலவர்தம் படைப்பன்று; தமிழ்ச்சமுதாயத்தில் பரவிக் கிடந்த ஒழுக்கமாகும். மக்கள் வாழ்க்கையில் ஊறிக்கலந்த இன்பக் களவுணர்ச்சியை அகத்திணைப் படைப்பிற்கு ஒரு நற்கூருகப் புலவர்கள் தழீஇக் கொண்டனர்.[6] அதேபோன்று இடைப்பட்ட காலத்தில்-சமய எழுச்சி மிக்க காலத்தில்-இறைவனோடு கலத்தலை-உடனிருந்து தொண்டு செய்தலை இன்பம் நிறைக்கும் ஒரு செயலாக-அவாவறச் செய்யும் நிகழ்ச்சி'யாகச் -சமய நெறியினர் கொண்டனர். உள்ளத்தால் இறைவனை உணர்தலையும் பின் அவனை நேரில் கண்டு இணைதலையும் இரண்டையும் அகம் கூறும் இருவேறு நிலைகளுக்கு ஒப்பாகக் கொள்வதில் தவறொன்றுமில்லை. அக்காரணம் பற்றியே சமயப்பாடல்களை அகப்பாடல்களைப் போன்றே-ஏன் அவற்றினும் ஒருபடி மேலாகவே-உணர்ச்சி வெள்ளமும் வேகமும் மிக்கனவாகப் பாடமுடிந்தது.

காவியங்கள் பெயருடையோர் காதற் பெருக்கங்களைப் புனைகின்றனவாகலாம். அன்னவர் காதல் வாழ்வைத் தொடுத்துத் தொடர்ந்து புனைந்து செல்வனவாகலாம். அத்தகைய தன்மை ஆழ்வார் பாடல்களுக்கு இல்லையே. 'நிரல்படப் புனையாமை அகப் பொருள் முறை; பெயர்படப் புனையாமை அகப்பாட்டு முறை'[8] என்னும் அகப்பாடல் இலக்கணங்களில் பாட்டுமுறை ஆழ்வார் பாடலுக்குப் பொருந்தி வருவதில்லையே என்ற வினா எழலாம். அவ்வாறயின் ஆழ்வார் பாடலை அகப்பாடல் எனல் எவ்வாறு பொருந்தும்? இதற்கு விடை காணு முன் அகப்பாடலில் ஏன் பெயர் கூறப்பெறுவதில்லை என்பதனை அறிதல் தகும்.

## பெயர் கூறப்பெறாமையின் அடிப்படை என்ன?

பெயர் கூறப்படாமையின் நோக்கம் யாது என நினைதல் வேண்டும். 'அகப்பாடல்கள் கூறும் அனுபவங்கள் அனைத்தும் தனிப்பட்ட ஒருவர்க்கே உரியன என்பதன்றி, மனித இனம் முழுவதற்கும் பொதுவானவையாக இருத்தலேயாகும்.[9] காதல் வயப்

பட்ட தலைவியின் நிலையே பெரிதும் இங்குக்கூறப் பெறுவது. அத் தலைவியின் பெயர் பாடல்களில் எங்கும் அமையவில்லை. ஆனால் தலைவனின் பெயர்—இறைவனின்பெயர்—வந்துள்ளதே என்று கேட்கலாம். இறைவன் ஒருவனே; அவனை அநுபவிக்கும் உயிர்கள் தாம் பல; ஆகையால் அநுபவிக்கின்ற உயிர்களின் பெயர் கூறப்பெறாமல் அநுபவப் பொருளான இறைவனின் பெயர் மட்டும் இப்பாடல்களில் குறிக்கப் பெறுகின்றது. இது இலக்கணப் படி முழுவதும் ஒத்துவர வில்லையானாலும் இலக்கணம் கருதும் கருத்துக்கு ஒத்து வருகின்றது என்பது நினைவு கொளற்பாலது. அதற்கு மேலும் அகப்பாடல்களில் நாடன், ஊரன், துறைவன், சேர்ப்பன் என்பனபோன்று தலைவனுக்குரிய திணை நிலைப்பெயர் கூறப்பெறுதல் கடியப் பெறவில்லை. அவனையே சுட்டும் சிறப்புப் பெயர் மட்டும் கடியப்பெற்றது. இறைவனுக்கு அமைந்த பெயர்கள் யாவும் திணை நிலைப்பெயர்கள் போன்றனவேயாம். அவை ஒரு காரணத்தால் வந்த பெயர்களேயன்றோ.

'புறப்பாடல்கட்கில்லாத ஓர் ஆழம், உள்ளத்துடன் கலந்த உணர்வு கையறு நிலைப்பாடல்களில் காணப்பெறுகின்றது. இவை கவிஞன் உணர்ச்சிப் பெருக்கால் உளம் உருகிப் பாடப் பெற்ற மையின் அகப்பாடல் தொகுப்பைச் சார்ந்தவை என்று கூறினுந் தவறில்லை. ஏனெனில் இவை தனிப்பட்ட மனிதனின் அகமன அனுபவங்கள்'[10] என்று பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தம் கூறுவதுபோல் அகத்துறைச் சாயலில் அமைந்த பக்திப் பாடல் களையும் அகப்பாடல்பாற் சேர்த்துவதில் தவறில்லை எனலாம். பெயரைச்சுட்டுதலின் காரணம் ஒன்றுபற்றியே இவை அகப்பாடல் அல்ல எனல் வேண்டும். அவ்விதியை இப்பாடல் அளவில் தளர்த் துவதில் தீங் கொன்றுமில்லையாகையால் விதியைத் தளர்த்தி இவற்றை அகப்பாடல் வகையில் சேர்த்தல் தகும். இல்லையெனில் அகப்பாடல் கூறு இதில் அமைந்துள்ளமையை ஏற்றுக் கொண்டு அமைதலும் சாலும்.

### வளர்ச்சிக்கு இடமளித்தல் வேண்டும்

காதலர் தம் மனவொற்றுமையே அகத்திணையின் உயிர்ப் பண்பு; இவ்வொற்றுமையே 'உள்ளப் புணர்ச்சி' என்று அக விலக்கணம் கூறும்.[11] 'உள்ளத்தால் வேட்கை செல்லினும் மெய் யுற்றாராயிற்று'[12] என்பர் களவியலுரைகாரர். இடந்தலைப் பாட்டில் மெய்யுறு புணர்ச்சி இல்லை. எனினும் அதுவும் காதலர்க்கு

இன்பம் நல்கும் ஒரு கூட்டமாகவே கொள்ளப்பெறுகின்றது. பாலு ணர்ச்சியால் கூடும் கூட்டத்தால்வரும்' இன்பம் சிறப்பானதாகலாம். ஆனுலும் அத்தகைய ஒரு இன்பத்தை ஒருவர் அண்மையிலிருப்ப தாலேயோ அல்லது அவர்க்குத் தொண்டு செய்வதாலேயோ ஒருவர் பெறக்கூடியவாறு மனநிலையை வளர்த்துக் கொள்ளக் கூடாதா என்ன? தொல்காப்பியர் திருமணத்திற்குக் கூறும் காரணம் காலம் தோறும் மாறுபட்டு வந்திருப்பது போல மெய்யுறுதல் என்ப தன் தன்மையும் காதலர் மனநிலைக் கேற்றவாறு மாறுபடுவதாகக் கொள்ளுவதில் வரும் இழுக்கென்னையோ?

## அகப்பாட்டிற்கும் ஆழ்வார்பாடல்கட்கும் இடையே உள்ள பொதுமைகள்

மற்றும் 'பிரிவு, அவலம் இவற்றிலேயே இலக்கிய உரத்தையும் இன்ப நயத்தையும் காணுகின்ருேம். துன்பத்தின் இன்பமே கவி தைக்கும் கற்பார்க்கும் சுவைக்கும் ஆதலின் சங்கச் சான்ருேர்கள் பாலைத்துறைகளை விரும்பிப் பலபடப் பாடினர். கற்பில் மூன்றில் இரண்டு பங்கு பாலைப் பாடல்கள்.'[13]

அது போன்றே ஆழ்வார்பாடல்களிலும் பிரிவினுல்படும் அவ லத்தைப் பற்றிய பாடல்களே பலவும். ஒருபதிகம் தவிர மற்றவை யாவும் அப்படியேயுள்ளன. ஆகவே இப்பாடல்களில் அகப் பொருட்குரிய உணர்ச்சியையும் வேகத்தையும் நன்கு காணமுடி கின்றது. 'அகத்திணைத் தலைமை பெண்ணுக்கே உரியது.[14] ஆழ் வார் தம் அகப்பாசுரங்களிலும் தோழியாகவும், தாயாகவும், தலைவி யாகவும் பேசுகின்ற பாடல்கள் தாமே உள்ளன. திருவாய் மொழியில் தலைவன் கூற்ருக ஒரு பாடலும் கிடையாது. 'சங்க இலக்கியத்தில் மக்களின் செயலுக்கும் ஒழுகலாற்றிற்கும் பயன் செய்யும் துணைவனுகவே இயற்கை விளங்கிற்று.'[15] என விளக்கப் பெறுகின்றது. அவ்வாறே ஆழ்வார் பாடல்களிலும் அவர் தம் சமய நோக்கிற் கேற்பவே இயற்கையும் இணைந்து நிற்கக் காணு கின்ருேம். ஆழ்வார் பிரிந்து துன்புறும் போது இயற்கையும் பிரி வால் துன்புறுவதாக அவர் காணுகின்ருர். அவர் இன்புறும்போது அவர்க்கு இயற்கை வாழ்த்துக் கூறுகின்றது. அவர் இறைத் தொண்டு செய்ய விரும்புவது போன்று இயற்கை அங்கங்கே தொண்டு செய்து நிற்பதாக ஆழ்வார் காணுகின்ருர். (இவை

யெல்லாம் இயற்கை பற்றிய பகுதியில் விளக்கப் பெற்றுள்ளன. ஆக, இன்றியமையாததொரு பொது உணர்ச்சியை இன்பகரமாக வெளியிட நம் முன்னோர் அக இலக்கணம் அமைத்துக் கொண்டது போன்றே இடைக்காலத்தாரும் இன்றியமையாதாகக் கருதிய தொரு உணர்ச்சியைத்திறம்பட வெளியிடப்பழைய அக இலக்கண நெறியைப் பயன்படுத்திக் கொண்டுள்ள தன்மை வியந்து போற்று தற்குரியதாகும்.

## அகப்பாடல் இழிந்தது தானு?

திருவாய்மொழியின் முதல் பத்து 4வது திருவாய்மொழி, முதன் முதலில் ஆழ்வார் தரமான தன்மையை விட்டுப்பெண்ணின் நீர் மையை ஏற்று ஆற்ருமையால் தலைவன் பால் சில பறவைகளைத் தூதுவிடுவதாக அமைந்ததாகும். இத்திருவாய் மொழி வந்ததும் பொருள் விளக்கம் கேட்டுக் கொண்டிருந்த ஒரு புலவன், 'இது என்ன காமுகர் சொல்லும் சொல்லாய் இருந்ததே' என்று எழுந்து போக நினைத்ததாக ஒரு வரலாறு உண்டு. எனவே அகப்பாடல் வகையைத் திருவாய் மொழியில் அமைத்தது ஒரு குறை என்று கருதினவர்களும் உண்டு எனத் தெரிகின்றது. அப்புலவன் உலகி யற்காமத்திற்கும் தெய்வக் காமத்திற்கும் வேறுபாடு அறியாமை யால் அவ்வாறு பிறழ உணர்ந்து உரைத்தான் என்கின்றனர். அப்படியாயின் உலகியற்காமம் இழிந்ததென்றும், தெய்வக் காமம் சிறந்ததென்றும், ஆகின்றது. ஆழ்வார் அந்த உலகியற்காமத்தை வெளியிடும் முறையில் பாடல்களை அமைப்பானேன் என்ற கேள்வி எழுகின்றது? காமம் இயல்பான உணர்ச்சி; யாவரும் உணர்ந்து நுகரும் இயல்பினது. அதனைச் சொல்லிப்பொதுவான நிலையிலுள்ள வரை ஈடுபடுத்திப் பின் உணர்தற்கு அருமையானதும் நிலைத்த இன்பந்தருவதுமான தெய்வக் காமத்திற்கு இட்டுச் செல்வதே நோக்கமாம். கடுத்தின்னுனைக் கட்டிபூசிக் கடுத்தின்ன வைத்து அவனது நோய் நீக்குவது போல இதுவும் என்பர்.[6] கற்கின்றவர் நிலையில் வைத்துப் பார்க்கையில் இது சரியாகலாம்; அப்படி என்ருல் ஆழ்வார் பிறர்க்காகத்தான் இவ்வாறு பாடுகின்ருர் என்ப தாக ஆகும். அதாவது செய்யுட் சுவைபாடல் கவர்ச்சி இவற்றிற் காகவே அகப்பாடல் அமைந்தது என ஆகும். இது உண்மையில் ஒருகூறு தான்; முழு உண்மையாகாது. கலிங்கத்துப் பரணி போன்ற வீர இலக்கியம் பாடவந்த புலவர்களும் தனி வீரம் எடு படாது என்ற அச்சத்தாற் போலும் அதில் உவகைச் சுவை (சிருங்

காரம்) அமைந்த கடை திறப்பு' என்ற பகுதியைப் புகுத்தினர் என்று சொல்வதை இது நிகர்க்கும்.

## ஆழ்வார் அகநெறிப் பாடலமைத்ததன் சிறப்பு

ஆழ்வார் அகப்பாடல் பாடியதற்குப் பிறரைக் கவர்வதே நோக்கமாயின் எல்லாப்பாடல்களையும் அம்முறையிலே பாடியிருக்கலாமே? ஏன் பாடவில்லை என்பதற்கு விடை கூறியாக வேண்டும். ஆழ்வார் தாமான தன்மையில் நின்றும் பாடுகின்றார்; பெண்ணிலையில் நின்றும் பாடுகின்றார். பெண்வேடம் தரித்துக் கொள்ளவில்லை; பெண்ணாக நடிக்கவில்லை; பின்னர்தம் உள்ளத்தெழுந்த உணர்ச்சியின் வேகம் மிகுதியான நிலையில் அவர் பெண்ணாகவே மாறிவிடுகின்றார். எனக்கோடல் வேண்டும். தாமாக இருக்கின்ற நிலை-ஞான நிலை. பெண்ணாகப்பேசும் நிலை - உணர்ச்சி மிக்கநிலை பக்திமிக்க நிலை; பிரேமநிலை, இரு நிலையிலும் அவர் பேசுகின்றார்.

'ஞானத்தில் தம் பேச்சு, பிரேமத்தில் பெண் பேச்சு'[1] ஞான நிலையில் தாமான நிலையில் தத்துவங்களைப் பேசுகின்றார்; அன்பு மேலிட்ட நிலையில் பெண்ணாகிக் காதல்பேச்சு-பக்திப் பேச்சுப் பேசுகின்றார்; பாடுகின்றார். ஒரு நிலை அறிவு நிலை; மற்றொரு நிலை உணர்வு நிலை. ஒருவனுக்கு இரண்டும் வேண்டுபவையே. உணர்வினை வெளியிடத் தமிழ் அகப்பாடல் முறை சாலச் சிறந்தது; அது ஆழ்வார்க்குப் பெரிதும் கைகொடுக்கின்றது. உணர்ச்சி மிக்க நிலையில் இயல்பாகவே அவர் பெண்ணாக - பெண்நிலையினராக நின்று பேசுகின்றார் என்பதே உண்மை. ஞான நிலைப் பேச்சிலும் அரிய தத்துவங்களை ஆழ்வாருடைய தமிழ் எளிமையாகவும், செவ்வையாகவும் தெரிவிக்கின்றது. உணர்ச்சிமிக்க நிலையில் தமிழ் அகப்பொருட்பாடல் முறையைக் கையாண்டு பக்தியின் உயர் முடிக்குச் செல்கின்றார் ஆழ்வார். அதில் தான் எத்தனை அவலம்-ஆற்றாமை-உணர்ச்சி வேகம்! தத்துவவாதியர் இவ்வகப் பொருளுக்கும் உள்ளுறையாகத் தத்துவப் பொருள் பொருத்தமாக அமைந்திருப்பதைச் சுட்டிக் காட்டுகின்றார். ஆழ்வாருடைய கவித்துவம் அத்தனை பொருளையும் அடக்கிநிற்பது விந்தையாகவே உள்ளது!

## வைணவ நெறிக்கும் அக இலக்கியத்திற்கும் உள்ள ஒற்றுமைகள்

### 1. பெண்ணிலை ஏறிட்டுக் கொள்ளல்

உலகத்துச் சமய நூல்கள் பலவற்றிலும் இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பு பற்றிப் பல பல கூறப்பெற்றுள்ளது. அதில் முக்கியமான ஒன்று தலைவன் தலைவி (நாயக நாயகீ) பாவமாகும். வைணம் இதனைப் பெரிதும் போற்றி உரைக்கின்றது. பரமாத்மா மட்டுமே புருடோத்தமன். அவன் முன்னிலையில் மற்ற அனைத்து ஆத்மாக்களும் பெண் நிலையினரே என்பது வைணவ சமயக் கருத்தாகலின் வைணவ பரமாசாரியரான ஆழ்வார்க்கு அகப்பொருட்டுறைகளை அமைத்துப் பாடுவது மிகவும் பொருத்தமாகப் போகின்றது. 'அகப்பொருள் நெறியில் மெய்யுணர்வுப் பாடல் பாடும் ஆற்றல்மிக்க ஒரு பக்தர் ஆணாயினும், பெண்ணாயினும் தன்னை அவர் இறைவனின் காதலியாகவே கருதிக்கொள்ளுதலைக் காணுகின்றோம். உண்மையாக இம்முறையின் தத்துவம் என்னவென்றால் இறைவன் ஒருவன் மட்டுமே ஆண்; மற்ற அனைவரும் ஆணாயினும் பெண் ஆயினும் எல்லா உயிர்களும் அவனது தேவியர்களே'[18]

உயிரும் இறைவனும் ஒன்று படுதலைச் 'சுத்த நீரும் சுத்தநீரும் கலந்தது போல' என்று வடமொழி வேதம் குறிக்கும்.[19] 'அன்பிற்குரிய மனைவியால் அணைக்கப்பட்டு எப்படி உள்ளும் புறமும் மறந்து இன்பப் பரவசராவரோ அப்படி' என்று ஆன்மக் கல்வியை உபநிடதம் அழகாகக் காட்டும்.[20] 'பக்தி நிலையில் தோய்ந்த பெரியார் பெண்ணியல்பைப் பெற்றாலன்றி இறைவன் திருவடி நிழலில் தங்க முடியாது'[21] என்று பகர்தலும் உண்டு. அம்முறைக்கேற்பவே ஆழ்வார் பெண் நிலையை அடைந்து தலைவியாகவும், தாயாகவும், தோழியாகவும் பேசும் பாசுரங்களைத் திருவாய்மொழி கொண்டிலங்குகின்றது. தலைவியாகவோ அல்லது தலைவனாகவோ நின்று பேசுவதாகப் பாடல் பாடியவர் உளர். ஆனால் தோழியாகவும், தாயாகவும் நின்று பேசுவதாக-இரண்டு வித நிலைமைகளை ஏற்றுக்கொள்ளும் முறை மிகச்சிலரிடத்து மட்டுமே காணப்பெறும் ஒரு சிறப்பு ஆகும். இவற்றின் தன்மை விளக்கங்களைப் பின்னர்த் தனித் தனியே ஆராயுங்கால் காண்போம்.

## இயற்கைப் புணர்ச்சி

அகப்பொருளில் ஐந்திணைக்கண் களவு, கற்பு என இருகை கோள் உள. களவியலில் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியற் கூட்டம் என நான்கு நிலைகள் படிப்படியாகக் கூறப்பெறும். இயற்கைப் புணர்ச்சி என்பது காமப்பருவம் எய்திய நங்கையும், நாயகனும் நல்லூழின் ஏவலால் ஒருவரை ஒருவர் கண்டபோது உள்ளம் ஒன்று படுதலாகும். பின் மெய்யுறு புணர்வும் நடக்கலாம். ஏராளமான இளைய ஆண்களும், பெண்களும் நாள்தோறும் சாலையிலும், சோலையிலும் ஒருவரையொருவர் காண்கின்றனரே; கண்டும், ஒருவன், யாரோ ஒருத்தி மேல் காதல் கொள்கின்றான்; ஒருத்தி எவனோ ஒருத்தன் பால் கண் சாய்க்கின்றாள். பலரை விலக்கி ஒருவரைத் தேர்ந்து விரும்பும் இச்சிறப்புப் பார்வைக்குக் காரணம் இதுவென உயிரியல் நூலும் சொல்ல முடிவதில்லை.[22] இது இயல்பாக ஊழின் ஆணையால் நடப்பதாகத் தொல்காப்பியர் பேசுவர்.[23] முதல்நாள் முதற்பார்வையிலோ, பின்னால் பல பார்வையிலோ, ஒரு பார்வையைக் காதலோடு பார்க்கச் செய்வதே விதியின் ஆணை என்று தெளிவிப்பர். உரையாசிரியர். இதுவே இயற்கைப் புணர்ச்சி எனப் பொதுவாகப் பெயர் பெறும்.

ஆழ்வார்க்கு இயல்பாகவே முதலிலேயே இறைவன் மதிநலம் அருளினான். தன்பால் ஞான வடிவான பக்தியை அருளினான். இறைவனுக்கு அடிமை செய்தொழுக வேண்டுமென்ற உளப்பாங்கை ஊட்டினான். இதற்கு என்ன காரணம் என்றால் ஒரு காரணமும் கூறமுடியாது. உலகத்துப்பலர் இருக்கவும் ஆழ்வாரை மட்டும் தேர்ந்து தன் அருளுக்கும் பக்திக்குமுரிய வராக்கியமைக்குக் காரணம் கூற முடியாது. அது ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டது என ஆசாரிய இருதயம் தெரிவிக்கும். 'பட்டத்துக்கு உரிய ஆனையும் அரசும் செய்யுமவை ஆராயாது'[24] என்று உதாரணமும் கூறப்பெறும். இயற்கைப் புணர்ச்சிக்குக் கூறப்பெறும் காரணமும் ஒத்ததுவே யன்றோ?

## பாங்கற் கூட்டம்

தன் தோழனான பாங்கனின் துணை பெற்றுத் தலைவன் தலைவியின் கூட்டம் பெறுவது பாங்கற் கூட்டம். பாங்கன் தலைவனை அடுத்து நெருங்கியிருப்பவன். பாங்கன் தலைவனது காமப்புதுமை

யைக் காதுகொடுத்துக் கேட்கும் செவியனுய், மேலும் சிறித இடை யூறும் செய்யாத தோழனுய்க்களவின் தொடக்கத்தே வந்து போய் விடுவான்.[25] இறைவன் உயிர்களைத் தனக்குரியனவாகப் பெறுதற் கேற்ற முயற்சியில் உதவுபவனுய் இறைவனுக்கு அணியனுய் இருக்கின்ற ஆசாரியன் நிலை ஓரளவு பாங்கன் நிலைக்கு ஒப்பாகலாம்.

### தோழியிற் கூட்டம்

தோழியிற் கூட்டம் என்பதே அகத்திணையில் பெரிதும் பாடப் பெறுகின்ற பகுதி. பாங்கி அல்லது தலைவியின் தோழியின்றிக் காதலர்களின் களவொழுக்கம் நீளாது என்பதும் ஐந்திணை இலக்கியப் படைப்புக்குத் தோழி என்னும் ஆள் இன்றியமையாதவள் என்பதும்[26] அறிதல் வேண்டும். வைணவச் சமய மரபில் உயிர் இறைவனைச் சென்று சேர வேண்டுமானல் பிராட்டியின் புருஷ காரம்-பரிந்துரை-இன்றியமையாதது என்பது கொள்கை. பிராட்டி இறைவனை அடுத்து இருப்பவள்; பாங்கி அவ்வாறு இருப்பவள் அல்லள். ஆயினும் செயல்முறை நோக்கும் போது ஒருவகையில் பாங்கியின் உதவியால் நடைபெறும் இக்கூட்டத்தைப் பிராட்டி ஆதரவால் நடைபெறும் கூட்டத்திற்கு ஒப்பாகக்கொள்ளலாம். ஆக இறைவனின் காரணமற்ற அருள் தன்மை, ஆசாரியனின் சேர்த்து வைக்கும் இயல்பு, பிராட்டியின் புருஷகாரம் செய்யும் தன்மை (பரிந்துரைக்கும் இயல்) ஆகிய வைணவ சமயம் சார்ந்த மூன்று முக்கிய செயல்கட்கும் அகப்பொருள் கூறும் மூவகைக் கூட்டங் கட்கும் ஒருசார் ஒற்றுமை அமைந்திருத்தல் நினைவு கூர்தற்பாற்று. தோழியின் செய்கையெல்லாம் 'வரைதல் வேட்கைப் பொருள்'[27] என்று தொல்காப்பியம் கூறும். அதே போன்று பிராட்டியும் ஆன் மாவின் குற்றங்களைப் பெரிதுபடுத்தக்கூடாது; குறை செய்யாதவர் யார் என்று எடுத்துக்கூறிக் கூட்டம் நிகழத் தன் கிருபையால் செயல் புரிவாள் என்பது உண்மையே யன்ரே.

### ஆழ்வார் பாடும் அகத்துறைகள்

நாம் திருவாய் மொழியில் முக்கியமாகக் காணும் அகத் துறைகள் (கிளவிகள்) வெறியாட்டு, மடலூர்தல், அலர் உரைத்தல் அறத்தொடு நிற்றல், பிரிவில் இரங்குதல், உருவெளிப்பாடு கண்டு புலம்பல், தூது அனுப்புதல், தன்னுட் கையா றெய்திடு கிளவி, காமம் மிக்க கழிபடர் கிளவி முதலியவை ஆம். திருமங்கை மன்னன் உடன்போக்கு பற்றியும் பாடுவர். நம்மாழ்வார் பாடலில்

தலைவன் இருப்பிடம் நோக்கித் தலைவி படிகடந்து போகும் மிக்க காமத்து மிடல் அமைந்திருப்பதையும் காண்கின்றோம். இது பெருந் திணையின்பாற்படும். இதுவும் அகத்திணையின் ஒரு பிரிவு ஆயினமையின் சமயப் பாடல்களில் கடியப் பெறவில்லை. அதற்கு மாறாக மடலேற்றமும், மிக்ககாமத்து மிடலும் (மிக்க காமத்தில் செய்யும் துணிந்த செயல் அவனை நோக்கிச் செல்லுதல்) சமய இலக்கியத்தில் சிறப்பிடம் பெறுதலைக் காண்கின்றோம். இதற்குக்காரணம் இங்குவரும் தலைவனின் உயர்வற உயர் நலமுடைய ஒப்பற்ற தன்மையும் பேரழகும் படுத்தும் பாடு என்பர் அறிஞர்.

## பெண் பேச்சு என்பதன் பொருள் விளக்கம்

ஆழ்வார் பெண்நிலையினராக ஆதலை மிகப் பொருத்தமான முறையில் ஆசாரிய இருதயம் அமைத்துக் காட்டும்.[28] ஒரு பெண்ணிற்குத் தாய் தந்தை இருப்பது போன்று இப் புதுப் பெண்ணிற்குத் திருமந்திரம் ஆகிய கல்வி தாய் என்றும், ஆசாரியன் தந்தை என்றும் கொள்ள வேண்டும். திரு மந்திரமாகிற மங்களசூத்திரம் பெற்று ஒருவர் அழகிய மணவாளர்க்கு உரியவர் ஆகிறார். ஒரு சீவாத்மா பரமபதத்திற்குப் போகும் முறையாகச் சொல்லப் பெற்ற யாவும் ஒரு புது மணப்பெண் தன் நாயகன் வீட்டிற்குப் போவதற்குரிய செயல்கள் போல உள்ளன. பரமபதம் சென்று பரமபத நாதனை அனுபவிக்கின்ற முறையும் ஒரு பெண் தன் நாயகனை அடைந்து கல்வி பெறும் தன்மையதாக இருக்கின்றது. எனவே ஆழ்வாரை ஒரு பெண் என்றும், அவர் பேச்சினைப் பெண் தன்மையோடு கூடின பேச்சு என்றும், அதுவே இயல்பானது என்றும் அறிதல் வேண்டும். பெண்களிற் சிறந்த பிராட்டிக்கும் ஆழ்வார்க்கும் ஆறு வகை ஒப்புமைகள் உள. அவை யாவன: அவன் ஒருவனுக்கே அடிமைப்பட்டிருத்தல், அவன் ஒருவனையே புகலாக நம்பி இருத்தல், அவன் ஒருவனுக்கே இனியளாக இருத்தல், சேர்க்கையில் தரித்திருத்தல், பிரிவில் ஆற்றாமை, அவன் ஒருவனாலேயே காப்பாற்றப் படுதல் என்பனவாம்.[29]

இவ்வாறு ஒரு பெண்ணாக மட்டுமல்லாமல் தாய், தோழி, தலைவி ஆகிய மூவகை நிலையினை ஆழ்வார் அடைந்து பேசுதலை நாம் திருவாய் மொழியிற் காணுகின்றோம். தலைவி பாசுரங்களாகப் பதினேழு பதிகங்களும், தாய் பாசுரங்களாக ஏழு பதிகங்களும், தோழி பாசுரங்களாக மூன்று பதிகங்களும் உள்ளன. இவை தம்முள் வேறுபாடு எவை என அறிய வேண்டியுள்ளது. பெண்

நிலையில் உண்டாகின்ற மூன்று வகையான அறிவு நிலைகளுக்குத் தான் அப்படி மூன்று பெயர்கள் தரப்பெறுகின்றன[30] பக்தி நிலையில் உள்ள போது இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் உள்ள சம்பந்த ஞானத்தை உணர்ந்த நிலை தோழி எனப் பெறும். ஏனெனில் சம்பந்த ஞானம்—அவன் ஒருவனுக்கே அடிமை என்னும், அறிவு—ஆன்மா இறைவனோடு சேர்வதற்குக் காரண மானது. அது போன்றே தோழிதான் தலைவன் தலைவியை இணைக்கிச் சேர்க்குமவள். இவ் வொப்புமை குறித்தே அந்த உருவகம் எழுந்தது. அடுத்தபடியாக 'உபாயத்தில் துணிவு' ஆகிய நிலை தாய் எனப்பெறும். தலைவியானவள் மிக்க பெருங் காதலாலே தலைவனிருக்குமிடம் நாடிப் போக வேண்டுமென்று பதறுகிற அளவில் அவன் வரப் பார்த்திருக்க வேண்டுமே யன்றிப் படிகடந்து போதல் குலமரியாதைக்கு உரியது அன்று என்று கூறி உபாயமாகிய அவனே வரல் வேண்டுமென்று துணிந்து கூறுபவள் தாய். இவ்வாறு இறைவனே உபாயம் என்ற உறுதியில் பேசும் நிலை தாய் என உருவகிக்கப் பெறுகின்றது. இறைவனின்—தலைவனின்—ஒப்புயர்வற்ற உயர்வினை மனத்திற் கொண்டு அவனை நுகர்தற்கு இடையில் உண்டாகும் கால தாமதத்திற்கு ஆற்ருது. 'அவனே உபாயம்' என்ற உறுதியையும் மீறி அவனைக் கிட்டி அனுபவித்தல்லாது தரிக்காத பலத்திலே பதற்றமாகிற நிலைக்கு மகள்—தலைவி—என்ற பெயர்கள் இடப்பெறுகின்றன. இந்த மூன்று வித நிலைகள் ஆழ்வார்க்கு என்றும் எக்காலத்தும் உள. மூன்று வேறு பட்ட நிலைகளே அன்றித் தனிப்பட்டவர் மூவர் இலர். இந்த மூவகையினர் பேச்சிலும் வரும் பல சொற்கள் வேறு உள்ளுறைப் பொருள் கொண்டவை. (Symbolical) முலைகள்—பக்தி, இடை—வைராக்கியம், கண்,—ஞானம். அளகபாரம்—அறிவு மலர்ச்சி எனவும், இன்னும் மற்ற வகையாகவும் கொள்ளல் உண்டு. அவற்றின் விரிவை ஆசாரிய இருதத்தில் காணலாம்.[31]

பெண் பேச்சாக அமைந்த இருபத்தேழு திருவாய் மொழிகளில் அகப்பொருள் துறைகளுக்கு ஒப்பனவாக உள்ளவை எந்த அளவில் ஒக்கின்றன; எந்த அளவில் வேறு படுகின்றன. அவற்றின் திறன் யாது என்பனவற்றை விளக்கமாகக் காண்போம்.

### (ஆ) தலைவி பேச்சு

தலைவி பேச்சாக உள்ளவற்றில் நான்கு திருவாய் மொழிகள் தூதாக அமைகின்றன. திருவாய் மொழியில் முதன் முதலில்

பெண்ணின் தன்மை அடைந்து பேசுகின்ற பதிகம் அஞ்சிறைய மடநாராய், (1-4) என வரும் நாரை முதலியவற்றைத் தூதாக அனுப்பும் பாசுரமே யாகும்.

## தூது

அகப் பொருளிலக்கணத்தில் களவிலும் கற்பிலும் தலைவி பேச்சு நிகழுமிடங்கள் என்று தொல்காப்பியம் இரு பெரிய சூத்திரங்களையும் அதன் புற நடைகளையும் தருகின்றது. அவற்றில் ஆற்றாமையால் தூது விடும் போது தலைவி பேச்சு நிகழும் என்று தெளிவுற இல்லை. எனினும் வீட்டில் அடைக்கப்பட்டுக் காப்பு மிகுதியான காரணத்தினாலே உணர்வு அழிந்தவழி தோழியிடம் தன் மறை ஒழுக்கினைக் கூறுவாள் என வரும் பிரிவில்[32] காப்புச் சிறைமிக்க கையறு கிளவி என்ற ஒரு துறைக்கண்ணும் 'பின்னும் களவியலிலும் கற்பியலிலும் 'பிற' என்ற குறிப்பின் கீழும் புட்களை நோக்கிப் பேசுதல் முதலியன உரையாசிரியர்களால் அடக்கப் பெறுகின்றன[33]. பாட்டும் தொகையும் ஆகிய இரண்டிலும் அகத் தலைவி தூதுவிட்டதாகப் பாடல்கள் பல இல்லை. ஒன்றிரண்டு பாடல்களில் மட்டும் அக் குறிப்பு உள்ளன.[34] உதாரணம் கிட்டாமையின் நச்சினார்க்கினியரும் கற்பியல் தலைவி தூது விட்டது வந்துழிக் காண்க என்று கூறிச் சென்றார். ஆனால் ஆழ்வார் பாடல்களில் இந்த ஒரு துறை மற்றவற்றினும் மிகுதியான அளவில் பயின்றுவந்துள்ளது. பிற்கால இலக்கியங்களிலும் பிரபந்தங்களிலும் இதன் பெருக்கத்தை மிகுதியும் காணலாம்.

ஆற்றாமை மிகும் பொழுது அதற்கு ஏதேனும் ஒரு போக்கு வீடு இன்றெனின் உள்ளம் வெடித்துவிடும் நிலை ஏற்படும். ஆகவே தான் அருகேயுள்ள தாவரங்களோ பறவைகளோ இவற்றை நோக்கிப் பேசுவதாகவும், புலம்புவதாகவும் பாடல் இயற்றும் தன்மை காணுகின்றோம், இது மிக்க இயல்பான ஒன்றே. அக இலக்கியத்திலேயே நற்றிணைப் பாடல் (102) மிகப் பொருத்தமாக அமைந்துள்ளது. 'செவ்வாய்ப் பைங்கிளியே! நீ நன்கு உண்டு உன் குறை முடித்துக் கொண்டு என் குறை நீங்க ஒரு வார்த்தை சொல்ல வேண்டும். உன்னைக் கை தொழுது வேண்டுகின்றேன். நீ அவர்-நாட்டுள்ள உன் இணையிடம் செல்வையாயின் அம்மலை கிழவோனிடம் இம்மலைக் குறவர் மகள் மீண்டும் ஏனல் காத்தற்கு உரியவள் ஆயினாள் என்று சொல்' என்பதாக அப்பாடல் அமைகின்றது. ஆழ்வார் நாயகி நாரை, குயில் அன்னங்கள், மகன்றில்கள்,

சிறு குருகு, வரிவண்டு, இளங்கிளி, சிறு பூவை, பனிவாடை. நெஞ்சு ஆய இப்பத்துப் பொருள்களையும் நோக்கிப் பேசித் தூது போய் வருமாறு பணிக்கின்றாள். உண்மையில் அவை சென்று தம் காரியம் முடிக்கும் என்பது கருத்தல்ல. அப்படியாயின் முதலில் தூதுவிட்ட நாரை சென்று திரும்புமளவும் எதிர்நோக்கியன்றோ இருக்க வேண்டும் அஃதில்லை; ஆற்றாமை அதற்கு இடங்கொடாது பத்துப் பாடல்களும் (1-4)பத்து வேறு நிலைகளில் நின்று இன்பம் பயக்கின்றன. ஆண் நாரையைத் தூதுவிட எண்ணுமவர் முதலில் அதன் பெடையை விளித்துக் கூறுவதும், அவை விரைந்து செல்லுதற்கு அவற்றிற்குக் கருவியாக உள்ள சிறகுகளை வருணிப்பதும், செல்லும் இடத்தின் அடையாளத்தைத் தெளிவுற எடுத்துரைப்பதும், நான் காண அவாவும் பெருமானை முதலில் காணும் பேறு உனக்கு வாய்க்குமென்பது படமொழிவதும் நயமுடையன.

இனக்குயில்களை விளிக்கும் தலைவியின் பேச்சில், அவை சேர்ந்திருக்கின்றன; தன் தனிமையைப் போக்குவது அவற்றின் கடனன்றோ என்ற குறிப்புத் தோன்றுகின்றது. அவைகள் வேறு ஒன்றும் செய்ய வேண்டாவாம். இச்செய்தி சென்று சொன்னால் போதுமாம். பெட்டையோடு கூடியிருக்கும் அன்னங்களை விளித்துப் பேசுகையில் அவருடைய உலகறிந்த செயல் என்னை அவர்பால் ஈடுபடுத்துகின்றது. அவரிடத்தில் நீங்கள் சொல்ல வேண்டுவது இதுவே, 'ஒருத்தி தன் ஞானமெல்லாம் அடியோடு கலங்கியிருக்கிறாள்' என்று சொல்லுங்கள். அம்பு பட்டதொரு மான் என்றால் அம்பு எய்தவனுக்கு அது தெரியாதா என்ன? ஒன்றினை ஒன்று பிரியாத மகன்றில்களைப் பார்த்துப் பேசுகையில் முன் நடந்ததொரு நிகழ்ச்சியை மனத்துட் கொண்டு பேசுகின்றாள். முன்னர் நான் உடனிருந்த காலத்து ஒரு கணப்பொழுது பிரிய நேர்ந்த காலை நான் பசப்புற்றேன். அத்தகைய என் மென்மையைத் தான் கண்டிருந்தும் பிரிவு தகாது என்னாத அவர்க்கு நான் எதைச் சொல்லியனுப்புவது என்கின்றாள். (கண்டிரங்கி என்ற தொடரால் அவ்வளவு பொருளும் அமைக்கப் பெற்றுள்ளது).

இரைதேடும் சிறுகுருகே! நீ நீர் நிறைந்த படப்பையில் உள்ளாய். நானும் நீர் நிறைந்த கண்ணளாக உள்ளேன். எனக்காக ஒரு சொல் பேசக்கூடாது? அவர் உலகெல்லாம் காத்தளிப்

பவர். என்னைக் காத்தளிக்கலாகாதோ? இல்லையெனில் அவர் நாரணன் என்ற நிலையை இழப்பரே? அவரைக் கண்டால் இதைக் காத்துக் கொள்ளலாகாதா என்று கேளுங்கள். அழகான வண்டே! அவர் ஒரு நியாயமான உடன்பாட்டிற்கு வரலாமே? அருளாதவ ராகவே அவர் இருந்தாலும், என் ஆவி நீங்குவதற்கு முன் அருட் புள்ளேறி என்பால் வராவிட்டாலும், வீதி வழியே ஒருதரம் வரினும் போதுமானது என்று இதைச் சொல்லியருள் என்கிறார். அவர்க்கும் தாழ்வில்லை; நாங்களும் அவரைக் கண்டு பிழைப்பெய்துவோம். நான் வளர்த்த இளங்கிளியே! நான் வாடைக்காற்றால் மிக வருந்து கின்றேன். என் பிழையையே பார்த்து எனக்கு அருளாது இருக்கும் திருவினோடு இருக்கும் மாலார்க்குப் பெரியவராகிய தங்கள் தகுதிக்கு பெருந்தகைக்கு—பொறுமைக்கு—இவள் என்ன தப்புச் செய்து விட்டாள் என்று ஒரு வாய் பேசினால் என்ன தவறு நேர்ந்து விடும்? என்கிறாள். அவள்—திருமகள் அருகே இருக்கவுமா அவர் பிழை பொறுக்கத் தயங்குகின்றார்?

இவ்வளவுகூறியும் ஒரு பயனும் ஏற்படவில்லை. சிறுபூவையே! நீ சென்று நெடுமாலார்க்கு உரைக்காமையால்தான் அவர் வர வில்லை போலும் என நினைகையில் அது புறப்படுவதாகத் தோன் றிற்று. வேண்டாம். காலம் கடந்துவிட்டது. இனி அவர் வந்தும் செய்யக் கூடிய தொன்றுமில்லை. நான் தளர்ந்தேன்; நான் வளர்த்த நீ-என் பிள்ளையான நீ—இனி உன்னை வளர்ப்பாரைத் தேடிக் கொள். உணவு ஊட்டுவாரை நாடித் தேர்ந்துகொள் என்று உருக்கம் மிக உரைக்கப் பெற்றுள்ளது. உலகை உண்டாக்கி அதனைக் காப்பதற்காகக் கடலில் கண் வளர்கின்றவன், எம்மைப் படைத்ததன் பயன் நாங்கள் அவனை வழிபடலும் அவனுக்கு அடிமையாதலுமாம். மேன்மை பாராது வந்து கலந்தவன் எம் குறைகளையே நினைந்து பொறுப்பது தன் கடமை என்பதை மறந் தான். அவன் பொறுமையின் பெருமையை அவனுக்கு நினைவூட் டினால் அவன் உறுதியாக வருவான் என்று விபூகநிலைக்கு அனுபபப் பெறுவது இத்தூது. இங்குப் பறவைகளே பெரும்பாலும் தூதாக அமைகின்றன. இவை ஆசாரியர்களைக் குறிப்பதாகவும் கூறுப. பறவைகளின் பண்புகளைப் போன்ற நற்பண்புகளை உடையவராக ஆசாரியர்கள் இருத்தல் வேண்டுமென்ற கருத்தும பொதிந்துள்ள சிறப்பு வியக்கற்பாலது. அகப்பொருட் பாடல்களில் உணர்ச்சிச் சிறப்பும் உயர்ந்த தத்துவ மேன்மையும் இணைந்து விளங்கும் பாடல்கள் இவை.

## தூது 2

அடுத்தது 'வைகல் பூங்கழிவாய்' (6-1) என வரும் மற்ருெரு பதிகம். திருவண்வண்டூர்ச் செல்வத்திலே மூழ்கித் துன்புறுகின்றவர்களைக் காக்க அவதார மெடுத்தவன் அதனைச் சிறிது மறந்தான் போலும். காப்பதற்குரிய பொருள்களில் நானும் ஒருத்தி இங்கே இருக்கின்றேன் என்று அறிவித்தால் அவன் வருவான் என்று விபவத்திலே விடுகின்ற தூது இது (ஈடு இதனை அர்ச்சாவதாரத்தில் விடுவது என்னும்).

பிரிந்தார் இரங்குவது நெய்தல் நிலத்திலாகும். பிரிவால் ஏற்பட்ட இரக்கம் காரணமாகவே தூது அனுப்பவேண்டும். இங்கும் திருவண்வண்டூர் என்பது நெய்தல் நிலமேயாகும். நெய்த நிலத்தில் மேயும் குருகு, நாரை, அன்னம் முதலிய புள்ளினங்களைத்தான் இங்கும் தூது விடுகின்ருள். தன் காதன்மையையும் நைந்து உருகும் தன் திறத்தையும் கூற வேண்டுமென்பது அவளது வேண்டுதல். 'வந்து மேயும் குருகினங்காள், என்பதினுல் அவற்றிற்குத் தம்பால் உள்ள உறவுநெருக்கத்தைக்குறிப்பிடுகின்ருர். தூது செல்பவை அங்குச் சென்ருல் கைகூப்பிச் சொல்ல வேண்டுமென்று பல பாடலில் வேண்டுகின்ருர். இது ஊடற் கோபத்தினுல் பேசும் பேச்சாகலாம். பல பாடல்களில் கனிவாய்ப் பெருமான் என்றும், மற்றும் அவனது அவயவ அழகுகளையும் எடுத்துரைப்பது முன் இவளைக் கவர்ந்து ஆட்கொண்ட பொருள்களைச் சுட்டிச் சொல்லியதாகும். காதல் மென்பெடையோடு உடன் மேயும் கருநாராய்! என்று விளிப்பவள் உள்ளத்தில் தனக்கு அப்பேறு கிட்டாது தான் உடல் வெளுத்திருக்கின்ற தன்மை முந்தி நிற்கின்றது. 'மேல் கைகூப்பி' என்றவர் இங்குப் 'பாதம் கைதொழுது' என்கிருர். அவாவின் தன்மை தொழுது மட்டும் சென்றுவிடும் தன்மையது அன்று. காலில் விழுந்து வணங்கும் தன்மையது ஆம்.

அன்னங்களை அனுப்பும் பாசுரத்தில் 'ஒருத்தி உடல் நைந்து உருகும்' என்று உணர்த்துங்கள் என்கிருர். உள்ளத்தில் சிறிது வாட்டம் உண்டான அளவில் உடலில் வாட்டம் தோன்றுதற்கு முன் சென்று கைக்கொள்ளுகின்ருேம் என்று இருக்க வேண்டாமோ என்ற கருத்தினது. ஒருத்தி உருகும் என்ருல் ஒருவன்-அவன் உருகவில்லை என்பதாகின்றது. இதனை அவனுக்கு அறிவியுங்கள் என்கின்ருள். ஏனெனில் அறிவிப்பது அன்னத்தின்

பணியாகும் என்பது முன்னம் அன்னமாய் அருமறை அருளிய செயலாலும் அறியத்தக்கது. 'அடியேனுக்கும் போற்றுமினே' என்பது அழகாக அமைந்துள்ளது. அத்தேசம் அங்குச் சென்றவர் களையும் தம் காரியத்தையே கவனிக்கும்படி செய்து விடும். அவனைப் போலச் செய்யாதீர்கள்; என்னையும் நினைக்க வேண்டும் என்கிருள். மோட்சத்திற்குச் சென்றவர்கள் இவ்வுடலை நினைப்ப தில்லை யன்றோ? அப்படியிராது நீங்கள் என் காரியத்தை நினைக்க வேண்டுமென்று வேண்டுகின்ருள்.

பின்னர்ப் புன்னையின் மீதிருந்து சில குயில்களைப் பார்த்துப் போற்றி உரைத்து இரக்கின்ருள். அவன்பாலிருந்து இவள் துன்பம் தீர்வதொரு மாற்றம் கொண்டுவரவேண்டுமென்று அடுத்துக் கிளி அனுப்பப் பெறுகின்றது. செல்லும் வழி இனிமை நிறைந்திருக்கும்; அதனைக்கடந்து போதல் அரிதாகலாம். அல்லது அவனிடம் போனுல் அங்கே மிகப்பலர் நெருங்கியிருப்பதனுல் பிரம்படிகள் படுதலும் கூடும். இவற்றினுல் வரும் துன்பம் பார்க்காது போக வேண்டுமென்பாள். 'ஒரு வண்ணம சென்று' என்கிருள். ஏனெனில் பிறர்காரியம் செய்வார்க்கு-பரோபகாரச் சீலர்களுக்குத் தம் துன்பம், சுகம் இவற்றைப் பார்க்க இயலுமா? என்பது கருத்து. அவன் இருப்பிடத்தைக் குறிக்கும்போது 'செருவொண்பூம் பொழில் சூழ் செக்கர் வேலைத் திருவண்வண்டூர்' எனப் பெறு கின்றது. இதனுல் அவ்விடம் போகத்திற்குத் தகுதியான தேசம் என்று அகப்பொருள் நூலில் குறியிடம் கூறுவது போன்று அமைந் துள்ளமை காணலாம். அவன் அவயவ ஆபரண அழகுகளை எடுத்துக் கூறி அவற்றினைத் திருந்தக் காணும் பேறு தன்னிலும் அதற்குமுன்னே கிட்டுமென்பாள் போல் 'திருந்தக் கண்டே ஒன்று உரை' என்கின்ருள். ஒண்கிளியே ஒண் சிறுபூவாய் என்கின்றவள் கருத்து நீங்கள் உங்கள் தோற்றத்தால் பார்த்து மகிழும்படி அவனை ஒத்து விளங்குகின்றீர்கள்; என் கைப்புகுந்த உங்களையும் நான் இழக்கின்றேன் என்ற ஏக்கத்தோடு கூடிய விளியாகும். 'விடிவைச் சங்கொலிக்கும் திருவண்வண்டூர்' என்று பேசும்போது அங்கு விடிவு உண்டு; சங்கு ஒலிக்கின்றது. இங்குப்போல ஒரே நீளிர வாய் இல்லை. என்பது குறிப்பால் உணர்த்தப் பெறுகின்றது. சொல்லும் போது ஓலக்கத்திலன்றித் தனியிடத்திலே அவனும் அவளுமாயிருந்த இடத்திலே வேண்டுமென்கின்ருள். அப்பொழுது பயனுண்டாம் பிராட்டி பரிந்துரையால் என்பது நோக்கம்,

இறுதியாக வண்டினங்களை அனுப்பும் பாசுரம் தமிழ் அக நூல்களின் சிறந்த நுண்ணிய கருத்தொன்றினைத் தன்பால் கொண்டு விளங்குகின்றது. தூது செல்வதில் வண்டுகளுக்குத் தனிச் சிறப்புச் சில உள. அதனால் அவற்றைத் தனியாக அழைத்துச் சிலகூறி அனுப்புகின்றாள். அவற்றிற்குரிய சிறப்புக்கள். 1. ஆறுகால் உடைமை, 2. சபைக்குஅஞ்சாது மலர்மாலை மீதிருந்து வார்த்தை சொல்லும் வல்லமை,3. அவனுக்குத் தலையான எடுத்துக் காட்டாதல் (இந்த வண்டுகளை வைணவர்கட்கு உரிய மூன்று முக்கிய மந்திரங்களுள் ஒன்றான துவயத்திற்கு ஒப்பாக உரைப்பர்) அவன் வீரத்தினை வருணிக்கின்றவருடைய கருத்து, சொல்லுகிறார் தாழ்வே. பின் அவனுக்கு என்னை அடைவதில் எந்தத்தடையும் இல்லை என்பதாகும். பிரிவாற்றாமையிலும் மதித்துப் போற்றும் வீரம் அவனுடைய வீரம்என்பதனால் 'ஏறு சேவகனார்' என்கிறாள். நீங்கள் சொல்லவேண்டுவது ஒன்றே. 'என்னையும் உளன் என் மின்கள்' இன்னமும் நோவுபடுகின்றார் உண்டுஎன்று சொல்லுங்கள் என்பது ஒருபொருள். அவனைப் பிரிந்தவர் இல்லை என்று அவர் உள்ளார்; அப்படி அன்று; ஒருத்தி உள்ளாள் என்க என்பது. இதனினும் சிறந்த பொருள் எம்பெருமானார் எடுத்து விளக்குவது. தமிழ் அகப்பொருள் நூலிலே தலைவன் தலைவி இருவரிலே ஒருதலை உண்டானால் மற்றொரு தலை இல்லாது போகாது. இருதலையும் இருத்தல் வேண்டும். அல்லது இருதலையும் இல்லாது போதல் வேண்டும்.[35] ஆகையால் இறைவன் தாம் உளராகையாலே இத் தலையும் உண்டு என்று நிச்சயமாக அறிவர். அதனை அறிவிக்க வேண்டுவதின்று. பின்னர்ப் பகைவரை வேரோடு மாய்த்து அன் பர்க்கு முடிசூட்டிச் செய்ய வேண்டியதனைத்தும் செய்து முடித்து நிறைவுடையராய் அவர் உள்ளார். அன்னார்க்கு இன்னமும் அவரால் காக்கப்படவேண்டிய பொருள் ஒன்று உண்டு என்று அறிவியுங்கோள் என்பதே இங்கு அறிவிக்கப் பெறும் கருத்தாகும். இந்த நுட்பம் சால அழகிது.

## தூது 3

மூன்றாம் தூது, பொன்னுலகாளீரோ? (6-8) எனத் தொடங் கும் திருவாய் மொழி. இது பரத்துவம், அந்தர்யாமித்துவம், ஆகிய இரு நிலைகளிலுமுள்ள இறைவனை நோக்கி விடப் பெறும் தூதாக உள்ளது. பல பாடல்களில் 'வானவர் கோனைக் கண்டு' என வரு வதால் பரத்துவமும், மற்றும் 'எங்குச் சென்றாகிலும் கண்டு' என

வருதலால் அந்தர்யாமித்துவமாகிய பரத்துவமும் இதில் சேர்த்துக் கொள்ளப் பெற்றிருக்கின்றது. படைத்த உலகங்களைக் காப்பாற்று கின்ற பராக்காலே அடியார்களோடு தனக்குண்டான இன்பத்தை மறந்தான்; அதனால் தன்னை நினையாதிருந்தான். அடியார்களோடு அவனுக்கு இருக்கின்ற ஒத்த இன்பத்தை-சீவாத்மா அனுபவிக் கின்ற இன்பத்தையே பரமாத்மாவும், தனக்கு இன்பமாகக் கொள்ளுகின்றான் என்பதை அறிவிக்க, அவன் வருவான் என்று எண்ணித் தூது விடுகின்றாள். அல்லது உயிர்கள் மாட்டு அருளு டைமை பற்றாகத் தூது விடுகின்றாள் என்பதும் உண்டு.

தூது செல்லும் புள்ளினங்கட்குச் சிறந்த வொன்றைப் பரி சாகக் கொடுத்தலை இங்கே காணுகின்றோம். முதல் தொடக்கமே அது தான். இவ்வுலகத்தினும் பொன்னுலகு அவட்கு அணிமையாக இருக்கின்றமையால் அதனை அளிக்க முற்படுகின்றாள். முதலி லேயே. காதலனைப் பிரிந்து சேர்ப்பாரைத் தேடித் திரிகின்ற இவள், சேர்ப்பிப்பார்க்கும் இரண்டு உலகங்களையும் கொடுக் கின்றாள். இது எவ்வாறு கூடும்? அவனை நினைத்திருக்கின்ற பெரு மையால் அவ்வாறு செய்கின்றாள். கலந்த போது தன்னையும் தன் உடைமையையும் இவளுக்கு ஆக்கியவன் அவன். இப்போது பிரிந்த புன்மை உடையவனாக இருக்கின்றான் என்று நினைக் கின்றாள். உலகங்களைக் கொடுத்ததாகவே கூறி விடுகின்ற அவள் அவற்றின் காலில் விழுவான் ஏன்? அடியார் பக்கலிலே சரணம் புகுகின்றாள். அது தப்பாது என்பதனால். நன்நலப் புள்ளினங்காள்! என வரி அமைகின்றது. இதில் 'நலம்' என்பதனால் சரணாகதி அடைதற்குரிய குணங்களையும், 'புள்' என்பதனால் இருசிறகுகளாய ஞான அநுட்டானங்களையும் 'இனம்' என்பதனால் புருஷகாரத்தை யும் உடைமை குறிக்கப் பெற்றிருத்தல் காணலாம். அவன் முகில் வண்ணன்—கொடுக்கும் நீர்மை உடையவன். ஆனால் நான் அம்மேகம் பெய்யுமிட மாகாமல் முகக்கு மிடமானேன் என்பாள் 'என் நலம் கொண்ட முகில் வண்ணன்' என்றாள். அவைகளுக்குப் பொன்னுலகு அளிப்பது தன் காரியம் செய்தமைக்குக் கைக் கூலியோ என்றால் இல்லை. என் நிலைமை உரைப்பதன் மூலம் அவனோடு என்னைச் சேர்த்தால் பின் நீங்கள் துயரவொலி கேளாமல் வாழலாம்; உங்களால் பெண் கொலையைப் பார்த்துக் கொண்டு துயர ஒலியைக் கேட்டுக் கொண்டு-ஆளமுடியாது என்று இருக்கின்றாள் இத்தலைவி,

முதல் பாசுரத்திலேயே இரு உலகுகளையும் கொடுத்தாய் விட்டது. இனி அதற்கு மேல் கொடுப்பதற்கு என்ன உள்ளது? சில கிளிகளைத் தூது அனுப்பி அவை காரியம் முடித்து வந்தால் முன்னதினும் சிறப்பாகத் "தங்கள் கைகளில் வந்து தங்கி நெய்யடிசில் பாலோடுண்டு பாராட்டுப் பெறுக; என்கின்றாள். அவனாலே விரும்பப்படும் தன்னைக் கொடுக்கை மேலன்றோ. கிளிகள் விரைந்து ஓடி வர வேண்டுமாம்; ஏனெனில் பகவானை அடைந்த பின் ஆசாரியனுக்கு (கிளிகள்-ஆசாரியர்கள்) அடிமை செய்ய முடியாதாகையால் உங்களுக்கு நான் அடிமை செய்யுமாறு நீங்கள் முன்னே ஓடி வர வேண்டும் என்கிறாள். மூன்றாவது பாடலில் தூது போய் வருபவர்க்குத் தருகின்ற பரிசில் தலையான பரிசில். அதாவது தன் தலை மீது உள்ள, இப்போது சருகாய் உள்ள மலர்கள். அவை வந்த செய்தி சொன்ன பின் செவ்வி பெறும். அவற்றின் தேன் வண்டுகளுக்கே என்கின்றாள். அவன் 'தூவியம் புள்ளுடைத் தெய்வ வண்டு! அவனும் நீங்களும் ஒரு காலத்திலே உண்ணும் பேறு உங்கட்குத் தருகின்றேன்' என்கின்றாளாம். தும்பிகளை அனுப்பி வானவர் கோனைக் கண்டு 'உமக்கு இதுவோ தக்கது' என்று கேளுங்கள் என்கிறாள். 'பெண் கொலை புரிந்து மாலையிட்டுக் கொண்டு ஓலக்கமாக இருப்பதோ அருள்' என்பது பொருள்.

பின்னர் மீண்டும் தான் வளர்த்த சிறு பூவைகளை அனுப்புகின்றாள். அதில் என் மார்பன், எம் பெருமான், என் கண்ணன் என்று சொல்வதால் ஒப்பனை அழகிலும், வடிவழகிலும், எளிமைத் தன்மையிலும் தனித்தனி ஈடுபட்டுப் பேசுகின்றாள் என்பது தெளிவு. 'தன் கழல் மேல் தண் துழாய் நமக்கன்றி நல்கான்' என்று எடுததுரைப்பதன் மூலம் அவன் தன் திருமேனியைப் பிறர்க்கு ஆக்கான்; அடியார்கட்கே உரியதாக்குவான் என்ற தூது விடுதற்குத் தனக்குக் காரணமான பண்பினை வெளியிடக் காண்கினறோம. 'நான் கறபியா வைத்த மாற்றம் சொல்லிச் சென்மின்கள்' எனகிறாள். ஆம். அங்குப் போய் அவன் அழகினைக் கண்டால் நீங்கள் பேச வேண்டுவதை மறந்து நின்றாலும் நின்று விடுவீர்கள்; உங்கள் வாய் எழாது போய் விடலாம்; ஆகவே என் சொல்லைச் சொல்லிக் கொண்டே செல்லுங்கள் என்கிறாள். தான் வளர்த்தவற்றை அனுப்பி—தன் வயிற்றிற் பிறந்தாரை அனுப்பிக் காதலனை அழைத்துக் கொள்ளும் புன்மை நேர்ந்ததே என்று வருந்தித் தன் நிலைக்கு இரங்கித் தன்னைத் 'தீவினையேன்' என்று சொல்லிக் கொள்கின்றாள்.

இதற்கு அடுத்த நிலையில் உயிரற்ற பாவைகளை இரக்கின்றாள். தன்னைப் பரம சேதனன் (அறிவு வடிவினன்) விட்டுப் போய் விட்டான்; சிறிது அறிவுள்ள பறவைகள் பறப்பனவாகவும் வேறு நோக்குள்ளனவாகவும் உள்ளன: இதற்குக் காரணம் அறிவு உள்ளமைதானே என்று எண்ணி அறியாத பாவையைப் பார்த்து இரக்கின்றாள். அறிவற்ற—உயிரற்ற பொருளும் எழுந்திருந்து உதவ வேண்டும் படியான நிலை இத்தலைவியின் நிலை.

அருகே நின்ற குற்றமற்ற சிறகுகளை உடைய வெள்ளைக் குருகை நோக்கி இன்னும் சில காலம் கழிந்த பின் அறிவிக்கின்றோம் என்ற அளவில் இருந்ததோ என்னிலை? தன் பசலை நிறத்தைக் காட்டி இன்னும் எத்தனை காலம் இந்நிலை? என்று கேட்கின்றாள். மற்றும் புதாக்களையும் (பெருநாரை) அன்னங்களையும் பார்த்து அவன் வராவிடினும் அவனிடமிருந்து ஒரு மறு மாற்றம் கொண்டு வந்து சொல்லியருளுங்கள் என வேண்டுகின்றாள். இது உண்மையான காதலின் நிலை. அகப் பாடல்களில் அதனைக் காண லாம். நசைஇயார் நல்காரெனினும் அவர் மாட்டு, இசையும் இனிய செவிக்கு (1199)என்ற குறள் இக்கருத்தினது.

## தூது 4

நான்காவது தூது 'எம் கானலங்கழிவாய்' (9-7) என வரும் திருவாய் மொழியில் அமைகின்றது. திருமூழிக்களம் ஆகிய மலை நாட்டுத் திவ்விய தேசத்து எம் பெருமானின் அழகினைப் பேசிப் பல புள்ளினங்களையும் அவன் பால் தூது அனுப்புகின்றார். 'திரு மூழிக் களத்துறையும் ஒண் சுடரை' நோக்கிக் கிளிமொழியாள் அலற்றிய சொல்' (9-7-11)இது என்பது ஆழ்வார் பாசுரம். தனக்கு நல்லவர்களாக இருக்கின்றவரை விடமாட்டாதவன் ஆகையாலே அவன் தன்பால் வரவில்லை; அவனுடைய அழகு, குணங்கள் இவை செய்யும் தொல்லையை அவன் அறியவில்லை; அவற்றின் தன்மையை எடுத்துக் கூறி அத்தகையவனைப் பிரிந்து தரிக்க இயலுமா என்று அறிவித்தால் அவன் வருவான் என்று எண்ணிப் பறவைகளைக் குறித்து இரந்து தூது அனுப்புகின்றாள் ஒரு பிராட்டி யாகக் காண்கிறோம் ஆழ்வாரை இங்கு. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து பிரிந்த நிலையில் தலைவனின் வடிவழகிலே ஈடுபட்டுத் துன்பம் மிக்கவளாய் ஆற்றாமைமிக்கு உவவனம் சென்று அங்குள்ள பறவைகளைக் கண்டு தூது அனுப்புவதாகக் கோடல்

தகும். இத்தூதுக்குப் பொருளாக அமைவது அர்ச்சாவதாரம். தூது அனுப்பப்படும் இடமும் நெய்தல் நிலமே. முன் போலவே நாரை வண்டினங்கள் முதலியனவன்றிப் புதிதாக முகில்களையும் தூது விடுதலை இங்குப் பார்க்கின்றோம்.

மடநாரை தூதாகச் சென்று திரும்பி வந்து அது தன் இனத்தோடு தன் தலையில் கால்களை வைக்க வேண்டுமென வேண்டுகின்றாள். உதவி செய்த உங்களுடைய கால்களை அதனால் உய்வு பெற்ற என் தலை ஏற்கும் என்கின்றாள். தூது ஆசாரியனாகையால் ஆசாரியனிடம் நடந்து கொள்ள வேண்டியமுறை இங்குச் சுட்டப் பெற்றதாகக் கொள்ளல் தகும். 'செங்கமலத்து அலர் போலும் கண் கை கால் செங்கனிவாய் அக்கமலத்து இலை போலும் திருமேனி அடிகள்' எனத் தலைவன்—இறைவன் வருணிக்கப் பெறுகின்றான். முதல் உறவு செய்யும் கண், அந்நோக்குத் தோற்றாரை அணைக்கும் கை, ஊற்று இன்பத்திற்குத் தோற்றார் விழும் அடிகள், திருவடிகளில் விழுந்தாரை நல்வார்த்தை சொல்லித்தரிப்பிக்கும் முறுவல் என்று வருணனை நிரல்பட அமைத்துள்ளமை தலைவி ஈடுபட்ட தன்மையைக் காட்டுமன்றோ? மேகங்களைப் பார்த்துப் பேசும் போது திருமேனியை அவளுக்குத் தந்தருள்வீர் என்று நீங்கள் சென்று சொன்னால் அவன் உடலின் ஒளி போன்றுள்ள உங்கள் உடலின் ஒளியைப் போக்கி உங்களையும் தெளிந்த ஆகாசத்தினின்றும் நீக்கித் தண்டிப்பானோ என்று பேசுவது மிகவும் இயல்பாக அமைந்துள்ளது.

தூமொழிவாய் வண்டினங்காள்! என விளிக்கும் தலைவியினுடைய எண்ணம் அவன் விரும்பானாகிலும் உங்கள் பேச்சு இனிமையாலே வரவேண்டும்படியான பேச்சு உங்களுடையது; 'செப்புதிரேல் சுடர் வளையும் கலையும் செப்புமின்' என்பது என்னுடைய அழகிய வளையும் கலையும் சீர்கேடு அடைந்தபடியைச் சொல்லுங்கள் என்ற பொருளதாகும். அகப்பாடல்களில் பிரிவில் வளை கழலுதலும் கலைசீர்கேடடைதலும் பெரிதும் பேசப்படுவது யாவருமறிந்ததே. 'குருகினங்காள்' தூய்மாற்றம் என்று பணியீர் என்பதனால் இறக்கும் பெண்ணைப் பிழைக்க வைக்கும் பேச்சு ஆகையால் தூய்மாற்றம் ஆகின்றது. ஒருதரம் சொன்னால் போதும்; இரண்டாம் நாள் சொல்லுமது பழி. பகவானோடு சேர்க்கின்றவரை—உதவி புரிபவரை—யாரேயானாலும் மதிப்போடு பேச வேண்டுமென்பதனால் 'பணியீர்' என்கின்றாள்.

இளம் குருகையும், அன்னங்களையும் விளித்து அவர்பால் தாம் தம்மைக் கொண்டு அகல்தல்—என்னைக் கொண்டு அகலும தொழியத் தம்மை மட்டும் கொண்டு அகலுதல்—தகவன்று—காதலுக்கும் மென்மைத்தன்மைக்கும் சேராது என்பது மாத்திர மன்றி அது அருளற்ற செயல் என்று சொல்லுக என்கிருள். எனவே இவள் முடிவதற்கு முன் அவனுக்கு நிலையை அறிவிக்க வேண்டுமென வேண்டுகின்ருள். இவ்வாறு அவன் வருகை தவிர்ந்தால் நடப்பது தன் அழிவே என்று தலைவி தூதுமூலம் சொல்லி முடித்தாள். இதனினும் மிக்க ஆற்ருமை யாதுளது?

### மிக்க ஆற்ருமை

தன்னுட்கையாறெய்திடு கிளவி—காமம் மிக்க கழிபடர் கிளவி—என்ற கிளவித்துறைகள் மிக்க ஆற்ருமையைக் காட்டுவனவாம். மேல் தூது விட்ட பாசுரங்களில் தலைவி ஆற்ருமை மிகுதியால் வேறு பிற பொருள்களுடன் பேசி ஒருவாறு ஆறினுள். ஆனுல் இங்கு—'வாயும் திரைஉகளும்' (2-1) என்ற இத்திருவாய்மொழி யில் முன்னிலையிலும் தலைவியின் ஆற்ருமை மிகுதியாகும். முன்னர்த் தூது விடுதற்குத் தரிப்பு உண்டாயிற்று. இங்குத் தூது விடத்தக்க பொருள்களும் நோவு படுகின்றனவாக எண்ணி அவற்றுக்குமாகத் தாம் நோவுபடுவதைக் காண்கின்ருேம். 'ஆரா காதல் சடகோபர்' ஆகையால் நாரை, அன்றில், கடல், காற்று, முகில், முழுமதி, இருள், கழி, விளக்கு ஆகிய இவ்வெல் லாப் பொருள்களும் இறைவன் பிரிவினால் தம்மைப் போல் வருந்துகின்றன என்று மயங்கி, மனவருத்தம் உடையவர்கள் தம்மைப் போல் வருத்தமுடையவர்களைக் கண்டால் அவர் கழுத்தினைக் கட்டிக் கொண்டு தம் குறையைச் சொல்லி ஆற்ரு மைக்குப் போக்கு வீடு காண்பது போல ஆழ்வாராகிய தலைவியும் இப்பொருள்களைக் கிட்டி 'நீங்கள் படும் துன்பமும் நான் படுவது போன்றதோ?' என்று புலம்புகின்ருள் இதில்.

நாரை ஆயும் (தன்தாயும்) அமருலகும் துஞ்சினும் துஞ்சாது இருக்கின்றது; அன்றில் சேட்பட்டயாமங்கள்—நீண்ட சாமங்கள்—படுக்கையில் சேராது வருந்துகின்றது; கனைகடல் இராப் பகல் முற்றக் கண்துயிலாது நெஞ்சுருகி ஏங்குகின்றது; வாடைக்காற்று கடலும், மலையும், விசும்பும் சுற்றியலைந்து (பாற்கடலும், வேங்கட மலையும், பரமபதமும் தான் நாடுவது போல) இராப்பகல் துஞ்சாது

பல ஊழிக்காலம் நோயடைந்திருக்கின்றது; உலகுக்கு உதவுகின்ற நீராய் நெகிழ்கின்ற மேகமும் நைகின்றது; நாள்மதியும் இருளகற்றுது மயங்கிக் குறைந்து தேய்கின்றது; இருளும் வேருேர் வகையில் கொடிதாய்—அதாவது தன் ஆற்ருமைக்குப் போக்கு விட்டுத் தரிக்க ஒட்டாது வந்து நலிகின்றது; கழியும் மிக்க மயக்கம் கொண்டு இரவும் பகலும் முடிந்தாலும் தான் தூங்காமல் அலருகின்றது; விளக்கும் உடம்பில் கை வைக்க ஒண்ணுதபடி பிரிவுத் துயரால் எரிகின்றது; என்று இப்படிப் பல பொருள்களும் நாராயணன் பிரிவாலேயே துன்புறுவதாக நயம்படப் பாடும் பகுதி வேறு எங்கும் காண முடியாத அருமையும் நயமும் உடையது. (இதன் நயம் வேறு இடத்தில் தெளிவுற விளக்கப் பெற்றிருக்கின்றது.)

## அடிக்குறிப்புகள்

1. அண்ணுமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறைத் தொடக்க விழா (ஆங்கில) உரை—சுனிதிகுமார் சட்டர்ஜி, அண்ணுமலை நகர் 1957
2. தமிழ்க்காதல்—மாணிக்கம்—டாக்டர் வ.சுப. 1962, பக் 115
3. திருவள்ளுவர் நூல்நயம்—சேதுப்பிள்ளை ரா. பி. பக். 86
   தமிழ் இலக்கியமும் வரலாறும்—ஆய்வு—தீட்சிதர் வி ஆர். ஆர்., ப. 2/5
4. 'தமிழ்க் காதல்'—மாணிக்கம். டாக்டர் வ.சுப. பக். 455
5. ,, ,, ,, பக். 455
6. ,, ,, ,, பக். 7
   தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி-இராகவையங்கார் மு., ப. 7
7. திருவாய்மொழி—நம்மாழ்வார்— (10-10-11)
8. தமிழ்க் காதல்—மாணிக்கம். டாக்டர் வ. சுப., ப- 320
9. இலக்கியக்கலை—ஞானசம்பந்தம் அ.ச, 1956, ப. 209
10. ,, ,, ப. 219
11. தமிழ்க் காதல்—மாணிக்கம். டாக்டர் வ.சு.ப. ப. 46

12. இறையனார் களவியல்—நக்கீரர் உரை (தெ. சை. சி. கழகம் வெளியீடு) பக். 35
13. தமிழ்க் காதல்—மாணிக்கம் டாக்டர் வ. சுப., பக். 98
14. ,, ,, பக். 461
15. ,, ,, பக். 191
16. அகப்பொருளும் அருளிச் செயலும்—அண்ணங்கராச்சாரிய சுவாமிகள்—முன்னுரை பக். 1.
17. ஆசாரிய இருதயம்-அழகிய மணவாள நாயனார் சூ. 118
18. இந்திய முனிவர்கள் (ஆங்கிலம்)-மகாதேவன் டி.எம்.பி. ப. 49 1961
19. அகப்பொருளும் அருளிச்செயலும் — கோபாலாச்சார் முன்னுரை—பக். 4
20 ,, ,, பக். 9
21. திருமால் அருள்வேட்டல்-கலியாணசுந்தரமுதலியார் திரு. வி.,
22. தமிழ்க் காதல்-மாணிக்கம் டாக்டர் வ. சுப., பக். 42
23. தொல்காப்பியம் மூலம்—புன்னைவனநாத முதலியார் பதிப்பு, 1922— சூ. 1045
24. ஆசாரிய இருதயம் சூ. 106
25. தமிழ்க் காதல்—மாணிக்கம் டாக்டர் வ. சுப., ப. 54
26. ,, ,, ப. 56
27. தொல்காப்பியமூலம்—புன்னைவனநாத முதலியார் பதிப்பு, 1922—சூ. 1155
28. ஆசாரிய இருதயம் சூ. 121
29. ,, சூ. 116
30. ,, சூ. 133
31. ,, சூ. 137-150
32. தொல்காப்பியம் களவியல் — நச்சினார்க்கினியர் உரை— சூ. 111 வரி 12.
33. கடல், கானல், விலங்கு, மரன், புள், நெஞ்சு இன்னபிற வற்றைச்சொல்லுநபோலவும் கேட்குநபோலவும் அழைத்தல் உண்டு என்பர் தொல்காப்பியர்.
34. சென்னைப் பல்கலைக் கழகத்து ஆய்வுமலர், 1971—வரதராசன், டாக்டர் மு. கட்டுரை
35. பார்க்க. கலித்தொகை—நெய்தல் 26; சிந்தாமணி பா-1631

# அகப்பொருள் நெறி பகுதி II

மூவர் பேச்சில் அமைந்த களவித்துறைகள் விளக்கம்

## (அ) தலைவி பேச்சு

### மடல் ஊர்தல் அல்லது ஏறுதல் (5-3)

தொல்காப்பிய அக இலக்கணம் 'மடல்மா கூறுத'லை பற்றியும்,[1] 'மடன்மா ஏறுதலைப் பற்றியும் குறிக்கும்.[2] கூறுதல் ஐந்திணைக் கண்ணும் 'ஏறுதல்' பெருந்திணைக் கண்ணும் அடங்கும். மற்ற அது பற்றிய விளக்கங்களை நாம் ஒருசில சங்கப் பாடல் கொண்டு தான் தெரிந்துகொள்ள வேண்டியுளது. 'மடல்மா' என்பது பனங்கருக்கால் செய்த குதிரை. அதற்கு ஆவிரம்பூ மாலையும், மணியும் அணிதல் உண்டு. மடல்மா ஏறுபவன் எலும்பு மாலையும், எருக்கம் கண்ணியும் அணிந்து கொண்டு அதன்மேல் ஏறி வருவான். உளம் ஒன்றுபட்ட காதலர் இடையே தான் இம்'மடன்மா கூறும்' அல்லது 'ஏறும்' வழக்கு உண்டு. பிற ஏதேனும் காரணத்தால் கூட்டத்திற்கு மணத் திற்குத் தடை ஏற்பட்டபோது ஆற்றாமை மிகுதியான நிலையில் தலைவன் 'மடல்மா கூறுதல்' உண்டென அறிகின்றோம். அது அவனுடைய திட்பத்தைப் பிறர்க்கு அறிவுறுத்த ஒரு வழி. திருவள்ளுவர் 'கடலன்ன காம முழந்தும் மடலேறாப் பெண்ணின் பெருந்தக்க தில்'[3] என்று கூறி இருப்பதைப் பலரும் அறிவர். அவர் மடல் ஏறாமை பற்றிக் கூறுகின்றாரே தவிர—அது அவளின் அடக் கத்தின் சிறப்பைக் காட்டுமென அறிவிக்கின்றாரே தவிர— 'மடல்மா கூறுதல்' பற்றி ஒன்றும் பேசவில்லை. தொல்காப்பியமும் மகளிர் மடலேறுதலைத்தான் விலக்குகின்றது. நச்சினார்க்கினியரும்

'மடன்மா கூறும்' ஒரு பழம் பாடலை எடுத்துக் காட்டி இது 'மடல்' ஏறுதலன்று; 'கூறுதல்' என்பர்.[4] எனவே ஆழ்வாராகிய தலைவி 'மடல்மா கூறுத'லை இணக்கப்படி அறவே தப்பு என்று எவ்வாறு கொள்ள முடியும்? அடக்கப் பண்பு சிறப்பிக்கப் படுதல் போலவே தலைவியின் திட்பத்தினை 'மடன்மா கூறு'வது காட்டுமெனக் கொள்ளலாமன்றோ?

அஃது ஒருபுற மிருக்க, ஆழ்வார் நாயகி 'யாம் மடலூர்ந்தும் (5-3-10) தலைவனின் மலர் சூடுவோம் என்கிறாள். இப் பாடலை முற்றும் பார்த்தால் தன் செயலால் தன் மடம் என்ற பண்புக்குக் குறை வருமென்றும், தெருவில் அயல் மகளிர் பலவாறு பழி தூற்றுவர் என்றும், நாடு ஆரவாரம் செய்யுமென்றும் அவள் அறிவாள். அப்படியே ஆகட்டுமே என்கிறாள்...அவர் என்னை அழைத்துக் கொண்டு போவதாயின் அது தக்கது என்று இருக்க வேண்டிய நான், இப்பொழுது கொள்ளுகின்ற துணிவு என் இயல்புக்குச் சேராதது என்றாலும் அதனைச் செய்தேனும் அவனைப் பெறுவேன் என்கிறாள். அதுவே மடல் ஊர்ந்தும் என்ற உம்மையால் குறிக்கப் பெறுவதாகும்.'அவன் வந்து என்னைக் காப்பாற்றாவிடில்—சேராவிடில்—அவன் இருக்கின்றான் என்ற நிலையும் இல்லையாகும்; வேதவாக்கியங்களை யார் நம்புவர்? அவனோடு கலந்த நான் கூறுவதைத் தான் யாவரும் நம்புவர்' என்றெல்லாம் அவள் அவனை அடைதலில் கொண்ட உறுதிப்பாட்டின் மிகுதியையும் அவனைப் பிரிந்து தரியாதபடி அவன் இவளைப் படுத்துகின்ற பாட்டையுமெல்லாம் இது தெளிவிக்கும். அவன் இவளை இவ்வளவு கலங்கப் பண்ணவில்லை என்றால் அவனது சிறப்புக்கு அது தாழ்வாம்; இவர் இப்படிக் கலங்கவில்லை என்றால் இவருடைய அன்புக்குத் தாழ்வாம்.

இலக்கணத்தின்படி பெண்கள் 'மடல் கூறு'தலும் கூடாது என்றால் அந்த விதி ஏன் அமைந்தது என நோக்க வேண்டும். ஆற்றாமை மிகுதியால் ஆண் 'மடல்மா கூற'லா மென்றால் இங்கு இறைவனே தலைவனாகையால் அத்தகைய தலைவர் உலகில் வேறு பிறர் இல்லாமையால் மகளிர் பால் ஆற்றாமை மிகலும், அதனால் அவர் மடல் ஏறுவதாகக் கூறுதலும் தக்க தெனவே கோடல் சாலும். அதனால்தான் போலும் பிற்காலத்துப் 'பன்னிரு பாட்டியல்' 'கடவுளர் தலைவராய் வருங்கால் மடன் மாப் பெண்டிர் ஏறுவர்'[5] என்றே இலக்கணமும் அமைத்து விட்டது.

முதற் பாட்டிலேயே 'ஊரவர் கவ்வை' தன்னை ஒன்றும் செய்யாது என்கின்றாள் தலைவி. இறைவனோடு தொடர்புடையார் கூறும் பழி என்றால்தான் பழியே தவிரப் புறம்புள்ளார் கூறுவது நமக்குப் பழியோ என்கின்றாள். பின்னர்ச் செய்ய தாமரைக் கண்ணன் தன்னை நிறை கொண்டதாகக் கூறுகின்றாள் (நிறை-பெண் தன்மை). அவன் அநுபவித்த தன் செவ்வாயும் கருங்கண்ணும் வெளுப்பாயின என்கிறாள். இவளுடைய ஆசையெல்லாம் அவனிடத்துக் குணங்கள் இல்லை என்று குறை சொல்லுகின்ற பெண்களின் வாய் அடங்கும்படி அவன் தன்பால் வரவும் தான் தன் கண்களால் கண்டு வணங்கவும் வேண்டும். அது என்று கொலோ என்பதுதான். காதலனைக் கூடி மகிழ்வதா அன்றித் தலையில் வணங்குவதா? என்றால் பிரிந்த நிலையில் இருக்கும்போது அவனை வணங்க வேண்டுமென்று எண்ணம் தோன்றுவது இயல்பு. சீதை தான் அசோக வனத்திலிருந்தபோது தன்பால் வந்த அனுமனிடம் 'இராமனைத் தீண்டலாகும் வரம் தொழுது வேண்டினள்'[6] என்று சொல்லியனுப்ப வில்லையா? அதுபோலத்தான் இதுவும். (இங்கே தொழுது என்பதற்கு இராமனைத் தொழுது என்று பொருள் கொள்ளப்பெறுகின்றது.)

அகப்பொருள் இலக்கணத்தில் 'பூத்தரு புணர்ச்சி' 'புனல் தரு புணர்ச்சி', 'களிறு தரு புணர்ச்சி' என்று ஒரு தலைவன் தலைவியைப் பெறுகின்ற நிலையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கூறுவதுண்டு. 'தலைவன் தன் ஆபத்துக் காலத்தில் தன்னைக் காத்ததற்கும், தனக்குப் பூத்தந்ததற்கும் மகிழ்ந்து அன்பால் தலைவி அவனை அடைந்ததாகக் கூறுவர். இங்கு இவள் கண்ணபிரான் வீரச் செயல்களைச் செய்து பின் சிரித்தது. தனக்காக என நினைத்து அதற்காகத் தன்னையே அவனுக்கு அடிமையாக எழுதித் தருகின்றாள். 'முன்தையலார் முன்' என்றவள் இப்போது தன்னைப் பலவாறு பொடிந்த 'தாயார் நாணும்படி' அவன் வந்து அடைவது என்று? எனக் கேட்கின்றாள். தன் நாணையும் நிறையையும் மட்டுமல்லாமல் அவற்றிற் கிடமான நெஞ்சையும் கவர்ந்து கொண்டு, கடலில் இருப்பின் இவள் மடலெடுத்து வரவும் அவனைக் குறிக்கையில் கூடுமென எண்ணி எட்டாத தூரத்திற்குப் போய்விட்டான் என்பதுபோல் 'சேணுயர் வானத்திருக்கும்' என்கின்றாள். 'பல மிறுக்குகள் செய்து அடங்காத பெண்ணைய் மடலூர்வேன்' என்று சொல்கின்றாள். இவ்வாறாகக் கண்ணன் வந்து கலவாமையால் ஆசை மிகுந்து பழிக்கு அஞ்சாமல் தான்

பிறந்த ஊர் நடுங்க மடல் ஊர்வதாக மாறன் நிச்சயித்ததாக அமைகின்றது இப்பகுதி. மிக்க உணர்ச்சி ஊட்டுவனவாக—வேகம் நிறைந்தனவாக உள்ளன பாடல்கள். இப்பகுதியில் தலைவி பேசும்போது தோழியையும் உட்படுத்தி 'நம்' என்று பேசும் தன்மை (2-7-8) அக இலக்கணத்திற் காணப்பெறும் முறையை ஒக்கும்.'

## தலைவியின் இரக்கம் (5-4)

பிரிவால் காதலர்க்கு இரவு ஊழியாக நீளுதல் உண்டு: ஒரு பகல் ஏழு பகல் போல் செல்லுதலும் உண்டு. இப்படி ஒரு துறை அக இலக்கணத்து இல்லை. ஆனாலும் பிரிவுக் காலத்தில் அவன் வரவு எண்ணி இரங்கும் பாடல் பல உண்டு. மடல் ஏற நினைத்த தலைவிக்கு மடலேற இயலாதவாறு இரவு வந்துவிட்டது என்று திருவாய்மொழி உரையாசிரியர் முன் பகுதியோடு இதனைத் தொடர்பு படுத்துவர். தனியாக எடுத்துக் கொண்டாலும் இப் பாடல்களில் தலைவியின் புலம்பல் அருமையாக வெளிப்படுத்தப் பெற்றுள்ளது விளங்கும். தன் தனிமையை எவ்வளவு நன்ருகக் குறிக்கின்ருள். ஊர் முழுவதும் தூங்கிவிட்டது. ஏன், உலக மெங்கும் இருள் செறிந்துவிட்டது. நீர் நிலைகளுமெல்லாம் அலை யடங்கி ஓசையற்றன: கேட்டல், பார்த்தல் முதலிய ஒன்றிற்கும் வாய்ப்பு இல்லை. எனவே, ஆற்ருமை கரை புரண்டிருக்கும் முன் 'சேட்பட்டயாமங்கள்' என்ருள். ஆனல் இப்போது ஒரே இரவாய் எல்லையற்று, நீண்டது. என்பதை உணர்த்த (ஓர் நீளிரவாய் நீண்டதால், என்கிருள். அவன் வந்திருந்தால் இவ்வாறு தோன்ருது. நித்திய சூரிகட்குத் தன்னைக் கொடுப்பவனும், உலகினர்க்கு அவர்கள் கேட்காமலேயே சென்று உதவுபவனுமாகிய அவன் எனக்கு மட்டும் அருள் செய்திலன் என்பாள்: 'பாரெல்லாம் உண்ட நம் பாம்பணையான் வாரானல்'என் கின்ருள். இந்நிலையில் தன் 'ஆவி காப்பார் ஆர்' என்று இடும் ஓலம் உருக்கமானதாக இல்லையா? நீண்டதால், வாரானல், என்று வினைச் சொற்களில் நெடில்கள் அமைத்திருப்பது பேசுகின்ற வருடைய மன நிலையைக் காட்டுகின்றது. அடுத்தபாட்டில் தன் மார்பில் இருந்த அவன்தான் போனவன் வரவில்லை என்ருல் நெஞ் சாகிய நீயும் எனக்கு நட்புடைமையில்லையே என்று (பாங்கில்லை) புலம்புகிருள். யாவர் துன்பத்தையும் போக்கும் காகுத்தன் வராத நிலையில் உயிரை விட்டு விடலாமென்ருல் பெண்ணுப் பிறந்த எனக்கு 'மாயும் வகை' ஏது? நான் அறியேன் என்கின்ருள். பிறர்

வயப்பட்டபெண் பிறவி எடுத்தவர்க்கு நினைத்தபோது இறத்தலும் கூடாது.

அடுத்த நிலை இன்னும் ஏற்றமாக அமைகிறது. அவன் கீழ்ப் பணியாற்றும் ஒண் சுடரோனும் என் துயர் காண இயலாதென்று எங்கோ சென்று ஒளிந்தான். தலைவனுக்கு மட்டும் எப்படி என் துன்பத்தைப் பொறுக்க முடிகின்றது? எல்லோரையும் காக்கும் இயல்புள்ள காரேறு-மண்ணளந்த அந்நல்லோன் எனக்கு ஏன் தன்னைக் காட்டவில்லை? அவன் எனக்காக யாரிடமும் சென்று ஒன்றும் இரக்கவேண்டா; மண்ணை அளக்க வேண்டா; தன் வடிவைக் காட்டினால் அமையுமே என்பாள் 'வாரானுல்' என்கிருள். இவள் துன்பப் பகுதி எந்த எல்லையை எட்டியிருக்கின்றது என்றால் 'எண் பெரிய சிந்தை நோய்'—எண்ணுக்கப்படாத—இவ்வளவு என்று சொல்ல இயலாத உள்ள நோய் ஆய் விட்டது. அது தீர்ந்தால் போதும் என்று ஏங்குகின்ருள். அவனை நினைத்தலோ மறத்தலோ கூடப் பொருளன்று என்பது போலுள்ளது அமைப்பு.

பின்வரும் பாடல்களில் தெய்வங்காள்! என் செய்வேன் என்று முறையிடுகின்ருள். தண் தென்றலும் வெஞ்சுடர் போலத் தன்னைச் சுடுகின்றது - கொல்லுகின்றது என்கின்ருள். வீங்கிருளும் நுண் துளியும்-அதாவது இருட்டும் நுண்பனியும் உடையதாகிய இரவானது வெப்பம் மிக்க நெருப்பைக் காட்டிலும் சுடுகின்றதாம். இருட்டும் பனியும் இவை புணர்ச்சிக்கு இன்பமளிப்பவை. அதனுல் தான் அக இலக்கணம் குறிஞ்சிக்குரிய - புணர்ச்சிக்குரிய பொழுதாகக் கூதிர்கால யாமத்தை மட்டுமன்றி முன்பனிக் காலத்தையும் குறிக்கின்றது.[6] இங்குப் பிரிவின் காரணமாக அவை சுடுகின்றன எனப்பெற்றன. 'என் நெஞ்சு இடர்தீர்ப்பார் இனியார்? நான் நிலையாக உருகிக் கொண்டேயிருக்கின்றேன். என்னைப்போலவே இந்த ஆகாயமும் துன்புற்று நுண் துளியாய் விழுகின்றது' என்கிருள். தன்னைத் தவிர அழிகின்ற வானத்துக்கு வேறு உவமை சொல்ல முடியாது. இப்பொழுது வையம் அளந்தபிரான் வருகின்றிலன் என்று ஒரு சொல் சொல்லியாவது எனக்கு ஆறுதல் கூறவும் ஒருவரும் இல்லாது உலகம் முழுவதும் உறங்குகின்றது. ஓ! இதென்ன வியப்பு என்று முடிக்கின்ருள்.

## உருவெளிப்பாடு (5-5)-1

இயற்கைப் புணர்ச்சிக்குப் பின் தலைவன் தலைவி மனநிலை எடுத்து உணர்த்துகையில் போறல்[7] என்பதொரு நிலை கூறப்

பெறுகின்றது. ஒருவர் மற்றவரையே நினைத்திருத்தலின் அவர் பார்க்கின்ற பொருள்களெல்லாம் தம் உள்ளத்திருக்கின்ற பொருளே போலத் தோன்றுவது இயல்பேயன்றோ. அம்முறையில் இங்குத் தலைவனையே நினைந்திருக்கும் தலைவிக்குக் காணுமிடமெங்கும் அவன் வடிவே தெரிகின்றது. அது 'உருவெளிப்பாடு'எனப் பெறுகின்றது. ஆழ்வார் நாயகி தனக்கு அறிவுரை கூறுகின்ற தாய்மார்களையும் மற்ற தன் தோழியர்களையும் பார்த்து நீங்கள் என்னைக் கோபிப்பதிலே பொருளில்லை; திருக்குறுங்குடி நம்பியை நான் கண்ட பின் அவன் ஆபரண அழகிலும் அவயவ அழகிலும் என் நெஞ்சு சென்றுகொண்டிருக்கின்றது என்கிறாள். நிகழ்கால வினைமுற்று அவன் தன் அழகு முழுவதனையும் தன்னெஞ்சு இன்னும் கண்டபாடில்லை என்பதை உணர்த்தும். நாங்களும்தான் அந்நம்பியைப் பார்த்தோம் என்கிறார்கள்போலும் அவர்கள். இருக்கலாம்; நீங்கள் என் நெஞ்சினால் அவனை நோக்கிக் காணுங்கள் என்கிறாள் அவள். சாத்திர அறிவு போதாது; பக்தியோடு பார்க்க வேண்டுமென்பது கருத்து. அப்பொழுது அவன் தோள் அழகும், ஆபரண அழகும் எல்லாத்திசைகளிலும் வந்து நின்று நலியும் என்கிறாள். அவன் அழகுகள் என் உள்ளத்தினுள்ளும் கண்ணினுள்ளும் நீங்கா என்கிறாள். அந்த அழகிய பொருள்களினூடே அவன் வடிவும் தோன்றுகின்றது என்று ஈடுபடுகின்றாள்.

அதற்கடுத்தபடி அவனுடைய திருமுகமும், தாமரைக்கண்களும் தன் உயிர் நிலையிலே நலிகின்றன என்கின்றாள். ''அவன் மூக்கு அழகிய கொடி போன்றது;கொடி பூத்த தாமரை போன்றன கண்கள்: அதன் பலன் போன்றது கனிவாய்; இலை போன்றது திருமேனி என்று பாடல் அழகுற அமைந்துள்ளது. அத்தகையோன் கன்னல், பால், அமுதாகி வந்து என் நெஞ்சை விட்டு நீங்கான்? அன்னை 'இவள் கழிய மிக்க காதலன்' என்று அவனைக் காண என்னை விடுவதில்லை. ஆனால் நான் ஒருதரம் பார்த்தபின் அவன் வடிவம் பல நித்திய சூரிகள் கூடிக் கூடித் தொழுதுகொண்டிருக்கச் சோதிவெள்ளத்தின் உள்ளேதோன்றுகின்ற ஒரு ஒப்பற்ற வடிவாக என் நெஞ்சுள் காணப்படுகின்றது; பிறர்க்கு இது காண்பதற்கு அரியது' என்கின்றாள் தலைவி.

### உருவெளிப்பாடு-2

இதேபோன்று ஏழையராவி (7-7) திருவாய்மொழியிலும் உருவெளிப்பாடு பேசப்படுகின்றது. முன்னையதில் இறைவனது உருவ

அழகு தோன்றுகின்றது என்று மட்டும் பேசப்பட்டது, பின்னதில் அவ்வுரு தன்னை எப்படியெல்லாம் வதைக்கின்றது என்று அது செய்யும் கொடுமை மிகுதி தலைவியால் எடுத்துரைக்கப் பெறுகின்றது. இறைவனுடைய கண்கள், மூக்கு, வாய், புருவம், முறுவல் (பல்),காதுகள், திருநுதல் இவற்றை உள்ளடக்கிய வாண் முகம்,கூந்தல் ஆகியவை முன்னே தோன்றி நின்று வதைக்கின்ற கொடுமை அழகுற உருவக முறையில் தலைவி பேச்சாக வெளியிடப் பெறுகின்றது. 'அவன் கண்கள் மெல்லியர்களான மகளிர்களை மட்டும் உயிர் குடிக்கும்படியான இரண்டு, கூற்றங்களோ அல்லது கண்களோ அறியேன்' என்று ஐயுறவுபோலே சொல்கின்றாள். அவை அன்றலர்ந்த தாமரைமலர்போல நாற்றிசையும் சூழ வந்து தான் தப்பி ஓட முடியாதபடி தோன்றுகின்றன. 'நான் என் செய்வேன்' என்கிறாள். 'தாமரை நாண் மலர் போல்' என்பது தான் அனுபவித்த அன்று கண்ட நிலை; அதனை இப்போதும் கூறுகின்றாள். இவ்வாறே மற்ற உறுப்புக்களும் தனித்தனியே ஒன்றோடு ஒன்று போட்டியிட்டுக் கொண்டு வந்து தன் ஆவியை அடுகின்ற தன்மையை எடுத்துக் கூறியதோடு அமையாது இறுதியில் அவை யாவும் ஒன்றாகத் திரண்டு ஒரு முகமாக (ஒருசேர—முகமாக) வந்து நலிக்கின்றதாகக் கூறுகின்ற தன்மை அழகுற அமைந்துள்ளது.

ஆனால் இவளுடைய அன்னையர் மட்டும் முற்றத்துள் சென்று நிற்கின்றாயே என்று கையை நெறித்துக் கொண்டும், சுற்றி நின்று கொண்டும், தங்களில் உசாவிக் கொண்டும் இவளை வைகின்றார்களாம். இப்பேச்சு மிக்க இயல்பாக அமைந்துள்ளது. தன் உள்ளம் இம்மூவுலகும் விரிகின்ற சுடர்ச்சோதி முடியுடையானுக்கே ஒன்றுபட்டுவிட்டது என்று உறுதி கூறுகின்றாள். தாய்மாரான நீங்கள் என்பால் இனிப் பற்று விட்டால் போதும் என்று முடிக்கின்றாள்.

### ஊடல் :(6.2)

இது அகத்திணைக்குரிய உரிப்பொருள்களுள் ஒன்று. புணர்ச்சி இன்பத்துக்குத் தலைவன் தலைவியரிடையே ஊடல் ஏற்படுவது இன்றியமையாதது என்ப. 'ஊடுதல் காமத்திற்கு இன்பம்'[10] அன்றோ. மருதத்திணைப்பாடல்கள் தலைவனின் பரத்தமையையும், அது காரணமாகத் தலைவி ஊடுதலையும் பற்றிப் பேசும். ஊடலின் முதல் நிலைகள் புலவியும்,துனியும் ஆகும்.[11] இவற்றிற்குக் காரணம் இருக்க வேண்டுமென்பதில்லை. மிக்க அன்பே ஐயப்பாட்டிற்கும்

அதன் தொடர்பான ஊடற்கும் காரணமாகின்றன. தலைவனிடம் கொண்ட ஊடல் காரணமாக வாயில் மறுத்துரைத்த (இசைவு மறுத்த) பாடல்கள் பல உள.

'மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய'[12]

என்று தொல்காப்பியம் கூறும். காதற்போர்க்களத்து ஆடவன் அடிமையும் பெண்ணின் தலைமையும் இன்ப வெற்றியை அளிக்கின்றன.'[13] ஊடற்கலை மிக நுட்பமானது. இது பொதுவாகக் கற்பின் ஒரு பகுதியாகவே அமைகின்றது. ஆனாலும் களவினும் சிறுபான்மை உண்டு என்பது தொல்காப்பியத்திலும் புலப்படுகின்றது.[14]

திருவாய்மொழியிலும் தலைவி தலைவன் ஆகிய இருவரிடையேயும் உள்ள அன்பின் மிகுதியை எடுத்துக்காட்டு முறையில் இந்த ஊடல் துறை அமைந்திருப்பதைக் காணுகின்றோம். 'மின்னிடை மடவார்' (6-2) என்ற திருவாய்மொழி அவன் வருதற்குக் காலம் தாழ்த்தான் என்ற காரணத்தால் தலைவி ஊடற்கோபம் கொண்டு இனி அவன் வரினும் கலந்து பின் பிரிதலாகவே இருக்கும்; அப்பிரிதற்றுன்பம் கொடிது. ஆகையால் அவன் வரவே வேண்டா என்று பேசுவதாக அமைந்துள்ளது. இவரைப் பக்குவப்படுத்துவதற்காகச் சிறிது புறக்கணித்து (புறத்தே) நின்ற அவனும் அழகாலும் மென்மையாலும் இவரை வெல்ல ஒண்ணாது என நினைந்து தாழ்ந்து நின்று பணிந்து பொருத்திக் கொள்ளுதலாகிய தலையாகிய உபாயத்தை மேற்கொண்டான் எனத் தோன்றுகின்றது.

தோழிமாரும் தலைவியும் அவன் முன்னிலையில் மிக்க கோபமுடையவராய் முகம் மாறி நிற்கிறார்கள். அவனும் அண்மையிலிருப்பதால் ஆற்றாமை கரைபுரண்டு, கால் தரையில் பாவாத படியாய்த் தடுமாறி வருகின்றான். தன் காலில்பட்ட இவர்தம் விளையாட்டுப் பொருள் சிலவற்றைக் கையில் எடுத்து, இவர்பால் காட்டும் அன்பெல்லாம் வெளிப்படுமாறு அவற்றினைக் கண்களில் ஒற்றிக் கொள்வது; தலையில் வைத்துக் கொள்வது; இன்னோரன்ன அன்புச் செயல் செய்தான். அதைக்கண்ட இவர்கள் நம்மைப் பிரிந்த இவனது இச்செய்கை நம்மைக் கருதிச் செய்வதல்ல; நம்மைப் பிரிந்து சிலரொடு கலந்தான். இப்போது அவர்களைப் பிரிந்து அவ்வாற்றாமையோடு இங்கு வந்துள்ளான். இப்பொருள்கள்

அவர்களுடையன என்று மயங்கி இப்படிச் செய்கின்றான் என நினைக்கின்றனர். இந்த நிலையில் இவர்களுடைய ஊடலைத் தீர்த்து அவன் கலந்த படியை இத்திருவாய் மொழி சொல்கின்றது என்ற நோக்கோடு பாடலை நோக்க வேண்டும்.

தலைவி, 'இலங்கையை அழித்த மாயவனே!' என்று விளித்துப் பேசுகின்றாள். விளையாட்டுப் பொருள்களாகிய பந்தும் கழலும் அவன் கையிலுள்ளன. அவனுடைய அன்புக்கு-அருளுக்கு உரியவரான சிறந்த அழகும், குணமும் உடைய மகளிர்கள் அவன் இங்கு வந்து விட்டுத் திரும்பிச் சென்றால் அவனை ஏற்றுக் கொள்ள மறுப்பர். அப்பொழுது அவன் படும் துடிப்புக்கு 'நான் அஞ்சு கின்றேன்' என்கிறாள் தலைவி. அவன் 'ஒருகணம் தங்களைப் பிரிந்து வாழ இயலாத தன்னை இப்படிப் பொய்யனுக்கலாமா' என்று கேட்டான் போலும்! இவள் 'உன்னுடைய பொய் விளையாட்டை சுய காரியத்தன்மையை-நான் அறிவேன்; இனி உன் பேச்சால் பெறக்கூடிய பயன் ஒன்றுமில்லை; நம்பீ! உன் கையிலிருப்பன உன் மடவாருடையன அல்ல; என்னுடைய பந்தையும் கழலையும் தந்துவிட்டு நீ போ' என்கின்றாள். 'உன் கரம் பட்டவை கொண்டு நாங்கள் உயிர் வாழவேண்டும்' அவன் போக மாட்டான் என்பது இவர்கள் கருத்து.

மேலும் நெருங்கவந்த அவனைப் 'போகு' என்று கூறி அவனது தோற்றத்தில் ஏற்பட்ட மாறுபாட்டைக் கண்டு, உன் தாமரை ஒத்த கண்களும், செவ்வாய் முறுவலும் எல்லாம் எங்கட்குத் துக்க மிகுதியையே தருகின்றன; நாங்கள் நோற்ற தன்மை அது! அதை அனுபவிக்க வேண்டுவார் வேறு பிறர். தோகை மாமயிலார்கள்-அவர்களைப் பிரிந்து வருந்தாமல் சென்று கலந்து பரிமாறுவாய் என்கிறாள். ஆக்களை அழைப்பதற்காக வென்று குழலூதி அவர்களை வரும்படி செய்; போய்க்குழல் ஊது போ!' என்கிறாள். 'இது என் சாதிக்கு ஏற்ற தொழிலல்லவோ' என்றாக, 'இப்பொய்யை எங்கள் பால் உரைக்காதே. அதன் திறம் அறியாத அவர்க்கு-உரை நம்பி!' என்கின்றாள். 'நான் என் பெற்றோர் கூறியபடி மாடுமேய்க்க வேண்டாவோ' என்றான் போலும். 'உன்மாயச் செயல் யாருக்குத்தான் தெரியும்? ஏழுல குண்டு ஆலிலையில் துயிலும் சேரத்தகாதவற்றையும் சேர்த்து வைக்கும் மாயம் வல்லன் நீ; அதனை அறிதல் நித்திய சூரிகட்கும் இயலாது; எங்கட்கு எப்படி முடியும்?' என்கிறாள். 'நீங்கள் இப்படிப்

பேசுவானேன்? நான் பசுமேய்த்தல் இல்லையா? அது பொய்யா?' என்றான். ஆம் 'வேலொத்தனவும் பரந்தனவுமான கண்ணுடைய மகளிர் பார்வையிலே ஈடுபட்டு, அவர்களை விட்டு அப்பாலே போகாது அங்கேயே அன்றோ நீ பசுக்களை மேய்ப்பது; இவ் வல்லமை உனக்கே உண்டு. நீ எங்களைக் குறித்து மேலே வார்த்தை சொல்லாதே' என்று முடிக்கின்றாள்.

அடுத்தபாட்டில் 'உன் வஞ்சனையை விண்ணும் மண்ணும் அறியும்; அதற்கு உனக்குத் துணை நிற்கும் உன் கைச்சக்கரமே சான்று பகரும்; நான் உனக்கு ஒன்று உணர்த்துவள் நீ கேள்' என்கிறாள். உன் அருளைப் பெற்றவர்களான அம்மகளிர்கள் வாடி நிற்க, நீ இங்கு எங்கள் பூவையோடும், கிளியோடும் விளையாடிக் கொண்டிராதே' என்கிறாள்.

வசீகரத்திற்குரிய செயலைச் செய்து கொண்டு வந்து மரப் பாவயை எடுத்து வைத்துக்கொண்டு, பெருமை தோன்றப் பேசு வதனால் உனக்கு ஒரு பலனுமில்லை. மூன்று உலகங்களிலும் ஈடில்லாத அழகுடையவர்கள்; உனக்குப் பட்டம் கட்டுதற்குத் தகுதி வாய்ந்தவர்கள்; பலர் உள்ளனர். அவர்கள்பால் சென்று உன் செயலைக் காட்டு. எங்கள் கையிலுள்ள பாவையைப் பறிப்பது செய்யத்தக்க காரியம் அன்று. உயர்ந்த உனக்கே யானாலும் குற்றம் குற்றமேயாம். மர்மமான சில வார்த்தைகளைச் சொல்லி நீ விளையாடுகின்றாய். அதனைக் கேட்கில் எங்களுடைய தமையன்மார் அறம் தருமம் பாவம் பார்க்கமாட்டார்கள். ஒரு நாள் தடியைக் கொண்டு தாக்குவர்' என்று எச்சரிக்கின்றாள்.

தலைவியும் தோழிமாரும் 'இவர்கள் நம்மையே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.' என்று நினைக்கலாமென எண்ணி வேறு ஒன்றிலே நோக்கு உள்ளமை தோன்றச் சிற்றிலிழைக்கத் தொடங் கினர். அப்பொழுது அவன் சிற்றிலையும், சிறு சோற்றினையும் தன் திருவடிகளால் அழித்தான்;!இதனால் கோபம்மிக்கு அவனைக்காணக் கூடாது என்றிருந்த கொள்கையை மறந்து இவ்வாறு பேசு கின்றார்கள் : "உன் செயல் பயனில்லாத செயல் காண்; பிரிந்து நின்று எங்கள் நெஞ்சை உருகும்படி செய்த தன்மை போக மகிழ்ச்சியால் எங்கள் நெஞ்சம் உள்ளுருக வேண்டுமென்று உன் தாமரை ஒத்த கண்பார்வையாகிற வலையில் எங்களை அகப்படுத்து வதற்காக உன் திருவடிகளால் எங்கள் சிற்றிலை நீ அழித்தாய். நீ சிற்றிலை மட்டும் அழிக்கவில்லை; எங்கள் சிந்தையையும் சேர்த்து

அழித்து விட்டாய். இப்படிச் செய்தது நியாயமாகாது. அருளுடையவன் செய்கையாகாது. இவ்வாயர்குல முழுவதும் உய்யத் தோன்றிய கருமாணிக்கச் சுடரே! உன்னல் ஆய்ச்சியர்களாகிய நாங்கள் என்றும் நலிவு படும் நிலையே ஏற்பட்டுவிட்டது" என்று முடிக்கின்றனர்.

அகத்திணையில் வரும் ஊடல் பற்றிய தன்மையை உணரா விட்டால் மேற்குறித்த பதிகம்-திருவாய்மொழி-பொருளற்றதாகவே தோன்றும். ஆழ்வார் அகத்திணையின் இலக்கணமுணர்ந்து அமைந்துள்ளமைக்கு இப்பகுதி உறுதியான சான்று. பாடல்களும் அதனுலேயே சுவை நிறைந்தனவாக அமைகின்றன என்பது தெளிவு.

### தலைவியின் துணிவுச் செயல்

அகவிலக்கணத்தின்படி தலைவி ஆற்ருமை மிகுதி உண்டானுலும் அதனைத்தோழி முதலியவர்களின் ஆறுதல் மொழிகளால் பொறுத்துக் கொள்ளுவாள். அஃறிணைப் பொருள்களைத்தூது விட்டுஆற்ருமைக்குப் போக்குவீடு ஏற்படுதலும் உண்டு. தலைவனைச் சென்று சேர நினைப்பதும், வாய்விட்டுக் கூறுதலும் சில சமயம் உண்டு. ஆனுல் நாணம் கடந்து சென்று சேரப்புறப்படுதல் 'மிக்க காமத்து மிடல்' என்னும் பெருந்திணைப் பாற்படும்.[15] இங்கு ஆழ்வார் நாயகி இறைவன்-திருப்பேரையில் உள்ள மகர நெடுங்குழைக்காதன்-இருந்த இடத்துக்குப் போக வேண்டுமென்று உறுதி கொள்ளுகின்ருள். தோழிமாரும், தாயாரும் அவளைச் சூழ்ந்து கொண்டு, 'இத்துணை அளவு கடந்த ஈடுபாடு கூடாது; இது பழியாகும் என்று கூறத், தலைவி அப்பேச்சால் பயனில்லை என்றும், தன் மனம் அவன்பால் சென்று சேர்ந்துவிட்டதென்றும், தானே போகக் கூடாதென்ருல் பழிவராதவாறு தன்னைக் கொண்டு போய்ச் சேர்ப்பது அவர்கள் கடமை என்றும், தனக்குப் பிறந்த துணிவை இத்திருவாய் மொழியில் வெளியிடுகின்ருள். (7-3)

தாயரை நோக்கித் தன் மனக்கண்ணில் அவ்விறைவன் தன் நெஞ்சில் உலாவுகிற படியைக் காண்பதாகவும், அவனைப்பற்றி எடுத்துரைப்பது இயலாது என்றும் பேசுகின்ருள். தான் அவ்வின்ப வெள்ளத்தை உடையவன் வீற்றிருக்கின்ற திருப் பேரையிற் சென்று சேர்வதாக அறிவிக்கின்ருள். பின்னர்ச்சூழ, நின்று தன்னைத் தகைகின்ற அனைவரையும் விளித்து அவர்

அறிவுரை கேட்கத் தன் நெஞ்சு தன்பால் இல்லை என்றும், அதனைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் தனக்கு இல்லை என்றும் தெரிவிக்கின்றாள். நெஞ்சு அவனுடைய செங்கனிவாயின் பகுதியில் அகப்பட்டுவிட்டது. அவர்கள் கூறும் உரை கேட்க அதற்கு இயலாது என்கிறாள். அவனது பல அவயவ அழகிலும் ஈடுபட்டு அந்நெஞ்சு தன் நாணத்தையும் அடக்கத்தையும் இழந்துவிட்டது. இனிச் செய்வது என்? என்று நெஞ்சை நிறுத்த வேண்டும் என்றவர்க்கு விடை தருகின்றாள்.

மீண்டும் அவன், 'நான் இனி எவ்வாறு இங்குப் போது போக்க முடியும்? அவனுடைய புன்முறுவல், கடைக்கண் பார்வை முதலிய மாயச்செயல்களிலே மீள ஒண்ணாதபடி அகப்பட்டேன். நீங்கள் அவனைக் கோபியாது என்னைக் கடிவதில் என்ன பயன்? என் பெண்தன்மைக்கு இது தகாது என்பீர்களாயின் என் பெண்மையும் தான் முன்னரே போய்விட்டதே. நீங்கள் என் நலத்திலே அக்கரை உடையவர்களானால் தண்ணீர் சென்றபின் அணை கட்டப் பாராமல் என் உயிர் உள்ள அளவிலேயே அவனுள்ள ஊர்க்கு என்னைக் கொண்டு செல்லுங்கள்' என்று உறுதி மொழிகின்றாள். ஏனெனில் 'என் காதல் கடல் போன்றது மட்டுமன்று. இப்போது அதனினும் மிக அதிகரித்து விட்டது. எனவே விரைவில் என் விடாய் தீரச் சிரமத்தைப் போக்கும்படியான தேசத்திலே என்னைக் கொண்டு போய்ப் போடுங்கள்' என்கிறாள். 'என் நெஞ்சு திரும்பும் அறிகுறி காணோம். என் நெஞ்சினை இங்கு அழைக்கத் தோழியாகிய நீயும் தளர்ந்துள்ளாய். நெஞ்சும் அவனும் வந்தாலும் இங்குச் செய்யக் கூடியது யாதுளது? நான் என் நிலையில் இல்லையே. என் நெஞ்சு சென்ற வழியே நானும் செல்லப் பார்த்தேன்' என்கிறாள்.

'பலரும் கூறிய அவரால் என் காதல் வளர்ந்து பெருகிற்று; இன்று அது வையமும், ஏழ்கடலும், இவற்றை உள்ளடக்கிய நீள் விசும்பும் சிறுகும்படி பெருத்துவிட்டது; இனிச் செய்யக் கூடியது ஒன்றே. ஆள் விடுதல், வரவு பார்த்திருத்தல் கூடாது. அவன் வரினும் மீளேன். அவன் இருப்பிடம் சென்று சேர்தலே நான் செய்யக் கூடிய செயல்' என்று துணிபுரைக்கின்றாள். ''என்னைத் தேற்ற வேண்டா; என் மன அடக்கமும் (நிறைவு) மனமும் இங்கு இல்லை. பிறர் பழியைப் பொருட்படுத்தாது நகரமும், நாடும், பிறவும் தேடுகின்றேன். இங்கு மட்டு மன்று; எங்கும் நான் எனக்கு

இல்லை; என் நெஞ்சினை அவன் கவர்ந்து போய் எவ்வளவு ஊழி யாயிற்று; எவ்வளவு காலம் அவன் இதற்கு எண்ணித் திட்ட மிட்டானே" என்று முடிகின்றது இத்திருவாய்மொழி. இப்பாடல் களில் முதற் பொருள் குறிப்பாகவோ வெளிப்படையாகவோ இல்லை. அகத்திணையின் பகுதியாய பெருந்திணையைச் சேர்ந்தது இது என்று கொண்டால் அது மிகப் பொருத்தமாகும்.

ஏறக்குறைய இதே வகையான பொருளமைப்புடன் 'நங்கள் வரிவளை' என்ற இன்னொரு திருவாய் மொழியும் (8-2) அமைந் துள்ளது. தலைவன்பால் தன் நெஞ்சு சென்ற தன்மையும் அதனால் இப்போது தன்பால் ஏற்பட்டுள்ள மாற்றமும் எடுத்துரைத்துத் தோழியர் முதலியோர்பால் இனித் தனக்குத் தொடர்பு-விருப்பு இல்லை என்று கூறுவதாக இப்பகுதி இருக்கின்றது. துக்க மிகுதியை வெளியிடப் பாசுரமில்லை என்று புலம்புகின்றாள். தன் வளையையும் நிறைவையும் அவன் கவர்ந்து கொண்டதாக எண்ணி இளைக் கின்றாள். காலம் முடிவு பெற்றாலும் தான் அவனைக் கண்டன்றி மீளாள் என்றும், ஞாலமறியப் பழி சுமந்ததாகவும், இனி நாணப் படுதலில் பயனில்லை என்றும் பகர்கின்றாள். அவன் பொருட்டு இனி இழப்பதற்குத் தன் பால் ஒன்றுமில்லை என்றும் கூறுகின்றாள். நன்கு உணர்வார்க்கும் அளவிட்டு அறிய முடியாத ஆழ்வலவனை நாம் பணிதலும் (அடைதலும்), அவன் வந்து நம்மை ஏற்றுக் கொள்ளுதலும் இன்று நமக்காகப் புதியதாக ஏற்பட்ட ஒன்றோ? அன்றே. எனவே தடை சொல்லுகின்ற உங்கள் வாக்குத் தகாதது என்று அறிவிக்கின்றாள்.

தலைவனைப் பற்றிப் பேசும் பகுதியில் இறைமைத் தன்மை களும் அவன் உறையும் வேங்கடம், தென் குளந்தை, குடந்தை முதலிய பதிகளும் குறிக்கப்பெறுகின்றன. தேவர்க்கும் அவன் பெருமை அளவிட அரியது; அத்தகையோன் என் அழகினைக் கவர்ந்து கொண்டு துழாய் மாலையும் தருகின்றான் அவன்'. எனினும் அவனை நோக்கியே கூப்பிடு இடவேண்டியுளது. வேறு யாவர் பால் முறையிட முடியும்? என்கிறாள். அவள் தன் பெயர்களைக் கூறி ஓலமிடும்படி என்னைச் செய்து விட்டுத் தன் உருவத்தையும் கிட்டுதற்குரிய அடையாளத்தையும் காட்டாதுள்ளான். எனினும் எவ்வளவு காலம் சென்றாலும் அவனைக் கண்டல்லது மீளேன்; அவன் மீது ஆணை. உங்களோடு எனக்கு ஒரு உறவு இல்லை. எனக்கு நன்மை கூறவேண்டா' என்று உறுதி எடுத்து மொழி

கின்றாள். இப்பற்று விட்டாலன்றி அவனைக் காண முடியாதாகை யால் இங்குள்ள கிளி, பூவை முதலிய தான் வளர்த்தவற்றின் பாலும் தனக்குப் பாசம் இல்லை என்பதாக அறிவிக்கின்றாள். (மாண்குறள் கோல வடிவு காட்டி என்னை ஈர்த்த தேவ பிரார்க்கு நான் எனக்கு எல்லாச் செல்வமுமான அடக்கத்தையும், நாணத் தையும் இழந்தேன்; இனி இழப்பதற்கு என்பால் ஒன்றுமில்லை; என் நெஞ்சும் 'உன்னோடு எனக்குத் தொடர்பு இல்லை' என்று கூறி விட்டு அழகிய அவன் தோற்றத்திலே ஈடுபட்டு 'அவன் பாதம் அடைந்து விட்டது. நான் இனிச் செய்வது என்?' என்று முடிந்த முடிபாகக் கூறி விடுகின்றாள். இப்பகுதியில் காதல் தன்மை மட்டு மன்றி இறைவனின்-தலைவனின்-அழகும், பெருமையும், மேன்மை யும் கலந்து அமைந்துள்ளமை முற்பகுதிக்கும் இதற்கும் வேறு பாடாகும்.

### மாலைப் பூசல் (மாலைக்காலத் துன்பம்)

திருவாய்ப்பாடிப் பெண்கள் பலரும் கண்ணனைப் பிரிந்து ஒரு மாலை நேரத்தில் பட்ட துன்பத்தினை ஆழ்வார் ஒருவரே படு கின்றார். அதனை வெளியிடுகின்றது 'மல்லிகை கமழ் தென்றல்' (9-9) என வரும் திருவாய் மொழி. உலகத்தார்க்கு இனிமையான பொருள்கள் யாவும் தமக்கு இன்னாதனவாக அமையப், பெற வேண்டிய அவனைப் பெருமையால் துடிக்கும் தன்மை இங்குக் காணப்பெறுகின்றது. பிரிந்த நிலையில் பகற் பொழுதை ஓரளவு வருத்தத்தோடு கழித்தாயிற்று; அவன் வரும் மாலைக்காலம் வந்தது; அவனைக் காணோம். அப்பொழுது ஆற்றாமை மிக்கது. அக்காலை நல்ல குறிஞ்சி இசை முதலான இன்பப் பொருள்கள், தென்றல், நிலா, கடல் ஓசை, அன்றில், தீங்குழல் இசை ஆகியவை துன்புறுத்த அலமருகின்ற தன்மை இதில் வெளியிடப் படுகின்றது. காதலர்க்கு மாலைக்காலம் இன்ப ஊற்றான பொழுது; அப்பொழுது பிரிவால் புலம்பும் புலம்பலைக் கூறும் அகப்பாடல்கள் பல உள்ளமையை யாவரும் அறிவோம் இங்கும் அம்மாலைக் காலச் சூழலும் அதன் விளைவும் திட்பமுற வருணிக்கப் பெற்றுக் கவிதை நயத்தோடு விளங்குகின்றன.

தன்னளவிலேயே துன்புறுத்தும் தென்றல் இப்போது மல்லி கையின் மணத்தையும் ஏற்றுக் கொண்டு வந்து என் உடம்பை அறுக்கின்றது. கண்ணுக்குத் தோற்ற வில்லை; மூக்கிற்கும் ஊற்றிற் கும் துன்பமளிக்கின்றதாயுள்ளது. அது புறம்பே மட்டும் நலிவுசெய்

யும் அழகிய குறிஞ்சி இசை செவிவழியே உள்ளே புகுந்து நலிவு செய்கின்றது. ஆக அவ்விரண்டும் தம்முள் ஓர் உடன்பாடு செய்து கொண்டு தனித்தனியே என்னை நலிவு செய்கின்றன. சூரியன் மறைந்த பின் உண்டான மாலைக் காலம் மயக்குகின்றது; மாலை நேரத்தின் செந்நிறத்தினையும், கருநிறத்தினையும் கலந்து பெற்றுள்ள மேகங்கள் அவனுடைய அவயவங்களின் ஒளிக்கும், வடிவிற்கும் போலியாய் நின்று என் உடலைச் செதுக்குகின்றன. இவற்றுக்குத் தப்பிச் சென்று புகுதற்கு இடம் காண்கின்றிலோம்; தமித்துத் துன்புறுகின்றோம் என்கிருள். இவ்வுலக இன்பங்களையும் அநுபவியாது, அவனையும் சென்று சேராது இரண்டிற்கும் இடைப் பட்ட நிலையில் கலக்க மடைவதனைப் பகலுமாகாது இரவுமாகாது இருக்கின்ற மாலை நேரத் துன்பமென உரைப்பது பொருத்த முடையதே யன்றோ?

முன்பு தனித்தனியே நலிவுசெய்த பொருள்கள், போர்முற்றிய நிலையில் ஒன்று சேர்ந்து தாக்குமாறு போல மாலைக்காலத்து வீடு நோக்கித் திரும்பும் எருதுகளின் கழுத்தில் கட்டப்பெற்றுள்ள மணியும், தென்றலும், ஆம்பற்குழலும் ஆகிய இவற்றின் பெயர் தாமும் அச்சம் விளைக்கின்றன என்கிருள். மற்றும் பகலை முடித்து வந்து தோற்றும் மாலை, அழகிய சந்தனம் பஞ்சமமாகிற பண், முல்லைப் பண் (மாலை), இப்போது வீசும் தன் வாடை இவை யெல்லாம் நலிகின்றன. பொதுவான ஆபத்துவந்தால், உலகை முழுதும் வயிற்றிலே வைத்துக் காக்குமவன் நான் நோவுபடா நிற்க வாரா தொழிகின்ருன்; நான் என் உயிரைக் காக்குமாறு எப்படி என்று ஏங்குகின்ருள். அப் பொருள்களைக் காண வேண்டா மென்று கண்ணை மூடிக்கொண்டால் 'அவன் தாமரைக் கண்களும், செவ்வாயும், நீலக்குழலும், நான்கு தோள்களும் மனத்தின்கண் தோன்றி நலிகின்றன. என்கின்ருள். மீண்டும் ஊற்றின்பம் தரும் வாடை, காட்சிக்கினிய தண் மதியம் நினைப்பில் மகிழ்வூட்டும் மென்மலர்ப்பள்ளி-இவை தம் இயல்பான தன்மை நீங்கி வெம்மை அளிப்பனவாக ஆயினவாம். தன் உடம்பும், பெண் தன்மையும் எடுத்துரைக்க இயலாத தன்மையனவாக நிலைகேட்டினை அடைந்தன. என்கின்ருள். துன்பம் உயிரின் அளவன்று; ஆற்று தற்கும் என் நெஞ்சமும் எனக்குத் துணையில்லை என்று துக்க மிகுதியை உரைக்கின்ருள். ஆபுகுமாலை வந்து விட்டது; ஆயன் மனம் கல்லாக மாறிவிட்டது; அவன் இன்குழலோசை ஈர்க் கின்றது; தோழிமாரும் தளர்வுபெற்றனர். என் உயிரைக் காப்பது

எவ்வாறு? அவன் அருள் கிட்டவில்லை; கிடைத்தால் உயிரைக் காக்கலாம் என்கிருள்.

எங்குச் சென்று புக்குத் தரிக்க முடியும்? என்னத்தைச் செய்வது? ஆர்க்கு இழவை எடுத்துரைத்து ஆறுவேன்? அன்னையர்களே! என்று புலம்புகின்ருள். மேலே எடுத்து மொழிந்த பொருள்களெல்லாம் திரண்டு வந்து தூர நின்று தன்னை நலிகின்றனவாம்; பெரும் நலிவு தருவது வாடையே. வாடை தரும் துன்பம் குறித்து அகப்பாடல் பல கூறும். 'நெடுநல்வாடை' என்ற பாட்டும் அது பற்றியதேயன்ரே?

இறுதிப் பாடலில் மாலைக்காலத்துத் தன்னை வருத்தும் பொருள்களின் தன்மை அழகுற வருணிக்கப் பெற்றுள்ளது. கழுத்து மணிகள் ஒலிக்க ஏறுகளுடன் கூடிய ஆக்கள் களித்துக் குதித்து ஓடுகின்றன; பரந்துமேயும் மாடுகளை ஒன்று திரட்ட ஆயர் பலரும் ஊதும் குழல்களின் ஓசை என்னைக் குழறும்படி செய்கின்றது; எங்கும் பரந்துள்ள ஒளியுடைய முல்லை, கருமுகை, மல்லிகை முதலிய மலர்களிற் புக்கு மதுவருந்தும் வண்டுகள் களித்து ஒலிக்கின்றன; கடலும், ஆகாயமளவும் ஓங்கி நின்று அலறுகின்றது. இந்நிலையில் துன்புறுத்தும் பொருள்களின் நடுவே அவனை விட்டு எதனைச் சொல்லி நான் உய்வது என்று புலம்புகின்ருள். ஆழ்வார் நாயகி இவ்வாறு இரக்கப்படுதற்கேற்ற வகையில் அந்த மாலைக்காலத் துன்பம் தெளிவுறுத்தப் பெறுகின்றது இப்பகுதியில்.

### காலைப்பூசல் (காலை நேரத் துன்ப மிகுதி)

முன்னதற்கும் மிகுதியான துக்க நிலை 'வேய் மரு' என்னும் திருவாய்மொழியில் கூறப்பெறுகின்றது. பிரிந்த நிலையில், மாலை வந்தபோது அநுபவித்த ஆற்ருமை - வருத்தம் - முன்னதில் வந்தது. கண்ணனுடன் இருந்த ஒரு பிராட்டி அவன் முன் பிரிந்து போந்த விடியற்காலம் வந்து சேர, அக்காலத்து நிகழும் குளிர்காற்று வீசுதல், குயில் கூவல், மயில் ஆடல், காடெங்கும் கன்றுகளும் ஆக்களும் பரவுதல் நிகழ, அவன் நம்மை விட்டுப் பிரிவான் என்று நிச்சயித்து முன் அவன் பிரிவால்பட்ட துக்கம் முழுவதையும் அவன் முன்னிலையிலேயே படுகின்ருள். இத்தகைய துன்பம் தவிர்க்க முடியாததன்ரே?

அவன் பிரிவான் என்ற துன்பம் மட்டுமின்றி அதற்கு மேலும் குயில் முதலியனவும் துன்புறுத்தும் தன்மையை எடுத்துரைக்கின்றாள் ஆழ்வார் நாயகி, அவன் பலகாலும் வேய்க்கு ஒப்பாகும் என்று பாராட்டிச் சொல்லிய தோள் இணைமெலிகின்றன; உலகத்தவர் மெலிவும், தனிமையும் போன்றன அல்ல தன்னுடையன. அவன் அருகிருக்கவும் இவை மெலிகின்றன. இவை தனிமையை உணர்கின்றன. இவற்றை நோக்காது குயில்கள் கூவித் துன்புறுத்தலை மிகுவிக்கின்றன; இணைந்திருக்கின்ற மயிற் கூட்டங்கள் இரக்கமின்றி உவகைக்குப் போக்கு விட்டு ஆடுகின்றன; கண்ணா உன் உடன் பொருந்தியுள்ள ஆநிரை மேய்க்க நீ போகும் காலம் ஒரு பகல் என்றாலும் அது எனக்கு ஆயிரம் ஊழியாகத் தோன்றுகின்றது என்று முறையிடுகின்றாள்.

அவன், 'நான் பிரியவில்லையே' என்று அன்புப் பார்வை பார்த்தான். 'நீ நோக்காலே நலிவதனைக் காட்டிலும் பசுமேய்க்கப் போதலே நன்று; என்பால் அருள் செய்திலையே கண்ணா; நீ தகவிலை (அருளுடையை யல்லை)' என்று முடிக்கின்றாள். அவன் இவள் தரிப்பதற்குச் சில அன்புச்செயல்—அணைப்புச்—செய்தான் போலும். அச்சேர்க்கையால் ஆயஇன்பமெல்லாம் நிலத்தினும், வானினும் பெரிதாக வளர்ந்து கனவென நீங்க ஆசை பெருக நோகின்றேன், உன் பசுநிரை மேய்க்கப் போதலை ஒழிவாயாக, என வேண்டுகின்றாள். நீ பசு மேய்க்கப் போனால் நான் அழிவன். நெடுமூச்செறிந்து உலர்ந்த என் உள்ளம் பிரிவாகிற நெருப்பால் வேகின்றது. யாரும் எனக்குத் துணையில்லை. பிரிந்தார் உரு வெளிப்பாடு கண்டு உயிர் (வாழ்வு) பெறுவர். எனக்கு அது தானும் இப்போது கூடுவதாக இல்லை. அவன் தன் வடிவோடே என் முன் காணப் பெறுகின்றிலன்; எனக்கு ஒரு பகற்பொழுது தானும் கழிகின்றதாயில்லை; நீளுகின்றது. கண்ணினின்று நீரையும் நிறுத்த இயலவில்லை. இத்தனிமையே எனக்குச் சாக்காடு; இது சாலப்பொல்லாதது என்று பெருந்திணைத் தலைவியின் தன்மையிலே புலற்றுகின்றாள். என்னை உன் இனிய அமுத மொழிகளே அழிக்கின்றன என்கின்றாள். 'கண்ணா!' என்று அழைத்து அவனை 'நீ போனாய்' என்கிறாள். மல்லிகையினுடைய மணத்தை வாடையானது தூவிக்கொண்டு, குளிர்காற்றாக மாற்று வேடம் தாங்கி வர, அதனை முன்நடக்க விட்டுக் கொண்டு மாலைக் காலமாகிய மதயானையும் வந்துவிட்டது; அவன் தன்னை வந்து

அணைத்து அருளவேண்டுமென்று வேண்டுகின்ருள். அதனைச் சொல்லுகின்ற இடத்து 'அவனது கௌத்துபவம் பொருந்திய மார்பில் கமழும் முல்லையின் மணத்தைத் தன் அழகிய முலைகள் பெறும்படி செய்து, வாய் அமுதத்தைக் கொடுத்து அழகிய தாமரைக் கையையும் தங்கள் தலைமீது வைக்க வேண்டுமென்று வேண்டும் பகுதியில் கலவியின் தன்மை நனிநாகரிகமாக வெளியிடப்பெறும் இயல்பைக் காணுகின்ருேம்.

அதற்கு அடுத்தபடி அவன் உகக்கும் நல்ல இள நங்கையருடனேனும் அவன் தங்கள் கண்முகப்பே இருப்பிற் போதுமென்று புகல்கின்ருள். இது உயர்ந்த காமத்தின் சிறப்புத் தன்மையாகும். அகப்பாடல்களில் நேரடியாகத் தலைவனிடம் இவ்வாறு பேசுவதாக வராது. வேறு இடங்களில் பேசினுலும் அது புலவியின் பாலதாகும் என்பர் தொல்காப்பியர்.[16]

அதற்கும் மேலாக உன் உள்ளத் துன்பம் நீங்கி நீ இன்பமடையும் தோறும் நாங்கள் பெரிதும் உகப்போம்; உன் உகப்புக்குப் புறம்பாய் வரும் பெண் தன்மையை நாங்கள் வேண்டோம்; நீ உகக்கும்வரை விட்டுத் தனித்து உன்னை உகக்குமவர் நாங்களல்வோம் சூர்ப்ப நகையின் தன்மையன்ருே அது; நீ பசுமேய்க்கப் போனுல் அங்குக் கம்சன் ஏவலால் பல்வேறு வடிவில் திரியும் அசுரர் கைப்படில் அவர்க்கும் உனக்கும் தீயபோர் நிகழலாம். அத்தீங்கிற்கு அஞ்சுகின்ருேம். அதனுல் போகா தொழியவேண்டுமென வேண்டுகின்ருள். பரமபதத்து இருப்பினைக் காட்டிலும் அவன் பசுநிரை மேய்ப்பதில் ஆர்வம் காட்டும் நிலையை எண்ணி அப்பொழுது வரும் தீங்கிற்கு உள்ளம் உள்ளுர வேகின்றதாக முடிக்கின்ருள். தலைவியின் (ஆழ்வார்) இவ்வன்பின் தன்மை கண்டு இறைவனும் புன்முறுவல் பூத்தான் போலும்! அதனுல் தலைவி செங்கனிவாய் எங்கள் ஆயர் தேவே! என்று கூறுகின்ருள். இவ்வாறு தலைவன் இருக்கும்போதே அவன் பிரிவான் என அஞ்சி உரைத்த பகுதி காலைப்பூசல் என்று கூறப்பெறும். இவ்வாறு முன் நிலையினும் இப்போது துக்க மிகுதியானமை வெளிப்படுத்தப் பெறுகின்றது.

### (ஆ) தோழி கூற்று—3

தோழி என்னும் பாத்திரம் ஐந்திணை இலக்கியத்தில் முக்கிய இடம் பெறும். தலைவனும் தலைவியும் ஒன்றுபடுதற்கும் அவர்கள்

மணம் நிறைவேறுதற்கும் இன்றியமையாதவள் தோழியே[17] தோழியின் செயல் யாவும் 'வரைதல் வேட்கைப் பொருள்' என்று தொல்காப்பியமும் கூறுகின்றது.

இறைவனுக்கு இவ்வுயிர் அடிமைப்பட்டது; பிறர்க்கு இல்லை; என்னும் தொடர்பை அறிவதே இவ்வுயிர் இறைவனோடு சேருதற்கு அடிப்படையான நிலை. அந்தச் சம்பந்தத்தை அறிகின்ற உணர்வுநிலை ஆழ்வார்க்கு நடக்கின்றது என்பது தோழி பேச்சாக வரும் பாசுரங்களில் விளங்கும். அவ்வாறு மூன்று திருவாய் மொழிகள் உள்ளன. அகஇலக்கியத்தும் இலக்கணத்தும் தோழி வெறியாட்டினைத் தடுத்தல், தலைவியின் கற்புக்கு இழுக்கு வாராத படி அறத்தொடு நிற்றல், ஒரொருகால் தலைவியின் உடன் போக்கிற்கு (உற்றார் உறவினரை விட்டு நீங்கிப் போதல்) உதவல் ஆகிய மூன்று நிலைகளிலும் முன்னின்று கூற்று நிகழ்த்துதல் காண லாம். அவ்வாறே திருவாய் மொழியிலும் தோழி பேச்சான மூன்று திருவாய்மொழிகளும் முன்னதனோடு ஒரு புடை ஒப்புமை உடை யனவாகத் திகழ்கின்றன.

### வெறியாட்டு விலக்கு

'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்
வெறியாட் டயர்ந்த காந்தளும்' [18]

என்று வெறியாட்டைக் குறிப்பிடுகின்றார் தொல்காப்பியர். இது அகத்திணைக்கும் புறத்திணைக்கும் பொதுவான ஒரு கூத்து— ஆட்டம்—எனத் தெரிகின்றது. வேலனுவான் செவ்வேளின் வேலைத்தான் ஏந்தி ஆடுபவன்; குறிஞ்சி நில மக்களிடையே வெறியாடுவது ஒரு சமுதாய வழக்கமாக இருந்தது போலும்; குறிஞ்சித் தெய்வமான முருகன் வெறியாடும் பூசாரியான வேலன் மீதோ அன்றி வேறு வழிபடு மகளிர் மீதோ தோன்றித் தான் கூற வேண்டியதைக் கூறுவான் என மக்கள் நம்பினர். அந்நம்பிக்கை யின் அடிப்படையில் எழுந்தது இவ்வகத்துறை எனக் கோடல் சாலும்.

### வெறியாடும் தன்மை

காதல் வயப்பட்ட தலைவி பிரிவினால் உடல் மெலிவாள், அவ் வேறுபாடு எதனால்ஆயிற்றென ஆராயப்புகுவர் தாயர்முதலியோர். இவ்வாராய்ச்சி முக்கியமாக இருவேறுவகைகளில் நிகழ்தல் உண்டு. ஒன்று குறிபார்க்கும் கட்டுவிச்சியை அழைத்துத் தலைவியின் நிலைக் குரிய காரணத்தை வினவல்; மற்றொன்று முருகன் கோயிற் பூசாரி யான வேலனை அழைத்து வினவல். அவன் இந்நோய் முருகனால்

ஆயதென்றும் முருகற்குப் பலிகொடுத்துப் பூசனைபுரியின்-வெறியாட்டு நிகழ்த்தின்-அது நீங்குமென்றும் கூறுவான். வெறியயர் களம் பற்றியும், முறைபற்றியும் பல செய்திகள் அகப்பாடல்களில் வருகின்றன. ஆட்டின் கழுத்தை அறுத்துத் 'தினையை உடைய பிரம்பை' (தினைப்பிரப்பு) வைத்துப் பல வாத்தியங்கள் முழங்க தெய்வம் வழிபடல் உண்டு.[19] பலவாக நிறம்வேறுபட்ட சோற்றையுடைய பலியுடன் சிறிய ஆட்டுக் குட்டியைக் கொன்று, காதல் நோயுற்ற பெண்ணின் நறிய நெற்றியைத் தடவி முருகனை வணங்கிப் பலியாகக் கொடுப்பான் வேலன்.[20] நெடுவேளைப் பேணத்தணிவள் இவள் என முது மகளிர் கூறக் களம் அமைத்துக் கடம்ப மாலைசூட்டிப் பாடல் பலபாடிப் பலிகொடுத்துச் செந்தினையைக் குருதியொடு தூவி முருகனை ஆற்றுப்படுத்தல் உண்டு என அகம்(22)கூறுகின்றது. முருகாற்றுப் படையினும் சிறிய தினையரிசியைப் பூக்களோடுகலந்து பிரப்பரிசியாக வைத்து மறியை அறுத்து வேலனைப் பரவும் தன்மை கூறப்பெற்றுள்ளது.[21] இப்பாடல்களிலெல்லாம் தலைவியின் கற்பின் சிறப்பே விளங்குவது காணலாம்.

'தீர்ப்பாரை யாமினி' (4-6)என்னும் திருவாய் மொழியில் ஆழ்வார் தோழிபாசுரத்தால் தம் நிலையைப் பேசுகின்றார். இறைவனோடு கலந்து பின் பிரிந்தகாரணத்தினால் ஒரு தலைவி நோவுபடுகின்றாள்; ஆற்றாமையால் மோகித்துக் கிடக்கின்றாள்; அவள் உறவினர்களான தாய் முதலியோர் வேலனை வினவ இது வேறு தெய்வங்களால் வந்ததோ என்று ஐயுற்று அத்தெய்வ சம்பந்தமுடையாரைக் கொண்டு நோய் நீக்கம் செய்யப்புக அந்நிலையில் தோழி அவர்கள் செய்யும் செயல் நோய்க்குத் தீர்வு ஆகாது என்றும், அழிவிற்கே ஏதுவாமென்றும் எடுத்துரைத்து இறைவனுடைய பெயரைச் சொல்லுவதாலும், அவன் அடியவர் அடித்தூளி தூவுவதாலும் நோய்நீங்குமென அறிவுறுத்தி உரைப்பதே இத்திருவாய்மொழி. உறவினர் கட்டுவிச்சியைக் கேட்க, அவள் இவள் நோய் தீரச் சில கூற அவை காரணமாகா எனத் தலைவியின் உண்மை நிலையறிந்த தோழி உரைக்கின்றாள்.

தலைவிக்குத் துணையாகவும் காவலாகவும் அமைந்ததன் மாட்டு எவ்வித குற்றமும் நேராதவாறு மற்றவர்களைப் போலவே தானும் தலைவிக்கு வந்த இந்நோய்க்கு ஏது நாடத்தொடங்கியதாகவும், ஆராய்ச்சியில் இவள் உற்றது நல் நோய் என்றும், அது வர ஏது எளிமைத்தன்மையை உடைய கண்ணன் பால் இவள் சிந்தை கலங்கியதே என்றும், அவன் தந்த நோய்க்கு அவனே

மருந்து என்று தேறியதாகவும் தொடக்கத்தில் தோழி மொழி கின்ருள். பின்னர், 'இவள் நோய்க்கு-அறிவு கேட்டிற்குக் காரணம் பெருந்தெய்வம், மாருக நீங்கள் சிறு தெய்வங்கள் காரண மென எண்ணி அவற்றிற்கு அணங்காடுதலில் பயனில்லை; சங்கு சக்கரமென்று பகவானுக்குரியன பேசில் இவளை உயிருடன் பெற லாம்' என்று அறிவுறுத்துகின்ருள். அதற்கு மேலும் சிறு தெய்வங் கட்கு அவர்கள் செய்யும் பல செயல்களை எடுத்துரைத்து விலக்கு கின்ருள். அதுவே 'வெறி விலக்கு' என்று அழைக்க ஏதுவா கின்றது. 'கட்டுவிச்சியின் பொல்லாத சொல்லை ஏற்றுக்கொண்டு ஏதேனும் பொருத்தமில்லாத காரியத்தைச் செய்து தாழ்ந்த கள்ளும், இறைச்சியும் வைத்து வணங்காதீர்கள்; மதுவார் துழாய் மாயப் பிரான் கழல் வாழ்த்துக என்கிருள். மற்றும் செய்யக்கூடி னவாகக் கூறப்பெறும் செயல்களாவன.

கருஞ்சோறும் செஞ்சோறும் படைப்பது, தெய்வ ஆவேசம் கொண்டு ஆடுவது, ஆடும் கள்ளும் முதலிய தாழ்ந்த பொருள்களை வைத்துத் துதித்து மஞ்சட்பொடி எறிந்து ஆடுவது, முழவு கொட்டி அணங்கு ஆடுவது முதலியன. இவற்றுக்குமாருக அவன் பேரைச் சொல்லுதல், அவன் அடியாருடைய பாததூளி கொண்டு வந்து இடுதல், அவற்றிற்கான முயற்சி செய்தல், வேதம்வல்ல வைண வரை வணங்குதல் முதலிய செய்ய வேண்டுமென்கிருள். கீழ்மை யினுல் அணங்காடுகின்ற பொய்யை நான்காணமாட்டேன்; முறை யாகக் கண்ணன் கழல் வாழ்த்துவதே என்றும் சேமம்; அஃ தொன்றே நன்மருந்து என்று உறுதி கூறி அவ்வாறு செய்யின் நோய் நீங்கி அவள் அவனைத் தொழுது ஆடுவாள் என்று முடிக் கின்ருள். இப்பகுதியில் கள் வழங்குவது தவிர மற்றச் செய்தி களெல்லாம் அகப்பாடல்கள் கூறும் வெறியாட்டிலும் இடம் பெறு கின்றன. அவ்வெறி விலக்குதலின் மூலம் 'அவனை அல்லால் உன் னித்து மற்ருெரு தெய்வம் தொழாள்' (4-6-10) என்ற தலைவியின் கற்புத்திறன் சிறக்க விளக்கப்படுதல் அறிந்து இன்புறத்தக்கது.

### தலைவியின் ஈடுபாடு

ஆழ்வார்க்குத் தொலைவில்லி மங்கலத்து இறைவன்பால் உண் டான ஈடுபாட்டு மிகுதியைத் தோழி அன்னையர்க்கு அறிவுறுத்து வதாக அமைகின்றது 'துவளில் மாமணி' (6-5) எனத்தொடங்கும் திருவாய்மொழி. இறைவனைப் பற்றி மற்ற திருவாய்மொழிகள் பேச

இங்கு ஆழ்வார் பற்றிய செய்தி விளக்கப்பெறுவது இதன் சிறப்பாகும். அன்னையர் தாம் அவளை அழைத்துச் சென்று அவனை-அவ்வூரைக் காட்டினர். அதனால் அவள் அவ்வூர் இறைவனை 'அரவிந்தலோசந' என்றும் 'தேவபிரான்' என்றும் அவனது நீர்மையும், மேன்மையும் தோற்றச் சொல்லி வாய் வெருவினாள். அது கண்டு தாய்மார் வெறுப்புக் கொண்டு அவளை நாம் இழக்க நேருமோ என்று அஞ்சித் தோழிபால் சென்று அவளை மீட்கும் விரகு கேட்கின்றார்கள். தோழியும் இனி நீங்கள் அவளை மீட்க நினைப்பதில் பயனில்லை; முன்னரே செய்திருத்தல் வேண்டும். இனி அவள் பால் உமது ஆசையை விடுங்கள். அவளுக்குத் துணையாக இருந்து அவள் வாழ வழி செய்யுங்கள் என்று எடுத்துரைப்பதே இங்குக் கூறப்படும் கருத்தாகும்.

பிரிந்த தலைவன் தன் ஊர் அணித்து என்று கூறிப் பிரிதல் உண்டு. அவனை எண்ணி ஏங்குகின்ற இவளும் அவன் ஊரினது குற்றமற்ற இரத்தினங்கள் பதிக்கப் பெற்ற மாடங்கள் ஓங்கி நிற்கின்ற நிலையை எண்ணுகின்றாள். கண்ணாற் கண்டு கொண்டே இருக்கின்றாள். அவ்வூரையே இவள் தொழுது கொண்டு உள்ளாள். ஆகவே பெற்றவரானாலும் பக்குவம் உற்ற இவளை நீங்கள் வற்புறுத்தல் கூடாது; ஆசையை விடுங்கள்; அவள் நிலை இது என்று தோழி அறிவுறுத்துகின்றாள், அவள் அவனுடைய திவ்விய ஆயுதங்கள், தாமரைத் தடங்கண்கள் முதலானவற்றைச் சொல்லும் சக்தியற்றுத் தளர்ந்து கூறி ஒளியுடைய குவளைக் கண்கள் நீர்மல்க நின்று தடுமாறுகின்றாள்; தலைவி உடலால் தொழுகின்றாள்; வாயால் தன்னை ஈடுபடுத்திய அழகான ஆயுதங்களையும் உறுப்புக்களையும் சொல்லமுயலுகின்றாள்; அவள் உள்ளம் குமுறுகின்றது: என்று முக்கரண நிலையும் இதில் வெளிப்படுத்தப் பெற்றுள்ளது.

அவள் தன் ஈடுபாட்டிற்குக் காரணம் தாயர் தம் செயலே என்று அறிவுறுத்துவாள் போன்று தோழி 'அவர்கள் தலைவியை விழாச்சிறப்புடைய நாளிலே தொலைவில்லி மங்கலத்துக்கு அழைத்துக் கொண்டு போனார்கள்' என்கிறாள். அதன் பயனாக அவள் செயலற்று நிற்கிறாள். ஏதேனும் பேச நேரின் அவன் தன் எளியனும் தன்மையை நினைந்து தேவ தேவபிரான் என்று கூறிக்கொண்டு உதடு நெளிகிற வாயோடு கண்கள் நீர்மல்கக் கட்டுக் குலைந்து மெய்மறந்து நீர்த்தன்மை யடைந்து நிற்கின்றாள் என்கிறாள். மீண்டும் அவ்வூர்க்கு இவளை அழைத்துப் போவதும்

இவன்பால் ஆசையறுவதும் இரண்டும் ஒன்றே என்று புகல்கின்ருள். அவனது வியத்தகு செயல்களையே இவள் பிதற்றுதலைச் செய்து கொண்டு இராநின்ருள்; இவள் அடக்கம் தவிர்ந்து அவன்பால் பக்திவிஞ்சினுள்; சொல்லும் சொல்லெல்லாம் அவன் திருநாமமாகவே இருக்கின்றது, அதில் தளர்ச்சி இல்லை; அதிலேயே இவள் உள்ளம் மகிழ்ந்து குழைகின்ருள்; நீங்கள் அவன் தன்மையைக் காட்டிய பின் இவள் மழைபெய்தாற் போன்று கண்ணீர் வெள்ளம் இடுகின்ருள்.

அவன் குணங்களில் ஈடுபட்ட நெஞ்சினளாய தலைவி, இப்போது வடிவழகிலே மனம்பறிகொடுத்து அவன் உள்ள திக்கை நோக்கித் தொழுது கொண்டு நிற்கின்ருள்; மறுபக்கம் நோக்கிலள். வாயால் சொல்லுகின்ற வாசகமும் அவன் வடிவழகு பற்றியதேயாம். நம்மைக் கைகடந்து தொலைவில்லி மங்கலம் என்ற வார்த்தையன்றி வேருென்றும் கேட்கிருள் இல்லை; இது இவள் முற்பிறவியிற் செய்த புண்ணியத்தாலா என்று அன்றி முகில் வண்ணன் வடிவழகு செய்யும் மாயத்தாலா என்று ஐயுறுகின்ருள் தோழி. அவனது அடையாளங்களையும் பெயர்களையும் இவள் சொல்வதால் அவை நிறம் பெறுகின்றனவாம். சிறப்புற்ற அந்நகரைத் தொழுத அன்றிலிருந்து இன்றுவரை இவள் அவன் நாமமே பிதற்றி உடலளவு அன்றிக்கே உள்ளமும் அழிகின்ருள்; நெஞ்சு அழிந்து வாய் வெருவிக் கண்கள் அலமர அறிவற்ற மரங்களும் இரங்கும்படி மணிவண்ணவோஎன்று கூப்பாடு போடுகின்ருள் என்று முடிக்கின்ருள். இவ்வாறு இவள்கொண்ட ஈடுபாட்டின் மிகுதியைக்கண்ட அளவில் தோழி இவள் நப்பின்னையோ? நிலமகளோ? திருமகளோ யாருடைய பிறப்பு என்று ஐயுறுகின்ருள். உலகத்தில் என்ன விந்தை! இவள் நெடுமால் என்று கூவுகின்ருள்; சென்னியால் வணங்குகின்ருள்; அவ்வூர்த் திருநாமத்தைக் கேட்பதுவே சிந்தையாக இரா நின்ருள் என்று அவள் நிலை உணர்த்தப்பெறுகின்றது.

## அறத்தொடு நிற்றல்

அகப்பொருளில் 'அறத்தொடு நிற்றல்' என்பது மிக இன்றியமையாத செயலாகும். தலைவியின் கற்பொழுக்கம் காக்கப்படுமுறையில் நிகழும் இது. இன்ஞர்க்கு இன்னர் இன்னபோது செய்ய வேண்டுமென்ற விதிமுறைகள் தெளிவுற அமைக்கப் பெற்றுள்ளன. தலைமகள், தலைமகன், தோழி, முதலிய எவர்க்கும்

குறைபாடு நேராவண்ணம் இந்நிகழ்ச்சி நடைபெறும். தோழி தலைமகளின் அநுமதி பெற்றுச் செவிலிக்கு அறத்தோடு நிற்றல் உண்டு; தலைவியின் நிலைக்கு இழுக்குவராதவாறும், தலைமகனது பெருமைக்கு முரணாகாவாறும், தனது காவற்குச் சோர்வு ஏற்படா வண்ணமும் தலைவிக்குத் தலைவனோடு நேர்ந்த தொடர்பு தன்னைத் தோழி செவிலிக்கு எடுத்துரைப்பாள். இங்கும் அவ்வாறே நிகழ்கின்றது (௪-9). தலைவிக்கு வேறு மணம் நிகழ்த்த அவளுடைய பெற்றோர் முயன்ற காலை, அல்லது நொதுமலர் வரைவு நேர்ந்த காலத்து அந்த மணத்தை விலக்கும் முறையில் தலைவிக்கு முன்னரே இன்னொருவனோடு தொடர்பு உண்டு; அவர் வேறு பிறரை நெஞ்சாலும் நினையாள்; உங்கள் முயற்சி அவளுக்குக் கேடுசூழும் என்ற வகையில் நயமுறத் தலைவியின் களவொழுக்கத்தைத் தோழி எடுத்துரைப்பதனை இங்குக் காணுகின்றோம். பல பேச்சுக்களும், குறிப்பாக அமைதல் இதனது சிறப்பாகும். தோழி செவிலிக்குத் தான் அறத்தொடு நிற்பாள். ஆனால் இங்கு அன்னை மீர் எனப் பொதுப்பட உள்ளமையால் நற்றாயையும் கொள்ளலாம்.

தாய்மார்கள் தலைவியின் வடிவில் காணும் வேறுபாட்டிற்குக் காரணம் யாதோ என ஆராய்வதை அறிந்து தோழியானவள் தானும் அவ்வாராய்ச்சியில் ஈடுபட்டதாகத் தோன்றுமாறு பேசி இவளுக்குத் திருப்புலியூர் என்ற ஊரிலிருக்கும் தலைவரோடு புணர்ச்சி உண்டாயிற்றுப் போலே தோன்றுகின்றது; ஏனெனில் இவர் அவனது குணங்களையும் செயல்களையுமே சொல்லி வாய் புலற்றுகின்றாள்; எனவே நீங்கள் வேறு செய்தலைத் தவிருங்கள். என்று தோழி தாயர்க்கு அறிவுறுத்துகின்றாள் இப்பகுதியில். தலைவியின் பேச்சு அவனை அன்றி வேறு பிறரைப் பற்றி இல்லை; தன்னால் இதற்குச் செய்யக் கூடியது யாதுளது? என்று தோழி கூறுவதனால் தானும் இப்போது தான் அது பற்றி அறியவந்ததாகக் குறிப்பாக உணர்த்துவதனைக் காணுகின்றோம். பின்னர் அவள் திருப்புலியூரின் சோலை வளத்தைப் புகழுகின்றாள் என்று அறிவிப்பது, அச்சோலையே அவன் இவளைக் கலந்த இடம் என்று அறிவிப்பது போல் உள்ளது. மற்றும் அவள் உள்ளம் கவர்ந்தவனுடைய ஒப்பனை அழகும் இரண்டாவது பாடலில் கூறப் பெறுகின்றது.

மூன்றாவது பாடல் அவனது வீரச்சிறப்பைக் கூறுகின்றது. தலைவி தன் உள்ளம் கவர்ந்தானின் வீரத்தினை வாய்விட்டுப் புகழுதல் இயல்பேயன்றோ. அவன் வீரமுடையனாதல் மட்டும்

போதிய தன்று; பிரளய ஆபத்துக் காலத்தில் மூவுலகுண்டு உமிழ்ந்தவன் என்று கூறுதலின் மூலம் இது 'புனல் தரு புணர்ச்சி' போன்றது என்றும், அவனது 'துணையாதல் தன்மையே' அவன் பால் தலைவி காதல் கொள்ளுதற்கு ஏது என்றும் குறிக்கப் பெறு கின்றது. அடுத்து அவனது செல்வ நிறைவும், அதனைத் தன்னைச் சேர்ந்தார்க்கு வழங்கும் வள்ளல் தன்மையும், புலப்படுத்தப் பெறு கின்றன. அவன் இவளோடு கலந்தமைக்கு இவள் பால் அடை யாளம் திருந்த உள என்று எடுத்துரைக்கின்றாள் தோழி. அவன் பால் காதல் குணம் இருக்க வேண்டுமே என்று கேட்க விரும்பும் தாயர்க்கு அவன் நாடு அத்தன்மையானதே; அங்குத் தாவரங் களும் ஒன்றற் கொன்று பற்றுக் கோடாம்படி உள்ளன என்று ஒரு இயற்கை வருணனை மூலம் குறிப்பாக உணர்த்தப் பெறு கின்றது. எல்லாம் நன்றே. அவன் ஒழுக்கமுடையனாதல் வேண்டுமே என்று அறிய விரும்புவார்க்கு அவன் ஊரின் இயல்பு இது என்று அங்குள்ள மறைவாணர் வேள்வி செய்யும் இயல்பினர் என விளக்கப் பெற்றுள்ளது.

இவை எல்லாம் இருப்பினும் இவற்றிற்கு எல்லாம் மேலாக இவளை அவனுக்கே கொடுக்க வேண்டுமென்பதற்கு ஒரு தக்க காரணம் உண்டு என்கிறாள் தோழி. இவள் திருப்புலியூர் மாயப் பிரானின் திருவருள் பெற்றுள்ளாள்; அப்படி இல்லையெனில் இவளது உடலில் அவனது அழகிய குளிர்ந்த திருத்துழாயின் மணம் கமழ்தல் எவ்வாறு? எனவே வேறு அடையாளம் எதற்கு என்று முடிபொருளாக இவள் அவனுக்கே மணம் முடித்தற்குத் தக்கவள் என்று தோழி தெளிவுறுத்தி மற்ற மணத்தை விலக்கு கின்றாள். இவ்வாறு அவள் கற்பிற்கு இழுக்கு நேராதவாறு நடந்து கொள்ள வேண்டுமென்று எடுத்துரைத்த தோழியின் செயல் சாலச் சிறந்ததாம். பெண் பேச்சில் மகிழ்ச்சி நிலையில் அமைந்தது இத் திருவாய்மொழி ஒன்று மட்டுமே ஆகும்.

## (இ) தாய்ப்பேச்சான பாசுரங்கள்

தலைவியைப் பெற்ற தாயை நற்றாய் என்றும் வளர்த்த தாயைச் செவிலித் தாய் எனறும் கூறுதல் அகப்பொருள் நூல் மரபு. செவிலி பேச்சே சங்க அகப்பாடல்களில் பலவிடத்தும் காணப் பெறுகின்றது. ஆயினும் திருவாய்மொழியில் அவ் வேறுபாடு இல்லை. நற்றாய் தன் மகள் நிலைகண்டு இரங்கிப் பேசிய பகுதிகள்

பல உள்ளன. தாய் பேச்சான ஏழு திருவாய் மொழிகளில் தாயின் இரக்கம் தெரிவிக்கும் பாடல்களே பெரும் பகுதியாம். 'மண்ணை யிருந்து துழாவி' (4-4) என்பதும் 'கடல் ஞாலம் செய்தேனும்' (5-6) என்பதும் முறையே இறைவன் பால் தலைவி கொண்ட மிக்க ஈடுபாட்டை விளக்குவதும் இறைவனின் ஆவேசமோ இது என்று தாய் ஐயுறுவதுமான பாசுரங்கள் கொண்டதாகும். 'கங்குலும் பகலும்' என்பது (7-2) நற்றாய் தலைவனை நோக்கி இவள் திறத்து என்ன செய்ய நினைந்துள்ளீர் எனக் கேட்பதாக அமைந்துள்ளது. இது ஒரு புதுமை யாகும். இத்தகைய ஒரு நிலை அகப்பொருள் நூல்களில் காணக் கூடவில்லை. தலைவியின் தாய் தலைமகன் பால் பேசுவதாகப் பாடல் செய்யும் மரபு இல்லை அகநூலில். திருவாய்மொழியில் 'ஆடி ஆடியும்' (2-4) 'கங்குலும் பகலும்' (7-2) இரண்டும் நேரடியாகத் தலைவனை நோக்கித் தாய் கூறுவதாக அமைந்துள்ளன.

முன் பாசுரங்களில் ஆற்றாமை மிகுதியிருப்பினும் தூது விடுகின்ற நிலைமையும் அதன் பின் கண்ட பொருள்களெல்லாம் பகவானைப் பிரிந்து நோவுபடுகின்றனவாகக் கொண்டு அவற்றுக்குமாகத் தாம் நோவுபடுகின்ற தன்மையும் கண்டோம். ஆடி ஆடியில் ஆற்றாமை அதனினும் விஞ்சிய படியால் பிராட்டிதசை அடைந்தும் தம் நிலையைத் தாம் பேச முடியாத தன்மையராய் விடப் பக்கத்திலிருக்கும் திருத்தாயர் இவள் பொருட்டாக நீர் செய்ய நினைத்திருப்பது என் என்று கேட்பதாகத் தம் நிலையை ஆழ்வார் அருளிச் செய்கின்றார். தலைவியின் உருக்கமான நிலை இப்பகுதியில் அழகுற அமைந்துள்ளது. தலைவன் கருணை காட்டாத் தன்மையும் குறிப்புப் பொருளில் விளக்க முற அமைக்கப் பெற்றுள்ளது. ஆடி ஆடியும், அகங்கரைத்தும், இசை பாடியும், கண்ணீர் மல்கியும், எங்கும் நாடி நாடியும், நரசிங்கா என்று, அவ் வாணுதல் வாடுகின்றாள் என்கிறாள் தாயார். இவள் ஆசை உம்மைக் காணவேண்டுமென்பதே; வாணனுடைய ஆயிரம் தோள் களையும் துணித்த உமக்கு இவட்கு நேர்ந்த தடையைப் போக்குவது அரிதோ? இரக்கமற்றிருக்கின்றீரே' என்கிறாள்.

நெருப்பை அணைந்த அரக்கும், மெழுகும் போல உருகுகின்றாள் இவள்; அரக்கும், மெழுகும் நெருப்பிற்குள் புகில் கரிந்து போம்; கடக்க இருக்கில் இறுகும்; அதனைச் சார்ந்து நின்றுழியே உருகும்; அது போன்று, உயிர்விட்டு விடவும் பெறாமல், தரித்

திருக்கவும் பெறுமல் நோவுபடுகின்ற நிலை இவளுடையது. ஒன்று நீர்இரங்க வேண்டும்; அல்லது நான் இவளை இரங்காமற் செய்ய வேண்டும். நீர் செய்கின்றீர் இலீர்; நான் என்ன செய்வேன்? பிராட்டிக்காக இலங்கையை அழித்த செயலல்லவா இவளை இவ்வாறு வருந்தச் செய்கின்றது என்று எடுத்து உரைக்கின்றுள் தாய். இக்காதலி உளம் கலங்கி அவனைக் கைதொழுகின்றுள்; இவளது கண்ணீர் கண்டும் வாய் வெருவுதல் கேட்டும் திருத்துழாய் மாலை நல்காத உமது தகவு என்னே! என்கிருள் அவள்.

இந்நிலையில் தலைவி அவன் தகவுடையவனே என்றும், தன் அக உயிர்க்கும் அமுதே என்றும் மீண்டும் புலம்புகின்றுளாம். தன் நெஞ்சில் ஓடுகின்றவற்றைப் பிறர் அறியாதபடி அடக்கும் கள்வியான இவள் வாய்விட்டுக் கூப்பிடும்படி இவளை வஞ்சித்தானே என்கின்றுள் தாய். இவள் நெஞ்சம் மலங்கிற்று; உள் உள் உலர்ந்தது; இப்போது நெருப்புப்பற்றி வேகின்றது. இவை எல்லாம் உம்மைத் தஞ்சமாக அடைந்ததன் பலன் என்கிருள். இவள் சூரியன் உதிப்பதும் மறைவதும் அறியாள்; அறிவது என்னவெனில் திருத்துழாயின் மணம், குளிர்ச்சி, அதிலுள்ள தேன் என்றின்னவையேயாம். ஆழி ஏந்தி அழகரே! கலங்கிய நெஞ்சினளான இவள் காரியத்தில் நீர்நினைத்திருக்கிறதுதான் என்? உம்முடைய வாழ்வாக இருக்கின்ற இவளை நோக்குதல் உம் தொழிலாகும் என்பான் 'இவள் நோக்கினை ஒன்றும் வாட்டேன்மின்' என்று முடிக்கின்றுள். இவ்வாறு தன் மகளின் நிலைக்கு இரங்கிய தாயின் கூற்றினை நாம் காணுகின்றேம்.

பாலனாய் ஏழுலகு (4-2) என்ப லும் சென்ற காலத்திலும் வேறிடங்களிலும் நடைபெற்ற இறைவன் செயல்களை எடுத்துக்கூறி அவற்றை இப்போது அனுபவிக்க வேண்டுமென்றும், அவனுடைய தாளிணைமேல் துழாய் பெற வேண்டுமென்றும், மயங்கும் தலைவியின் நிலையைத் தாய் விளக்குகின்றுள். பாலனாய் ஏழு உலகுகளையும் உண்டு காப்பாற்றி ஆலிலையில் துயின்றவன் அடித்துழாய் பெறவேண்டுமென்று மெலிகின்றுள்; எல்லார்க்கும் உதவியவன் எனக்கு உதவுவதில் தடையிருப்பினும் என்னை ஒத்த பருவமாதரான ஆய்ச்சியரோடு குரவை ஆடியவன் தன் திருவடித் துழாய் எனக்குத் தரலாகாதா என்று கேட்கின்றுள்; ஒரு ஊரினர் மட்டுமன்றி உலகத்துத் தேவர் முனிவர்களும் பரவ நின்றவன் எனக்கு உதவத் தட்டு என்? என்று கூவுகின்றுள்;

அவதாரகாலம் கழிந்தது எனின், 'பரமபதநாதன் திருவடித்துழாய் வேண்டும்' என்று எப்போதும் சொல்லுகின்றாள்; அது பெறற்கரிது எனின் என் போன்ற ஒரு ஆய் மகளுக்காக ஏழு எருதுகளையும் விரும்பித் தழுவின கண்ணன் தாள் இணைமேல் அணிதண்அம் துழாய் என்று இளமகள் எப்போதும் நைகின்றாள்; அதனினும் மேலாகத் தன் உருவம் மாறி ஏனமாய் நின்று பாசி தூர்த்துக் கிடந்த பார்மகட்கு உதவிய செயல் நினைந்து 'அதன் பாதத்து மலர்' என்று அதனையே எப்போதும் பிதற்றும் பிச்சு ஏறினள்; திருவினைத் தன் மார்பிலே கொண்டவர் தாளிணை மேல் துழாய் மலர்க்கு இவள் சுருண்டு விழுகின்றாள்.

சீதை பொருட்டு இலங்கை எரியுய்த்தவர் தாள் இணைமேல் அணிதுழாய் விரும்புகின்றாள். தாய்மார்களே! நீங்களும் பெண் பிள்ளை பெற்று வளர்க்கின்றீர்கள்; என் பெண்ணின் தன்மையை நான் எவ்வாறு எடுத்துரைப்பேன்? எப்போதும் சங்கு, சக்கரம், துழாய் என்று இராப்பகல் பிதற்றுகின்றாள்; நான் என் செய்கேன்? இவள் நான் சொல்லும் சொல் கேட்கும் நிலையினள் அல்லள்; என் வசம் அல்லள்; கண்ணன் கழல் துழாய் தன் பொன்செய் முலைக்கு அணி என்று சொல்லித் தளர்கிறாள் என்று தலைக்கட்டுகின்றாள் தாய்.

'மண்ணையிருந்து துழாவி' (4-4) என்னும் திருவாய்மொழி இறைவனோடு ஒத்த பொருள்களையும் அவனோடு தொடர்புடைய பொருள்களோடு ஒத்தவற்றையும் காணும் தோறும் அவனாகவும், அவனோடு தொடர்புடைய பொருள்களாவும் மயங்கித் தலைவி நோவுபடும் நிலையைத் தாய் உரைப்பதாக அமைகின்றது. அவள் நிலைகண்டு தாயும் என் செய்கேன் என இரங்குகின்றாள். எல்லாப் பொருள்களிலும் இறைவனைக் காணும் நிலை, ஒப்பற்ற முறையில் இதில் வெளிப்படுகின்றது. மண், விண், கடல், ஞாயிறு, நெருப்பு, காற்று, திங்கள், குன்றம், மேகம், ஆன்கன்று, இளநாகம், குடக்கூத்து குழலோசை, வெண்ணெய், உலகு, நீறிடல், துழாய்மலர், திருவுடைமன்னர், உருவுடைவள்ளல்கள், கருவுடைத் தேவில்கள் (கோவில்கள்) பகவர், கருமேகங்கள், ஆநிரை ஆகிய இப்பல்வேறு பொருள்களையும் காணும்தோறும் அவனென்றும் அவனுடன் தொடர்புடையனவென்றும் தேறிய நிலையிலும் தேறாத மயக்க நிலையிலும் அவள் புலற்றுவதாக உரைக்கின்றாள் அன்னை. இறுதியில் அவள் மயக்க நிலையினை இவ்வாறு அறிவுறுத்துகின்றாள்.

அயர்க்கும்: நாற்புறமும் நோக்கும்; நெடுந்தூரம் நோக்குவள்; வியர்ப்பாள்; கண்ணீரொழுகப் பெருமூச்செறிவள்; உடல் தளர் வாள்; கண்ணு என்று பேசும்; பெருமாளே வா என்று கூவும்; இவ்வாறு காதலால் மயங்கிய பெண்ணிற்கு நான் என் செய்வேன் என்று தாய் ஏங்குகின்ருள் இப் பகுதியில்.

இதற்கும் அடுத்தநிலை தலைவி கண்ணனுகவே தன்னைப் பாவித்து அவன் செயல்கள் அனைத்தையும் தான் செய்தனவாகவே கூறுவதாகும். இதனைத் தாய் எடுத்து உரைப்பதாக அமை கின்றது. கடல், ஞாலம் செய்தேனும் யானே' (5-6) என வரும் திருவாய் மொழி. கல்வியும், பயனும், மூல மந்திரங்களும் தானே என்றும், உருத்திரனும் நான் முகனும் தேவர்களும் இந்திரனும் சுவர்க்கமும், நரகமும், மோட்சமும் இவற்றின் மூல காரணமும் தானே என்றும் அரற்றுகின்ருள் தலைவி. இவள் இவ்வாறு செய்வதற்குக் காரணம் இறைவன் இவள் மீது ஆவேசித்தானே என்று ஐயுற்று உரைக்கின்ருள் தாய். இங்கு அமைந்த இவ்விரண்டு நிலைப்பாடல்களும் ஆழ்வார் தம் பக்தி நிலையை வேறு எங்கும் காண முடியாத ஒப்பற்ற முறையில் விளக்கும் அருமை வாய்ந்தனவாம்.

'மாலுக்கு வையம்' (6-6) திருவாய் மொழியில் வருத்த மிகுதி யால் தலைவியும் தோழியும் மயங்கிக் கிடக்க இந்நிலையில் தலைவியைப் பிழைப்பிக்க வழி எண்ணும் தாய் அவள் இழந்தன இவை இவை என்று ஒவ்வொன்ருகக் கூறுகின்ருள். செந்தாமரைக் கண்ணற்குச் சங்க வளையல்களையும், மாமை நிறத்தையும் பெரு மையையும், பெண் நீர்மையையும், கல்வியினையும், மெய்யினையும், ஒளியையும், மாண்பினையும், அழகினையும் சுருக்கமாகத் தலைவி தன் உடைமை எல்லாவற்றையும் இழந்தாள் என்று பேசி முடிக் கின்ருள் தாய்.

'உண்ணும் சோறு' (6-7) என்னும் திருவாய்மொழி மேலதற்கும் அடுத்தநிலை; தாயும் மயங்கினுள்; பெண் பிள்ளை எழுந்து புறப்பட்டுத் தலைவனுடை திருக்கோளூர்க்குப் போய்விட்டாள். மயக்கம் உணர்ந்த போது மகளைக் காணுது தாய் புலம்பி உரைப்பது இத்திருவாய் மொழி. மகளைக் காணுவிடினும் தன் மகளின் தன்மை உணர்ந்த தாய் அவள் திருக்கோளூர்க்குத்தான் போயிருக்கவேண்டும் என்று உறுதியுடன் புகல்கின்ருள் மகளைக்

காணாத நிலையில் அவளைச் செவிலி பல இடங்களிலும் தேடுவதாக அகப்பாடல் பல உள.[22] எதிர் வருவார் அவள் ஒருவனுடன் போவதைக் கண்டதாகக் கூறுதலும், அவள் தன்னிடம் சொல்லாது பிரிந்து போனதற்காகவும், போகின்ற வழி அருமை கருதியும், முன் நாட்களில் நடந்து கொண்ட முறை எடுத்துக் கூறியும் தாயர் புலம்பலைத் தெரிவிக்கும் அகத்துறைப் பாடல் பல உள.[23] ஏறக் குறைய அந்தச் சாயலில்தான் இத்திருவாய் மொழி அமைந் துள்ளது. அவள் பிரிவை வெறுத்தும், தனிவழியே போதலை நொந்தும் மற்றும் அவள் செல்லுநிலை குறித்தும் விளக்குவதாக இப்பகுதி அமைந்துள்ளது.

உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன் என்று இருக்குமவள் தன் இளமகள்; ஆகையால் அவள் அவனுடைய குணங்களையும் அவன் ஊரையும் கேட்டறிந்து கொண்டு அவன் வாழும் திருக்கோளூர்க்கே தான் போய்ப் புகுந் திருப்பாள் என்று திண்ணமாகத் தாய் வெளியிடுகின்றாள். பூவைகளைப் பார்த்துத் திருக்கோளூர்க்குச் சென்ற தன் பூங்கொடி மீண்டு வருவளோ என்று வினவுகின்றாள். இங்கிருந்தபோது தன் பூவை, பைங்கிளி, பந்து, தூதை, புட்டில், இவற்றையெல்லாம் விட்டு அவன் நாமங்களே சொல்லி மகிழ்வுற்ற அவள் அங்குச் சென்று நீர் நிறைந்த கண்களோடு என்ன செய்து கொண்டிருப் பளோ என்று கலங்குகின்றாள். ஊரார் அவளைப் பற்றி என்ன பேசு வார்களோ? செல்வமிக்க திருக்கோளூர்க்குப் போனவளை வரம் பழிந்தசெயல் செய்தாள் என்பரோ? அன்றிக்குணம் மிக்கவள் என் பரோ? மெல்லிடை நுடங்க என் இளமான் செல்ல ஒருப்பட்டாளே என்று நவில்கின்றாள். உடன் போக்குப் பற்றிய அகப்பாடல்களில் தலைவியின் முன் நிலையும் அவள் தலைவன் ஊரில் அநுபவிக்கும் நிலையையும் ஒப்பிட்டு தாயர் பேசுவது உண்டு. அதே போன்று இங்கும் இத்தாய் பேசுகின்றாள். என் தேவி இங்கு இருக்கும் நாளிலும் எங்களை நினையாது அவனை நினைந்து பருவத்துக்குத் தக்க விளையாடலை விட்டு நைந்து காணப்பட்டாள்; இனி அங்குப் போய்த் திருமால் கண்வளர்கின்ற ஊரிலே நித்திய வசந்தமான சோலைகளையும் பூந்தடாகங்களையும் அவன் மணிக்கோயிலையும் கண்களாரக் கண்டு, ஆவி உள் குளிர எவ்வாறு உகப்பாளோ? நான் அதனைக் காணும் பேறுபெற்றிலேனே என்று ஏங்கி உரைக் கின்றாள்.

நான் பெற்ற பெண் எனக்கு உதவாது என்னை விட்டு அகன்றாள். அவள் தெற்குத்திசைக்குத் திலகம் போன்று இருப்பதான திருக்கோளூர்க்குச் சென்று தனக்கு இனி எல்லா உறவும் திருமாலெனக் கொண்டு அவன் கண்ணும் செவ்வாயும் கண்டு தன் கண்களில் நீர் நிறையும்படி வருந்தா நிற்பளே என்று எண்ணிப் பார்க்கின்றாள். மல்கும் கண்ணீரினொடு மையலுற்ற மனத்தோடு இரவும் பகலும் அவன் பெயரே சொல்லிக் கொண்டு மெல்லியளான அவள் எவ்வாறு சேர்வளோ என்று தளர்கின்றாள் தாய். செல்லும் நிலையைத் தன் மனக் கண்ணாற் கண்டு அலமருகிறாள். நல்ல பொருள்களைக் கண்டால் இவை கண்ணனுக்கு என்று அன்புடன் உரைப்பவள் அவள். இப்போது ஊர்பல் பழி தூற்ற என்னைச் சிறிதும் நினையாது திருக்கோளூர்க்கே நடந்தாளே என்று இரங்குகின்றாள். தன் மகள் செயலைக் குறித்துத் தெய்வங்கள் பாலும் முறையிடுகின்றாள் தாய். அரவிந்த லோசனனைத் தினையளவும் விடாள்; குடிக்கு வரும் வான் பழியையும் நினையாள் என்று அவள் உறுதிப்பாட்டைச் சொல்லும் அளவில் அப்பகுதி நிறைவுறுகின்றது. இப்பகுதி அகப்பாடல் பலவற்றையும் அடியொற்றி அமைந்திருப்பது தெளிவு.

தொடக்கத்தில் தலைவியின் நிலையை எடுத்துரைத்துத் தலைவனை நோக்கி 'இவள் நோக்கு ஒன்றினையும் வாட்டாதீர்கள்' என்றது போன்று இங்குக் 'கங்குலும் பகலும்' (7-2) திருவாய்மொழியிலும் தலைவியின் பரிதாபத்திற்குரிய நிலையை எடுத்து விளக்கித் தலைவனை நோக்கி "இவள் திறத்து என்ன செய்ய நினைத்திருக்கின்றீர்" என்று தலைவனுடன் நேரில் முறையிடுவதுபோன்று பாடல்கள் அமைந்துள்ளன. இம்முறை அகநூலிற் காணப்படாதது; அதற்கு மாறானது. தலைவியைப் போன்றே தாய்க்கும் மயக்கநிலைதான். எனினும் அவளைக் காப்பது தன் கடமை என்ற முறையில் உணர்த்தியுடன் இருந்து அவளைப் பெருமாள் திருவடியில் சேர்த்து அவள் நிலைகளை எடுத்துரைத்து 'இவள் திறத்து நீர் என்ன செய்ய நினைத்துள்ளீர்,' எனக் கேட்கிறாள் தாய்.

தலைவியின் ஆற்றாமை நிலை அழகுற இப்பகுதியில் அமைந்துள்ளது. இரவில் மட்டுமன்றிப் பகற்பொழுதிலும் இவள் உறங்குவதில்லை; ஆகையால் கண்துயில் அறியாள் என்கிறாள் தாய். அவன் வருதலைக் காண வேண்டும் என்ற ஆசையால் கைகளால் கண்ணீரைத் துடைத்துக் கொள்கிறாள்; இறைக்கிறாளாம்,

அவனைச் சங்கு சக்கரங்களோடு காண விழையும் ஆர்வத்தால் அதனைச் சொல்ல முனைந்து முழுதும் சொல்லித் தலைக்கட்ட முடியாமையால் சங்குசக்கரங்களென்று கூறி மற்ற சொற்களைக் கை கூப்புதல் மூலம் சைகை மூலம்-உணர்த்துகின்றாளாம்; அவன் தாமரைக் கண்பார்வை தன்பால் திரும்ப வேண்டுமென்பதையும் சொல்ல முடியாது பாதி கூறித் தளர்கின்றாளாம்; எங்ஙனம் தரிப்பேன் என்கிறாளாம்; அவன் வராமையால் நிலத்தைத் தடவி அவன் வருகின்றானா என்று நாடுகின்றாளாம்; அவ்வூரில்-அவன் இருப்பிடத்தில்-கயல்களும் துள்ளித்திரிகின்றன; அவை பெற்ற பேற்றை நாராயணனைப் பெற நினைத்த இவள் பெறவில்லையே என்று குறிப்பால் தாய் உணர்த்துகின்றாள். நான் முன் செய்த பாவம் தான் அவன் இங்கு வராமைக்குக் காரணம் போலும் என எண்ணிப் பாவமே நீ முன்வந்து நின்றால் அவனைக் கேட்க மாட்டேன் என்ற எண்ணம் எழுகின்றது. மற்றும் நம் நிலை நோக்கியதா அவன் அருள் என்று கொண்டு முகில்-வண்ணா! இது உமக்குத் தகுவதோ என்று கூறுகின்றாள் எனவே தாயார் இவள் வினைபலிக்கப்போகின்றதோ அல்லது உம்முடைய அருள் பலிக்கப் போகின்றதோ என்று ஐயவினா எழுப்புகின்றாள்.

மூன்றாம் பாட்டு ‘கண்ணா நீ என் செய்தாய் இவள் இந்நிலை அடைதற்கு’ என்று கேட்டு அவள் தற்போதைய நிலையை வருணிக்கின்றது. அவள் நிலையாவது:- நாணத்தை விட்டுத் தாயர் முன்னிலையிலேயே கணவனுடைய அழகினைப் புகழ்ந்து அவன் பெயரைச் சொல்லுகின்றாள்; கசேந்திரனுக்கு உதவ வந்தது போன்று வரக் கூடுமென்று வானத்தை நோக்கி நிற்கின்றாள்; வரக் காணாமையால் மயங்குகின்றாள்; தடைகளை உண்டு ஒழிக்கும் அவன் திறம் கூறி உள் உள் உருகுகின்றாள்; கண்களால் காணப்படாதவன் தான் அவன். ஆனால் அவன் அருளும் போதும் காணக் கூடாதா என்ன? என்கின்றாள். காகுத்தனாகவும், கண்ணனாகவும் வந்து தோன்றியதோடு மட்டு மன்றி இன்று கொடி கட்டிய மதில் சூழ் கோயிலில் வந்துள்ளது காணாமைப் பொருட்டா? என்று வினவுகின்றாள்; மற்றும் இவள் தன்னிலை இழந்து தோழிமார் கிடத்திய நிலையில் கையும் காலும் உணர்வற்று விழுந்து கிடக்கின்றாள்; அவியும் விளக்குக் கிளர்ந்து எரியுமாறு போல எழுந்து உலாவி மயங்கி வீழ்கிறாள்; தொழுகின்றாள் ‘‘காதல் எவ்வளவு கடினமானது; கடல் வண்ணன் எவ்வளவு கருணையற்றவன்?’ என்றுபுலம்புகின்றாள்.

'ஆழி பிடித்த ஐயா! வந்திடாய் வந்திடாய்' என்றே பல காலும் அலற்றுகின்ருள். இது கண்டு தாய் மேலான அருளுடைய வனே!! இவள் திறத்து நீ செய்ய நினைந்துள்ளதுதான் என்ன வென்று சொல்லிடுக என வேண்டுகின்ருள். மேலும் கணந்தோறும் ஒன்றுடன் ஒன்று மாறுபட்ட நிலைகளை இவள் அடைதலை எடுத் தியம்பி இவளை இவ்வாறு அறிவு கெடுப்பதே! என்கிருள். இவள் உமது அருள் பெருமைக்குக் காரணம் இவள் பாவியான என் திறத் தவளாக இருப்பது தானே என்று மயங்குகின்ருள் தாயும். கண் பனிமல்க இருக்கும் தன் கோமளக் கொழுந்தின் நிலையைக் கண்டு கலங்கி வெறுப்பால் அவனையும் பாராது கலங்குகின்ருள். 'என் திருமகளான இவள் நோவு தீர்தற்கு நான் என் செய்வது? என்று ஏங்குகின்ருள். முடிவில் தலைவி, 'திருமகள் சேர் மார்பனுகிய என் ஆவியே!' என்றும், அவன் தன்னை அழிய மாறியும் காப்பாற்றிய 'நிலமகள் கேள்வனே!' என்றும், 'ஏழெருதையும் வென்று அணைந்த ஆய் மகள் அன்பனே!' என்றும் அவன் தன் தேவி மார்க்கு அருளிய நிலை எடுத்துரைத்து இரங்குகின்ருள், 'ஆனல் இன்று அருளுதற்காகத் தென் திருவரங்கம் கோயில் கொண்டும் அருளாதது ஏன் என்று தெளியகில்லேன் என்று தாய் செயலற்ற தன்மையில் முடிக்கின்ருள். ஆனல் எப்படியோ அவள் முகில் வண்ணன் அடியை அணுகி அடைந்தனள் என்றும் தாய் கூறிவிடு கின்ருள். மானசமாக அவனைக் கிட்டியதுபோன்ற ஒரு நிலையைத் தலைமகள் அடைந்தாள் போலும்!

இவ்வாருக அகப்பொருள் இலக்கணத்தில் அமைந்த பல கூறுகள் அப்படியேயோ அல்லது சிறிது மாறுதலுடனேயோ ஆழ்வார்தம் பாடல்களில் அமைந்து கவிதைச் சுவையை மிகு விக்கின்றன.

## அடிகுறிப்புகள்

1. தொல்காப்பியம்—தொல்காப்பியர்—களவியல் சூ 11, 20
2. தொல்காப்பியம்—தொல்காப்பபியர்—அகத்திணையியல்,சூ 51
3. திருக்குறள்—திருவள்ளுவர்—குறள் 1137
4. தொல்காப்பியம்—நச்சினர்க்கினியர் உரை, அகத்திணையியல் பக்கம் 103

5. பன்னிரு பாட்டியல்—சூ. 245
6. கம்பராமாயணம்--சூளாமணிப்படலம். பா 35
7. தொல்காப்பியம்.
8. தொல்காப்பியம். அகத்திணை சூ 7, 8
9. தொல்காப்பியம் களவியல் சூ 9
10. திருக்குறள் 1330
11. திருக்குறள் 1306
12. தொல்காப்பியம்—பொருளியல் சூ33
13. தமிழ்க்காதல்—மாணிக்கம் டாக்டர் வ. சுப. பக்—446
14. தொல்காப்பியம்—கற்பியல், சூ15
15. தமிழ்க்காதல்—மாணிக்கம் டாக்டர் வ. சுப. பக் 255, 256
16. தொல்காப்பியம்—பொருளியல், சூ 39, 40
17. தமிழ்க்காதல்—மாணிக்கம் டாக்டர் வ. சுப. பக் 63
18. தொல்காப்பியம்—புறத்திணையியல், சூ 5
19. குறுந்தொகை—பா 263
20. குறுந்தொகை—பா 362
21. திருமுருகாற்றுப்படை—நக்கீரர்—வரி 218
22. அகநானூறு—165; கலித் தொகை 9, ஐங்குறுநூறு—387
23. கயமனூர் பாடல்கள்; ஐங்குறுநூறு 371—80; குறுந்தொகை—84 அகநானூறு—49

# சொல்லுந்திறன், நடையியல் சில நயங்கள்

## ஒரு காவியம்

திருவாய்மொழி ஒரு சில தனிப்பாடல்களின் தொகுப்பன்று. ஆயிரத்து நூறு பாடல்களும் தம்முள் தொடர்புடையனவாக அமைந்து முழுமை பெற்ற ஒரு காவியமாக அதுதிகழ்கின்றது. நூலை உரையுடன் படித்தவுடன் ஒருவர் பெறும் எண்ணம் அதுவாகவே இருக்கும். ஆழ்வார் பாடல் பாடிய முறையிலேயே, முன்னர்ப் பாடியது முன்னும், பின்னர்ப் பாடியது பின்னுமாக 'நாம் அப் பாடல்களைப் பெற்றிருக்கின்றோம். என்பது தெளிவு. இதனாலேயே பாடியவருடைய ஆன்மிக வளர்ச்சியை அறிவதும் ஒரு காப்பிய மாகத் திருவாய்மொழியைக் கருதுவதும் முடிகின்றது.

திருவாய் மொழியின் முதல் பாடல் இறைவனுடைய மங்கல குணங்களில் ஈடுபட்ட ஆழ்வார் தன் நெஞ்சினை நோக்கி அவன் அடி தொழுது உய்யுமாறு வேண்டும் முறையில் அமைகின்றது. இறைவனுடைய பல நிலைகளையும் வடமொழி 'சாரீரக சூத்திரம்' சொல்லும் தன்மையில் முதல் இரண்டு பதிகங்களில் செய்திகள் அமைந்துள்ளன. இறுதி இருபதிகங்கள் இறைவனடியவர்பரமபதம் செல்லும் முறையைப் படிப்படியாக வருணிக்கும் வகையில் அமைந்துள்ளன. இடைப்பட்ட பதிகங்கள் (திருவாய் மொழிகள்) ஆழ்வார் இறைவன் பால் தாம்கொண்ட காதலால்-பக்தியால் பல வகையாக அரற்றுவதும் பின் தெளிவதுமாக நூல் முழுவதும் அமைகின்றது. இறைவனைக் கண்டு களித்ததாக ஒரு இடத்தில்

பேசுவார்; அவன் தன்னைச் சுற்றித் தன் அருகிலும், தன்னோடும் தன் ஒக்கலிலும், நெஞ்சிலும், தோளின் மேலும், நாவினுள்ளும், கண்ணினுள்ளும், நெற்றியிலும், உச்சியிலும் நிற்பதாக அவன் தம்மோடு கலந்து அநுபவித்த கல்வியை அடுத்துப் பாடுவார்.(1-9) பின்னர் அவன் தம்மைப் பிரிந்த காரணத்தால் மிக்க ஆற்றாமை உடையராய் ஒரு பெண்ணின் நீர்மையை அடைந்து அந்நிலையில் உலகத்திலுள்ள அறிவில் பொருள்களும், விலங்கு பறவை முதலியவைகளும் தம்மைப் போலவே அவனைப் பிரிந்தமையால் துன்புறுவதாக எண்ணி அரற்றுவார் ஒரு பதிகத்தில் (2-1).

தானும் வானுளார் பெருமானாகிய அவனும் கலந்து பரிமாற்றம் கொண்ட நிலையை - தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஒத்து விளங்கிய இயல்பை - எண்ணி மகிழ்ந்து அப்பேறுபெற்ற தம் நெஞ்சினைப் பாராட்டுவார். அதே பதிகத்தின் இறுதியில் தான் அம்மாயப்பிரான் அடியார் குழாங்களை உடன் கூடுவது என்று கொலோ என இரங்குவார் (2-3). இவ்வாறாக ஒரே பதிகத்திலும் அல்லது வெவ்வேறு பதிகங்களிலும் ஒன்றுக்கொன்று மாறுபட்ட நிலைகளைத் தாம் அடைந்ததாக ஆழ்வார் பாடும் பாடல்களை மேற்போக்காகக் காணும்போது ஏன் இவ்வாறு முரணாக உள்ளன என நமக்கு ஒரு திகைப்பு ஏற்படுகின்றது.

இறைவனைக்காணவில்லை என்றும், அவனைக் கண்டு தழுவியதாகவும் இருவேறு வகையாகக் கூறக் காரணம் யாது? அவரே ஒரு பாடலில் அதற்கு விடைதருகின்றார் (3-7). கண்டதாகச் சொல்லுவது ஞானக்கண்ணால் கண்டது என்றும், அவ்வநுபவத்தைப் புறநிலையிலும் பெற அவாவிய காலை அதனைப் பெறாமையே 'காண்கின்றிலேன்' என்று கூறுதற்கு ஏது என்றும் புலப்படுமாறு பாடுகின்றார்.[1] 'கண்டேன்' என்று பத்து இடங்களில் அவர் குறிப்பிடுகின்றார். ஆனால் காண ஆசைப்பட்டுக் கூப்பிட்ட இடங்கள் இருபதாக உள்ளன. இப்பாடல்கள் யாவும் ஆழ்வார் பரபக்தி நிலையில் இருந்து பாடியன. ஆழ்வாரைப் பக்குவப்படுத்துவதற்கு அவன் மேற்கொண்ட முறை இது.[2] பின்னர் கடைசிக்கு முன் திருவாய்மொழிப்பதிகத்தில் 'அந்தமில் பேரின்பத்து அடியரோடிருந்தமை' என்று பாடுவது பரஞான நிலை என்றும், கடைசித் திருவாய் மொழியில் 'அவாவற்று வீடு பெற்ற நிலை' பேசுவது பரம பக்தி என்ற உயர்ந்த நிலையைக் குறிப்பதென்றும் முன்னோர்கள் விளக்கிக் காட்டுவது[3] உணரத்தக்கதாகும். இதனால் திருவாய்மொழி முழுவதும் ஒரு தொடர்பான அமைப்புடையதென்பது புலப்படும்.

ஒரு 'காவியம்' என்றால் அது முதலும் முடிவும் மாறு கோளின்றி இருத்தல் வேண்டுமென்று நூலிலக்கணம் கூறப் பெறும்[4] திருவாய்மொழி ஒரு 'முழுநூல்' அல்லது 'காப்பியம்' என்றால் இவ்வியல்பும் அதன்கண் அமைந்திருத்தல் வேண்டு மன்றோ? ஆழ்வார் முதல் திருவாய் மொழியில் (பதிகத்தில்) பரம்பொருள் பற்றிச் சொல்ல வேண்டுவன வெல்லாம் சொன்னார். அப்பொருளே பெறுதற்கேற்ற பேறு. அதனால் இரண்டாவது பதிகத்தில் அப்பேற்றினைப் பெறுதற்கு உபாயமான பக்தியோகத் தைச் சொன்னார். பக்திமான்களுக்கு இறைவன் எளியன் என்னும் தன்மையை மூன்றாவதான 'பத்துடை யடியவர்' என்ற பதிகத்தில் வெளியிட்டார்.

இவ்வாறு முதல் பத்து 2, 3, திருவாய் மொழிகளில் கூறிய பக்தி பலத்தோடு நிறைவுறுதலைப் பத்தாம் பத்து நான்காம் திருவாய் மொழியாகிய 'சார்பே தவநெறிக்கு' என்பதில் சொல்லு கின்றார். தொடக்கத் திருவாய்மொழிகளில் பக்தியை வளர்ப்பன வாகச் சொன்ன எளிமை, வடிவழகு மேன்மை முதலிய பண்புகளை இத்திருவாய்மொழியில் மீண்டும் சுட்டிக் காட்டி இறுதியில் முதல் திருவாய்மொழியில் பேற்றுக்கு உபாயமாகக் கூறிய பிரபத்தியை எடுத்துக் கூறி முடிக்கின்றார். 'வீடுமின் முற்றவும்' (1.2) என்ற வஞ்சித்துறையிலமைந்த திருவாய் மொழியில் கூறிய வழிபாட்டு முறை, மந்திரம் முதலியவற்றை மீண்டும் பத்தாம்பத்து ஐந்தாம் திருவாய் மொழியாகிய 'கண்ணன் கழலிணை' என்று வரும் வஞ்சித் துறையிலமைந்த திருவாய்மொழியில் முடித்துக் காட்டுகின்றார். இத்திருவாய் மொழி முடிய இறைவனை ஆழ்வார் பின்தொடர்ந்த படி பேசப்பெற்றது. இதன் பின் வரும் சில திருவாய் மொழிகளில் ஆழ்வாரை இறைவன் தொடருகின்றபடி சொல்லி இறுதியில் அவனடியாகிய வீடு அடைதலோடு நூல் முற்றுப் பெறுகின்றது. இவ்வகையால் முதலும் முடிவும் மாறுகோள் இன்றி இருத்தலே அன்றி அத்தன்மை குறிப்பாகப் புலப்படுமாறு ஆழ்வாராலும் எடுத்துக்காட்டப் பெறுவது அறிந்து இன்புறற் பாலதாகும்.

ஒரு நூல் இனிது நிறைவேற வேண்டின் அதன் தொடக்கத்தே வாழ்த்து, வணக்கம், வருபொருள் உரைத்தல் என்ற மூன்றில் ஒன்றோ பலவோ அமைதல் வேண்டுமெனத் தண்டியலங்காரம் கூறும்[5] அம்முறைக்கேற்ப இந்நூலின் முதற் பாடலில் 'துயரறு சுடரடி தொழுது எழு' என்று வரும் பகுதியில்

'எழு' என்பதால் வாழ்த்தும், 'தொழுது' என்பதால் வணக்கமும், 'சுடரடி' என்பதால் நூல் நுதலும் பொருளும் குறிக்கப்பெறுதல் புலப்படும். இவ்வாறு இம்மங்கல அமைப்பு இயல்பாகவே ஆழ்வார் நூலில் அமைந்ததென்று ஆசார்ய இருதயம்[6] எடுத்துரைப்பதும் ஈண்டு நினைவுகூர்தல் தகும்.

இன்னும் பெருங்காப்பிய நிலை பேசும் போது என்ன என்ன தன்மைகள் அதன்பால் இருக்க வேண்டுமென இலக்கண நூல்கள் குறிப்டுகின்றனவோ அவற்றில் பெரும்பாலன இந்நூலில் அமைந்திருப்பதைக் காணலாம். காவியத்திற்கு ஒரு கதாநாயகன் வேண்டும். அவனைப்பற்றியே—சுற்றியே—எல்லா நிகழ்ச்சிகளும் நடைபெறுதலும் வேண்டும். திருவாய்மொழிக்குக் கதாநாயகன் இறைவனேயாவன்.

'முகில் வண்ணன் அடிமேல் சொன்ன சொல்மாலை ஆயிரம் (7-2-11) என்றும் இதே கருத்தில் வேறுபல இடங்களிலும் ஆழ்வார் பேசுவதால் இதனைத் தெளியலாம். மற்ற பாத்திரங்களாவன—பிரேமநிலை மேற்கொண்ட போது தலைவி, தோழிமார்கள், தாய்மார்கள் என்ற முறையில் பேசும் ஆழ்வாரும், ஞான நிலையில் நின்று பேசும் ஆழ்வாரும், புலவர், தொண்டர், அயற்சேரியர் முதலிய உலக மக்களும், அமரரும் முனிவரும் மடந்தையரும் முதலியவர்களும் ஆவர். தலைமைப் பாத்திரமான இறைவன் நேரடியாக நூலில் எவ்விடத்தும் பேசவில்லை. பேசாத பாத்திரங்கள் என்று எடுத்துக் கொண்டால் ஆழ்வார் நாயகியால் தூது விடப்படுகின்ற நாரை, குருகு, அன்றில், பூவை, கிளி, மயில் முதலியனவும், நேரடியாகப் பேசாதவர்களான வைகுந்தம் புகுகையில் ஆழ்வார்க்கு வாழ்த்துக் கூறுவனவாகக் குறிக்கப்பெறும் முகில், அலைகடல், ஏழ்பொழில், நெடுவரை முதலியனவும் பாத்திரங்களில் (கதை மாந்தரில்) சேர்த்தே எண்ணப்பெறலாம், நூலில் அமைந்த சில பகுதிகளை நாம் நாடகமாக நடித்தோமென்றால் அந்நாடகத்தில் ஞாயிறு, கடல், திங்கள், குன்றம், மேகம், ஆன்கன்று, நாகம், குடமாடு கூத்தர் முதலியவர்களும் பேச வாய்ப்புப் பெறாத பாத்திரங்களாக அமைவர்.

ஒரு பேச்சும் பேசாத இறைவனைத் தலைமைப் பாத்திரமாகக் கூறுதல் பொருந்துமா? என்ற கேள்வி எழலாம். இறைவன் பேசவில்லை என்பது உண்மையே ஆயினும் அவன் பல்வேறு இடங்களிலும் (35) பல்வேறு பெயர்களுடன் நின்று ஆழ்வாரையும்

பிறரையும் பேசவைக்கின்றவனும், பெரிதும் பேசப்படுபவனும் இருக்கிறன். மற்றும் அவனன்றி இக்கவிதையே தோன்ற வாய்ப் பில்லை. ஆகையால் ஆழ்வாரைக் காட்டிலும் இறைவனைக் கதாநாயகனுகக் கோடலே தகுதியும், பொருத்தமும் உடைய தாகும்.

பெருங்காப்பியத்தின் முடிந்த பயனுகிய வீடு அடைதலே இந் நூலின் பயனுமாகும். காப்பியத்தில் இடம் பெறவேண்டுமென்று குறிக்கப்பெறும் இரு சுடர்த் தோற்றம் (2-1-6) (5-4-4) கலவியிற் களித்தல், (4-1-5) புலவியிற் புலத்தல் முதலிய பிற நிகழ்ச்சி பற்றிய பேச்சும் திருவாய் மொழியின்கண் இடம்பெறுகின்றன.

இவற்றிற் கெல்லாம் மேலாகப் பொருள் தொடர்நிலைச் செய்யு ளாக மட்டுமல்லாமல் சொல் தொடர் உடையதாகவும் அந்தாதி ஆகவும்—இந்நூல் அமைந்திருப்பது நினையத்தக்கது, ஏதோ திடீரென்று இறைவன் பாடுவிக்கத் தான் பாடியதாக ஆழ்வார் தெரிவித்த போதிலும் 'மிடைந்த சொல் தொடை ஆயிரம்' (1-7-11) என்றும், அவாவில் அந்தாதிகளால் இவை ஆயிரம் (10-1-011) என்றும் வரும் பாடல் அடிகளால் நீர் நிரம்பிய ஒரு ஏரி தரிக்கமாட்டாமல் தெளிந்து உடைந்து போம். அவ்வாறு ஆழ்வாராகிய ஏரி உடையாதவாறு அவர்தம் பக்தி உணர்வு பாடல்களாக வெளிப்பட்டதென்றும், சொற்கள் தாமாக என்னைக் கொள்', 'என்னைக் கொள்' என்று அவரை நெருங்கின என்றும், ஆகவே அவர் முன்னரே இவ்வாறு பாடவேண்டுமென்றும் திட்ட மிட்டுப் பாடவில்லை; பக்திவேகத்தால் பாடினுர் என்று கூறுவர்.' ஓர் ஆவேசத்தில் ஆழ்வார் பாடினுர்; பாடல்கள் இயல்பாக எழுந்தன என்ற அளவில் நாம் அதனை ஒப்புக்கொள்ளலாம். ஆயினும் பாடியவர் பாடல்களை இப்படி அமைக்க வேண்டுமென்ற சிந்தனையே இல்லாதிருந்தார் என்பது ஏற்புடையதாகாது. முதல் பத்துப்பாடல் பாடும் போதே ஆயிரம் பாடல் பாட வேண்டுமென்ற திட்டம் அவர்பால் இருந்தது என்பதும், 'அந்தாதி' ஆகத் தம் பாடல்களை அமைக்க வேண்டுமென்று உறுதி கொண்டிருந்தார் என்பதும், முதலிலிருந்தே அந்தாதியாகப் பாடல்களை அமைப்பதி லிருந்தும், பதினென்ருவது பாடலிலேயே 'நிரனிறை ஆயிரம்' என்று குறிப்பதினுலும் ஐயத்திற்கு இடமின்றி விளங்கும். தமிழ்க் கவிதை மரபுகளையும் காப்பிய இலக்கணங்களையும் நன்ருகப் பின் பற்றி, பல்வேறு சந்த வேறுபாடுகளையும் முறையாக அமைத்து

இவ்வாறு அமைக்க வேண்டுமென்று நன்கு எண்ணிச் சரிசமமான பல பிரிவுகளடங்கியதாகச் செய்த ஒரு முழுமைபெற்ற ஒப்பற்ற 'காப்பிய'மே திருவாய்மொழி என்பது தெளிவு. தொல்காப்பியர் கூறும் எண்வகை வனப்புக்களில் 'தோல்' என்னும் பிரிவில் இதனை அடக்குதலும் கூடும்."

ஆழ்வார் கடவுளின் கல்யாண குணங்களில் மூழ்கியவர்; அவர்பாடல் தெய்வ அருளால் மலர்ந்தது. எனவே அவை புதுமையும் ஆற்றலும் மிக்கவை. முதலிலேயே ஆயிரம் பாடல் பாட வேண்டுமென்றும், அவற்றை அந்தாதி ஆக அமைக்க வேண்டுமென்றும் உள்ளத்தில் உறுதிப்படுத்திக் கொண்டே அவர் பாடத் தொடங்கினர்; மற்றும் இறைவழிபாட்டிற்காகவும் பக்தியோடு பாடுதற்கும் தன் பாசுரங்கள் இசை கூட்டிப் பாடத்தக்கனவாக இருக்க வேண்டுமென நினைத்திருந்தார் இருந்தமிழ் நூலாகிய திருவாய்மொழி ஒரு பெரிய காவித்திற்குரிய இவ்வியல்புகளை உடையதென்பது முன் விளக்கப்பெற்றது. இந்நூல் முதன் முதலாகப் பாவினங்களால் பாடப்பெற்ற ஒரு 'முழுக்காவியம்' ஆம். இதற்கு முன் எழுந்த எந்தத் தமிழ் நூலும் இவ்வெல்லா அமைப்புக்கும் உட்பட்டதாக அமையவில்லை. எனவே இது ஹெர்பட் ரீட் என்ற திறவாய்வு அறிஞர் குறிப்பிடும் இருவகைப் பனுவல்களில் முதல் வகையைச் சேர்ந்தது எனல் வேண்டும். "ஒரு கலைப்படைப்பு தனக்கென்று தனித்தமைந்த விதிகட்கு உட்பட்டதாயும், அதன் இயல்பில் அதுவே முதலில் தோன்றியதாயும், அமைப்பு உட்பொருள் இரண்டிலும் ஆற்றல் மிக்கதொரு ஒருமைப்பாடுடையதாயும் இருப்பின் அத்தகைப் படைப்பு இயல்பான உயிர்ப்புடையதொன்று—இயற்கைக்காவியம் என்று பெயர் பெறும்" என்பர் ரீட். திருவாய்மொழி அத்தகைய இயற்கையான உயிர்ப்புடைய வடிவம் பெற்ற ஆதியான ஒரு கவிதைப் படைப்பு என்பதில் ஐயமில்லை.

## காவியம் கூறும் பொருளின் மாட்சி

அடுத்து, நம்மாழ்வார் பாட எடுத்துக் கொண்ட பொருளைப் பற்றி எண்ணுவோம். தத்துவ விளக்கமும், இறைவனை நினைந்து உருகிப்பாடிய தோத்திரப்பகுதியும், பிறர்க்கு அறிவுரை கூறும் உபதேசப்பகுதியும், அமைந்த நூலாகத் திகழ்கின்றது திருவாய்மொழி. மற்ற புலவர்களிருக்கட்டும். ஆழ்வார்களிலே கூட நம்மாழ்வார் முதலிடம் பெறுதற்குக் காரணம் அவர் பாடல்களில்

அமைந்த தத்துவ விளக்கமே என்பர். பிற்காலத்தில் ஸ்ரீராமநுசர் என்ற பெருந்துறவி ஸ்ரீபாஷ்யம் என்ற உரை மூலம் 'விசிட்டாத்வைதம்' என்ற ஒரு தனித்தத்துவக் கொள்கை விளக்கம் செய்வதற்கு அவர்க்குத் துணையாக—தூண்டுகோலாக—இருந்தவைகளில் மிக முக்கிய இடம் பெறத்தக்கது மாறனுர் பாடல்களே என்பர்[10] ஆகத் தத்துவம் அமையப் பெற்றிருப்பது திருவாய்மொழியின் ஒப்பற்ற சிறப்புக்களில் ஒன்றெனக் கருதத்தக்கது. ஆயினும் திருவாய்மொழியின் ஆசிரியர் ஒரு தத்துவவாதியா அல்லது நல்ல கவிஞரா என்று கேட்டால் அதற்கு நாம் தரும் விடை என்ன? கவிதை நெறியில் தத்துவம் கூறும் ஒரு தீர்க்கதரிசி நம்மாழ்வார் என்பதே அதற்கு விடை.

தத்துவப் பொருளைக் கூறுது வேறு பொருளைப் பற்றிப் பாடியிருந்தால் நம்மாழ்வாரின் கவித்துவ சக்தி இன்னும் நன்கு புலப்பட்டிருக்குமல்லவா? தத்துவத்தை விளக்குவது கடினமானது; அதில் உணர்ச்சிக்கு உருக்கத்திற்கு-கவர்ச்சிக்கு இடமில்லை. அந்த அளவுக்குத் தத்துவம் பற்றிப் பாடுபவருடைய கவிதை அதற்குரிய சிறப்பினை இழந்துவிடுகின்றதல்லவா? என்ற கேள்விகள் எழுகின்றன. இங்குக் கவிதை எதனைப்பற்றியதாக இருந்தால் சிறக்கும் என்ற அடிப்படைக் கருத்தை நாம் சிறிது சிந்திக்க வேண்டியுள்ளது.

சிலர் கருத்துக்கு முதன்மை தரலாம்; வேறுசிலர் உணர்ச்சிக்கு முதன்மை தரலாம். ஆனுலும் இரண்டும் இன்றியமையாதன என்பதே உண்மை. சுவை அமைந்த பாடல்களைத் தருபவர் கவிஞர்களாகப் போற்றப் பெறுவர். ஆனல் யார் ஒருவர் சிறந்த கவிதைத் தன்மையோடு மேலான கருத்தையும் வழங்குகின்ருரோ அவரே மற்றவர்களினும் மேலான கவிஞராகத் தக்கவர். இதனையே வேண்டர் என்ற அறிஞரும் கூறுவர்.

''நாம் நன்ருக எழுதலாம்; ஒன்றன் மீது ஒன்றினைச் சேர்க்கலாம். ஆனல் ஒரு பொருள் குறித்துச் சிறப்புற எழுதாதவரை எவரும் பெரும் புலவன் என்று அழைக்கப்பெறும் தகுதிபெற இயலாது''[11] இக்கருத்தினை ஏற்றுக் கொண்டு திறனய்வாளர் W.H. ஹட்சன் கீழ்க்கண்டவாறு முடிவு கூறுகின்ருர்.

'மெய்யுணர்வைக் கவிதை வடிவில் பாடும் கவிஞன்பால் ஏமக்கு முரண்பாடு கிடையாது; அவன் கூறும் தத்துவம்

கற்பனைகலந்தும் உணர்வோடும் அமைய வேண்டும் என்பதே நாம் வேண்டுவது: அஃது அழகிய வடிவுடன் திகழவேண்டும்; கவிதை உருவில் வெளிப்பட வேண்டும்; படிப்பவர்க்கு அவன் கவிதையினைப் படிப்பதற்கும் அதே கருத்தை உரைநடையில் படிப்பதற்கும் வேறுபாடு நன்கு புலப்படவேண்டும். இவ்வடிப் படை நிறைவேறுமானுல் ஒரு கவிஞனை ஆசிரியனுகவோ அல்லது அறங்கூறுவோனுகவோ ஏற்றுக் கொள்ளுவோம். ஏனெனில் அத் தகையோன்பால் வாழ்வின் உண்மைகளும் நெறிகளும் உயர்ந்த ஆற்றலையும், மதிப்பையும் பெறும் என்பதனை யாம் அறிவோம்.'[12]

இவர் கூறுகின்ற மாதிரி தத்துவ உண்மைகள் உணர்ச்சி யோடும் கற்பனையோடுமட்டுமல்லாமல் எளிமையாகவும், தெளி வாகவும் கவிதைநயம் பொருந்த அமைந்துள்ளன ஆழ்வார் பாடலில். அதனுல் ஆழ்வார் கவித்வ சக்திமட்டும் அமைந்த வேறு புலவர்களினும் சிறந்த பெருங்கவிஞராகக் கருதத்தக்கவரா கின்ருர். மற்றும் தத்துவவாதிகள் பலர் இருக்கலாம்; அவர்களைக் காட்டிலும் தத்துவங்களை அழியாத கவிகளில் கலந்து தந்தமை யால் தத்துவ அறிஞர்களினும் மேலான இடம்பெற்றவர் ஆகின்ருர் ஆழ்வார். தத்துவ அறிஞர் ஒருவர் கவிஞராக முடியாது; ஆனுல் கவிஞர் ஒருவர் தத்துவ அறிஞராகவும் ஆகும்போது கவிதை உல கிலும் அவர் உயரிய இடம் பெற்றவராகின்ருர். 'தத்துவ அறிஞ ராகத் திகழாத எந்த அறிஞனும் இதுகாறும் சிறந்த கவிஞர் என்ற புகழ்பெற்றதில்லை'[13] என்பர் காலரிட்ஜ்.

ஆகவே ஒரு கவிஞன், தத்துவ ஞானியைவிட ஆற்றலுடை யவன்; வரலாற்று ஆசிரியனை விட மேலானவன்; ஏனெனில் தத்துவ அறிஞன் தருக்கரீதியாக விளக்கும் தத்துவம் மாந்தர் மனத்தில் நன்கு வேர்விடுவதில்லை. ஆனுல் நம்மாழ்வார் கவிதை பென்ஜான்சன் கூறுகின்ற முறைப்படி தத்துவத்தை நமக்கு இன்பச் சொற்களால் உள்ளங்கவரும் இசையால்-தருகின்றது. எனவே அது நம்மனத்தில் நன்கு நிலைபெறுகின்றது. ஆழ்வார் பாடல்பற்றி அவர்தம் முதன்மைச் சீடரான மதுரகவிகள் குறிப் பிடும்போது

''மிக்க வேதியர் வேதத்தினுட்பொருள்
நிற்கப்பாடி என் நெஞ்சுள் நிறுத்தினன்''[14]

என்று பாடுகின்ருர். வேதம் தெரிந்த அந்தணரான முதுமை சான்ற மதுரகவிகள் வேதத்தைப்படித்து உணர்வதிலும் அதன் உட்பொருள் நம்மாழ்வார் கவிதைவாயிலாகப் படிக்கும்போது

நெஞ்சில் நீங்காது பதிகின்றது என்று அதன் தன்மை இயம்பு வதைக்கொண்டு எவ்வாறு நம்மாழ்வாரின் கவிதை சிறந்ததா கின்றது என உணரலாம்.

எவ்வளவுசிறந்த கவிஞராக இருப்பினும் தனித்து முழுமையும் தத்துவமாகவே செஞ்சொற்கவிகளால்தரினும் அதனைச் சுவைப்பது அருமையே. அதனை உணர்ந்தவர் போன்று நம்மாழ்வார் தொடர்ந்து தத்துவ உண்மைகளைத் தருகின்றாரில்லை. இடை இடையே வேறு மாற்றங்களைப் புகுத்தும் இயல்பினைக்காணுகின் றோம். உபதேசம் தொடங்குவார்; அகப்பாடல் முறையைத்தழுவிச் சுவைததும்ப உள்ளுறைப் பொருளமையக் கருத்துக்களைப் பாடு வார்; பாடற் சந்தங்களை மாற்றுவார்; அங்கங்கே கற்பனையும் அணிவகைகளும் கைகோத்துக் கொண்டு செல்லவைப்பார். இவற்றையெல்லாம் நோக்கும்போது ஒரு காவியப்புலவன் மேற் கொள்ளும் எல்லாமுறைகளையும் தானும் கைக்கொண்டு நமக்கு 'வான்கவிதை' வழங்கியுள்ள பெரும்புலவராக நம்மாழ்வாரை மதிக்க வேண்டியுளது.

விடா என்ற அறிஞர் காப்பியம் அமைக்கும் திறன்பற்றிக் கூறும் கருத்து பெரிதும் இதனை உறுதிப்படுத்தும். "ஒரே கருத் தினைத் தொடர்ந்து கொண்டு போவோமானால் அது இன்பத்தை அளிக்காது ஆங்காங்கே வேறு இன்பம் தரும் கருத்துக்களைப் புகுத்துவாயாக. ஆனால் இதற்காகத்தான் இப்படிச் செய்கின்றோம் என்பதை மிகத் திறம்பட மறைத்துக்கொண்டே போகவேண்டும். இன்பக் காட்சிக்கிடையே சில உபதேசங்களைத் தெரிவிப்பாயாக"[15] திருவாய்மொழியின் போக்கில் மாறுமாறன கருத்துக்கள்-யாவும் இறைவனைப் பற்றியனவே—பொருந்த அமைத்துள்ளமை இயல்பாக இருக்கின்றது. எண்ணிச் செய்த மாற்றம் என்று சிறிதும் எண்ண முடியாதவாறு அமைந்துள்ளமை பெருங்கவிஞர்க்கே கைவந்த ஒரு திறனாகும்.

## உணர்த்தும் முறை: எளிமை

தத்துவத்தை உணர்த்தும் முறையை ஒரிரு எடுத்துக்காட்டு களால் காண்போம், உண்மைப் பொருள்கள் மூன்று என்றும், அவை மூன்றல்ல. உள்பொருள் ஒன்றே என்றும் இருவேறு கருத் துக்கள் தத்துவ உலகில் நிலவுகின்றன. இராமாநுசர் இவ்விரு கொள்கைகளையும் இணைத்து அவற்றினிடையே ஒரு பொதுமை

காண்பார் போன்று ஒற்றுமைநயம் கருதின் ஒன்றெனவும், வேற்றுமை நயம் கருதின் ஒன்றின் மிக்க பல எனவும் கொள்ளப் பெறுமென நிறுவுகின்றார். அக்கருத்துக்கு ஆதாரமான ஒருபாடல் முதல் திருவாய்மொழியிலேயே அமைந்துள்ளது. உடல்மிசை உயிர்போல இறைவன் எல்லாப்பொருள்களிலும் பரவியுள்ளான் என்று ஆழ்வார் கூறுகின்றார். இது சுருதி கூறும் கருத்து என்றும் அறிவுறுத்துகின்றார். உடலையும் உயிரையும் இணைத்து நோக்கும்போது உள்பொருள் ஒன்றாக ஆகின்றது;ஏதேனும் காரணம்பற்றி அவற்றைத் தனித்தனி நோக்கின் அவை இரண்டாகின்றன. இறைவன் மற்ற உயிர்களையும் உயிரல் பொருள்களையும் தனக்கு உடலாக உடையவன் ஆகையால் உள்பொருள் ஒன்றே எனலாம். ஆனால் அவற்றினைத் தனித்தனி நோக்க உள்பொருள் மூன்று என்ற உண்மை தெளிவுறும். இஃது 'உடல்மிசை உயிர்என அவன் உளன்' என்ற உவமை மூலம் குறிப்பாகப் புலப்படுத்தப் பெறுவது சிறந்த முறையாகும். இதனை விளக்கும் பாடல் 'திட விசும்பு' (1.1.7) என வருவதாகும்.

இறைவன் உருவுடனும் உள்ளான்; அருவுடனும் உள்ளான் என்பதை மிகச் சுருக்கமாகவும் தருக்கமுறையிலும் நிறுவுகின்றார் ஒரு பாடலில். அது மிக எளிய பாடல். ஆனால் கருத்து நிறைந்த தெளிவான பாடல். அது வருமாறு.

"உளன் எனில் உளன் அவனுருவம் இவ்வுருவுகள்
உளன் அலன் எனில் அவனருவம் இவ்வருவுகள்
உளனென இலனென இவைகுண முடைமையில்
உளனிரு தகைமையொடு ஒழிவிலன் பரந்தே" (1.1.9)

உளன் என, இலன் என, இவைகுணம் உடையவன் என்று எவ்வளவு எளிமையாகவும் தெளிவுடனும் பாடல் அமைகின்றது.

எல்லாப் பொருள்களிலும் அவன் அந்தர்யாமியாக-கரந்துறைபவனாக-இருக்கின்ற தன்மையையும் ஒரு உவமைமூலம் அழகுற விளக்குகின்றார் ஆழ்வார். பூதங்களெல்லாவற்றிலும் அவன் இருப்பினும் அப்பூதங்களின் ஒவ்வொரு அணுவிலும் அதனை ஒரு அண்டமாகச் சொல்லுமாறு பரந்துளன் என்றும், கண்ணுக்குத் தோற்றாத பொருள்களிலும் ஆத்மாவிலும் அவன் கரந்துளான் என்றும், எடுத்துக்காட்டி உலகத்தையும், உயிர்களையும் உடலாகக் கொண்டுள்ள இறைவனின் இயல்பு தெளிவுற ஒரு பாடலில் விளக்கப்பெறுகின்றது. (1.1.10)

இன்னும் இறைவன் எல்லாப் பொருள்களுமாக இருக்கின்ருன் என்பதைப் பலபல வகைகளில் காட்டுகின்ருர் ஆழ்வார். 'புகழும் நல் ஒருவன் என்கோ' (3-4) எனவரும் பதிகத்தில் இவ்வாறு கூறுவேனே? இவ்வாறு கூறுவேனே? என்று ஐம்பூதம் முதல் சிவன் பிரமன் ஈருகப் பலவகையான பொருள்களையும் எடுத்துக்கூறி அவன் யாவையும் யாவருமாக நிற்கின்ற தன்மையை விளக்கும் திறம் கவிதைநயமுடையதாகவும், தத்துவவிளக்கம் செய்வதாகவும் அமைந்துள்ளமைக்கு மற்றுமோர் எடுத்துக்காட்டாகும். இவ்வாறே காதல்மையல் ஏறியதொரு தலைவியின் நிலையடைந்த ஆழ்வார் இறைவனோடு தொடர்பு கொண்ட பலவகைப்பொருள்களையும் எடுத்துக்கூறி அவற்றின்பால் தன் நாதனைக்காண்பதாகக் கூறும் முறையில் பாடல் அமைந்துள்ள திறம் வெகு அற்புதமாக அமைந்துள்ளது. இக்காரணம் பற்றியே இக்காலத் தமிழ்ப் பெருங் கவிஞர் சுப்பிரமணிய பாரதியும் அப்பாடல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார்.[16] இது உயர்ந்த கவிதை வகையைச் சேர்ந்ததாகும். இக்கவிதைகள் படிக்க படிக்கத் தெவிட்டாத இன்பம் நல்குகின்றன. இப்பாடல்கள் உணர்த்தும் நிலைக்கும் மேற்பட்டநிலை தலைவி தானே இறைவன் செய்த எல்லாச் செயல்களையும் செய்ததாகக் கூறியுள்ள—அவன் பேச்சினை அநுகரித்துக் கூறியுள்ள பாடற்பகுதியாகும் (5-6). இங்குக் குறிப்பிடும் இரு பதிகங்களும் தாய்ப் பாசுரமாக அமைகின்றன. இன்னொரு இடத்தில்

"மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்கும் தேவாவோ! ஒருயிரேயோ உலகங்கட்கெல்லாம்; உன்னை நான் எங்கு வந்து உறுகோ?" (8-1-5) என்று இறைவனை நோக்கிப் பாடுகையில் உண்மைத் தத்துவம் எவ்வாறு உணர்ச்சி மிக்க கவிதையாக நிற்கின்றது என்பதைக் காணலாம்.

இதற்கடுத்ததாக ஆத்மா பற்றிய ஒருகருத்து; உயிரின் உண்மைத் தன்மையைச் சொல்ல வந்த கவிஞர் நேரடியாக அதனைப் பற்றிப் பேசாமல் இறைவன் இயல்பைச் சொல்லுகையில் அவன்,

'அடியேனுள்ளான் உடலுள்ளான் அண்டத்தகத்தான் புறத்துளான், (8-82) என்றும், அதற்கு மேலும் சொல்லிக் கொண்டு போகின்ருர். இங்கு என் உயிரினுள்ளான் என்ற பொருளில் 'அடியேன் உள்ளான்' என்கின்ருர். உயிரின் இயல்பு அவனுக்கு அடிமை பூண்டிருத்தலே என்பதை இவ்வாறு நயமுற இயம்பு

கின்றார். இவ்வாறே வீட்டின் இலக்கணம் தெளிவுற வேறு ஒரு பாடலில் விளம்பப்படுகின்றது. (8-8-6).

பேறு இன்னது என விளக்கும் ஒரு திருவாய் மொழியில் மிகவும் சுருக்கமாகவும், அழகாகவும் தான் விரும்பியடைய வேண்டிய பேறு இது என்று கூறுகின்றார் ஆழ்வார். அம்மானே! 'நின் செம்பாத பற்புத் தலைசேர்த்து ஒல்லை' (2-9-1) என்பது அவ்வரி நின் செந்நிறமான பெருமை வாய்ந்த அடித்தாமரைகளை என் தலையில் விரைவில் அணிவாய் என்பது அதன் பொருள். 'நின் கழல் யானெய்த ஞானக்கைதா (2-9-2) என்பர் பின்னும். நின் திருவடியான் அடைய நீ உனது ஞானக் கைதந்து தூக்கி விடுக என்பது இதன் பொருளாகும்.

ஆழ்வார் சமய நெறியைத் தம் பாடலுக்குப் பொருளாக எடுத்துக் கொண்டார். அது வாழ்வில் ஊடுருவி நிற்கும் பகுதியாம். அவர் பாட்டுக்காகப் பாடும் புலவர் அல்லர். தனித்த தொரு நோக்கம் கொண்டிருந்தவராவர். அவர் கூறும் தத்துவம் இந்நூலாசிரியரால் அவரது ஆசாரிய இருதயம் என்ற நூலில் விளக்கப் பெற்றுள்ளமையான்[17] இங்கு இலக்கிய நயமே சிறப்பாக எடுத்துரைக்கப் பெறுகின்றது. இதன்கண் உள்ளத்தை உருக்கும் இயல்பு-கனிவிக்கும் நீர்மை நிறைய அமைந்து அழகு தருகின்றது. சில எடுத்துக் காட்டுக்கள் காண்போம்.

## உள்ளமுருக்கும் இயல்பு

தமிழில் அமைந்த உள்ள முருக்கும் அப்பாடல்களை ஆங்கிலத்தில் கொண்டுவருவதென்பது மிகமிக அருமை. அவற்றின் உண்மை இயல்பை உணர வேண்டுமானால் தமிழில் அவற்றை மீண்டும் மீண்டும் படித்துப் பார்த்தால்தான் விளங்கும். எனினும் அவற்றின் கருத்துக்களை ஒருவாறு இங்குத் தருகின்றேன்.

"நான் சீலமில்லாத சிறியவன்; அதற்கு மேலும் நான் முன் செய்த வினைகளுக்கு எல்லையே இல்லை. உன்னை நோக்கி, உயிர்களைக் காப்பான் ஞாலம் உண்டவனே! ஞானவடிவினனே! எல்லா உயிர்களையும் உன்உள் அடக்கிய நாராயணனே! என்று பல காலும் திரும்பத் திரும்ப அதனையே சொல்லிக் கொண்டு கைகளைத் தலைமீது இருத்திக்கொண்டு ஓலமிட்டால் உன் அழகிய மேனியை நான் காணுமாறு நீ வருகின்றாய் இல்லையே. நீ வராவிட்டாலும் என்னையேனும் உன்பால் அழைத்துக் கொள்ளலாமே. அதுவும் செய்யாதிருக்கின்றாயே (4-7-1). என்று அரற்றுகின்றார்.

அழிவில்லாதனவாகிய தீவினைகளை எத்துணை அளவு நான் செய்தேனோ? தான் வேண்டாதிருக்கவும், மாவலிபால் சென்று வரம் வேண்டி உலகினை உன் திருவடியால் அளந்து உரிமை யாக்கிக் கொண்ட என் தந்தையே! எளிமைக் குணமுடைய தாமோதரா! என்று பலப்பலகாலும் அவற்றையே சொல்லி நான் கூவிக் கூவி நெஞ்சானது உருகிக் கண்களினின்று நீர் சோர நிற் கின்றேன். எனினும் என்னுடன் ஒரு வார்த்தையும் பேசமாட் டேன் என்கிறாயே. 'நீ தகுதி உடையவன் அல்லை பாவி, என்று ஒரு சொல் சொன்னாலும் போதுமென நான் உணர்கின்றேன். உன்னை என் கண்ணால் காணவேண்டுமென்பதே என் ஆசை; அதற்கேற்ப என் கண்முன் நீ வந்து கூறும் எந்த ஒரு சொல்லும் எனக்குப் போதுமே என்று அவனைக் காண்பதில் தனக்குள்ள வேட்கை மிகுதியை ஆழ்வார் வெளியிடுகின்றார். (4-7-3).

மற்றொரு இடத்தில், நான் உன்னை வந்து அடைந்தேன் இல்லை; உன்பால் உள்ள நித்திய சூரிகளைப் போன்ற நிலை எனக்கு இல்லை. இங்கு இவ்வுலகர்களைப் போன்று உண்டு உடுத்து ஐம்புல இன்பங்களைத் துய்த்து உன்னை மறந்திருக்கும் நிலையிலும் நான் இல்லை. உன்னைக் காணவேண்டுமென்ற அவா வெள்ளத்தில் வீழ்ந்து நான் அமைதியிழந்து தவிக்கின்றேன். என்னை ஆட் கொள்வதில் உனக்கு என்ன தடை? பிராட்டியை ஏற்க இலங் கையை அழித்த தலைவனே! மக்களைக் காப்பதற்கென்றே இவ் வுலகில் வந்து சீவரமங்கல நகரிலே சங்கு சக்கரக்கையனாக நிற் போனே! தமியனாக உள்ள எனக்கு அருள்வாயாக (5-7-2) என் கிறார். என்று கொல் உன்னைச் சேர்வது? என்று இரங்கி அரற்றும் துயரமிகுதியை இன்னொரு பாடல் 'ஓ'காரங்களால் தெரிவிக் கின்றது.

பரந்த மூவுலகுகளையும் படைத்த நாபிக் கமலத்தை உடைய வனே! ஓ! அவற்றை அளந்த பாதத்தை உடையோனே! ஓ! குளிர்ந்த தாமரைக் கண்ணனே! ஓ! தனித்த ஒப்பற்ற தலைவனே! ஓ!? தழுவும் தாமரைக் கைகளை உடையோனே! ஓ! உன்னை என்றோ நான் சேர்வது? (7-6-1)

இதன்கண் விளிதோறும் வரும் 'ஓ' என்ற இடைச்சொல் அவர்தம் புலம்பலின் துயர மிகுதியைத் தெளிவுறக் காட்டு கின்றது.

'நினைக்குந்தொறும் சொல்லுந்தொறும் என் நெஞ்சு இடிந்து உருகின்றது; உனது சீரினைப் பாடினாலும் என் ஆருயிர் வேகின்றது; குளிர் சுனைகளை உடைய அழகிய சோலைசூழ் தென் காட்கரை என் அப்பனே! நான் உனக்கு அடிமை செய்யும் தன் மையை நினைக்கவும் மாட்டுகின்றிலேன்' என்று துன்பத்துடன் கூறுகின்றார் மற்றோர் இடத்தில் (9-6-2)

இன்னொரு பாடலில் இறைவன் அமர்ந்துள்ள திருநாவாய் என்ற திவ்விய தேசத்திற்குச் செல்ல வேண்டுமென்று தமக்கு உண்டான உள்ளத் துடிப்பின் வேகத்தை இவ்வாறு கூறுகின்றார்.

தேவர்க்கும் முனிவர்க்கும் எப்பொழுதும் அவர்தம் முயற்சிக்கு எட்டாது இருக்கின்ற அருமையன்;மூவர்க்கும் முதல்வன்; ஒப்பற்ற மூன்று உலகங்களையும் ஆள்பவன்; (காப்பவன்) அத்தகைய தலைவன் விரும்பி உறையும் இடம் திருநாவாய். அங்குப் போய்ச் சேரும் பேறு பெற்றவர்கள் யாரோ? ஐயோ நான் முடிந்தேன் என்று துக்கப்படுகின்றார் (9-8-9). இது அவலத்தின் உச்சமன்றோ!

இறைவனைக் கண்டு இன்பம் பெற அவாக்கொண்ட ஆழ்வார் அவனுடைய நீர்மையை—எளிவரும் தன்மையை—எண்ணி எண்ணித் தானும் உள்ளம் உருகுவதாக உருக்கமிக்க முறையில் வெளியிடும் இடங்கள் உண்டு. இவ்வாறு அவரை மிகவும் ஈடு படுத்திய இறைவன் தோற்றம்கண்ணனே.கண்ணனுடையபிள்ளை விளையாட்டுக்களை நினைந்து நினைந்து உருகுவதாக ஒரு முழுப் பதிகமே (5-10) அமைந்துள்ளது. அப்பாடல்கள் கல்லைக் கனி விக்கும் தன்மையனவாம். ஒரு உதாரணம்.

குழலில் பூவணிந்து கொண்டு தாயைப் போலே வந்த மாயப் பேயான பூதனையின் முலையை உண்ணுமுறையில் அவள் உயி ரையும் உறிஞ்சி உண்ட பிள்ளையின் தெளிவும், அப்படிக் கன்றிக் கண்ணன் படுத்திருந்த தொட்டிலின் சக்கரமே அவனைக் கொல்லப் பேர்ந்து வந்தகாலை அது தொலைய அவன் தன் செம்மையான பாதத்தால் செய்த சிறு வீரச்செய்கையும், அவன் வெண்ணெய் கவர்ந்துண்டான் என அயலகத்தார் கூறும் சொற்கேட்டு அன்னை யானவள் அவனை அடிக்க ஒரு கோல் தாங்கிச் சென்றகாலை, அவன் தன் கமலக் கண்களில் நீர் மல்க நின்ற நிலையும் வந்து தன் நெஞ்சை உருக்குகின்றன என்று ஆழ்வார் கண்ணபிரானின் குழந்தைச் செயல்களில்—விளையாடல்களில்தான் உள்ளம் பறி

கொடுத்த பான்மையை அழகான கவிதையாக்கித் தந்து நம்மை வியப்படையச் செய்கின்றார்.

இவையாவும் ஆழ்வார் ஞானநிலையில் தாமான தன்மையில் நின்று பேசிய பேச்சுக்களே.

பெண்நிலையடைந்து பேசுகின்ற இடங்களிலும் இத்தகைய உருக்கமான—ஏன் இதனினும் அதிக உருக்கம் நிறைந்த பாடல்கள் அமைந்துள்ளன. சில எடுத்துக் காட்டுக்கள்:

உயிரற்ற பொருள்களையும் பறவை முதலியவற்றையும் கண்டு, ஆழ்வார் நாயகி அவற்றின் உண்மை இயல்பை மாறாகக் கருதி அவையும் தம்மைப்போல் திருமாலைப் பிரிதலால் நெஞ்சிழந்து அல்லலுறுகின்றன என்று எண்ணி அவற்றிற்குமாகத் துக்கப்படும் நிலையை ஒரு பதிகம் முழுவதும் (2-1) மிக உருக்கமாக ஆழ்வார் கூறுகின்றார். இது ஒப்பற்ற முறையிலமைந்த பகுதியாகும்.

தலைவனைப் பிரிந்த நிலையில் ஆற்றாமை மீதூர்ந்து மடலேற நிச்சயிக்க அதுவும் கூடாதவாறு இரவு வர, அவ்விரவில் தலைவியான ஆழ்வார் புலம்பும் புலம்பல், கல்லையும் கனிவிக்கும் தன்மையதாய் உள்ளது.

நெஞ்சமே! நீயும் என்னைக் கைவிட்டு விட்டாயே! இராப் பொழுதோ சிறிதும் முடிவதாகக் காணோம்! பல ஊழிகளாகப் பெருகிவிட்டது; கடுஞ்சிலை ஏந்திய என் காகுத்தன் உடன் இருப்பின் இது நீளாது. (கண்ணனே அன்றிக்) காகுத்தனும் வருகின்றிலன். இனி இறப்பதுதான் ஒரேவழி. ஐயோ! மாயவும் எனக்கு வழியில்லையே. பெண்ணான நான் செய்த கொடுவினையால் அவ்வுரிமையும் பெற்றேனில்லையே என்று கலங்கி மொழிகின்றாள் (5-4-3) ஆழ்வார் நாயகி.

தூதுவிடுகின்ற முறையில் அமைந்த பாடல்களிலும் இத்தன்மை காணப்பெறும். 'நீ என் பூவைதானா? அல்லைபோலும்! சிறுபூவையே! என் நெடுமாலார்பால் என்தூதாய்ச் சென்று எனது ஆற்றாமையைத் தெரிவி என நான் சொல்லவும் நீ அதனைச் செய்யவில்லை. என் உடலழகும் மென்மையும் தளரப்பெற்றேன். இனி உன்பாடு என்ன? உன் வாயலகில் உணவூட்டி வளர்க்க வேறு பிறரைத் தேடிக்கொள்' என்று தான் முடிகின்ற தன்மையையும் அந்நிலையிலும் அச்சிறுபூவைபால் அன்புகாட்டும் இயல்பையும்

வெளியிடும்பாடல் (1-4-3) அவலச்சுவை நிரம்பியதாக அமைந்து அழகுடன் திகழ்கின்றது. பார்க்க (9-5-10)

'வேய்மரு தோளிணை' (10-3) எனவரும் பதிகமும் மாலைப் பூசலான மல்லிகைகமழ் தென்றலும் (9-9) தனிமையின் துயரச் செய்தியை அழகுற விளக்கும் பகுதிகளே.

## நடையியல் :

''நடையியல் ஆய்வின் முதல்படி ஒரே ஒலி திரும்பத் திரும்ப வருதல், சொல்முறை மாறி வருதல், சிக்கலான மரபுகளை அமைத்தல் முதலான மாற்றங்களை நோக்கி அறிவதாம்; இவை தெளிவு உறுதி அழுத்தம் அல்லது அவற்றின் மறுதலையை உணர்த்தும் தன்மையனவாயமையும்; இம்மாறுபாடுகளும் தெளி வின்மையும் நயமான அழகுகளேயாம்"[18]

நடையை, ஆராய வேண்டிய முறையினையும் தேவையையும் இதனால் அறியலாம். கவிதையை அநுபவிப்பதற்கு அது துணை செய்வதால் அதுபற்றி ஆய்வோம். அதற்கு மேலும் கவிஞனின் பண்புகளையும் அவனது நடை தெரிவிக்குமன்றோ?

''உயர்வற உயர்நல முடையவன் யவனவன்
துயர்அறு சுடரடி தொழுதெழு என்மனனே." (1-1-1)

இம்முதல் பாட்டிலேயே 'உயர்நலமுடையவன் சுடரடி தொழு தெழு' என்று நேரடியாகக் கூறாமல் 'உடையவன் எவனோ அவன்' என்று வாக்கியம் அமைவது தமிழ்மொழி அமைப்பிற்குப் புதுமை யான ஒரு முறைதான்; ஆங்கிலம் போன்ற மொழிகளில் வாக்கிய அமைப்பு இவ்வாறு அமைதல் உண்டு; எவனோ அவன் என்று சுட்டுவது போன்று 'யவன் அவன்' என்பது அமைந்துள்ளது. செய்யுளில் பேச்சுவழக்கிற்கு மாறான இயல்புகள் வருதல் உண்டு. ஆதலினால் ஆழ்வாரும் இத்தகையதொரு புது அமைப்பை ஆள் கின்றார். அதனால் ஒரு நல்ல பலன் ஏற்படுகின்றது எனலாம்; தான் தொழுதற்கு ஏதுவான காரணங்களைக் குறிப்பது போல் முதற்பகுதி அமைந்துள்ளது. இவ்வாறு தன்னை ஈடுபடுத்திய பண்புகளை முதலில் மொழிவது சுவையுடையதாகவும் உள இயல்பிற்கு முற்றும் பொருந்தியதாகவும் ஆகின்றது.

இன்னொருவகை ஒரு தொடரின் இறுதியில் வினைமுற்று இருப்பின் அடுத்துவரும் தொடரில் அவ்வினைமுற்றினை எச்சமாக

அமைத்து இரு தொடர்களுக்கும் ஒரு தொடர்ச்சி தோன்ற அமைக்கும் முறை. கேட்பவர் சரியாக உணர்ந்து கொள்வதற்காக நிறுத்தி நிறுத்திப் பேசுவது போல் அமையும் ஒரு முறை இது. உலகவழக்கில் மிகுதியும் காணப் பெறுதலுண்டு. ஆழ்வார் பாடலிலும் அத்தன்மையான அமைப்புக் காணப்பெறுகின்றது. எடுத்துக்காட்டு:

பரோபதேசம் செய்கின்ற இடத்தில் கழிமின் தொண்டர்கள் (அவனை வணங்கி நாட்களைக் கழிமின்) என்கிறார். அடுத்து, கழித்து என்று தொடங்குகின்றார். பின் 'தொழுமின்' என்கின்றார். அதனை அடுத்த தொடர் 'தொழுதால்' என்று முன்னதன் எச்ச வாய்பாட்டில் தொடங்குகின்றது. அச்செயல் வினையை மாள்வித்து ஆக்கம் தரும் என்று பாடல் முடிகின்றது. (1-6-8).

மற்றொரு வகை வாக்கிய அமைப்பு, பின் வருமாறு அமைகின்றது. 'அடைவது' என்று பாடல் தொடங்குகின்றது. அடைவது எது? என்பதற்கு விடை அடுத்ததாக அமையும். இங்கு மலர் மங்கைதோள் என்பது விடையாக அமைகின்றது. அதே போல மிடைவது அசுரர்களுடன் போர்; கடைவது கடலுள் அமுதம்; என் மனம் உடைவது அவருக்காகவே என்று சொல்லும் முறை (9-3-6) புதுமையாக உள்ளது. இங்கு ஒவ்வொருவரியும் தனி ஒரு சிறு வாக்கியமாகின்றது. எழுவாயும் பயனிலையும் தொடர்ந்து வருகின்ற அமைப்பு முறைக்கு இது மாறுபட்டிருப்பதால் சுவையை மிகுவிக்கின்றது என்பது படித்துக்கொண்டே வரும்போது நன்கு புலனாகின்றது.

பல பாடல்களில் முதலில் வினைமுற்றினைச் சொல்லிப் பின் அவ் வினையைச் செய்த கருத்தாவை அல்லது செயப்படு பொருளைக் கூறும் முறை அமைந்துள்ளது. பாடல் முழுவதும் ஒரே வாக்கியமாக அமைகின்றது. இதுவும் ஒரு தனிச்சிறப்புடைய நடை. இவ்வாறு கூறுவதால் அழுத்தமும் தெளிவும் ஏற்படுகின்றன. (உ.ம்)

உறுவதாவது - செய்யத்தகுந்ததாவது என்று பாடல்(4-10-10) தொடங்கிப் பின் அது எது என்று கூறி முடிப்பர். உறுவதாவது குடக்கூத்தனுக்கு ஆட்செய்வதே என்று பாடல் முடிகின்றது. அவ்வாறே 'சேர்மின்சென்று' என்று தொடங்குகின்றது பாடல் (7-3-9),

முடிவு : தென்திருப்பேரையின் மாநகரே-என்று சேருமிடம் தெரிவிக்கப்பெறுகின்றது. இவ்வாறு மிகப் பல பாடல்கள் உள்ளன. பூட்டுவில் பொருள்கோள் என்னும் பெயரில் இலக்கணம்[10] இதனைக் குறிக்கும். இயல்புக்கு மாறுன இவ்வகை நடை அமைப்பால் படிப்பவர்களுக்கு ஓர் எழுச்சி ஏற்படுகின்றது. 'முடியானே' எனத்தொடங்கும் திருவாய்மொழிப் பதிகத்தில் (3-8) 2 முதல் 6 வரை உள்ள 5 பாடல்களும் வாசகம், கைகள், கண்கள், செவிகள், ஆவி ஆகிய இவ்வைந்தும் வேறு புலன்களையும் (பொறிகளின் அநுபவத்தையும்) சேர்த்து அநுபவிப்பதாகப்பொருள் கூறுமாறு பாடல்களின் அமைப்பு இருப்பது முற்றும் புதுமையானது. இதனுல் இறைவன்பால் ஆழ்வார்மட்டுமல்லாமல் அவர் கரணங் களும் ஒவ்வொன்றும் போட்டியிட்டுக்கொண்டு பெருவிடாய் உடையனவாக இருந்த தன்மை புலப்படுத்தப் பெறுகின்றது. இதற்காக மேற்கொண்டிருக்கின்ற முறை புதுமையாகவும் அழகாகவும் அமைந்துள்ளது.

தாய்பேசும் பாசுரங்களாக அமைந்த 'மண்ணையிருந்துதுழாவி' (4-4) 'கடல் ஞாலம் செய்தேனும்' (5-6) என்னும் இரண்டும் 'என்னும்' 'என்னும்' என்ற சொற்களைப்பெற்று முறையே என் செய்கேன் என்றும், என்சொல்லுகேன் என்றும் முடியும் திறமும் புதியதோர் முறையே. இவ்வாறே என்கோ என்று 53 சொற்களை 8 பாடல்களில் 32 வரிகளில் அமைத்து, இறைவன் யாவையும் எவருமாக இருக்கின்ற தன்மையை எடுத்துச் சொல்ல இயலவில்லை என்று-ஏன் 'எண்ணுமாறும் அறியமாட்டேன்' என்று முடிக்கும் திறமும் சுவைபயக்குமாறு அமைந்துள்ளது. நடை எளிமையாகவும் கவர்ச்சிகரமாகவும் இருக்கின்றது.

வைணவர்கள் - மாதவன் பூதங்கள் - மண்மேல் எங்கும் பரந்தனர் என்று கூறி, அவர்கள் இசை பாடியும் துள்ளி ஆடியும் திரிகின்ற தன்மையையும் அவர்தம் நோக்கத்தையும் வெளிப் படுத்தி அன்னுரைத் தொழுது உய்யுமாறு மற்றவர்க்குக் கூறி வாழ்த்தும் பகுதி (5-2) மிக்க கம்பீரமான நடையுடையதாக அமைகின்றது. 'பொலிக பொலிக பொலிக' என்றும், 'கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கு இனியன கண்டோம்' என்றும் வருகின்ற பாடல்களும், அப்பதிகத்தில் பின்வரும் மற்றப் பாடல் களும் படித்துப் பார்த்தால் அவற்றின் மிடுக்கும் கம்பீரமும் புலப்படும்.

மகள் துன்பமிகுதியால் மயங்கிக் கிடக்க, அதனைப் பார்த்து ஆற்றாளாய் அவள் தோழியும் மயங்க, அது கண்டு அவள் பிழைப்பதற்குரிய வழிகளை—உபாயங்களை—எண்ணுகையால் தரித்திருக்கின்ற தாயார் தன் மகள் இழந்த பொருள்கள் இன்ன இன்ன என்று ஒவ்வொன்றாகக் கூறும் நிலையில் அமைந்த பாடல்கள் (6-6) ஒரு தனி நடையில் அமைகின்றன. ஒரு நகரமோ பேட்டையோ தீப்பிடித்து எரியத் தொடங்கினால் ஒரு மாடம் முறிந்தது; மாளிகை முறிந்தது என்று கூறும் தன்மைபோல இங்கும் தாயின் பேச்சு உள்ளது. தன் மகளைப் பிரிவுத் துன்பமாகிய தீச்சுட அதனால் அழிந்தனவற்றைத் தாய் சுட்டிக் காட்டுகின்றாள். வளை, நிறம், அழகு, பெருமை, பண்பு, கல்வி, மெய், ஒளி, பெண்மை, ஒப்பனை அழகு, மரியாதை இவற்றில் ஒவ்வொன்றை ஒவ்வொரு பாடலில் தனித்தனியே குறிக்கின்றாள் தாய். இப்பாடல்களில் இறைவனைக் குறிக்க மூன்று மூன்று தொடர்களை அமைத்திருப்பது வெண்பாவில் அமைந்த திரிகடுகம் போன்ற கீழ்க்கணக்கு நூல்களில் ஒவ்வொரு பாடலிலும் குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள செய்திகள் குறிக்கப்பெறுகின்ற முறையை ஒட்டியதாக அமைந்துள்ளது.

### சில அரிய சொல்லாட்சி

'நாம்' என்ற சொல் தன்மையில் அல்லாமல் முன்னிலைப் பொருளில் வருதல்—'நாம் இதுவே தக்கவாறு' (6-8-4) நுமக்கு இதுவே தகுந்தது என்பது இதன் பொருள். 'நங்கட்கு' (8-1-11) என்பது உங்கட்கு என்ற பொருளில் வருகின்றது. 'மற்று யான் கிலேன்' (3-9-7) யான் ஆற்றல் உடையேன் அல்லேன் என்பது இதன் பொருள். இவ்வாறே 'கிற்பன் கில்லேன்' (3-2-6) என்றும் பாடுவர். 'கில்' என்பது ஆற்றலுணர்த்துவதோர் இடைச் சொல். அதன் அடியாக ஒரு சொல்லைப் படைத்து வழங்கும் ஆட்சியை ஆழ்வாரிடந்தான் நாம் காணுகின்றோம். பரிபாடல் நூலில் ஓரிடத்து மட்டும் இதனை ஒத்ததொரு ஆட்சியுண்டு. ஆனால் அச்சொல்லுக்கு வேறுபாடமும் அங்குக் காணப்பெறுகின்றது. ஆழ்வார் உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் அச்சொல்லை ஆளுகின்றார். பல இடங்களில் பயின்றும் அச்சொல் வருகின்றது. 'உயர்வற உயரும்' (2-7-11) 'அன்னவசஞ் செயும்' 'மன்னக மலமற' (1-3-8) 'கைதலை பூசலிட' (5-1-7) 'திலதமன்ன' (10-7-4) 'செந்நெற் கவரி வீசும்' (7-3-6) என்ற தொடர்களை

ஆழ்வார் ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களில் ஆளுவதால் இவை அவர் உகந்த தொடர்கள் என்று கொள்ளுதல் கூடும். சிறப்பில் வீடு (2-9-5) என்பது சிறப்பிற்கு இடமான வீடு என்று பொருள் படுவது ஒரு புதுமையான ஆட்சியே.

ஆழ்வார் பாசுரங்களில் வேறு சில புதுமையான ஆட்சிகள் உள. அவற்றுட் சில: 'சுண்டாயம்' (7-8-8); வார்த்தை (7-5-6); காது—கூதை(9-1-9); இறுகல் இறப்பு (4-1-10); கொல்லை—சில்லை (6-7-4); நல்லனகள் (6-7-6)

### சில செய்யுள் விகாரங்கள்

வீடுமின் (1-2-1) என்பது விடுமின் என்பதன் முதல் நீளல். வியவாய் (7-8-4) என்பது வீயவாய் என்பதன் முதல் குறுக்கல். பாமருமூவுலகம் என்பதில் (7-5-1) பாவம் என்பது பாஎனக் கடை இரு எழுத்துக் குறைந்து வந்துள்ளது. நகத்தாய் (9 4-7) எனற் பாலது நகந்தாய் என மெலித்தல் விகாரமாய் வந்துள்ளதும் செய்யுள் விகாரமே. திருமோகூர் ஆத்தன் (10-1-6) இதில் ஆத்தன் என்பது அத்தன் என்ற சொல்லின் முதல் நீட்சி ஆக லாம். சிலர் ஆப்தன் என்ற வடசொல்லின் சிதைவு என்பர்.

### பிறநாட்டு வழக்குகள்

அர்ச்சிக்கின்று (10-2-6) அர்ச்சிக்கின்றார். இது திருவனந்த புரம் பற்றிய பாடலில் வருகின்றது. அந்நாட்டு வழக்குச் சொல்லை ஆழ்வார் இப்பதிகத்தில் அமைத்தது சிறப்பே. மலையாள மொழியில் இன்றும் பால்காட்டும் விகுதி இன்றி வினைமுற்றுக்களை வழங்குகின்றனர் அன்றோ? இது அத்தகைய வழக்கே. ஆழ்வார் காலத்தில் அங்கு மலையாள மொழி பேசப்பெறுதற்கு வாய்ப்பில்லை. ஏனெனில் அன்று அம்மொழி உருவாகவில்லை. எனினும் இட வழக்கு தக்கதேயன்றோ? மற்றும் 'வகுக்கின்று' (1-4-8) என்ற ஆட்சியும் உள்ளது. அந்நாட்டு வழக்காகிய குறுக்கும் என்ற சொல்லையும் அந்நாட்டுத் திவ்விய தேசமாகிய திருநாவாய்பற்றிய பாடலில் (9-8-1) அமைத்துள்ளமையும் ஆழ்வார் அவ்வந்நாட்டு வழக்குக்களை அறிந்து அமைக்கும் இயல்பினர் என்பதை நமக்கு அறிவிக்கின்றன. குறுக்கும்—அணுகும். அணிமையது என்று பொருள். அணுகும் என்ற சொல்லை அப்பதிகத்தில் பின்னர் ஆழ்வார் ஆளுகின்றார். (9-8-2, 9, 10) இச்சொல்லாட்சி பற்றி எம்பெருமானார் இராமநுசரும் பெரிதும் உகந்தார் என்று ஒரு நிகழ்ச்சி ஈட்டு உரையில்[21] கூறப்பெறுகின்றது.

## சொல்லாராய்ச்சி

ஆழ்வார் வாழ்ந்த காலத்தின் தன்மைக் கேற்பவும், அவர் பாட எடுத்துக்கொண்ட பொருளின் இயல்புக்கேற்பவும் அவர்தம் பாடல்களில் ஓரளவு வடசொற் கலப்பும் உள்ளது. வடசொற் களைப் பெரும்பாலும் அக்கால நிலைமைக்கேற்பத் தமிழ் ஓசை உடையனவாகவே அவர் அமைக்கின்றார். சில எடுத்துக் காட்டுக்கள்:

ருணம் கொண்ட தெப்பராவர் (9-1-4)—தாம் கடன் கொடுத்ததைத் திரும்பி வாங்கிக் கொண்ட அல்பர்களாய் உதவி செய்ய மாட்டார்கள் என்பது இதன் பொருள். ருணம் என்பது தமிழ்ச் சொல்லன்று. தப்ரர் என்ற வடசொல் தெப்பர் எனத் தமிழோசை யுற்று நிற்கின்றது. நக்கபிரான்—(3-10-9) ஆடையில்லாதவன்; நம (3-3-7)—வணக்கம்; பவித்திரர்—(2-3-8) சுத்தியைக் கொடுக்கின்றவர்; என் சவிப்பார் (3-5-5) என்ன ஜபிப்பார்கள்; சயமே அடிமை தலைநின்றார்—(8-10-1) இயல்பாக அடிமை செய்பவர். சயம் என்பது ஸ்வயம் என்பதன் திரிபு. சன்மசன்மாந்தரம் (3-7-7) பலபிறவிகளில்.

## கொச்சைச் சொற்கள் ஆட்சி

விசாதி (5-2-6)—வியாதி என்று இன்று வழங்கும் உடல் நோய் என்று பொருள்படும் சொல். மனிசர் (3-10-6)—மனிதர் என்பதன் திரிபு. குதிரி (5-3-9) அடங்காப் பெண். நிச்சித்திருந்தேன் (10-4-4)—உறுதி செய்திருந்தேன். பிராக்கள் (3-7-5)—பிரான்கள், தலைவர்கள். சாதுசனங்கள் (3-5-4)—சாதுத் தன்மை உடையவர்கள். சேமம் (4-6-9)—பாதுகாப்பு. பாவனை (3-4-10)—பூசனை, (2-2-4) வழிபாடு. முக்கியம் (6-10-9). கஞ்சன் (3-5-5) கம்சன். இவை வழக்கிலுள்ள சில வடமொழிச் சொற்களும் கொச்சைச் சொற்களும் ஆம்.

## கொச்சைச் சொற்களையும் பிற புதுச் சொற்களையும் ஆளும் முறை

'நம' என்னும் வடசொல்லிலிருந்து நமன்று (3-3-7) என்று ஒரு புதிய எச்சச் சொல்லைப் படைக்கின்றார். நிச்சயம் என்பதிலிருந்து நிச்சித்திருந்தேன் என்று வினைமுற்று ஆக்குகின்றார். அர்ச்சனை என்பதிலிருந்து அர்ச்சிக்கின்று என்று பால் காட்டும்

விகுதியில்லாத வினைமுற்று அமைத்து வழங்குகின்றார். இன்று நாம் வைஷ்ணவர், விஷ்ணு, இஷ்டம், கஷ்டம் என்று வழங்கும் சாதாரண வழக்கிலுள்ள சொற்களையும் வைட்ணவர் (5-5-11) விட்டு (2-7-4) இட்டம் (2-4-9) கட்டமே (7-2-4) என்று தமிழாக்கம் செய்யும் முறை வியத்தற்குரியதாய் உள்ளது.

நல்ல தமிழ்ச் சொற்களை ஆளும் முறையிலும் இவர் பாடல்களில் சில புதுமைகள் உள. பெரியவர்கள் செய்கின்ற காரியம் எதுவானாலும் அதனைச் 'செய்தருளுதல்' என்று மரியாதை தோன்றச் சொல்லுதல் தமிழ்வழக்கு. அம்முறையை ஓரளவு ஒட்டிய ஓர் இயல்பை இவர்பால் காணுகின்றோம். கண்ணனின் காலால் உதைத்துத் தள்ளப்பெற்ற சக்கரம் உடைந்து சிதறிய வரலாறு யாவரும் அறிந்தது. அத்தன்மையதே இறைவன் நரசிங்கமதாய் இரணியனைத் தன் கை நகங்களால் பிளந்தான் என்பதும். இவ்விரண்டினையும் பல இடங்களில் குறிப்பிடுகின்றார். பல வகைகளில் தெரிவிக்கின்றார் கவிஞர். அவற்றில் திருக்காலாண்ட பெருமான் (6-9-4) என்பதும், கையுகிர் ஆண்ட எம் கடலே (8-!-3) என்பதும் காலையும் கை நகத்தையும் பயன்படுத்திய தன்மையை 'ஆண்ட' என்ற சொல்லால் வழங்குவது உள்ளத்து மரியாதை, சொல்லிலும் விளங்குமாறு அமைந்தது என்று கோடல்தகும். கண்ணன் குழந்தையாக இருப்பினும் அவன் செய்த செயலில் ஈடுபட அதனால் இம்மரியாதை வாசகம் வருகின்றது என்பது தெளிவு. வேறு இடங்களில் காரணம் பற்றி அமைந்த மரியாதை வாசகங்கள் உள. (6-1-2) (9-7-9)

## வேறு சில வழக்கு முறைகள்

கண்ணன் தன்னை விட்டுப் போய்விடுவானோ? என்ற பொருளில் 'அறையோ இனிப்போனாலே' (5-1-1) என்று பாடுகின்றார். இறைவனை நோக்கி ஆர்வத்தோடு அரற்றுகின்ற நிலையைப் பேசுகையில் 'கைதலை பூசலிட்டே' (5-1-7) என்று கைகளைத் தலையில் வைத்துக் கொண்டு உரக்கக் கூப்பிட்டுக் கொண்டு அரற்றும் முறை தெரிவிக்கப் பெறுகின்றது.

எம்பெருமானது உருவெளித்தோற்றம் கண்டு வருந்தும் தலைவி தன் தாய்மார் தன்னை இடித்துரைக்கும் முறையைக் கூறுகையில் இயல்பானதொரு செய்கை எடுத்து உரைக்கப் பெறுகின்றது. தாய்மார்கள் இவள் செய்கையைப் பார்த்து இன்னது

செய்வதென்று அறியாதவர்களாய் அதன் அடையாளமாகக் கைகளை நெரித்துக் கொண்டு அவளை நோக்கி 'நீ ஏன் முற்றத்தில் சென்று நிற்கின்ருய்?' என்று அவளைச் சுற்றி நின்று கொண்டும், பல பல ஆராய்ந்தும் வைகின்ருர்கள் (7-7-10) என்று பொருள் படுமாறு அமைகின்றன அப்பாடல் வரிகள்.

இன்னெரு தன்மை நேரடியாக நன்கு பதியும்படியும் சுருக்க மாகவும் அறிவுரை தரும் இயல்பு. அதனை இவர் நடையில் பல இடத்தும் காணலாம். எடுத்துக் காட்டு:

1. மக்களுக்கு உபதேசம் செய்கையில் அறுதியிட்டு உரைக் கின்ருர்.

மற்ரென்றில்லை சுருங்கச் சொன்னேம் மாநிலத்தெவ்வுயிர்க்கும்
சிற்றவேண்டா சிந்திப்பே அமையும் கண்டீர்கள் (9-1-7)

வேருென்றுமில்லை; சுருக்கமாகச் சொன்னேம்; பரந்த உலகில் எவ் வுயிர்க்கும் அலைய வேண்டா; அவனைச் சிந்தித்தலே போதுமானது என அறியுங்கள் என்பது இதன் கருத்து. இப்படிச் செய்வதில் குற்றமொன்றுமில்லை என்றும் அறிவுறுத்துகின்ருர்.

2. மாதவன் என்றென்று
ஓத வல்லீரேல்
தீதொன்றும் அடையா
ஏதம் சாராவே (10-5-7)

'ஓதுதல்' என்றும், 'ஒன்றென்று' என என்று என்ற சொல்லை இருகால் அடுக்கியும், 'தீதும் ஏதமும் சாரா' என்றும், கூறும் முறை யாலும், 'மாதவன்' என்ற சொல்லமைப்பாலும் இப்பாடலில் துவயம் என்று குறிக்கப்பெறும் வைணவ மந்திரத்தின் பொருளைத் தான் சொல்லுகின்ருர் என்பது குறிப்பாக—ஆனல் தெளிவாக— விளங்குமாறு சொல்லுந்திறம் அருமையானது

## கவிதையிற் காணும் வேறு சில நயங்கள்

இறைவனை அவன் நினைவு தரும் இன்பங் கருதி உண்ண இனிப்பதும் வாழ்வளிப்பதுமாகிய அமுதுக்கு ஒப்பாக உணர்ந்து அமுதே என்று அழைக்கின்ருர். ஆனல் அமுது அவனுக்கு ஏற்ற உவமை ஆகாது என்ற எண்ணமும் உடனேயே வருகின்றது. அதனல் அமுதிலும் ஆற்ற இனியன் (1-6-6) என்று கூறுகின்ருர். வேறு இடங்களில் இறைவன் உண்டு தெவிட்டாத அமுது என்னும் கருத்தில் ஆரா அமுதே (5-8-1) என்கின்ருர். அவனேடு

தமக்குள்ள தொடர்பினை மனத்தால் நினைந்து என்னுடையமுதே (9-3-10) என்றும், 'யாமுடை அமுதம்' (8-4-2) என்றும்வழங்குகின்றது. அமுது பாற்கடல்கடைந்த காலத்து வந்தது. இவன் தோற்றமின்றி என்றும் நிலைத்த பொருள் என்ற கருத்தால் 'என் கடல்படா அமுதே' (2-3-5) என்கிறார். 'அலைகடல் கடைந்த ஆர் அமுதே' (7-2-5) என்று கூறுகையில் கடலிலிருந்து வந்ததன்று; ஆனால் ஒரு சமயம் இது கடலைக் கடைந்தது என்று உணர்த்தும் வகையில் சுவை பொருந்த அத்தொடர் அமைக்கப் பெறுகின்றது. மற்றும் அமுதினும் இதற்கு ஏற்றம் தோன்ற இன்னமுதம் (5-9-5) என்றும், எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுது (6-10-3) என்றும் பலபட சிறப்பித்துக் கூறும் இயல்பு இன்பமேபயப்பதாயுள்ளது.

வாடைக் காற்றைக் கண்டு அது உடலம் நோயுற்றதாக எண்ணிப் புலம்புமிடத்தில் பகலும் இரவும் துஞ்சாது வீசும் அதன் இயல்பை இவ்வாறு பாடுகின்றார் ஆழ்வார்.

'கடலும் மலையும் விசும்பும் துழாய் எம்போல்
சுடர்கொள் இராப்பகல் துஞ்சாயால் தண்வாடாய்' (2-1-4)

உறக்கமின்மையால் மட்டும் அன்று; மலை, கடல், விசும்பு ஆகிய எங்கும் வீசும் காற்று அங்கெல்லாம் நாராயணனைத் தேடுகின்றது என்று இருக்கின்றாள் அத்தலைவி. அவளும் இறைவனை அவன் உறைகின்ற திருப்பாற்கடல், வேங்கடமலை, வைகுந்தம் ஆகிய இடங்களிலெல்லாம் தேடி அலைவது போன்று காற்றும் தேடுவதாக அமைந்துள்ள சொல்லமைப்பு சுவை பயப்பது ஆகும்.

கண்ணன் பூதனையின் மார்பில் பாலுண்டு அவளை மாய்த்தான் என்ற சாதாரணச் செய்தியைக் கவிதை நயம்பட அமைக்கும் திறம் கீழே காணலாம்:

ஒக்கலை வைத்து முலைப்பாலுண்ணென்று தந்திட வாங்கி
செக்கஞ்செக அன்று அவள்பால் உயிர்செக
உண்ட பெருமான். (1-9-5)

பூதனை கண்ணனைத் தன் இடுப்பில் எடுத்ததும் பாலூட்ட முனைந்ததும் அவன் செக்கஞ் செக உயிர் செக உண்டதும் சொல்லழகு பொருந்த அமைக்கப் பெற்றுள்ளன. கற்பனை நயங்களை அவர் ஆளுகின்ற உவமை உருவகங்களிலும், வருணிக்கும் திறனை இயற்கை வருணனை கூறும் இடங்களிலும் கண்டோம்.

அவற்றில் இடம் பெறாத ஒரு சில நயமமைந்த வருணனைகளைக் கீழே காண்போம்:

ஆயர் குலத்து நப்பின்னைப் பிராட்டியை மணப்பதற்காக ஏறு ஏழினையும் அடர்த்தான் கண்ணன். அந்நிகழ்ச்சியைக் கூறும் போது அந்த ஆயன் இயல்பை வருணிக்கும் நுட்பம் அறிந்து இன்புறத்தக்கதாக உள்ளது. அவனால் விரும்பப்படாத தன் நிறம்—தளிர்நிறம்—தனக்கு வேண்டா என்று பேசும் ஒரு தலைவியின் வாக்கில் கண்ணனாகிய ஆயனின் வருணனை அமைகின்றது. பீதக ஆடை அணிந்த வடிவை அன்று அவள் விரும்புவது; பாது காக்கப்படுதற்கேற்ற பொருள்களைப் பாதுகாப்பதற்காகத் தன்னைப் பேணாத அவ்வடிவை அணைக்கவே அவள் ஆசைப்படுகின்றாள். அந்த வடிவின் இயல்பை ஆழ்வார் நுட்பமாக அறிந்து வருணிக் கின்றார். அவன் உடை, காட்டில் பழங்களைப் பறித்துப் போருகை யால் கறைபடித்த காவியுடையாம்; முட்கள் கிழிக்காமைக்காக உடைதோலை உடுப்பது ஆயர் வழக்கம்; கையில் வேண்டும் போது பால் கறப்பதற்காகக் 'கடையா' என்ற மூங்கிற் குழாய் உள்ளதாம்; அத்தோடு அடங்காப் பசுக்களை அடக்கி ஆள்வதற்கு வீசுகோல் என்கிற 'கழிகோல்' ஒன்றும் கையில் உள்ளதாம்; இப்படி இவற்றையெல்லாம் கையில் எடுத்துக் கொண்டு சந்நியாசி களைப் போன்று பசுக்களின் பின்னே திரிந்து புல்லும் நீரும் உள்ள இடத்திலே தங்குவர் இடையர். ஆயர் இடையில் சறைகைமணி என்று ஒருவகை மணியையும் சேர்த்துக் கட்டிக் கொண்டிருப்பர், ஆயன் முன்னே சென்றால் அந்த ஒலியின் வழியே பசுக்கள் அவன் பின் ஓடி வருதற்காக. இப்படியாக ஆயர் தோற்றத்தை நன்குணர்ந்து இயல்பாக அமைத்துள்ள அழகு இன்பம் பயக் கின்றது. அவ்வரிகள்,

கறையினார் துவர் உடுக்கைக் கடையாவின் கழிகோல்கைச் சறையினார் —(4-8-4)

இவ்வாறே ஒளிமுகில் வருணனையும், (9-7-5) அசுரர் வருணனை யும் (8-10-6) பிறவும் காணலாம்.

தலைவன் நகர் நோக்கிச்சென்ற தலைமகளை நினைந்து தாய் இரங்குகையில், செல்லும் தலைமகளின் நிலை அவள் உள்ளத்தில் தோன்றுமாறு அழகுறச் சித்தரிக்கப் பெறுகின்றது. 'தளர்ந்திருக் கின்ற நுண்ணிய இடையின்மீது புதியபாரமான கையைவைத்துக்

கொண்டு மிகவும் நொந்து தன் அன்புடைய நெஞ்சிலுள்ள ஈரம் கண்களிலே நீராய் அலையும்படி சென்று சேரவல்லளோ' (6-7-8) என்று பேசும் பேச்சில் மகளின் உள்ளம், செல்லும் நிலை இவை இரண்டும் அழகுறப் புலப்படுத்தப் பெற்றுள்ள நயம் காண்க.

புணர்ச்சியால் பெற்ற இன்பத்தின் தன்மையையும் பிரிவால் நேர்ந்த வேட்கையையும் இணைத்து ஓர் இடத்தில் வருணிக்கும் திறம் அறியற்பாலது. தலைவி பேசுகின்றாள்: 'நீ பெரிய முலைகளைப் புணருந் தோறும் புணர்ச்சியில் அடங்காத இன்பவெள்ளம் பிற பொருள்கள் எல்லாவற்றையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் ஆகாசத்தினைக் காட்டிலும் பெருகி, இரண்டு உலகங்களையும் தன்னுள்ளடக்கிய அறிவினையும் மேலிடும்படி ஆய், பின் அவ்வின்பம் கனவினைப்போன்றும் இந்திர ஜாலம் என்னும்படியும் நீங்கிற்று. அந்த நிலையிலே மனத்தில் உண்டான இடந்தோறும் உள்ளே புகுந்து அணு அளவினதான உயிரின் அளவினது அன்று என்னும்படியான காதல்-அன்பு பெருகிற்று. அந்தோ!' (10-3-2) என்பது, இங்குக் காதலின் பெருக்கத்தினையும் அதனால் வரும் இன்பத்தின் தன்மையையும் மிக நுட்பமாகவும் திட்பமாகவும் எடுத்து விளக்கியிருக்கும் திறம் எண்ணி எண்ணி உணரத்தக்க முறையில் அமைந்துள்ளது.

ஆழ்வார் தாம் பாடும் பாடல்களிலும் தம் அநுபவங்களையே கூறுகின்றார். அவர் வெறும் வறட்டுக் கவிஞர் அல்லர். மனித உள இயல்புக்கேற்பவே பல இடங்களிலும் பாடல் அமைப்பதால் அது உள்ளத்தைத் தொடுவதாக இருக்கின்றது. ஓர் எடுத்துக் காட்டு:

ஆழ்வார் இறைவனை நோக்கி இன்னின்னவாறெல்லாம் தனக்கு வேண்டியன செய்யவேண்டுமென்று கேட்கின்றார். தாமரைக் கண்களால் நோக்குமாறும், பாதபங்கயத்தைத் தன் தலைமீது அணியுமாறும் வேண்டுகின்றார். கிடக்கின்ற கோலத்திலிருந்து விழித்தெழுந்து ஆத்துன்பம் நீங்கத் தாமரைமங்கையுடன் மூவுலகும் தொழுமாறு இருந்தருளுமாறு விரும்புகின்றார். கனிவாய்சிவப்பத் தாம் காணுமாறு வரவேண்டுகின்றார்; முறுவல் செய்து நின்றருளுமாறு கேட்கின்றார்; இறுதியில் அவனை அமரர்க்கு இடர்கெடுமாறு அசுரர்க்கு இடர்செய்கின்ற நஞ்சே என்றும், தன்னுடைய அமுதே! என்றும் விளித்து இவ்வாறு வேண்டுகின்றார்:

'ஒப்பற்றவடிவழகுடைய மலர்மகளும் மற்றை நிலமகளும் பிடித்துவிடும் உன் மெல்லிய அடிகளைத் தீவினைபுரிந்த அடியனேனும் பிடித்துவிட ஆசைப்படுகின்றேன்; எனவே அவ்விருப்புக் குலையாது இருக்க நீ என்னை அங்கு அழைத்துக்கொள்க; அல்லது நீ ஒருநாள் இங்கு வருக (9-2-10) என்று வேண்டும்போது அப்பகுதி உள்ளத்தைத் தொடுவதாக அமைகின்றது அன்றோ!

## அடிக்குறிப்புக்கள்

1. ஆசாரிய இருதயம் - அழகிய மணவாள நாயனார் சூ 230
2. ,, ,, சூ 229
3. ,, ,, சூ 231, 232
4. தொல்காப்பியம் - செய்யுளியல் சூ !66
5. தண்டியலங்காரம் சூ 8
6. ஆசாரிய இருதயம் சூ 213
7. ,, சூ 188
8. தொல்காப்பியம் - செய்யுளியல் சூ 238
9. இலக்கியத்திறனாய்வு- கட்டுரைத் தொகுப்பு -ரீட் ஹெர்பர்ட். (இலண்டன் 1962), பக் 18
10. 'மெய்யுணர்வின் உட்பார்வை' (ஆங்கிலம்) - டி. இராமசாமி ஐயங்கார், பக். 54
11. வேண்டர் - பெண்டமேரன் IV (ஆங்கிலம்)
12. இலக்கியக் கல்விக்கு அறிமுகம் - ஹட்சன், டபிள்யூ. எச்., 1960, பக் 95
13. Biographic Literate - அத்தியாயம் IV, கால்ரிட்ஜ்
14. கண்ணிநுண் சிறுத்தாம்பு - மதுரகவிகள்-பா-9
15. கவிதைக்கலை I ஆர். எஸ். தேசிகன்., ப. 61
16. அக்னியும் மற்ற கவிதைகளும் -சுப்ரமணிய பாரதி சி., ப. 22
17. ஆசாரிய இருதயம் - திறனாய்வு - (ஆங்கிலம்)- தாமோதரன் டாக்டர் கு., பக். 83-114
18. இலக்கியக் கொள்கை (ஆங்கிலம்)-ரெனே வெல்லக் ஆஸ்டின் வாரென்., 1963, பக். 180

19. நன்னூல்-பவணந்தி முனிவர்-சூ 415

20. பரிபாடல் - பாடல் 12, வரி 39

21. திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் - புருடோத்தமநாயுடு பு. ரா., தொகுதி IX சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு, பக். 225

# உவமை உருவகம் முதலிய அணிநலன்

ஒரு புலவன் தன் கருத்தைப் பிறர் உளங்கொளச் செய்தற்கு மேற்கொள்ளும் பலவகைச் சாதனங்களில் உவமை சிறந்த தொன்றும். பாட்டை அது அழகு செய்வதால் பிற்காலத்தார் அதனை அணி என்று போற்றியுரைத்து மிகப் பலவாக அதன் வகைகளைப் பிரித்துக் காட்டி அணியிலக்கண நூல்களும் எழுதினர். தமிழின் முதல் இலக்கண ஆசிரியராக இன்று விளங்கும் தொல்காப்பியர் உவமை என்ற ஒரு அணியை மட்டுமே கூறுகின்றார். அதனுள் பல அணிவகைகளின் இன்றியமையாத கூறுகளையும் அவர் அடக்குகின்றார். அவர் கருத்தின்படி உவமை அழகு செய்யும் அணி மட்டுமன்று; அது பொருள் புலப்பாட்டிற்கு ஏதுவான ஒரு கருவியாகும். ஒரு நங்கைக்கு ஆடை போன்றது ஒருபாட்டிற்கு அணி என்பர்.[1]

நம்புலவர் கையாளுகின்ற பல்வேறு அணிவகைகளைக் காண்போம். உவமை, அதன் செறிவு என்று கொள்ளத்தகும் உருவகம், உவமை ஆகுபெயர்கள்—இவை சிறப்பிடம் பெறத்தக்கன. மற்ற புலவர்களைப் போன்று இவர் மிகப்பல உவமைகளை வழங்கவில்லை. உணர்ச்சியின் வெளிப்பாடு செம்மை மிக்க சொற்களில் அமைகின்றது. வேறு அணிகளின் துணையின்றியே பாடல்கள் உள்ளத்தைத் தொடுவனவாக உள்ளன. வாக்கு ஒளி பெறுகின்றது உள்ளத்து உண்மை ஒளி இருப்பதனால் போலும்! ஆழ்வார் ஆங்காங்கே முன்னோர் வழங்கிய உவமைகளையும், புதுமையான உவமைகளையும் ஆளுகின்றார். பெரும்பான்மையும் மனிதர்களைப் பற்றிப் பேசாது கடவுளைப் பற்றிக் கடவுள் உருவின்

அழகுபற்றிப் பேச நேர்வதால் பொதுவான உவமைகள் இவர்க்குப் போதியனவாகத் தோன்றவில்லை; பல இடங்களில் அடைமொழிகளைத் தந்து தம் உவமைகளை வழங்குவதைக் காணுகின்றோம். சிறு உவமைகளும் உள்ளன; தொடர்ந்துவரும் உவமைகளும் காணப்பெறுகின்றன. உலகில் இல்லாத பொருள்களையும் கற்பனை செய்து உவமை கூற வேண்டிய நிலை இவர்க்கு ஏற்படுகின்றது. வினை, பயன், மெய், உரு என்ற நான்கின் நிலைக்களமாகவும் உவமை தோன்றலாமல்லவா? அந்நால்வகை உவமைகளும் வருகின்றன. ஆனால் மற்றவற்றைக் காட்டிலும் வினை உவமை அருகியே காணப் பெறுகின்றது.

ஆழ்வார் புலவர்களை நோக்கிப் பேசுகின்ற ஓரிடத்தில் அவர்கள் மானிடர்களைப் போற்றி உரைக்கையில் 'மாரி அனையகை மால்வரை ஒக்கும் திண்தோள்' (3-9-7) என்று அவர் தம் கைகளையும், தோள்களையும் உண்மைக்குப் புறம்பாக மிகைப்படுத்தி உரைக்கின்றனர் என்கின்றார். இவ்வாறு பேசுவதனால் உவமைகளை ஏற்றவாறு பொருத்தமாகவே அமைக்க வேண்டுமென்பதை ஆழ்வார் உணர்ந்திருந்தார் என அறியலாம்.

இறைவனின் நிறத்தைப் பேசுகையில் மேகம், கடல் ஆகியனவும், பூவை, காவி ஆகிய மலர்களும், பொன், மரகதம், மணி முதலிய உலோகங்களும் உவமைகளாக வந்துள்ளன.

(எ-டு) 1. புயற் கரு நிறத்தன் (1-3-10)
2. நீலமுகில் வண்ணன் (1-4-4)
3. கடலின் மேனிப் பிரான் (6-1-4)
4. ஆழிவண்ணன் (10-7-9) எனவும்,
5. பூவைகள் போல் நிறத்தன் (6-8-7)
6. காவிசேர் வண்ணன் (5-4-2) எனவும்,
7. ஆணிசெம்பொன்மேனி எந்தாய் (4-7-4)
8. மரகத வண்ணன் (2-7-8)
9. திருமணிவண்ணன் (3-5-10)
10. தூமணி வண்ணன் (3-7-2)



எனவும் வருதல் காண்க. இதே பொருளில் வரும் வேறு தொடர்களும் உள.

இறைவனின் உறுப்புக்களைக் குறிக்குமிடத்தில் வாய், கண், தோள், அடி முதலியவற்றுக்கு முறையே கோவைக்கனி, தாமரை

மலர், கற்பகக்கா, கமலம் முதலாய கனியும், பூவும், காவும் உவமைகளாகின்றன;

(எ-டு) 1. கனிவாய்ப் பெருமான் (6-1-1)
2. தாமரைத் தடங்கண் (2-1-9)
3. கற்பகக் காவன்ன நற்பல தோள் (6-6-6)
4. கமல மன்ன குரை கழல் (4-3-6) என வருகின்றன.

வாய்க்குச் 'செம்பவளத் திரள்வாயன்' (3-5-4) என உலோகம் உவமையாகின்றது. இவை தொன்று தொட்டுப் புலவர் கூறிவரும் உவமைகளே. ஓரளவு புதுமையாக அமைவது பண்பினைக் குறிக்க நீர் கூறப்பெறுதலாம்.

1. நீர்புரை வண்ணன் (1-8-11)

இவ்வுவமைகளால் ஆழ்வார் உள்ளம் நிறைவடையவில்லை போலும். எனவே இவற்றைச் சிறப்பித்து உவமையாக்க அவர் அவாவுறுகின்றார்.

## I அடைமொழி தந்து சிறப்பித்து உவமை கூறல்:

(அ) அப்பொழுதைத் தாமரைப்பூக் கண் பாதம் (2-5-4)

(ஆ) பெருந்தண்தாமரைக் கண் (6-1-6)

(இ) கருந்திண் மாமுகில் போல் மேனி (6-1-8)

(ஈ) நீலமலர் நெடுஞ்சோதி சூழ்ந்த நீண்ட முகில் வண்ணன் (8-2-5)

(உ) பொற்சுடர்க் குன்றன்ன பூந்தண்முடி (6-6-6)

(ஊ) தொக்க சோதித் தொண்டை வாய் (5-5-5)

(எ) எல்லையில் சீர் இளஞாயிறு இரண்டு போல் துளங்கு திருப்பாதம் (8-5-5)

இவற்றில்

தாமரை-கண், பாதம்; முகில்-மேனி, நிறம்; குன்றம்-முடி; தொண்டைக்கனி-வாய்; இளஞாயிறு-பாதம் ஆகியவை உவமையாகின்றன. ஆனால் அவை ஒவ்வொன்றும் அடைமொழி தந்து சிறப்பிக்கப் பெறுதல் அறியத்தக்கது. அவ்வாறில்லையெனில் மனிதர்கட்கும் இறைவனுக்கும் வேறுபாடு இல்லாது போகுமன்றோ?

II. வழக்கமான உவமைகளைக் கூறி அவை பொருளோடு ஒவ்வா என மறுத்துரைக்கும் திறம்:

(அ) நேரா வாய் செம்பவளம் (2-5-5)

(ஆ) கட்டுரைக்கில் தாமரை நின் கண் பாதம் கை ஒவ்வா (3-1-2)

(ஈ) சுட்டுரைத்த நன்பொன் உன் திருமேனி ஒளி ஒவ்வாது (3-1-2)

வாய்—பவளம்
கண், பாதம், கை—தாமரை

மேனி—பொன். இங்கே உவமைகளைக் கூறி அவை இறைவனின் அவ் அவ் உறுப்புக்களை ஒவ்வா என மறுத்துரைக்கும் முறை மேற்கொள்ளப் பெற்றுள்ளது.

III. இல்பொருள் உவமைகள்—அற்புதக் கூட்டு:

(அ) பெருந்தண் தாமரைக் கண் பெருநீள் முடி நாற்றடந் தோள் கருந்திண் முகில் போல் மேனி (6-1-6)

(ஆ) பேரிதழ்த் தாமரைக்கண், கனிவாயது ஓர் கார் எழில் மேகம் (9-6-9)

(இ) படிசேர் மகரக் குழைகளும் பவளவாயும் நால் தோளும் துடிசேர் இடையும் அமைந்ததோர் தூநீர் முகில் (8-5-3)

(ஈ) மாநீர்வெள்ளிமலைதன்மேல் வண்கார்நீல முகில் போல (8-5-4)

(உ) பன்னெடுஞ் சூழ்சுடர் ஞாயிற்றோடு பால்மதி ஏந்தி, ஓர் நன்னெடுங் குன்றம் வருவ தொப்பான் (8-2-10)

(ஊ) நீளும் படர்பூங் கற்பகக் காவும் நிறை பன்ஞாயிற்றின் கோளும் உடைய மணிமலைபோல் கிடந்தான் (8-10-8)

(எ) நீலவரை இரண்டு பிறை கவ்வி நிமிர்ந்த தொப்பக் கோலவராக மொன்றாய் நிலம் கோட்டிடைக் கொண்ட எந்தாய் (10-10-7)

(ஏ) கரு ஞாயிறு உதிக்கும் கரு மா மாணிக்க நாள் நன்மலை போல் (8-5-2)

(ஐ) கருமாணிக்க மலைமேல் மணித்தடம் தாமரைக் காடுகள் போல் திருமார்வு வாய் கண் கை உந்தி காலுடை ஆடைகள் செய்ய பிரான் (8-9-1)

(ஒ) அணிமேருவின் மீதுலவும், துன்னு சூழ்சுடர் ஞாயிறும் அன்றியும் பல்சுடர்களும் போல் மின்னு நீண்முடி ஆரம் பல்கலன் தானுடை எம்பெருமான் (8-9-2)

(ஓ) செந்தண் கமலக்கண் கைகால் சிவந்த வாய் ஓர் கரு ஞாயிறு அந்தமில்லாக் கதிர் பரப்பி அலர்ந்த தொக்கும் அம்மானே! (8-5-7)

(ஔ) மல்குநீலச் சுடர் தழைப்பச் செஞ்சுடர் சோதிகள் பூத்து ஒரு மாணிக்கம் சேர்வது போல்—(7-6-6)

மேற் குறித்த பாடல்களில் இறைவனுக்கு 1. முகில், 2. குன்றம், 3. ஞாயிறு, 4. மாணிக்கம் ஆகிய நான்குமே உவமை களாக வந்துள்ளன. இதில் புதுமை என்னவெனில், ஒவ்வொரு உவமையும் சில சிறப்புத் தன்மைகளோடு இணைந்து உவமமாக்கப் பட்டிருப்பதுதான்.

1. மேகம் உவமையாக வருங்கால் சூர்நீர்முகில் அல்லது வண்கார்நீல முகில் என்ற அடைகளுடன் வருகின்றது. அதற்கு மேலும் உலகில் இல்லாத் தன்மைகளை உவமைக்கு ஏற்றி உரைக்கப் பெற்றிருப்பது காணலாம்.

(அ) மகரக் குழைகளும் பவளவாயும் நாற்றோளும் துடி இடையும் அமைந்த முகில் என்றும்,

(ஆ) தாமரைக் கண்களும் கனிவாயும் உடையதோர் கார் எழில் மேகம் என்றும்,

(இ) அவ்வாறே, தாமரைக்கண், நீண்முடி, நாற்றோள் அமைந்த கருந்திண் மாமுகில் என்றும்,

(ஈ) மாநீர் வெள்ளிமலைதன்மேல் உள்ள வண்கார் முகில் போல் என்றும் அமையும் தன்மை காண்கிறோம்.

2. குன்றம் உவமை ஆகுங்கால்

குன்றம்
நெடுங் குன்றம்
நல்ல நெடுங் குன்றம்
நீல நன்னெடுங் குன்றம்
கோல நீல நன்னெடுங் குன்றம்

சுடர் ஞாயிற்றோடு பான்மதி ஏந்தி வரும் குன்றம் என்று படிப்படி யாகச் சிறக்குமாறும், ஞாயிறும் மதியமும் ஏந்திய அழகிய நீல

நெடுங்குன்றம் என்று சங்கு சக்கரம் தாங்கிய நீலத்திருமேனி யுடைய திருமாற்கு உவமை அமைந்து சிறப்பது காண லாம்.

இவ்வாறே மற்ற ஐந்து இடங்களிலும் (ஊ) முதல் (ஒ) முடிய உவமை அடைகளால் சிறப்பிக்கப் பெறுதலை அவற்றில் காணலாம்.

(ஊ) கற்பகக் காவும் ஞாயிற்றின கோளும் உடைய மணிமலை,

(எ) இரண்டு பிறை கவ்வி நிற்கும் நீலவரை (வராகப் பெரு மானுக்கு உவமை)

(ஏ) கரு ஞாயிறு உதிக்கும் கருமாணிக்க நாள்மலை,

(ஐ) மணித்தடம் தாமரைக் காடுகள் (பல உறுப்புக்கள்) பூத்த கருமாணிக்க மலை,

(ஒ) சுடர் ஞாயிறும் பல் சுடர்களும் உலவும் அணிமேரு ஒத்த நீண்முடியும் ஆரமும் பல் கலனும் உடைய பிரான் என்று அடையொடு வரும் உவமை அழகு இன்பம் தருவதாம்.

3. ஞாயிற்றை உவமை கூறுகையில்,

செந்தண் கமலம் போன்ற கையும் காலும் சிவந்த வாயும் உடைய கருஞாயிறு அளவற்ற தன் கதிர்களைப் பரப்பி மலர்ந்தது போன்றவன் என்று திருமாலின் தோற்றம் பேசப் பெற்றுள்ளது,

4. மாணிக்கம் உவமை யாங்கால்,

நீலச் சுடர் தழைத்துச் செஞ்சுடர்ச் சோதி [1]பூத்த ஒரு மாணிக்கம் என்று திருமாலின் ஒளிக்கும் அழகிற்கும் ஏற்ற உவமை வருகின்றது.

திருமாலின் கோல வடிவு, சேராத பொருள்களையும் சேர்த்து வைத்து விளக்குமாறு இருப்பதால் பல்வேறு வகைகளாக உவமை களை அமைத்து ஆழ்வார் மகிழ்வதையும் நம்மை மகிழ்விப்பதையும் அறிகின்றோம்.

## IV. இயற்கை தந்த உவமைகள்

இயற்கை இரக்க உள்ளம் பெற்ற பின்னணியாக இருத்தலின், தமிழ்ப்புலவர்கட்கு உவமை உருவகங்கள் அமைப்பதற்கு எடுக்கக் குறையாத நிறை சுரங்கமாக உள்ளது[2] என்பர் அறிஞர். நம்மாழ் வாரைப் பொறுத்த அளவிலும் அது முழு உண்மையே. சில இடங்

களில் உவமைகளும் உருவகங்களும் கலந்து இணைந்து வருகின்றன. ஆழ்வார் இறைவனை - திருமாலை-ஒரு தாமரைநீள் தடாகமாகக் கூறுகின்றார். அவனது கண் கை கால் முதலியன தூய செந்தாமரை ஒப்பன; ஒளியுடைய செவ்வாய் தாமரை மொட்டு ஒப்பது; அவனது அழகிய நீலச் சுடர்மேனி தாமரையின் தண்ணிய பசிய இலைகளை ஒப்பதாம். இவ்வகையில் திருமாலது பெருமிதம் மிக்க தோற்றத்திற்கு ஓரழகிய தாமரைத் தடாகம் ஒப்பாகின்றது. ஒரு முழுமையான இயற்கை ஓவியம் இங்கு அமைதல் காணலாம் (8-5-1)

## V. உவமையின் சிலவகைகள்—மறுதலை உவமை:

பொதுவாக மறுதலையாக-அதாவது உவமையாக வருவது உவமேயமாகவும், பொருள் உவமையாகவும் அமையும் உவமைகள் சில உள்ளன. இது உவம அணியின் ஒரு பிரிவாகும். இரு எடுத்துக்காட்டுக்கள்:

(எ-டு) 1. இரவுப் பொழுதை வருணிக்கும் ஆசிரியர் இவ்வாறு கூறுகின்றார்: இரவு நேரம்-மழைத் தூறல் விழுந்து கொண்டுள்ளது. அவ்விரவிற்குத் தன் நிலையையே ஒரு தலைவி உவமை கூறுவதாக அமைக்கின்றார் ஆசிரியர். 'தான் அவன் பிரிவால் உருகுவதுபோல வானமும் உருகித் துளிகளாய்ச் செல்கின்ற இரவு' என வருகின்றது.

'நின்று உருகுகின்றேனே போல - நெடுவானம்
சென்றுருகி நுண்துளியாய்ச் செல்கின்ற கங்குல்வாய்'(5-4-10)

மழை என அழுதல் எனப் பெரும்பான்மையாக உவமை வரும். இங்குத் தன் உருக்கம் போன்று வானம்-மேகம்-உருகித் தான் அழுவது போல் துளி வீழ்கின்றது என்கிறார். மற்றும் துன்பநிலையிலுள்ள தன்னை ஒத்தது இரவு என்பதும் நயமாக உள்ளது.

2) எம்பெருமானோடு கலந்து பிரிந்த ஒரு தலைவி, அவனுக்குப் போலியான (ஒத்தனவான) பொருள்களைக் கண்டு தளர்வுற்றுக் கூறும் பாசுரத்தில் மேகங்களை விளிக்கும் போது இவ்வாறு கூறுகின்றாள்: 'வியக்கத் தக்க செயல்களைச்செய்து என்னோடு கலந்த மாயனாகிய என் கண்ணன் போலே, வளைத்த வில்லோடு கூடி மின்னுகின்ற மேகக் கூட்டங்களே! நும் உருவத்தை எனக்குக் காட்டாதீர்கள்.' கண்ணன் மார்பிலுள்ள கௌத்துபம்

அவன் திருமேனிக்கு ஒளியை உண்டாக்குவது போன்று மின்னல் இருக்கின்றதாம்; கண்ணனையும் அவன் ஒளியையும் நீல மேகங்கட்கும் மின்னலுக்கும் ஒப்பாகக் கூறுவதால் இதுவும் எதிர் மறுத்த உவமையாகின்றது.

## VI இயற்கைப் பொருள்களின் செயலைக் கொண்டு தத்துவ உண்மைகளை உணர்த்துவது :

அ) சந்திரன் தேய்வதும் வளர்வதுமாக இருப்பதை நாம் அறிவோம்; அதனால் தேய்பிறையும் வளர்பிறையும் மாறி மாறி வருகின்றன. மற்றும் சுடர்மிக்க சூரியனும் இரவும் மாறி மாறி வருதலையும் காணுகின்றோம். இவ்விரண்டினையும் உவமைகளாக எடுத்துக்காட்டித் தன் ஞான நிலையை விளக்குகின்றார் ஆழ்வார். சந்திரனுக்கு உள்ளது போன்று மாறிமாறி வரக் கூடியதான வளர்ச்சியும் குறைவும் இல்லாதபடியும், சூரியனும் இருளும் மாறி மாறி வருவது போன்று ஞானமும் அஞ்ஞானமும் மாறிமாறி வராத படியும் உள்ள ஒரே தன்மையான ஞானம் தான் பெற்றதாக விளக்குகின்றார். இறைவன் தன் உள்ளத்தில் வந்து உறைகின்ற காரணத்தால் தான் உடலின் வளர்தல் தேய்தல்களையும், உலகப் பொருள்களைப்பற்றிய தன் ஞான அஞ்ஞானங்களையும் ஒழித்து ஒரே நிலையான ஞானம் பெற்றதாக உணர்த்துவது கருத்து (8-8-10).

ஆ) இன்னொரு முக்கிய உவமை எல்லாப் பொருள்களையும் உண்டாக்கிய இறைவன் அவற்றுள் மறைந்து எங்கும் பரந்து இருக்கும் தன்மையை விளக்க ஆளப்படுவதாம். பொருள்கட்கும் அவற்றினுள் உறையும் இறைவனுக்கும் உள்ள தொடர்புக்கு உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பை ஒப்பிடுகின்றார் ஆழ்வார். உடலின் எப்பகுதியில் உயிர் இருக்கின்றது என்று குறிப்பிட முடியாது; உயிரின்றி உடலுக்கு இயக்கமில்லை. ஆனால் உடலுக்கு வருகின்ற வளர்ச்சி, தளர்ச்சி முதலியன உயிரைச் சாரமாட்டா என்பன போன்ற பல செய்திகள் இதன்மூலம் உணர்த்தப் பெறுகின்றன. மற்றும் உலகின் மூலப்பொருள்கள், அழியாப் பொருள்கள் மூன்று இரண்டா அல்லது ஒன்று என்ற தத்துவ உண்மையையும் இவ்வுவமையால் பிற்கால அறிஞர்கள் விளக்குவதும் நாம் நினைவு கொள்ளத் தக்கதாகும்.

'உடன்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்' (1-1-7).

இ) இன்னொரு பாடலில், ஐம்பூதங்களிலும் பிறவற்றிலும் இறைவன் பொருந்தி இருப்பினும் கண்ணுற்காணக் கூடாதவனாக நிற்கின்றான் என்பதை ஓர் உவமையால் விளக்குகின்றார். காலத்தாலும், கடைதல் முதலிய செயல்களாலும் தோற்றுகிற நெய், கறந்தகாலத்தில் பாலில் இருப்பினும் கண்ணுக்குத் தோன்றாதே யன்றோ? அதே போன்று இறைவன் காண்பதற்கு அரிதாம்படி உள்ளானும்.

'கறந்தபாலுள் நெய்யேபோல் இவற்றுள் எங்கும் கண்டுகொள்
இறந்துநின்ற பெருமாயா!' (8-5-10)

இது பெரிய ஆச்சரியமே என்பதை 'மாயா' என்ற சொல்லால் ஆசிரியர் குறிப்பதாகக் கொள்ளலாம். இத்தகைய உவமை பிற சமய அறிஞர் பாடல்களிலும் பயின்று வந்துள்ளது.

ஈ) அறிவுடைப் பொருள்களும், அறிவில் பொருள்களும் தானேயாய், அவர்களின் நிலைகளிலும் அவைகளின் நிலைகளிலும் பற்று இல்லாதவனாய், ஐம்புலன்களாலும் அறியப்படாதவனாய், ஞான உருவினனாய் இருப்பான் இறைவன். அவ்விறைவன் அப்பொருள்களின் குற்றங்களால் தீண்டப்படாதவன் என்பதை உணர்த்த அதற்கு வேறு ஒரு தத்துவக்கருத்தையே உவமையாகக் காட்டித் தெளியவைக்கின்றார் ஆசிரியர்: 'உடம்பின் உள்ளே இருக்கின்ற உயிரானது உடற்கு நேரிடும் இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றது; ஆயினும் உடம்பின் இளமை முதுமை முதலான தன்மைகளை உயிர் அடைவதில்லை? அதுபோலவே எல்லாப் பொருள்கட்கும் உயிர்கட்கும் உள்ளே உறைகின்ற இறைவனுக்கும் அப்பொருள்களினுடைய குற்றங்கள் சேர்வதில்லை என்பது விளக்கப்பெறுகின்றது (5-1-10). (இப்பகுதிக்கு வேறு பொருள் கொள்ளப் பெற்றாலும் இப்பொருளும் பொருத்தமே என்பதில் ஐயமில்லை).

## VII இறைவன் உயிர் தொடர்புக்கு விளக்கம்:

'என் பொல்லாக் கருமாணிக்கமே! என் ஆவிக்குப் பற்றுதற்கேற்ற கொம்பு நீயன்றி வேறில்லை; இந்தக்கொடி கொள்கொம்பை ஒழிய நிற்கும் வல்லமை உடையதோ? எனவே நீ என்னைக் கூவிக் கொள்ள வேண்டும்; எனக்கு அருள வேண்டும்' என்று வேண்டுகின்றார் ஆழ்வார். (10-10-3). இதில் இறைவனே உயிர்க்குப்

பற்றுக்கோடு என்பது உணர்த்தப் பெற்றுள்ளது. இன்னொரு பாடலில் இறைவனைப் பார்த்து இவ்வாறு கூறுகின்றார்: நெருப்பினால் நன்கு காய்ச்சப்பெற்ற இரும்பானது தன் வெம்மை தீரத் தண்ணீரை முழுவதும் உண்ணுமாறு போல, இறைவனே நீயும் என் உயிரை உண்ணுதற்காக எனக்கு உன்னுடைய எல்லை யில்லாத இனிமையைக் காட்டி என்னை அகப்படுத்தினாய் என்கின்றார்.

"தீர இரும்பு உண்டநீரது போல என் ஆருயிரை
ஆரப் பருக எனக்கு ஆராஅமுது ஆனாயே" (10-10-5)

இதில் இரும்பு எம்பெருமானுக்கு உவமையாக அமைகின்றது. அப்படியெனின், உனக்காகத்தான் நீ என்னை ஏற்றாய் என்பது கருத்தாகும். இதனையே வேறு வகையாகவும் பொருள் கொள்ள லாம். 'காய்ந்த இரும்பு அக்காய்ச்சல் தீர நீரைப் பருகுமாறு போல, என் உயிரானது தன் தாபமெல்லாம் தீரும்படி உன்னை அனுபவிக்க, நீ எனக்கு எல்லையற்ற இனியன் ஆனாய்' என்று ஆகும். இதன்படி பயன்பெற்றவர் ஆழ்வார். உயிரை என்பதை உயிர் என்றுமட்டும் கொள்ள வேண்டும். இவ்வுவமையும் இறைவனுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பும், அவை ஒன்று படும் முறையும் விளக்கவே வந்துள்ளது.

பிறவிக் கடலுள் அழுந்தும் தன்நிலைமை அலைநீர்க் கடலுள் அழுந்தும் நாவாயில் உள்ளார் நிலைமை போன்றது என்று வேறு ஓர் இடத்தில் (5-1-9) ஆசிரியர் சுட்டுகின்றார். இனி இறைவனின் நிலையை நன்கு விளக்க ஆழ்வார் ஆளுகின்ற இன்னோர் உவமை யையும் இங்கு நினைவு கூர்தல் தகும். மிகச்சாதாரணமாக யாவரும் அறிந்த ஒன்றைக்கூறி அவர்தம் கருத்தைத் தெளிவிக்கும் திறம் வியப்பளிப்பதாயுள்ளது. மனிதர்கட்குத் தேவர்கள் செல்வத் தாலும் பெருமையாலும் எவ்வளவு பெரியவர்களோ அதேபோன்று அத்தேவர்கட்கு இறைவன் இருக்கின்றான் என்று பாடுகின்றார். (8-1-5)

## VIII நிலையாமை விளக்கம்

சில பொதுவான நிகழ்ச்சிகள்; அவற்றை ஒப்புமையாக எடுத்துக் காட்டி மக்களின் நிலையற்ற வாழ்வை உள்ளத்துட் பதியு மாறு தெளிவுறுத்துகின்றார் ஆழ்வார். பல ஊழிக்காலம் இவ்வுலகத்தைச் சிறப்புற ஆட்சி செய்தவர்கள் எத்தனையோ பேர்;

மற்றும் பிரமன் முதலான தேவர்களும் உளர். அவர்களில் யார் இன்று உள்ளனர்? ஒருவரும் இல்லை. அவர்களின் எண்ணிக்கை கடலின் கரையிலமைந்த மணல்மேட்டு நுண் மணலினும் மிகும். சிறிது எண்ணிப்பார்த்தாலும் இவ்வுண்மை விளங்கித் தோன்றும் என்கிறார் (4-1-4). இறந்தவர்களின் தொகை அப்படி என்றால் வாழ்ந்தவர்கள் எப்படி வாழ்ந்தார்கள் என்று பார்ப்பின், பெரிய மழையின் போது விழும் நீரில் தோன்றும் மொக்குள்போல்தான் அவர்களும் தோன்றித் தோன்றி மாய்ந்துமாய்ந்து முடிந்தார்கள்; நரகில் அழுந்தினார்கள். அவ்வாறன்றி அன்று முதல் இன்று வரை சிறப்பாக வாழ்ந்தே நிலைபெற்றவர்கள் யாரேனும் உளரா வெனின் இல்லவே இல்லையன்றோ? (4-1-6). இவை பல நூல் களில் வருகின்ற உவமைகளே எனினும் சொல்லமைப்பு முறை தெளிவுற அமைந்து கருத்து உளம்கொள அருமையாக உதவு கின்றன.

IX உருகும் தன்மையை விளக்கும் உவமைகள்:

'பொன்னுலகு' (6-8) திருவாய்மொழி ஆழ்வார் நாயகி ஆற்றாமையால் தூதுவிடும் பாசுரங்கள் கொண்டது. அதன் கடைசிப்பாடல் அப்பத்துப் பாடல்கள் வல்லவர் அல்லது ஆழ்வார் அனுபவித்த துன்பத்தை உணர்ந்தவர்கள் உள்ளமுருகும் நிலை அடைவர் என்று பலன் கூறுகின்றது. இதற்கு 'நீர் ஊறுகின்ற ஊற்றிலேயுள்ள நுண்ணிய மணல்' போன்று நீராக உருகுவர் என்று உவமை தரப்பெறுகின்றது. மணலின் நுண்மை தண்ணீரால் உண்டாகின்றது; மற்றும் அது தேய்ந்து கொண்டே யிருக்கும் என்பதையும் தெரிவிக்கின்றது உவமை (6-8-11).

தீயை அணைந்த மெழுகு உருகும் தன்மை நான்கு வேறு இடங் களில் உவமையாக எடுத்தாளப் பெறுகின்றது. இது ஆழ்வார் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்ததொரு உவமை எனக் கொள்ளலாம்.

(அ)பிரிவினால் வருந்தும் தலைவியின் ஆற்றாமை நிலையை அவள் தாய் வெளியிடுகின்றாள். தலைவி தனது இரக்கமிக்க மனத்தால் நெருப்பினைச் சேர்ந்த அரக்கினையும், மெழுகினையும் ஒப்பாள் என்கிறாள் (2-3-4). மெழுகும், அரக்கும் உருகுதல்போல் அவள் நெஞ்சும் உருகுகின்றதாம். இப்பொருள் இரண்டும் நெருப்பில் விழுந்தால் கரிந்துபோம்; தூரவைத்தால் கட்டியாகவே இருக்கும். தீயின் அருகில் இருக்கும்போது தான் உருகும். அதே போன்று இவள் இறைவன்பால் கொண்ட ஆசையை விட்டால் பிழைக்க

லாம்; அல்லது அவனுடனிருப்பின் தரித்திருக்கலாம். அவ்வாறு அன்றி அவளை நோவுபடும்படி இறைவன் செய்கின்றான். இப்படி இருக்கின்றது அவள்நிலை என்பது உவமையால் விளக்கப்பெறு கின்றது.

(ஆ) இறைவனுடைய வியக்கத்தக்க செயல்களை நினைக்குந் தோறும் தன்மனம் அடையும் தன்மைக்கு ஓர் உவமை தருகின்றார் ஆசிரியர். 'என்நெஞ்சு எரியை அடைந்த மெழுகினைப் போன்று நிலையாக உருகுகின்றது' (5-10-5) என்கின்றார். இறை வனுடைய செயல்களை நினைத்துக் கொண்டே உலகத்தவர் உண்டு உடுத்துக் காலம் போக்குவர்; தன்நிலை அத்தகையதன்று என்று அறிவுறுத்துதற்காக 'என்நெஞ்சு' என்று பிரித்துக் கூறுகின்றார். ஒருதரம் உருகுதலோ அல்லது கரிந்து போதலோ செய்யாது தொடர்ந்து உருகுகின்றது என்பதை உணர்த்த 'நின்றே' என்று ஒருசொல் அமைத்துத் தன்னிலையை வேறுபடுத்திக் காட்டு கின்றார். இவ்வாறே வேறு ஓர் இடத்தில் அவனைக்காண வருந்தி அலையும் தன்மையை விளக்குகையில் 'எல்லா நாளும் தீயுடன் சேர்ந்து மெழுகாக உலகில் திரிவேனா?' (6-9-6) என்று கேட் கின்றார். தமக்கு ஏற்பட்ட துன்ப மிகுதியைத் தலைவி பாசுரத்தில் பேசும் மற்றோர் இடத்திலும் இதே உவமை வருகின்றது. ஆனால் அங்குத் தன் கண் நீர்வடிக்கும் நிலையும், மனம் ஒரு நிலையில் இல் லாத தன்மையும் எடுத்துக் கூறிவிட்டுத் 'தன் உயிரும் நெருப் பின் அருகில் இருக்கும் மெழுகினைக் காட்டிலும் மிக உருகி வெந்து போகின்றது' (10-3-6) என்று ஒருபடி உயர்வான தன்மையில் உருக்கம் வெளிப்படுத்தப் பெற்றுள்ளமை சிறப்பாகும்.

இங்கே ஏன் ஒரே உவமை மீண்டும் மீண்டும் எடுத்தாளப் பெறுகின்றது? என்ற கேள்வி எழலாம். மற்றும் இயற்கை வருணனைகளிலும், புராணக்கதை அமைப்பிலும் கூட வந்த கருத்துக்களே அங்கங்குத் திரும்பத் திரும்ப வருதல் காண் கின்றோம். ஒரு பெருங்கவிஞனுக்கு இது அழகாகுமா என்பது நியாயமான கேள்வியாகத் தோன்றுகின்றது. மெய்யுணர்வுக் கவிஞரைப் பொறுத்த வரையில் அது தவறாகாது என்பதே விடை. பலமொழிகளிலும் மெய்யுணர்வுக் கவிதை தரும் புலவர் பாடல் களில் இத்தன்மை இருக்கக் காண்கின்றோம். இதற்கு ஆதரவாக மெய்யுணர்வு அறிஞர் அரவிந்தர் இதுபற்றிக் கூறும் கருத்தை நினைவு கூர்தல் தகும். அவர் கூறுவதாவது:-

''மெய்யுணர்வுக் கவிதையில் கூடக் கூறியது கூறலுக்குத் தடை கிடையாது; பல புலவர்கள் அம்முறையை மேற்கொள்ளு கின்றனர்; சில சமயங்களில் அது கட்டாயமாகவும் அமை கின்றது...வந்த முக்கிய கருத்துக்கள், உருவங்கள், குறியீடுகள், முக்கியமான சொற்கள், சொல் தொடர்கள், சிறப்பான அடைகள், சிலபோது வரிகள் கூடத் திரும்பத் திரும்ப வருதல் நிலையான இடம் பெறுகின்றன. அவை ஒரு புதிய சூழலையும் முக்கிய வடிவத் தையும், ஒரு வகையான மனத்தத்துவ அமைப்பையும், கட்டுக் கோப்பையும் கொடுக்கின்றன''[3]

ஒலி ஒப்புமைகள்:

தென் திருப்பேரை என்ற திவ்விய தேச வருணனையில் பல வகை ஒலிகளின் நிறைவு குறிக்கப் பெறுகின்றது. அவ்வூரில் கேட்கும் வேத ஒலியைப் பற்றிப் பேசுகையில் 'அலைமிக்க கடல் ஒலி போலே அங்கு நல்வேதமான சாமவேத ஒலி எங்கும் பரவி யிருக்கும்' (7-3-4) என்று உவமை அமைகின்றது. இவ்வாறே திருப்புலியூர்பற்றி வருணிக்கையிலும் 'இசைமிக்க சாமவேதத்தை உணர்ந்தவர் சாமவேதம் ஓதுதலும், வேத ஆராய்ச்சி செய்வது மான ஒலி கடல் ஒலியைக் காட்டிலும் மிக்கு நிலையாக அமைந் துள்ளது' என்று பேசுகின்றார் (8-9-9). முன்னர் ஓர் இடத்தில் ஆழ்வார் (1-8-10) 'கடல் ஒலிபோலே முழங்கும் வேதத்தாலே பேசப்பெறும் நீர்மையுடையவன் இறைவன், என்று அமைத்துள் ளார். இறுதியில் பரமபதப் பயணம் பற்றி விளக்குகையில் இயற்கை அதற்கு ஆதரவு தருவதாகக் கூறிவருபவர், விண்ணவர் அடியவரை வரவேற்க முரசங்கள் கொட்டுவது அலைகடல் முழக்க மென ஒலித்தது என்று ஒப்புக்கூறிச் சிறப்பிக்கின்றார் (10-9-4). இங்கெல்லாம் கடல் முழக்கமே அவர்தம் கருத்தைக் கவர்ந்தமை தெரிகின்றது.

## XI. குறிக்கத்தக்க வேறு சில உவமைகள்:

(அ) நெற்றியில் இடும் பொட்டு மகளிர்க்கு அழகு தருவ தாகும். அவ்வகையில் அது சிறப்பிடம் பெறத் தகுந்தது. இவ் வுவமை ஒன்றினைக் கொண்டு ஆழ்வார் ஐந்து இடங்களின் சிறப்பினைச் சுட்டுகின்றார். தென் திசைக்குத் திலதம் போன்றவை திருமாலிருஞ்சோலைமலை (10-7-4), திருக்கோளூர் (6-7-6), திருப்புலியூர் (8-9-10) என்கிறார். தென்னாட்டுத் திலதம் வாடடாறு

(10-6-7); உலகிற்கே திலதமாய் நிற்பது திருவேங்கடமலை(6-10-1). இவ்வாறு இருமலைகளையும் மூன்று ஊர்களையும் இவ்வுவமை சிறப்பிக்கின்றது.

(ஆ) திருப்புலியூர் இறைவன்பால் மனத்தைப் பறிகொடுத்து அவனைப் பற்றியே பேசும் ஆழ்வார் நாயகியின் தன்மையை அன்னையர்க்குத் தோழி கூறுகின்றாள். இராமபிரான் அசுரரை அழித்த வீரத்தை அவள் இரவு பகலாகப் புகழுகின்றாளாம். அவன் படைகொண்டு பொருத காட்சி உவமை காட்டி விளக்கப் பெறுகின்றது. 'ஒலிமிக்க ஆழிப்படை முதலியவற்றை, மாற்றாரும் கண்டு புகழுமாறு ஏந்திக்கொண்டு சுடருடைய திருமேனியோடு போரிலே புக்குத் தீயோர்களை முடித்த தன்மை—மோதும் அலைகளையுடைய கடல் தன்பாலுள்ள வடவா முகாக்கினி வெளிப்பட்டு, எங்கும் ஒளிவிடும் தீக்கொழுந்தோடு செல்வது போல இருந்தது என்று தெளிவிக்கப் பெறுகின்றது (8-9-3). இராமன் கடல் அணையான்; அவன் படைகள் வடவாமுக அக்கினி ஒத்தது; சுடர் மேனி தீக்கொழுந்து போன்றது எனப் பொருத்தம் காணலாம்.

(இ) இறைவன் இரணியனைக் கொன்ற தன்மை வருணிக்கப் பெறுகின்றது (7-4-6). மாலைக் காலத்தில் இரணியனை நரசிங்கம் கொன்றது; எங்கும் இரத்தம் பெருக்கெடுத்து ஓடியது. பகற்பொழுது கழிந்த போது புல்லிய செவ்வானம் போலே, வானத்திலும் திசைகளிலும் இரத்தப் பெருக்கு உண்டாயிற்றாம்; மலை கீழேயாக மேலிருந்து கொண்டு பிளந்த சிங்கத்தின் செயலை ஒத்து மிக்க துன்பம் தந்து இரணியனை நரசிங்கமாக வடிவெடுத்த இறைவன் கொன்றனன். இலங்கையை அழித்த தன்மையைச் சொல்லுகையில் மிகப்பல பிணங்கள் மலைபோல் புரண்டன என்று உவமம் அமைகின்றது (7-4-7). வேறு இடத்தில் இறைவன் உடம்பில் குறையில்லாது வளர்ந்த அசுரர் கூட்டங்களைப் பல துண்டங்களாக்கி மகிழ்ந்தான் என்கின்றார். அக்காட்சி உயிரோடு திரிந்து கொண்டிருந்த மலைகள் இந்திரனது வச்சிரப் படையால் துணிக்கப் பெற்றுக் கிடந்தது போல இருந்தது என்று உவமை கூறப்பெறுகின்றது (4-8-10).

(ஈ) ஆற்றாமை மிக்குத் தூதுவிடுகின்ற ஆழ்வார் நாயகி இயற்கைப் பொருள்கள் தன்னை வருத்தும் நிலையைத் தெரிவிக்கையில் வாடைக்காற்றின் கொடுமையை இவ்வாறு கூறுகின்றாள்;

குளிர்ந்த வாடைக்காற்று அடிப்பது, எலும்பைத் துளைசெய்து அதில் கடினமானதொரு கயிற்றினைக் கோத்தது போன்று இருந்தது என்கிறாள் (1-4-7) கொடுமையின் மிகுதி அழகுறப் புலப்படுத்தப் பெற்றுள்ளது. வேறொரு தூதில் தும்பிகளை விளித்து அவற்றின் இன்குரல் செய்யும் துன்பத்தை விளக்குகின்றாள். அது புண்ணின் துளையிலே வேலைக் கொண்டு குத்தினாற் போலே இருந்தது என உவமை கூறப்பெற்றுள்ளது. முன்னரே மற்றவற்றின் குரலால் புண்பட்டுள்ளாள் தலைவி. இப்போது பெறும் துன்பம் அதனில் வேல் பாய்ச்சுவது போல் அமைந்து துன்பத்தை மிகுவிப்பதாகக் கூறுவது மிகப் பொருத்தமேயன்றோ? (9-5-9).

(உ) இறை அன்பில் மூழ்கியவர் ஆழ்வார்; ஆயினும் அவர் உலக இயல்பை உணராத கவிஞர் அல்லர்; அவர் கூறும் உவமையால் அதனை உணரலாம். ஒரு செல்வன் இருக்கின்றான்; அவனது செல்வத்தால் தங்கட்குப் பயன் கிட்டும் என்று தோன்றினால் அவனுடைய தாயாதிகளும் மற்ற உறவினர்களும் ஆபத்துக் காலத்தில் அவனுக்கு உதவுபவர் போலவும், இன்பதுன்பங்களை அவனோடு ஒருசேர அனுபவிக்கும் துணைவர்கள் போலவும், நெருங்கியிருந்து அவனால் பயன் கொள்வர் என்கின்றார். ஒருவனுடைய இரத்தத்தை அடியோடு உறிஞ்சினாலும் அவனுக்கு நன்மை செய்வதாக நினைத்திருக்கும் அட்டைகளைப் போன்றவர்கள் அவர்கள் என்று பொருத்தமான உவமை அமைக்கப் பெற்றுள்ளது (9-1-2). அட்டைகளின் பிழைப்புப்போல் தான் அவர்கள் பிழைப்பும். அவர்கள் துணைவர்களோ புகலிடமானவர்களோ அல்லர் என்பது அழுத்தமாக வலியுறுத்தப்பெறுகிறது இவ்வுவமையால்.

## இரு புது உவமைகள் நாயும் கழுதையும் (பேய்)

இறைவனைக் காண எழுந்த அவாவாலே ஆழ்வார் பலவாறு கூப்பிட்டார்; அவன் வரக் காணவில்லை; 'குன்றம் எடுத்து அனைவரையும் காத்த தங்கள் அருட்குணத்துக்கு நான் மட்டும் புறம்பானேனோ?' என்று பேசுகின்ற இடத்தில் தன் உள்ளக் குழைவை இவ்வாறு வெளியிடுகின்றார்: அழைக்கின்ற நான் நாயனையன்; தகுதியற்றவன். நாயானது தன் வாலால் தன் நினைவினைப் புலப்படுத்துவது போன்று என் உள்ளமானது குழைகின்றது என்கின்றார் (9-4-3). நாயின் வால் கூழை; குட்டையானது. அதனால் அது தன் கருத்தை எவ்வாறு முழுக்கத் தெரிவிக்க

இயலும்? அருமையே! அதுபோல என் நெஞ்சு நோவுபடுகின்றது. என் துன்ப நிலையைச் சொல்லுவதும் அருமை என்பது உவமை உணர்த்தும் பொருளாகலாம். அல்லது நான் தகுதியில்லாதவனாக இருந்தும் ஆசை மட்டும் உடையனானேன் என்பது அதன் கருத்தாகவும் கொள்ளலாம். புதுவகையாக இத்தகையதொரு உவமையை உரைத்துச் சிந்தனை சக்தியை வளர்க்கும் நயம் இன்பமளிப்பதாம்.

ஆழ்வார் தான் மானசமாகப்பெற்ற பேற்றைச் தன் புறக் கரணங்களாலும் பெற விரும்பினார்; கிட்டாமையால் மயக்க நிலையினரானார். மயங்கிய தலைவியைத் தெளிவிக்கக் கட்டுவிச்சி சில வழிகளைக் கூற அவள் சொற்படி வெறியாடல் தொடங்குகின்றது. உயிர்த்தோழி அதனை மறுத்துரைக்கின்றாள்: 'கட்டுவிச்சி சொற்கேட்டு இப்பெண்ணின் நோய்க்கு அரிய மருந்தாகும் என்று எண்ணி ஓர் ஆட்டினை அறுத்தும் கள்ளினை வைத்தும் சிறு தெய்வங்களைத் துதித்துத் துணங்கைக் கூத்து ஆடி உங்கள் தோள்களை வருத்திக் கொள்ளுகின்ற தாய்மார்களே! அதனால் பயன் இல்லை. மாயப் பிரானுடைய அடியார்களும் வேதம் வல்லவர்களுமான வைணவர்களை வணங்குங்கள்' என்கிறாள். உங்கள் செயல் காய வைத்துள்ள நெல்கெட அதனைத் தின்னுகின்ற கழுதையினுடைய உதடு அசைகின்ற ஆட்டத்தைக் கண்டு கொண்டிருப்பதைப் போலப் பயனற்ற செயலாகும் என அறிவுறுத்துகின்றாள். உயிர் வாழ உதவும் நெல் அழிந்து போக அழிவுக்குக் காரணமான கழுதையின் உதட்டின் ஆட்டம் கண்டு கொண்டிருப்பது போன்று இவளைக் கொண்டு வாழ வேண்டிய நீங்கள் இவளுக்கு அழிவினை உண்டாக்கக் கூடிய வேறு தேவதைகளின் சம்பந்தமுடையார் செயல் செய்வது பயனற்றது. அது மட்டுமல்ல. இவளுக்கும் அச்செயலால் அழிவே ஏற்படும் என்பது விளக்கப் பெறுகின்றது. இது எடுத்துக் காட்டுவமை எனப் பெயர் பெறும்.

மொத்தத்தில் இதே கருத்தைக் கொண்டதாய்ச் சிறிது வேறுபட்டதொரு பொருளும் இவ்வரிகட்குக் கொள்ளலாம். 'இத் தலைவியின் இளைப்புத்தீர (உணங்கல்தீர) நீங்கள் ஆட்டையும் கள்ளையும் வழிபாட்டோடு கொடுக்கின்றீர்கள். பேய் உண்ண அதன் உதடாட்டம் கண்டிருப்பதால் என்ன பயன் உண்டு; என்றும்சொல்லுவர்(4-4-7). அப்பொழுது கழுதைக்கு மாறாகக்கழுது

என்னும் பேய் குறிக்கப் பெற்றதாம். எப்படியும் இது புதுமையான தொரு உவமையே. சுவை பயப்பதாயும் வியப்பளிப்பதாயும் உள்ளது.

இறைவியைப் பற்றியும் வேறு மகளிரைக் குறித்தும் பாடுமிடங்களில் பொதுவாகப் புலவர் பலரும் எடுத்தாளும் பல உவமைகளை ஆழ்வாரும் ஆளுகின்றார். எடுத்துக் காட்டு:

1. வேலினேர் தடங்கண் (6-2-4)
2. மானேய் நோக்கி (1-5-5)
3. கெண்டை உண்கண் (10-4-3)
4. சேலேய் கண் (6-10-8) (5-1-8)
5. வடிவேல் தடங்கண் (9-8-2)
6. வாள் ஏய் தடங்கண் (9-8-4)
7. கோவைவாய் (4-3-1)
8. தாவேழ் முறுவல் பின்னை (1-5-1)
9. மழறு தேன்மொழி (6-2-5)
10. அமுத மென்மொழி (6-5-2)
11. காம்பணை தோள் (2-5-7)
12. வேய்மருதோள் (10-3-1)
13. மின்னிடை மடவார் (6-2-1)
14. கொடிஏர் இடை (9-8-2)
15. கொம்பு போல் சீதை (4-8-2) இவ்வாறு பல.

இவற்றில் கண், வாய், பல், மொழி, தோள், இடை இவைகட்கு வேல், வாள், மான், கெண்டை, சேல் முதலியனவும்; கோவைக்கனி, முல்லைமொட்டு, தேன் அமுது முதலியனவும்; மூங்கில், மின்னல், கொடி கொம்பு ஆகியனவும் உவமைகளாக அமைந்துள்ளன. இவ்வகை உவமைகளிலும் திருவாய்மொழி உரையாசிரியர்கள் சில புதுமைகளைக் காட்டுவர். 'கொம்பு அராவு நுண்ணிடை, (1-10-3) பூங்கொம்பினையும் பாம்பினையும் போன்ற நுண்ணிடை உடைய திருமகள் என்பது பொருள். அரவினை இடைக்கு ஒப்புக் கூறுவது அருகிவரும் வழக்கே. இதே போன்று இறைவனை 'நீர்புரை வண்ணன்' (1-8-11) என்கின்றார். தண்ணீர் போன்ற தன்மையன் என்பது பொருள். தண்ணீர் மக்கள் காட்டிய வழியே செல்வது போன்று இறைவனும் மக்கள் போன வழியில் செல்லும் தன்மையன் என்பர். நீர் தாழ்ந்த

இடம் நோக்கியே செல்லுதல் போல் தாழ்ந்தவர்பால் இரக்கம் கொண்டு செல்லும் பண்பினன் இறைவன் என்று கொள்ளுதலும் சாலும். இறைவனுடைய கண்களைத் 'தாமரைத் தடங்கண்' என்றும், இறைவியின் கண்களைக் 'குவளை ஒண் மலர்க் கண்கள்' என்றும் வேறுபாடு தோன்றக் கூறுவதும் நினைக்கத் தக்கது.

## உருவகங்கள்

ஒப்புடைய ஒன்றே உவமையாக வரல் மரபு. அவ்வொப்புமை மிக நெருங்கியதாயின் அதனை உணர்த்தும் வகையில் கவிஞர்கள் உருவகமாக அமைப்பர். 'உருவகம் என்பது உவமையின் செறிவே'. தண்டியலங்காரமும் உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து, ஒன்றென மாட்டின் அஃதுருவகமாகும் என்னும்[5]. சில உருவகங்களை இனிக் காண்போம்:

முதலில் ஒரு சிறு முழு உருவகம் காண்போம்: இறைவனது பிரிவு பொறுக்க மாட்டாமல் ஆழ்வார்நாயகி பழிக்கு அஞ்சாமல் மடலூரத் துணிவதாகக் கூறும் பாசுரம் அது (5-3-4). கண்ணபிரானின் கொடுமையை விளக்குகின்ற அவள், அவன் இவளது உள்ளமாகிய வயலில் அன்புமிக்க காதலைக் கடல்போல விளைவித்த தன்மையை விரித்துரைக்கின்றாள். கண்ணனின் கார் ஒத்த மேனியே இந்த விளைவைப் பெருக்கியதாம். இதற்கான மற்றக் கருவிகளாக அவள் குறிப்பன: ஊரவர் கூறும் பழிச்சொல் எருவாக அமைந்தது; அன்னை பேசும் நன்மொழி தண்ணீர் ஆனது; அன்பாகிய நெல் விதைக்கப்பெற்று அது கடல் போல விளைந்தது என்று நயமுற அமைகின்றது உருவகம். திருவள்ளுவர் குறட்பாவில்[6] காணும் கருத்தோடு வேறு சில கருத்தினையும் இணைத்து அழகு படுத்தியுள்ள திறம் இன்பமளிப்பதாயுள்ளது.

## நீண்டதொரு உருவகம்

திருவாய்மொழி (7-7)ல் கண்ணனுடைய உருவ வருணனை, பிரிந்த தலைவியின் உருவெளிப்பாடு பற்றிய பேச்சில் அமைந்துள்ளது. முதல் ஏழு பாடல்களில் முறையே கண்கள், மூக்கு, வாய், புருவம், பல்வரிசை, காதுகள், நெற்றி இவை தன்னை வருத்துவதாகத் தலைவி பேசுகின்றாள். இவை ஒவ்வொன்றுக்கும் தனித்தனி உருவகங்கள் கூறப் பெறுகின்றன. எட்டாவது பாடலில் அப்பொருள்களெல்லாம் ஒன்றாகத் திரண்டுவந்து தன்னை நலிவிப்பதாகப் பாடுகின்றாள். ஒளிமிக்க தாமரையும், கொடியும்,

பவளமும், வில்லும், முத்துவரிசையும், இளந்தளிர்களும், குளிர்ந்த சிறந்த பிறையும் ஒன்ருக இணைந்த அழகிய ஒளிவட்டம் ஒன்று, கண்ணனின் அழகமைந்த ஒளியுடை முகம் என்று சொல்லிக் கொண்டு வந்து தன் உயிரைக் கொள்ளை கொள்ளுகின்றது என்று கூறும் முழு உருவகம் சிறப்பானது (7-7-8).

உருவெளிப்பாடு கண்ட தலைவி இவ்வாறு புலம்புகின்ருள்: தோழிமார்களே! அன்னையர்களே! கண்ணபிரானது திருக் கண்களோ அன்றி ஆதரவற்ற மகளிரின் உயிரை உண்ணும் படியான இரண்டு கூற்றுவர்களோ அறியேன். என்னைச் சுற்றிலும் அன்றலர்ந்த தாமரைமலர் போன்று தோன்றுகின்றன. துயரம் மிக்க யான் யாது செய்வேன்? (இப்பாடலில் முதலில் கண்களைக் கூற்றம் என்று உருவகித்துப் பின் தாமரை மலரை அவற்றிற்கு உவமையாகக் கூறுகின்ருர். எட்டாவது பாடலில் தாமரை உருவக மாக அமைகின்றது). வெண்ணெய் உண்ட கண்ணனின் அழகிய மூக்கு உயர்ந்த கற்பகமரத்தின் கொடியோ அல்லது கொழுந்தோ தெரியவில்லை. என் மனத்திற்குள்ளே ஏற்றிய சுடர்விளக்காய் நின்று நலிகின்றது. நீலமேகம் போன்ற திருமேனியை உடைய இறைவனது கோவக்கனி போன்ற அதரமானது, தூய ஒப்பற்ற தொரு கனியோ? என் தீவினையோ? அழகான திரண்ட பவளத்தின் செழுமையான துண்டுதானே? அறியேன். எல்லாத் திசைகளிலும் வந்து தோன்றி என் இன்னுயிரை வதைக்கின்றது.

கண்ணபெருமானின் புருவங்களானவை, இனிய உயிர்களை வாட்டப் பெண்டிர்மேல் விளையும் இரண்டு நீலநிற விற்களோ? அல்லது மன்மதனுடைய கரும்புவில் தாமோ? என் உயிர் மீது பாய்ந்து) எப்பொழுதும் நிலையாக வருத்துகின்றன. கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்த வள்ளலாகிய கண்ணபிரானது முறுவல், சுடரை வீசுகின்ற வெள்ளிய மின்னல் தானே? அல்லது என் உயிரை வருத்தும் அழகிய முத்துக்கள் தாமோ? அறியேன். அது என் உயிரை நலிவிக்கின்றது. அன்னைமீர்! எனக்கு அதனின்று தப்பிப் பிழைக்கும் இடம் சிறிதும் தெரியவில்லை. அரவணையான் அழகிய குண்டலம் தரித்த காதுகள், மகரமீனின் வடிவாகத் தழைக்கின்ற தளிர்கள் தாமோ? அவை இடைவிடாது என்னை வாட்டுகின்றன. அன்னைமீர்! உங்கட்கு எடுத்துக் காட்டும் வகை எனக்குத் தெரியவில்லை. நீண்ட வலிமை பொருந்திய நான்கு தோளுடைய கண்ணபிரானது அழகிய நெற்றியானது,

எட்டாம்நாள் பிறைச்சந்திரன் தானோ? அல்லது விரும்பினவர் கட்கு நஞ்சு வடிவான இலையோ? கொடிய என் உயிரைக் கொள்ள எண்ணி வலிமையோடு முடிக்கின்றது.

இவ்வாறு ஏழு பாடல்களில் கூறிய பொருள்களை இணைத்து எட்டாம் பாடலில் அமைத்த உருவகத்தைத்தான் முதலில் பார்த்தோம். இத்தகைய திறம் வேறு இடங்களில் காண்பதரிது. இத்துடன் ஆழ்வார் உள்ளம் நிறைவு பெற்று விடவில்லை போலும். அடுத்த பாடலில் இன்னுமொரு உருவகம் அமைக்கின்றார். கண்ணபிரானின் மணநாறும் கருங்கூந்தல் அழகு தன் உயிரைக் கவர்கின்றமையைப் பேசுகின்றார். அதற்கு ஒப்பான பொருள் உலகில் ஒன்றும் கிட்டவில்லை; மாயனுடைய திருக்குழலை, உலகத்தை முழுதும் கொள்ளக் கூடியதான வலிய இருளை எஃகி (நூற்று) அதன் சாரமான பகுதியின் உள்ளிருந்து கொள்ளப் பெற்ற நீலநிறத்தை உடைய நூலின் தொகுதியோ? என்று ஐயுறுவதாக அமைக்கின்றார். மயிரின் அழகில் ஈடுபட்டவர்க்கு அதற்குச் சற்றுக் குறைந்ததான ஒரு பொருளைக் கூடக் கூறமுடியவில்லை. இரு அடைமொழிகளைச் சேர்த்துச் சிறப்பித்த பின்னும் அப்பொருள் ஒப்பாகாது என்று விலக்குவதைப் பார்க்கின்றோம். திருக்குழலின் அழகும் அதனொடு கூட அமைந்த திருத்துழாயின் மணமும் வந்து என் உயிரைக் களவு காணும் தன்மையை அன்னைமீர் நீவிர் அறியீர் என்று வருகின்றது. அருமையான உருவகம் (7-7-9).

### வேறுசில உருவகங்கள்

கண்ணனைப் பிரிந்த திருவாய்ப்பாடி மகளிர் பட்ட துன்பத்தையெல்லாம் திருமாலைப் பிரிந்த நிலையில் ஆழ்வார் நாயகி அடைகின்றாள். மாலைக் காலத்தே பல பொருள்களைக் கண்டு வருந்தும் தலைவி, தன் தன்மையை விளக்கும் ஒரு வரி அழகிய உருவகம் பொருந்தியதாக உள்ளது. இறைவனால் தன்னுடல் அடைந்த சீர்கேட்டினை அவள் எடுத்துரைக்கின்றாள். வண்டால் மது உண்ணப்பெற்ற மலர் போல், அழகிய கருடப் பறவையை வாகனமாக உடைய தெய்வவண்டாலே தேன் நுகரப்பெற்ற எம்பெண்மையாகிய அழகிய பூவானது இத்தகைய சீர்கேட்டை அடைந்திருக்கின்றது என்கிறாள். தெய்வத்தை வண்டாகவும் தன் பெண்மையை மலராகவும் உருவகித்துள்ள நயம் சுவையானது (9-9-4).

கண்ணன் குவலயாபீடம் என்ற யானையைக் கொன்ற வீரச் செயலின் திறம் இவ்வாறு விளக்கப் பெறுகின்றது. மதம் பொழியும்

யானையின் மருப்பை முறித்து உருட்டினுன் என்பது செய்தி. மதம் பொழிதலை அருவி எனவும், யானையைப் பெரியமலை எனவும், அதன் இரு மருப்புக்களை இரு மலைச்சிகரங்களாகவும் உருவகித்து அவற்றை எளிதாக உருட்டினுன் என்று பேசுகின்ருர் ஆசிரியர்.

''வார்கடா அருவி யானை மாமலையின்
மருப்பிணைக் குவடிறுத்து உருட்டி'' (8-4-1)

### ஏகதேச உருவகம்

இது உருவகத்தில் ஒருவகை. ஒரு பாடலில் 'பெரிய தெய்வங் களையுடைய இம்மூன்று உலகங்களும் திருவிண்ணகர் சேர்ந்த பிரான் வைத்து ஆக்கின சோலை' (6-3-5) என்று தெரிவிக்கின்ருர். உலகங்களைச் சோலை என்று உருவகித்து அவற்றினை உண்டாக்கின வனைச் சோலை அமைத்தவன்-காப்பாளன் என்று உருவகம் செய்யாததால் இது ஏகதேச உருவகமாகின்றது. சோலை தன்னைப் பாதுகாக்க வேண்டுமென யாரையும் கேட்காது; மழையில்லையேல் இருந்த இடத்திலே வாடும்; வைத்து ஆக்கினவன் சோலைக்கு வேண்டியதை அறிந்து செய்து அதனைக் காக்கவேண்டும். மழையை வருவித்துக் கொள்ளும் ஆற்றல் சோலைக்கு இல்லை. மழை பெய்யின் பொலிவு பெறும்; வராவிடின் ஆற்றியிருக்கும். பலநாளும் வராவிடின் அழியும். அதே போன்றது உலகிற்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு என்று உணரும்போது உருவகத்தின் அருமை புலப்படும்.

### எளிய உருவகங்கள்

இறைவனின் உடலுறுப்புக்கள் பலவற்றிலும் ஈடுபட்ட ஆழ்வார் ஒவ்வொன்றைச் சொல்லும் போதும் அதனை ஒத்த வேருெரு பொருளோடு இணைத்து உருவகமாகப் பேசுகின்ருர். வேறு பிற பொருள்களைப் பற்றிப் பேசும் போதும் உருவகங்கள் வருகின்றன. இறைவனின் உலகளந்த திருவடித் தாமரைகளே அவரைப் பெரிதும் கவர்ந்தன போலும். அதனுல் பல இடங் களில் அடிகளாகிய தாமரைகள் என்றும், மண்விண் முழுவது மளந்த ஒண் தாமரை என்றும் பேசுகின்ருர்.

சில உதாரணங்கள்

1. உன் பாதபங்கயம் (7-1-1)
2. உன் அடிப்போது (7-1-4)
3. பாதபற்பு (2-9-1)

4. உன் இணைத்தாமரைகள் (6-10-6)
5. மலரடிப் போதுகள் (7-10-5)
6. தாவி வையம் கொண்ட தடந்தாமரைகள் (6-9-9).

ஒரே கருத்து வேறு வேறு வடிவம் பெற்றுத் தோன்றுவது சுவை பயக்கின்ற தன்றோ? அடிபற்றிய பேச்சு மேலே வந்தது. இனி மற்ற உறுப்புப்பற்றிய உருவகங்களைக் காண்போம்.

மற்ற உறுப்புக்கள்

1. திருக்கண் தாமரை (9-2-5)
2. கண் விழிகளின் அகவலை (6-2-9)
3. செய்யவாய் இருங்கனி
4. பல்நிலா முத்தம் (9-2-5)
5. கொப்பூழ்ச் செந்தாமரை (5-10-8)

வேறு செய்திகள்

1. கீர்த்தி வெள்ளம் (6-2-8)
2. கீர்த்திக் கனி (3-8-6)
3. சுகவெள்ளம் (10-3-2)
4. பேரின்ப வெள்ளம் (7-2-11)
5. தீவினைக் கொடுவன் குழி (7-1-9)
6. தீவாய் வாளி மழை (6-10-4)
7. கவிஅமுதம் (8-10-5)
8. பண் தேன் (3-8-6)
9. பிறவிக்கடல் (2-8-1)
10. ஞானக் கை(2-9-10)
11. இன்பக் கலவி அமுது (4-1-5)
12. வினை நோய்கள் (4-5-5)
13. மூவுலகப் பெருந்தூறு (10-10-8)

வெள்ளம், மழை, கடல், கனி, அமுதம், தேன், குழி, நோய் தூறு, கை என்ற பொருள்கள் சிறு தொடர்களில் உருவகமாக அமைந்து பொருட் சிறப்பும் செறிவும் கொண்டிலங்குவது காண லாம்.

## உவமை ஆகுபெயர்கள்

இவை உருவகத்தில் அடங்குவனவே. ஆசிரியன் தான் கூற விரும்பும் பொருளை நேரடியாகச் சொற்களால் கூறாது அப்பொரு ளோடு ஒரு தன்மையாலோ அல்லது ஒன்றிற்கு மேற்பட்ட வகை களாலோ ஒத்தபொருளை மட்டும் கூறித் தன் கருத்தை உணர்த்து

வது உவமை ஆகுபெயர்ஆம். தொன்று தொட்டு வழங்கும் வழக்குப் பெற்றனவே இப்பிரிவில் அடங்கும். மிகுதியான அளவில் இவை இடம் பெறுகின்றன. இறைவன் இவ்வகையில் விளிக்கப் பெறும் ஒரு சில குறிக்கத்தக்க உதாரணங்களைக் கீழே காணலாம்.

ஆயர் கொழுந்து (1-7-2)
மாணிக்கச்சோதி, தூய அமுது (1-7-3)
முன்நல் யாழ் பயில் நூல் நரம்பின் முதிர் சுவை (2-3-7)
கனி, கரும்பினின் சுவை, கட்டி, தேன், அமுது (3-5-6)
காரேறு (5-4-4)
பவளக்குன்று (5-8-7)
கறந்த பால் நெய்யே முதலியன (8-1-7)
தெய்வ வாரி (9-6-9); நாவிக் கமல முதற் கிழங்கே (10-10-3)
முதல் தனி வித்து (10-10-9), எங்கள் செல் சார்வு (8-4-2)
எனக்கு நல்லரண் (8-4-6)

இவ்வகையில் கூட ஆழ்வார் ஒரு சிறப்பினைக் கையாள்கின்றார் உள்ளவாறே கூறினால் அப்பொருள்கள் தான் கூறும்பொருட்டு ஒப்பாகாமையை எண்ணி அவற்றை அடைகொடுத்துச் சிறப்பித்தலைக் காணுகின்றோம்.

சில உதாரணங்கள்

தூய அமுது (1-7-5)
கடல்படா அமுது(2-3-5)
தீதவம் கெடுக்கும் அமுதம் (2-7-3)
கோதவமில் என் கன்னற் கட்டி (2-7-3)
என்னை ஆக்கிக் கொண்டு எனக்கே தன்னைத் தந்த கற்பகம் (2-7-11)
ஆராஅமுது (5-8-11); வாட்டமில் என் கரு மாணிக்கம் (9-5-7)

## வேறு அணிகள்

தற்குறிப்பு—புகழ்வது போலப் பழித்தல்- தன் தலைவனாகிய இறைவனைப் பெருமையால் வருந்தும் தலைவி மடலூர்ந்தேனும் பெறுவேன் என்று துணிவு கொள்கிறாள். அப்பொழுது மடலூர முடியாதவாறு இரவு வந்து விடுகின்றது. இரவில் பிரிந்தவர் துக்கம் மிகுதியாதல் இயல்பேயன்றோ? பேச்சுத் துணையுமில்லை; அவனது குணங்களை நினைக்க நினைக்க ஆற்றாமை மிகுகின்றது. நான் பெண்ணாகையால் 'மாயும் வழிஅறியேன்' என்று புலம்பு

கின்றாள். பின் பெண்ணாகப் பிறந்தவர் படுகின்ற பெருந்துன்பம் காண இயலாமை காரணமாகவே ஒண்சுடருடைய சூரியனும் வாராது இருந்து விட்டான் என்று சூரியன் தோன்றாமைக்கு ஒரு காரணம் கற்பித்துக் கூறுகின்றாள் தலைவி. இறைவனின் கட்டளை ஏற்று நடக்கக்கூடிய இரவியும் வராதே ஒளித்தான். ஆனால் இறைவன் கருணையாளன்—அவனைத்தான் காணவில்லை என்று ஏங்குகின்றாள். என் ஆற்றாமையை எல்லோரையும் காக்குமவனும் புருடர்களில் உத்தமனும் ஆன இறைவனால் பொறுக்கப் போமே தவிரச் சூரியன் போன்ற மற்றவர்களால் பொறுக்கப் போமோ? என்று எண்ணி இறைவன் மீது வெறுப்பாக 'இம் மண்ணளந்த கண் பெரிய நம் காரேறுவாரானால்' என்று கூறுகின்றாள். கண் பெரிய-கண்ணோட்டம் மிக்க என்பது பொருள். இங்கே இயல்பானதொரு செயலுக்குக் காரணம் கற்பித்துத் தலைவி தன் ஆற்றாமை காணப் பொறுக்காமையால் சூரியன் வரவில்லை என்று உரைப்பதும், இறைவனைப் புகழ்வது போலப் பழிப்பதும் நயமிக்கனவாம்.

## குறிப்பு

இவற்றிற்கெல்லாம் மேலாக இன்னொருவகைச் சிறப்பு செய்யுட்கு உண்டு. அது குறிப்புப் பொருள், உள்ளுறை அல்லது இறைச்சியாம். தொல்காப்பியரும் அதனைப் பற்றிப் பேசுகின்றார்.[7] சங்க இலக்கியத்தின் அகப்பாடல்களில் உள்ளுறையும் இறைச்சியும் இடம்பெற்று அவற்றிற்குத் தனிச் சிறப்பளிக்கின்றன. இம்முறையை ஒட்டிப் புறப் பாடல்களிலும் குறிப்புப் பொருள் தரும் பகுதிகள் வரும். வடமொழிவாணர் இவ்வகையை விரித்துரைத்து 'தொனி' என்ற பெயரில் தனி இலக்கணங்களும் எழுதி உள்ளனர். இது பற்றிப் பேரறிஞர் மு. வரதராசனர் எழுதியிருப்பது நினைவு கொளற்பாலதாகும்.[8] இறைச்சி என்று தொல்காப்பியர் குறிப்பது இதனையே ஆகும். "இறைச்சி தானே பொருள் புறத்ததுவே[9] என்பது தொல்காப்பியம். இடைக்காலத்தில் தமிழில் இலக்கணச் செல்வத்தை வளர்த்துத் தொண்டாற்ற முனைந்தவர்கள் இந்தக் குறிப்புப் பொருள்பற்றி விளக்கி எழுதியிருந்தால் அது பயன் மிகுந்த தொண்டாக விளங்கியிருக்கும்." ஆகவே இலக்கிய நயத்திற்கு உயிர் போல அமைந்துள்ள குறிப்புப் பொருள் திருவாய்மொழியில் அழகுற அமைந்துள்ள சில இடங்களைக் காண்பது நம் கடமையாகும். பயனுடையதுமாம்.

அகப்பொருட் பாடல்களில் உள்ளுறையும் இறைச்சியும் தனியிடம் பெறுகின்றன. ஏனெனில் நேரடியாகச் சொல்ல முடியாத

வற்றை அன்புக் காதலர் குறிப்பாக உணர்த்த வேண்டிய இன்றியமையாமை உண்டு. அவ்வியல்பு கவிதைச் சுவையை மிகுவிப்பதில் ஐயமென்ன? திருவாய்மொழியில் குறிப்புப் பொருள் அமைந்த பலவகைப் பாடல்களில் ஒரு சில எடுத்துக்காட்டுக்கள் காண்போம்.

1. முதல் வகை இறைவனைச் சொல்லும் வரிகளிலோ அல்லது ஊர்களைப் பற்றிய வருணனை வரும் இடங்களிலோ இறைவனையும் ஊர்களையும் பற்றி மட்டுமல்லாமல் ஆழ்வாரைப் பற்றியும் அவர்க்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு பற்றியும் குறிப்பாய்ச் சில செய்திகள் தெரிவிப்பனவாக அமைந்தவை.

(எ-டு) இறைவன் தம்மோடு கலந்து அநுபவித்த கல்வியை ஆழ்வார் அருளிச் செய்கையில் இறைவனைப் பல தொடர்களால் குறிக்கின்றார். அதில் ஒரு தொடர் 'வேழ மருப் பொசித்தான்' (1-9-2) என்பது. யானையது தந்தங்களை முறித்து அதனை அடக்கியவன் என்பது இதன் பொருள். இத்தொடரால் ஆழ்வார் 'தன்னுடைய மதக்களிறுகளாகிய ஐம்பொறிகளையும் சேரிதிரியாமல் செய்தவன் இறைவன்' என்று குறிப்பாகச் சுட்டுவதாகக் கொள்வது பொருத்தமேயன்றோ? இப்படிப்பல.[10]

'சேறார்சுனைத் தாமரை செந்தீ மலரும் திருவேங்கடத்தானே
ஆறாஅன்பி லடியேன்உன் அடிசேர் வண்ண மருளாயே,
(6-10-2)

இதில் முதல் அடியில் 'சேறு நிறைந்த சுனைகளிலுள்ள தாமரைகள் செந்தீ போன்று மலர்கின்ற இடமான திருவேங்கடம்' என்று மலையின் இயல்பு குறிக்கப்பெற்றுள்ளது. பின் அடியில் அதன்கண் உள்ள இறைவன் ஆறாத அன்புடைய அடியவனாகிய தனக்கு, அவன் அடிசேர அருள வேண்டுமென்று வேண்டுகின்றார் ஆழ்வார்; சுனைவருணனை ஒரு உட்குறிப்பை உடையதாகும். தாமரை மலர்ந்துள்ள சுனை என்பதால் அதில் நீர்வற்றுதல் இல்லை என்பது விளங்கும். அது போன்று தன் அன்பும் குறையாத தன்மையது. நிலையானது என்பது குறிப்புப் பொருளாம். ஆனால் இங்கு அடுத்த அடியில் அது வெளிப்படவும் குறிக்கப்பெற்றுள்ளது.

இன்னொரு இடத்தில் மக்கட்கு இறைவனை வழிபாடு செய்யுமாறு அறிவுரை கூறுங்கால் 'தேனை வாடா மலரிட்டு நீர் இறைஞ்சுமின்' (9-10-4) என்கின்றார். தேனைப்பெற்ற வாடுதலில்லாத மலர்களை இட்டு நீங்கள் வணங்குங்கள் என்பது இதன் பொருள். இப்பொருளை மட்டுமன்றி, இவர்கள் பிரிவின்றி அவனைப்

பற்றி நிற்பது தேனையும் மலர்ந்த பூவையும் சேர்த்து வைப்பது போன்று மிக்க பொருத்தமானதொரு செயல் என்பதனையும் குறிப்பாக உணர்த்துவதாம். இவ்வாறு வரும் இடங்கள் பிறவும் உள (9-2-9), (10-3-10).

மற்றொரு தன்மை இடங்களை வருணிப்பது. 'மறியொடு பிணைசேர் மாலிருஞ்சோலை; மழக்களிற்றினம் சேர் மாலிருஞ்சோலை; மாதுறு மயில்சேர் மாலிருஞ்சோலை (2-10-6, 9, 10) என்று மாலிருஞ் சோலையை வருணிக்கையில் மான் குட்டியும் தாயும் பிரியாமல் வாழ்தலையும், களிறுகள் இனமாக வாழ்தலையும், மயில்கள் இரட்டையாக இருத்தலையும் குறிப்பிடுகின்றார். இதனால் அறிய லாகும் குறிப்புப் பொருள் தானும் இறைவனைச் சென்று சேர்வது தக்கது; தனக்கு ஏற்ற இடமே அம்மலை என்பதாம். இவ்வாறு கொள்ளுதல் தக்கதேயன்றோ?

2. இரண்டாவது வகை இறைவனையும் தலைவியின் தோழி யரையும் மற்றும் சிலரையும் விளிப்பதாக அமைந்த தொடர்கள் குறிப்புப் பொருள் உணர்த்துவன.

தலைவனைப் பிரிந்த தலைவியின் ஆற்றாமை கண்ட தாய் தலைவனை நோக்கி இரங்கிக் கூறும் பாசுரங்கள் ஒன்றில் தாய்

'விறல் வாணன் ஆயிரம் தோள் துணித்தீர்! உம்மைக்
காணநீர் இரக்க மிலீரே' (2-4-2) என்று முறையிடுகின்றாள்.

வலிமை மிக்க வாணனுடைய ஆயிரம் தோள்களைத் துணித்தவரே! என் மகள் உம்மைக் காண ஆசைப்படுகின்றாள்; இரக்கமற்றவராக இருக்கின்றீரே' என்பது பொருள். முன்னர் அநிருத்தன் உசையை மணக்கத் தடையாக நின்ற அவள் தந்தை வாணனுடைய ஆயிரம் தோள்களைத் துணித்தீர்; அத்தகைய உமது இரக்கப்பண்பும் வீரமும்; இன்று ஒரு ஆதர வற்ற பெண்ணிற்கு உதவல் ஆகாதோ என்பது குறிப்புப்பொருள். இவ்வாறு அமைந்த வேறு சில இடங்கள் (2 4-10), (7-2- ).

தோழியரை வாணுதலீர்! என்று விளித்துக் 'காட்சிக்கு இனிதாய்க் குளிர்ந்து அழகுடையதான திருத்துழாய் மலரை ஆசைப்பட்டுக் கிடைக்காமல் என் மகள் சுருண்டு விழுந்து கிடக் கின்றாள்' என்கிறாள் ஒரு தாய்.

வடங்கொள் பூந்தண்ணன் துழாய் மலர்க்கே இவள்
மடங்குமால் வாணுதலீர்! என் மடக்கொம்பே (4-2-7)

இந்நிலையில் மகளின் தோழியரை ஒளிபொருந்திய நெற்றியினை உடையீர் என விளிக்கும் தாயின் நோக்கம் உங்களைப் போன்று என் மகளை நான் காண்பது எப்போது என்பதாகத் தானே இருக்க வேண்டும்? இதுவே இதிற் புலப்படும் குறிப்புப் பொருள். இவ்வாறு பல இடங்களில் விளி அமைகின்றது. (4-4-1) (5-3-7) (5-9-3,6,7) தூதுவிடப் பறவைகளை விளிக்கையிலும் இத்தகைய தன்மை காண்கிறோம். (6-1-2,9) (1-4-2)

3. மூன்றாவது வகை சில தொடர்கள் நேர் எதிரான பொருள்-எதிர்மறைப் பொருள் பயக்குமாறு அமைவன.

ஆழ்வார் பெண் நிலைமை அடைந்து உயிரில் பொருள்களையும் பறவை முதலியவற்றையும் கண்டு, தம்மைப் போன்று அவையும் அவனைப் பிரிந்து துன்புறுவதாக எண்ணி அரற்றும் பகுதியில் (7-1) வானத்துள்ள மதியைப் பார்த்து இவ்வாறு பேசுகின்றார்.

‘மதியே! நீ வானிலுள்ள இருளை அகற்றாது ஒளிமங்கித் தேய் கின்றாயே. அரவணையில் உள்ள ஆழி ஏந்திய பெருமானார் ‘மெய் வாசகம் கேட்டு உன் மெய் நீர்மை (உடலின் தன்மை) தோற்றாயே’ என்கிறாள் தலைவி.

‘ஐவாய் அரவணைமேல் ஆழிப்பெருமானார்
மெய்வாசகம் கேட்டு உன் மெய்நீர்மை தோற்றாயே?’’ (2-1.6)

இறைவனைப் பெருமானார் என்கிறாள். பொதுவாக ‘ஆர்’ விகுதி பெருமையைக் குறிக்கப் பெயர்களோடு சேர்க்கப் பெறும். ஆனால் இங்கு அது பெருமையைக் குறிக்கவில்லை. பொய்யில் பெரியவர் என்பதனைக் குறிக்கின்றது. ‘மெய்’ என்பதும் இவ்விடத்தில் பொய்’ என்றுதான் குறிப்பால் பொருள் தரும். நாட்டவர் கூறும் பொய் போன்றதன்று; அதனினும் மிக்க பெரும் பொய் என்ப துணர்த்தற்கு ‘மெய்’ என்ற சொல் அமைக்கப் பெற்றது போலும். இவ்வாறே ‘பொல்லாத் திருக்குறளா’ (2-6-1) என்பது குறிப்பால் அழகிய வாமனனே என்ற பொருளையே காட்டுகின்றது.

4. நான்காவது வகை சில கருத்துக்களைக் கூறுகையில் குறிப்புப் பொருள் வெளிப்படுவது.

அ. என்நீல முகில் வண்ணற்கு என் சொல்லியான்
சொல்லுகேனோ?
... ... ...
நன்னில மகன்றில்காள்! நல்குதிரோ? நல்கீரோ? (1-4-4)

தூது அனுப்புகின்ற பிராட்டி நீல மகன்றில்களை விளித்து என்னுடைய நீல முகில் வண்ணர்க்கு நான் எதனைச் சொல்லி அனுப்புவேன்; நான் கூறுவதனை நீங்கள் செய்வீர்களோ மாட்டீர்களோ' என்கிறாள். ஏன் இவ்வாறு ஐயுறவோடு கேட்க வேண்டும்? அவர் நீல முகில் வண்ணர்; நீங்கள் நீல மகன்றில்கள்; நிறம் ஒன்றானபடியால் செயலிலும் அவரைப் போன்று இருப்பீர்களோ என்ற குறிப்போடு இப்பேச்சுப் பேசப் பெறுகின்றது.

ஆ. வானை உந்தும் மதிள்சூழ் திருக்கண்ணபுரம்
தானயந்த பெருமான் சரணாகுமே (9-10-4)

உலகவர்க்கு உபதேசம் செய்கையில் ஆழ்வார், வானைமுட்டும் மதிள் சூழ்ந்த திருக்கண்ணபுரத்தே விரும்பியுறையும் இறைவன் உங்கட்குச் சரணாவான் என்கிறார். இங்கே குறிப்பால் விளங்கும் பொருள் அம்மதிள் அவ்விறைவனுக்கு அரண் ஆனாற்போலே உங்கட்கு அவன் மதிள் ஆம் என்பதாம்.

இ. 'செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூர்க்கே
ஒல்கி ஒல்கி நடந்து எங்ஙனே புகுங்கொல் ஒசிந்தே'
(6-7-7)

தலைவன் நகர் நோக்கிச் சென்ற தலைமகளைப் பற்றித் தாய் இரங்கும் பாசுரம் இது. செல்வம் நிறைந்துள்ள அவன் கிடந்த திருக்கோளூர்க்கு என் இளமகள் எங்ஙனம் சென்று சேர்வளோ என்பது இதன் பொருள். தாயின் எண்ணம் முறைப்படி அவன் பாதி வழியேனும் வந்து இவளைப் பார்த்து அணைத்துக்கொண்டு போயிருக்க வேண்டும் என்பது. அவ்வாறு செய்யாததற்குக் காரணம் அவன் செல்வச் செருக்கே. அன்றாகில் இவ்வருகை அவனதாக வன்றோ இருக்கும் என்பது திருக்கோளூரை வருணிப்பதால் புலனாகும் குறிப்புப் பொருளாகும்.

ஈ. கனிந்த பொழில்களை உடைய திருப்பேரைநகர்க்கு உரிய காலத்தே தன்னைக் கொண்டு சென்று அவ்வூரினைக் காட்டுமாறு தாயரை வேண்டுகின்றாள் ஒரு தலைவி. இவ்வாறு ஊரை வருணிப்பவளது எண்ணம் அங்குள்ளன வெல்லாம் பக்குவமாக இருக்கும்; கொண்டு காட்டுவார் தாழ்வே; பின் காலதாமதம் இல்லை; அவன் தன்னை ஏற்றுக் கொள்வதில் தடையில்லை என்பது. கண்ணனை வருணிக்கையில் கனிந்த விளாமரத்தினைக் கண்டு அருகிருந்த கன்றினை எடுத்து எறிந்து மரத்தினையும் கன்றினையும் ஒரு சேர அழித்தவன் என்கின்றாள். அவ்வாறு இவ்வூரில் சாபத்தால்

அசுர மரமாகவோ கன்றாகவோ நிற்றல் இல்லை. அஞ்ச வேண்டுவ தில்லை என்பதும் குறிப்பு.

கனிந்த விளவுக்குக் கன்றெறிந்த கண்ணபிரானுக்கு
என் பெண்மை
... ... ... ... தோற்றேன்
கனிந்தபொழில் திருப்பேரையிற்கே காலம்பெற என்னைக்
காட்டுமினே (7-3-5)

மற்றும் இத்தகைய குறிப்பு அமைவன[11] [(2-9-10) (5-3-7) (6-1-8) (7-3-1) (7-7-6) (9-2-5)].

உ. உலக இயற்கையில் வெறுப்புக் கொண்டு தம்மைத் தன் திருவடியில் சேர்த்துக் கொள்ளுமாறு இறைவனிடம் வேண்டு கின்றார் ஆழ்வார். அப்போது உலக இயல்பை இவ்வாறு இயம்பு கின்றார்

"கொண்டாட்டும் குலம்புனைவும் தமருற்றார் விழுநிதியும்
வண்டார்பூங் குழலாளும் மனையொழிய உயிர்மாய்தல்
கண்டாற்றேன் உலகியற்கை" — (4-9-3)

சிறந்த நிதியும், வண்டு தேனுண்ணும் பூ அணிந்த கூந்தலை உடைய மனையாளும், பெரிய வீடும் கிடக்க அவற்றிற்கு உரிமை உடைய ஒருவன் உயிர்விடுகின்ற தன்மை கண்டு ஆற்றேன்! இது என்ன உலகியற்கை'' என்று இரங்குகின்றார் ஆழ்வார். இங்கு செல்வத்தின் பயனையும் மனைவியின் இன்பத்தையும் வீட்டின் வசதிகளையும் அவன் நுகரவில்லை என்பது குறிப்பு. 'வண்டார் பூங்குழலாள்' என்ற தொடரின் மூலம் அவள் அழகினை வண்டே அனுபவிக்கின்றது; அவள் கணவன் அநுபவிக்க மாட்டான் என்பதனைக் குறிப்பால் அறிவிக்கின்றார் கவிஞர்.

5. ஐந்தாவது வகை கருப்பொருள் வருணனையில் உள்ளுறை அல்லது இறைச்சிப் பொருள் அமைந்தவை.

இறைச்சி

திருவல்லவாழ் என்ற திவ்விய தேசத்தை அடையப் புறப்பட்ட தலைவி தன்னைத் தடுக்கும் தோழியரை நோக்கி 'நான் என்று அத்திருவல்லவாழ் நகரைச் சென்று சேர்வன்?' என்று கூறும் பகுதியில் அப்பதி இவ்வாறு வருணிக்கப் பெறுகின்றது.

'என்றுகொல்? தோழிமீர்காள்! எம்மைநீர் நலிந்து
என்செய்தீர்?
பொன்திகழ் புன்னைமகிழ் புதுமாதவி மீதணவி

தென்றல் மணங்கமழும் திருவல்லவாழ் நகருள்
நின்றபிரான் அடிநீறு அடியோம் கொண்டு சூடுவதே' (5-9-2)

'பொன்னைப் போன்று விளங்கும் புன்னை, அதே போன்றுள்ள மகிழ மரம், மலர்ந்த குருக்கத்தி இவற்றின் மீது பொருந்தி அங்குள்ளனவெல்லாம் கவர்ந்து வந்து தென்றற் காற்றுனது மணம் கமழ்கின்றது. திருவல்லவாழ் நகரில் அவ்விடத்து நின்றுள்ள இறைவன் திருவடி நீறு கொணர்ந்து அடியவர்களாய நாங்கள் சூடிக்கொள்வது என்றோ? தோழியர்களே! என்னைத் தடுத்து நலியுமாறு செய்வதால் நீங்கள் என்ன பயன் பெறுவீர்கள்? என்பது தலைவியின் பேச்சு. அவன் உள்ளக் கருத்து என்னை நலிய அங்குள்ள புன்னை முதலியன போதும். மென்மையை உடைய நீங்கள் ஏன் அப்பணி செய்ய வேண்டும்? என்பது. மற்றும் அத் தலைவன் இயல்பைத் தென்றல் வருணனையின் மூலம் அவள் சுட்டுகின்றாள். அவ்விடத்துள்ளவற்றை யெல்லாம் கவர்ந்து கொண்டு தன்னுடையதொன்றும் கொடுக்காது போய் விடுவது அந்நிலத்துள்ள பொருள்கட்கெல்லாம் இயல்பு என்று உணர்த்து கின்றாள். தலைவன் பண்பும் அத்தகையதே என்பது அவள் குறிப் பால் உணர்த்தும் செய்தியாம். இது இறைச்சி என்று தொல் காப்பியர் கூறுவதற்கு ஏற்ற உதாரணமாகும். இவ்வாறு வரும் இடங்கள் இன்னும் உள[12] [(6-1-8) (7-3-1)] (7-3-6).

ஆய்வு முறை விளக்கத்திற்காகக் குறிப்புப் பொருள் தரும் பகுதிகளை ஐந்து வகை எனப் பிரித்துக் கொண்டதன்றி அவை தனித் தன்மையுடைய வெவ்வேறு வகைகள் அல்ல; கவிஞர் அவ் வாறு எண்ணிச் செய்வது மில்லை. தான் அமைத்துள்ள சொற்கள் வெளிப்படையாகத் தரும் பொருளன்றி வேறு குறிப்புப் பொருளை யும் அவை உணர்த்துமாறு அமைத்துள்ள கவிஞர்தம் கவிதை அழகினை நாம் உணர்ந்து சுவைப்பதே இன்றியமையாதது. அத்தகைய திறம் நம்மாழ்வார்பால் நிறையவுண்டு; அவர் கவிதை ஒப்பற்றுத் திகழ்கின்றது என்பது இதுகாறும் காட்டிய எடுத்துக்காட்டுக்களால் தெளிவாகும்.

தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாதையரவர்கள் புறநானூற்றுப் பதிப்பில் உரையின் இயல்பு பற்றி எழுதுகையில் குறிக்கும் கருத்தினை இங்கு நினைவு கூர்தல் தகும்.

"அகப்பொருட் செய்யுட்களுக்கு உரைவகுக்கும் உரையாசிரி யர்கள் உள்ளுறை உவமமாகவும் இறைச்சிப்பொருளாகவும்

அறிந்து கூறும் பொருளைப் போன்று பாட்டிற் காணப்படும் இன்ன சொற்களின் குறிப்பினுல் இன்னபொருள் தோன்றுகின்ற தென்றும் இன்ன நயம் புலப்படுகின்ற தென்றும் இவர் எழுதிச் செல்லும் இடங்கள் மிக்க இன்பத்தை உண்டாக்கும்''[18]

## அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியம்-பேராசிரியர் உரை-உவம இயல்-பக். 155.
2. சங்க இலக்கியத்தில் இயற்கை (ஆங்கிலம்)-தனிநாயகம், ரெவரெண்ட் பாதர்- பக் 47.
3. 'இந்திய பண்பாட்டின் அடித்தளங்கள்' (ஆங்கிலம்)-கவிதையும் பண்பாடும் பற்றிய உரைகள்-3வது தொகுதி-அரவிந்தர், 1949, பக் 46.
4. 'கவிதையும் கற்போனும்' (ஆங்கிலம்)-ரிட்லே எம். ஆர்-பக் 64.
5. தண்டியலங்காரம்-சூ 36.
6. திருக்குறள்-1147.
7. தொல்காப்பியம்-பொருளியல், சூ 36; அகத்திணையியல் சூ47.
8. பேராசிரியர் பி. சுந்தரம் பிள்ளை நினைவுத் தொகுதி-(சைவ சித்தாந்தக் கழக வெளியீடு) 1957, பக் 154.
9. தொல்காப்பியம்-பொருளியல் சூ 35.
10. திருவாய்மொழி (2-6-9).
11. திருவாய்மொழி (2-9-10), (5 3-7), (6-1-8), (7-3-1), (7-7-6) (9-2-5).
12. திருவாய்மொழி (6-1-8), (7-3-1), (7 -3-6).
13. புறநானூறு-சாமிநாதையர் உ. வே. (3ம் பதிப்பு 1935), உரையின் இயல்பு, பக் 85.

# இயற்கை வருணனை

இயற்கையின் சூழலில் உள்ளம் களிப்பெய்தாத கவிஞனே இல்லை. காலந்தோறும் புலவர்கள் இயற்கையைத் தாம்தாம் உணர்ந்தவாறு பாடி வந்துள்ளனர். அவர்தம் உணர்வுகள் வேறுபடலாம். வேர்ட்ஸ்வொர்த் இயற்கை கடவுள் தன்மை வாய்ந்த தென்று கருதினர்! இயற்கையின் வாயிலாக இயற்கையின் உள்ளுறையும் உயிருடன் உறவு கொள்ள நாடினர். எல்லா வகை வாழ்வுகளும் ஒன்றும் அழிவற்ற பரம்பொருளின் மெய்யுணர்வு வெளிப்பாடே இயற்கை என்பர் ஷெல்லி. மனிதக் கூட்டத்தின் நிலைமைகளால் மனிதனுக்கு மறுக்கப்பட்ட உணர்ச்சிமிக்க உரிமையை இயற்கையில் கண்டார் பைரன். அலையும் அவதிமிக்க உள்ளத்திற்கு இயற்கையின் அமைதி புகலிடமாயும் நிறைவளிப்பதாயும் இருந்தது ஆர்னல்ட் என்பார்க்கு.[1] நம்மாழ்வாரின் உள்ளம் எப்பொழுதும் இறைவனையே எண்ணிக் கொண்டிருந்தது; அவ்வீடுபாடு காரணமாக அவர் எப்பொருளிலும் இறைவனைக் கண்டார். உண்ணும் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ணன்[2] என்று அவர் கூறுகின்றர். அதனல் இயற்கை தம்பால் பரிவு காட்டுவதாயும் தம் எண்ணங்களுடனும் செயல்களுடனும் ஒன்றித்து இருப்பதாகவும் ஆழ்வார் பாடுவதில் வியப்பொன்றுமில்லை. பெரும்பான்மையாக இயற்கையிலிருந்தே உவமைகளும் உருவகங்களும் எடுத்து ஆளுகின்றர். சங்கப் புலவர்களைப் போலவே இவரும் வருணிப்பதன் பொருட்டு இயற்கையை வருணிக்காது மனித வாழ்வின் பின்னணியாகவே அதனைப் பாடுகின்றர். உள்ளவாறே அதனை வருணிப்பதையும், ஓரளவு மரபை ஒட்டி இயற்கையின் உண்மைகளைத் தம் பாடலில் வெளியிடுவதையும் காண்கிறேம்.

திருவாய்மொழியில் உள்ள இயற்கை வருணனைப் பகுதிகளை நான்கு பெரும் பிரிவுகளில் அமைக்கலாம். 1. திவ்விய தேசங்களைப் பாடுகையில் அவற்றின் இயற்கைச் சூழலை வருணித்தல். 2. பறவைகளையும் பிற இயற்கைப் பொருள்களையும் தூதாக அனுப்புகையில் வரும் வருணனை. 3. பலவகை இயற்கைப் பொருள்களிலும் உறையும் இறைவனின் அழகை வருணிக்கையில் வருவது. 4. இம்மூன்றைத் தவிர முக்கியமான பகுதி இயற்கை யானது மனித இனத்தின் செயல்கட்கு ஒத்து இயங்குவதாக விவரிப்பது.

## I. இடங்களைப் பற்றி விளக்குகையில் இயற்கை

திருவாய்மொழியில் 31 திவ்விய தேசங்களைப் பற்றிப் பேசப் பெற்றாலும் அவற்றுள் 18 இடங்கள் மட்டுமே விரிவான வருணனை பெறுவன. அவை குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற முத்திணைப் பகுதியிலும் அமைந்துள்ளன.

### தென்மலையும் வடமலையும்

மாலிருஞ் சோலை மலையையும் திருவேங்கட மலையையும் பாடுகையில் அவ்விடங்களில் உள்ள அருவிகள், அவை உருட்டி வரும் நன்மணிகள், தாமரை மலர்ந்த அழகிய பொய்கைகள், வற்றாத சுனைகள், மலைகளை அடுத்த அடர்ந்த காடுகள், அவற்றுள் இணை இணையாக உறையும் மான், யானை, மயில் முதலிய விலங்குகள் பறவைகள், மலையின் உயர்ச்சி இவற்றிற்கெல்லாம் மேலாக அவை இறைவன் உறைவிட மாதலின் அவனை வழிபட அங்கு வந்து கூடும் விண்ணவர் மண்ணவர் பற்றியெல்லாம் பாடு கின்றார் ஆசிரியர். இவை நயமுற வருணிக்கப் பெற்றுள்ளன. அங்கே 'தென்னதென' என்று வண்டு இசைபாடும். மலைகள் வளம் மிக்கன. திருவேங்கடம் உலகுக்கெல்லாம் திலதம் போன்றது; தென்கொள் திசைக்குத் திலதம், திருமாலிருஞ்சோலை. வளரிளம் சோலை மாலிருஞ் சோலையைக் கிளர் ஒளி இளமை கெடு வதன் முன்னமே சென்று காணுமாறும் வணங்குமாறும் அறி வுறுத்துகின்றார். ஒழிவற்ற காலமெல்லாம் வேங்கடத்து இறைவ னுடன் அமர்ந்து அவனுக்கு வழுவற்ற எல்லா அடிமைகளும் செய்ய விரும்பும் ஆழ்வார் அங்குள்ள இயற்கை அழகிலும் ஈடு பட்டுள்ளார் என்று தோன்றுகின்றது. இல்லைஎனில் ஏன் அவர் அருவிகள் எழுப்பும் தெழிகுரலைப் பாடவேண்டும்? வேங்கடவன்

தன் வலக் கையைத் தன் திருவடி நோக்கிக் காட்டிக் கொண்டு நின்றிடும் தன்மை, அடியார்களைத் தன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்து வாழுமாறு சுட்டுவதாகப் பாடுகின்றார் (6-10-11).

### வயல்வெளி நகர்கள்

அவரால் பாடப் பெற்ற குருகூர், சீவரமங்கலம், குடந்தை, திருவிண்ணகர் முதலானவை நெல்வயல்களினிடயே அமைந்தவை. இவற்றை வருணிக்கையில் செந்நெல் வயல்களினுடையவும் கரும்பு விளை இடங்களினுடையவும் வளத்தையும், மலர்ந்த தாமரைகளையும், பெரிய மாடமாளிகை நிரைகளையும் பாடுகின்றார். இவை அழகுடன் விளங்குகின்றன; தேவர்களும் மற்றவர்களும் பலகாலும் இங்கு வந்து போகின்றனர் என்று பல இடங்களில் சுட்டுகின்றார். தென்றல் காற்றால் செந்நெற் பயிர்கள் இறைவனுக்குக் கவரி வீசுகின்றன என்று பெரிதும் விரும்பிப் பாடுகின்றார்.[5]

### மேல் கடற்கரைக் கோவில்கள்

இன்றைய கேரளநாட்டில் அமைந்துள்ள பல திவ்விய தேசங்களைப் பாடுகின்றார். அவற்றில் பல மலைப்பகுதியில் உள்ளன. அவையாவன. திருவல்லவாழ், திருவண் வண்டூர், திருப்புலியூர், திருவாறன்விளை, திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு முதலியன. திருப்புலியூர் பற்றிப் பாடுகையில் அவ்விடம் குறித்தும் அதன் சுற்றுப்புற இயற்கைச் சூழல் குறித்தும் விரிவாகவும் தெளிவாகவும் வருணனை தருகின்றார். அதனைச் சுற்றியுமுள்ள மூன் கூறப்பெற்ற பதிகளும் திருவனந்தபுரமும் அவ்வாறே வருணிக்கப் பெற்றுள்ளன. இவ்விடச் சிறப்பால் மலைப்பகுதியும் கடற்கரையும்' வயற்புறமும் ஆய மூன்றின் வருணனையும் பின்னிப் பிணைந்து வருகின்றன. அதனைப் படிக்கும்போது இக்காலக் கேரள நாட்டின் இயற்கை எழில் நலம் நம்மனக்கண்முன் தோற்றமளிக்கும். அதுவே ஆழ்வார்தம் இயற்கை வருணனைத் திறத்திற்குச் சான்றுமன்றோ?

### அ. மலைப்பகுதி

பருத்த இளங்கமுக மரங்கள் அடிப்பாகத்தை அழகிய வளமான வெற்றிலைக் கொடிகள் சுற்றியிருக்கக் காணப்படுகின்றன. அகன்ற இலைகளையும் மடல்களையும் உடைய வாழை மரங்கள் பழுத்த கனிகளுடன் உள்ளன. நெருக்கம் காரணமாக ஒன்றுடன்

ஒன்று பிணைந்த இலைகளையுடைய தென்னைகளும் அங்கே காணப் பெறுகின்றன. இம் மரங்களிடையே நறுமணத் தென்றல் உலவி வருகின்றது. இத்தகைய சூழலில் திருப்புலியூர் உள்ளது (8-9-7.)

இவ்வருணனையில் அப் பகுதியின் இயற்கைப் புல் மரம் செடி கொடி முதலியன குறிக்கப் பெற்றுள்ளன. கமுகு, வாழை, தென்னை மரங்களும், வெற்றிலைக் கொடிகளும் தக்க அடைமொழி களோடு அமைந்துள்ளன. மெல்லிலைச் செல்வ வண்கொடி வீங் கிளந்தாழ் கமுகு, மெல்லிலை மடல் வாழை, புல்லிலைத் தெங்கு என்பன காண்க. கட்புலனுக்குரிய வடிவம் மட்டுமன்றி, ஒலிதவிர மற்ற சுவை, நாற்றம், ஊறு ஆய புலன்கட்குரியனவும் விவரிக்கப் பெற்றுள்ளன.

வேறு ஒரு வருணனையில் மலையில் உள்ள பொய்கைகளில் முழு இடத்தையும் அடைத்துக் கொள்ளும்படி அகன்று விரிந்த பூக்கள் மலர்ந்துள்ளனவாம் (8-9-5). இவ்வாறு கூறுவது அவ் விடம் மற்றவர்க்கு இடமளிக்காது என்பதைக் குறிப்பதாகக் கொள்ளலாம். அதாவது இப்பகுதியில் குறிக்கப் பெறும் தலைவி அவ்விடம் விட்டு வெளியே யெங்கும் போக முடியாது என்பதை உணர்த்தும். அவள் திருப்புலியூர் இறைவனையே சார்ந்து இருக்க வேண்டியவள் என்பது குறிப்பு. அங்கு கமுகின் பழங்கள் இறைவன் அருட் சிறப்பால் பழுத்தவை. அவை தலைவியின் செவ்விதழ் போல் உள்ளனவாம் (8-9-6).

மற்றோர் இடத்தில் திருவல்லவாழ் பற்றிப் பேசுகையில் கீழ்க் காணுமாறு வருணனை உள்ளது. "பசிய இலைகளையுடைய நீண்ட கமுகுகளும் உயர்ந்த பலாமரம் தென்னை வாழை மரங்களும் அங்குள்ள அழகிய பெரிய பலநிலை மாடங்களின் கூரைகளைத் தொட்டுக்கொண்டு நிற்கின்றன" (5-9-4) என்கிறார்.

## ஆ. மருத நில வருணனை

மேற்குறித்த குட்ட நாட்டுத் திருப்புலியூரின் வயல் வளம் இவ்வாறு அமைகின்றது. வளப்பத்திற்குச் சான்றாக விளங்கும் சோலைகள் சுற்றிலும் உள்ளன; கன்னலும் பெருஞ் செந்நெலும் அவ்விடமெங்கும் பரந்து காணப் பெறுகின்றன; உழவின் சிறப் பால் அவ்விடம் அடைந்த வளப்பத்தினைத் தண்ணிய வயல்கள் விளக்கிக் கொண்டு திகழ்கின்றன (8-9-4). முதலை வாழும் தடாகங் களில் தாமரைக் காடுகள் பூத்துள்ளன; அக்காட்சி எரியும்

விளக்கின் சுடர் பரவியது போல் தோற்றமளிக்கின்றது. சுற்றுப் புறமெங்கும் கழனிகளும் தோட்டங்களுமே காட்சி தருகின்றன (8-9-9).

திருவல்லவாழ் வருணனையில் அவ்விடத்துப் பொருள்கள் பயன் மிக்கனவாக அமைந்துள்ளமை தெரிவிக்கப் பெறுகின்றது. பிழிந்து சாறு எடுப்பதற்கான இன் கரும்பு, விளைந்த செந்நெற் பயிர்கள்-இவை எங்கும் காணப் பெறுகின்றன. அவற்றின் அருகே பூந்தடாகங்கள் சேர்ந்த வயல்கள் உள்ளன (5-9-8). ஆழ்வாரின் நுட்பமான பார்வை இதிலிருந்து விளங்கும். 'தண்ணிய சோலைகளில் இனிய மதுவுண்டு விட்டு வண்டுகள் இசை பாடுகின்றன; அவ்விசை குழலிசை போலும் யாழினிசை போலும் இனியதாக உள்ளது (5-9-9). இங்கே ஐம் புலனில் ஒன்றுக்கு மேற்பட்ட புலன்கட்குரியதாக வருணனை அமைகின்றது. செவிப் புலனான இசையைக் குறித்தவர் மற்றொரு பாடலில் குளங்களின் அழகு பற்றிப் பாடிக் காட்சி விருந்தைக் காட்டுகின்றார். நீர் நிறைந்து தாமரையும் குவளையும் மிதக்கும் குளங்கள் மாதர்களின் முகங்களையும் கண்களையும் ஏந்திக் கொண்டிருப்பதாக மனிதர்களோடு தொடர்புபடுத்திக் கூறும் காட்சி அழகுடையதாக அமைகின்றது (5-9-7). இவ்வருணனைகள் தவிரக் கீழ்க்காணும் மரங்களும் பறவைகளும் மற்றும் சில இயற்கைப் பொருள்களும் குறிக்கப் பெற்றுள்ளன. பொன் திகழ் புன்னை, மகிழ், புதுமாதவி, செருந்தி, ஞாழல்; மழலைவாய் வண்டு, சேற்றில் வாளை, கயல், தள்ளி, சேல் முதலாயின இடம்பெறுகின்றன.

## 2. தூது அனுப்புதல், அவற்றை விளித்தல் இவற்றில் அமைந்த இயற்கை வருணனை

பிரிவின் காரணத்தால் உண்டான ஆற்றாமை மிகுதியால் ஆழ்வாராகிய தலைவி தன் தலைவன்பால் சில பறவைகளைத் தூதாக அனுப்ப முயலுகின்றாள். அகப்பொருள் முறைப்படி நெய்தல் பின்னணியில் இது நிகழ்தல் பொருத்தம். இங்கும் அவ்வாறே அமைகின்றது. தன்னருகே ஒரு நாரையைக் காண்கின்றாள் தலைவி. அவள் ஆண் பறவையைத் தூதாக அனுப்ப விரும்பினும் பெண்ணைப் பார்த்தே பேசுகின்றாள். 'அஞ்சிறைய மடநாராய்!' (.-4-1) என்பது அவள் விளி. (அழகிய சிறகுகளை உடைய இள நாரையே என்பது பொருள்) மட என்பது அதன் பயன் படும் தன்மையைமட்டுமன்றி அதன் பணிவையும் காட்டும். மற்றும்

அது தன் தோற்றத்தால் அப்பொழுதுதான் தன் துணையுடன் இன்பம் நுகர்ந்துள்ளது என்பதனையும் சுட்டும். மகளிர்க்குரிய மடம் என்ற பண்பினைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். அவள் சிறகுகளை வருணிப்பதன் நோக்கம் அவையே இவள் வேண்டுதலை நிறைவேற்ற அப்பறவைக்கு ஏற்ற கருவிகள் என்பதனாலாகும். இது இப்பகுதியின் உள்ளுறை. இங்குப் பெண்ணை விளிப்பதன் கருத்து, வைணவ சமயத்தில் இறைவனை அடைய விரும்புபவர் பிராட்டியின் மூலமாக-புருஷகாரமாக-அவனை அடைதலே தகுதி என்று கூறும் கொள்கையை உட்கொண்டதாகவும் கொள்ளலாம்.

துன்பத்தில் அகப்பட்டவர் வழக்கமாக அம்மே என்று அரற்றுவதே இயல்பு. அவ்வாறே ஆற்றாமையில் புழுங்கும் தலைவி தன் வருத்த மிகுதியால் ஒ நாராய்! என்று விளிக்கின்றாள். பின்னரும் இவ்வாறு வருமிடங்களிலெல்லாம் இதுவே கருத்தாகக் கொள்ளல் பொருந்தும். நூலில் உள்ள நான்கு தூதுப்பதிகங் களிலும் சேர்ந்து பறவைகளும் மூன்று மற்ற பொருள்களும் தூது அனுப்பப் பெறுகின்றன. அவையாவன: நாரை, குயில், அன்னம், வண்டு, கிளி, மகன்றில் இவைகளும்; குருகு. கொக்கு, தும்பி, சிறு பூவை, புதா இவைகளும் ஆம். மற்றபொருள்கள் மேகங்கள், பாவைகள் இவையும் தலைவியின் உள்ளமும் ஆம். வருணனையில் அப்பொருள்களின் பண்பும் தோற்றமும் சுட்டப்பெற்றுள்ளன. (எ.டு) நன்னீல மகன்றில்காள் (1-4-4); இளங்கிளியே (1-4-7), ஒண்கிளியே (6-1-7), யான் வளர்த்த கிளிகாள்! (6-8-5) தூமொழி வாய் வண்டினங்காள் (9-7-6), முல்லைகள் மேல் தும்பிகாள் (6-8-4), நன்னலப் புள்ளினங்காள் (6-8-1), புன்னை மேலுறை பூங்குயில்காள் (6-1-6), ஆசறு தூவி வெள்ளைக் குருகே(6-8-8), இடரில் போகம் மூழ்கி இணைந்தாடும் மடவன்னங்காள்(6-1-4), அலர்மேல் அசையும் அன்னங்காள் (6-1-9), எங்கானலகங் கழிவாய் இரை தேர்ந்து இங்கு இனிதமரும் செங்காலமட நாராய் (9-7-1), தெளிவிசும்பு கடிதோடித் தீவளைத்து மின்னிலகும் ஒளிமுகில்காள்(9-7-5), அணி முகில்காள் (9-7-4) என வருதல் காண்கின்றோம்.

## இயற்கையோடு ஒன்றுதல்

தூதுவிடும் நான்கு திருவாய்மொழிகள் தவிர மற்றொரு திருவாய்மொழியில் (2-1) பிரிவால் ஆற்றாமை சால மிக்கதாகி ஆழ்வாராகிய தலைவி செய்வதறியாது, புலம்புகின்றாள். தூது அனுப்பவும் அவர்க்கு ஒருவரும் கிடைக்கவில்லை. பார்க்கும்

பொருள்களெல்லாம் தன்னைப் போலவே பிரிவால் வருந்துவதாக உணர்கின்றார். இயற்கை அவரைப் போல இருப்பதைக் காண்கின்றார். ஒருநாரை வெளுத்துக் காணப்பெறுகின்றது; அன்றில் தன் கூர்வாயைத் திறந்தால் அது அழுவதாகத் தென்படுகின்றது; இரவும் பகலும் ஓயாது ஆரற்றும் அலைகளையுடைய கடல் தன் துக்கத்தால் வாய்விட்டு அரற்றுவது போல் உள்ளது; எங்கும் வீசும் தண்ணிய வாடைக் காற்றானது இன்னது செய்வதென்றறியாது சுற்றி அலைவதுபோல் தோன்றுகின்றது; தன்னை முடிக்க வந்ததொரு நோயால் அது வருந்துவதாக அவர் எண்ணுகின்றார்; உலக முழுவதும் பெய்வதற்காக நீர் சுமந்துவந்த முகில் நீராய் நெகிழ்கின்றது; மாலையில் மங்கித் தோன்றும் பிறைமதி உடல் தேய்ந்து தன் அழகும் ஒளியும் இழந்ததுபோல் காணப்பெறுகின்றது.

மிக்க இருள் நடுவே புகுந்து இப்பொருள்கள் ஒன்றையொன்று பார்ப்பதையும் தடுக்கின்றது. இருளின் வண்ணம் போன்ற மாநீர்க்கழி அமைதியின்றி இரவு முழுவதும் வருவதும் போவதுமாய் அலைந்து மயங்கி நிற்கின்றது. படுக்கையறையிலுள்ள நந்தா விளக்கு நொந்து ஆராக்காதல் நோயால் மெல்லிய ஆவி வருந்தக் கையால் தொடவும் முடியாதவாறு வெப்புநோய் உற்றுள்ளது. மேற்குறித்த தன்மைகள் அப்பொருள்கட்கு இயற்கைப் பண்புகள்; நிலையான இயல்புகள். தன் வருத்த மிகுதியால் இதனை அறியாது அல்லது மறந்து ஆழ்வாராகிய தலைவி அவையும் இறைவனைப் பிரிந்தமையால் வருந்துகின்றன எனக் கருதுகின்றாள்; அதனால் அவற்றுடன் சேர்ந்து ஆற்றாமை தணிதற்காக அரற்றுகின்றாள்; புலம்புகின்றாள். இத்தன்மை இப்பதிகத்தில் மிக அழகாகவும் நயமாகவும் வெளிப்படுத்தப் பெறுகின்றது. இப்பொருள்களிடையே ஒரு தொடர்பும் அமைந்துள்ளது.

இரங்குதலுக்கு ஏற்றதான கடற்கரைக் கானற் சோலையில் தலைவி இருக்கின்றாள். இரைதேடுதற்காக அங்கே ஒரு நாரை வருகின்றது. அதனைக் கண்டு 'நீயும் என்னைப் போலவே நெடுமாலால் நெஞ்சம் கொள்ளப்பட்டு அவனைப் பிரிந்தமையால் நோயும் பசலையும் மீதூர்ந்து இரவெல்லாம் துயிலற்று வருந்துகின்றாயா?' என்று கேட்கின்றாள். அப்போது அருகே உள்ளதொரு பனைமரத்திலிருந்து கூவும் அன்றிலின் குரல் அவள் காதில் படுகின்றது. துன்பக் குரலாகத் தோன்றியதால் அதனைப் பார்த்து

அரவின் அணையில் துயிலும் பெருமானின் அடித்துழாய்க்கு ஆசைப்பட்டு அது பெருமையால் நீயும் என்னைப் போன்ற நிலையில் உள்ளாயா என்று வினவுகின்றாள். அந்த நிலையில் உலகில் மிகப் பெரிய கடலும் தன் பெருமை குன்றிப் பேராரவாரத்துடன் அலைகள் கரைநோக்கி வருவதும் பின் தணிவதுமாக இருக்கின்றது. எடுத்தியம்பவும் முடியாத வருத்தத்தால் கண் துயிலாது அது நெஞ்சுருகி ஏங்குவதாக எண்ணுகின்றாள். அலைகடலே! என்னைப் போல் இலங்கை எரியூட்டிய இராமன் தாள்நயந்து அது பெருமையால் ஏங்குகின்றாயா என்று கேட்கின்றாள்.

அப்போது அதனினும் பெரிதாய்க் கடலும் மலையும் விசும்பும் எங்கும் வீசும் தண்ணிய வாடைக் காற்றை உணர்கின்றாள். அதுவும் வருத்தத்தால் துஞ்சாது எங்கும் அலைவதாயும் உடல் நோயுற்றிருப்பதாயும் நினைக்கின்றாள். நீயும் என் நிலைமையில்தான் உள்ளாயா என்கின்றாள். அக்காலத்து ஒரு மழைமுகில் காணப் பெறுகின்றது. அதனின்று தண்ணீர் தூறலாக வீழ்கின்றது. உலகிற்கு மழை பெய்து உதவ வந்த முகில் இறைவனின் வீரப் பண்பில் தன்நிலை இழந்து தன் காதலால் இவ்வாறு வருந்தி அழுவதாக எண்ணுகின்றாள். தன் உதவிச் செயலுக்கு அது பெற்ற பயன் இத்துன்பமே போலும். முகிலின் அருகே ஒரு பிறைமதி கண்டுவிட்டாள். அதனைப் பார்த்து அவள் அது தன் ஒளியும் அழகும் தேய்ந்து விட்டதற்குக் காரணம் ஐந்து வாயுடைய அரவணையில் துயிலும் பெருமானார் தந்த ஏமாற்றந்தானா? என்று கேட்கின்றாள். ஐவாய் அரவு என்றும் பெருமானார் என்றும் கூறப் பெற்றது வெறுப்பினால் எழுந்ததாம்.

### சொல்நயம்-சிலேடை

'மதிகெட்டவாறே அந்தகாரம் மேலிட்டது'[6] என்று எழுதுகின்றார் உரையாசிரியர். பிறைமதி மறைந்ததும் இருள் எங்கும் சூழ்ந்து விட்டது என்பது பொருள். இத்தொடர் மற்றொரு பொருளும் தருகின்றது. அறிவு கெட்டதும் அறியாமை ஓங்கியது என்பதாம்.

பின்னர் இருளின் செய்கை இருவேறு வகையில் விளக்கப்பெறுகின்றது. முதற்பொருள்:- ஒளி மங்கி ஓரிடத்தில் முடங்கிக் கிடப்பது இருளின் இயல்பென்று அறியாது ஆழ்வாராகிய தலைவி இவ்வாறு அது இருப்பதற்குக் காரணம் அதுவும் தன் தலைவனைப் பிரிந்த

துன்பத்தால் நொந்து அதனை வெளியிடவும் ஆற்றலின்றி இருப்பதே என நினைக்கின்றாள். அதற்காக இரங்கிப் பேசுகின்றாள். நாங்களாவது வருத்த மிகுதியால் புலம்பி ஆறுதல் பெறுகின்றோம். உன்னிலை அதனினும் கொடியதாயுள்ளது. இரக்கப்படத்தக்காய்; நீ வருத்தம் நீங்கி வாழி என்கிறாள் (2-1-7). மற்றொரு பொருள்: தலைவனைப் பிரிந்து வருந்தும் பலபொருள்களின் நடுவே இருளானது புகுந்து அவை ஒன்றினை ஒன்று காணவும் முடியாதபடி செய்து அவற்றின் ஆற்றாமையை மிகுவிக்கின்றது. அவள் கேட்கிறாள்: நாங்கள் ஆற்றாமை தணிய வாய்விட்டு அரற்றவும் அளவளாவவும் இயலாதபடி நடுவே புகுந்து கொடுமை செய்வது உனக்குத் தக்கதா? என்று. இவ்விரு பொருளும் கொள்ளுமாறு பாடல்வரி அமைந்துள்ளது.

'நீ நடுவே வேற்றோர் வகையிற் கொடிதாய்' (2-1-7) என்பது பாடல்.

இவளை இருள் வெற்றி கொண்டு விட்டது; இங்கும் அங்கும் அலைகின்றாள்; பின் இருளின் திணிப்புப் போன்று காட்சி வழங்கும் நீலநிறமுடைய கழியை அடைகின்றாள். அது அமைதி இழந்து காணப்பெறுகிறது. தண்ணீர் அங்குமிங்கும் போய்க் கொண்டிருக்கின்றது. அக்கழியும் காதல் வயப்பட்டுள்ளது என நினைக்கின்றாள். நீயும் என்னைப்போல் கண்ணனது வீரச்செயல்களில் உள்ளம் பறிகொடுத்து அவன் அருளை எதிர்நோக்கி வருந்துகின்றாயோ என்று கேட்கின்றாள். இந்நிலையில் இறைவன் வந்து ஆழ்வாரைத் தழுவி அவரது பொறுக்கவொண்ணாத் துன்பத்தையும் நீக்கினான் போலும்! 'இனி எம்மைச் சோரேலே' (2-1-10) என்று அவர் பாடுவதனால் அவ்வாறு எண்ண வேண்டியுளது.

இத்தகைய ஈடுபாட்டால்தான் ஆழ்வார் 'ஆராத காதற் குருகூர்ச் சடகோபன்' (2-1-11) என்று பெயர் பெற்றார். தணியாத காதலை உடைய சடகோபன் என்பது பொருள். இவ்வாறு இயற்கையின் பலபொருள்களும் இறைவன்பால் ஈடுபாடு கொண்டுள்ளதாக ஆழ்வாரின் பல புலன்களும் உணர்ந்தன என்பதை நாம் காணுகின்றோம். உயிர் உள்ளனவும் இல்லனவும் எல்லாமும் இறைவன்பால் ஒன்றுபட்டிருப்பதாகவே ஆழ்வார் உணர்கின்றார் என்பது தெளிவுற விளங்குகின்றது.

### 3. இறைவனைப் பற்றிய வருணனையில் இயற்கை

இறைவனைப் பற்றிப் பேசுவது திருவாய்மொழியின் முக்கியப் பொருள்களில் ஒன்று. அப்போது இயற்கை பல இடங்களில் பயன் படுத்தப்பெறுகின்றது. முதல் திருவாய் மொழியிலேயே (1-1-7) எல்லா உலகுகளையும் ஊழி இறுதியில் அழிக்கின்ற கடவுள் தன்னை ஐம்பூதங்களான திடவிசும்பு, தீ, வளி, நீர், நிலம் என மாற்றிக் கொள்வதாகவும், பின் அம்முறையில் உலகெங்கும் பரந்துள்ள எல்லாப் பொருள்களாகவும் ஆவதாகவும், மேலும் உடல் மிசை உயிர் போலே எல்லாவற்றிலும் உள்ளே மறைந்து எங்கும் பரந்து இருப்பதாயும் பாடுகின்றார். இதற்குச் சுடர்மிகு சுருதியே சான்று. திடவிசும்பு என்ற தொடரில் திட என்ற அடையின் சிறப்பு:

1. இறைவனிடமிருந்து முதலில் தோன்றிய பூதம் விண் என்பதால் அவ்வாறு சிறப்பிக்கப் பெற்றது. அல்லது 2. சிலர் கருதுவதுபோல் பூதம் நான்கல்ல; விண்ணையும் சேர்த்து ஐந்தென அறிவுறுத்துவதற்காக வந்தது. விசிட்டாத்துவித தத்துவம் குறிக்கும் அடிப்படைக் கருத்துக்களில் முக்கிய ஒன்றை இப்பாடல் உணர்த்துகின்றது.

பெருந்தண் கடலில் உள்ள நீரின் ஒவ்வொரு அணுவிற்குள்ளும் பரந்து இறைவன் இருக்கின்றான். அவ்வணுவை அண்டமாகக் கொண்டிருப்பது போலவே அதன் அதனுள் பரந்துளன். மற்றும் விண்ணும் மண்ணும் முதலாய பூதங்களிலும் ஒழிவற நிறைந்துள்ளான். சிறு பொருள்களிலும் அவற்றின் உள்ளுறையும் உயிர்களினுள்ளும் அவை அறியாதவாறு அவன் கரந்து எங்கும் பரந்துளன். (1-1-10). இறைவன் பூதங்களிலும் சிறப்பியல்பாகவும் இருக்கின்றான். ஆகாயத்தின் ஒலி, தீயின் செறும்தன்மை, காற்றின்வலிமை, நீரின் அருள், புவியின் பொறுமை முதலான சிறப்புக் குணங்களாகவும் அப்பரன் நிற்கின்றான் என்கின்றார் ஆழ்வார் (1-1-11).

நாம் காணும் உலகமுழுவதும் அவன் செல்வமே. அப்பரம் பொருள் அதனின் நீங்காத ஒரு உறுப்பு என்பது அறியத்தக்கது (1-2-1). இச்செய்திகள் தத்துவ விளக்கம் கூறுகையில் சொல்லப் பெறுகின்றன. பின்னர் இறைவனை ஆயர் கொழுந்து; ஆயர்களால் அடிக்கவும் கட்டவும் படும்படியான மாயப்பிரான்; என் ஒளிமாணிக்கம்; தூயஅமுது (1-7-3) என்று பாடுகின்றார். தன்

இறை அநுபவத்தைப் பாடுகையில் தேன், நல்லபால், நெய், கன்னல் அமுது சேர்ந்த கலவை என்று கூறுகின்றார் (2-3-1) இவ்வாறே பல இடங்களிலும் இயற்கைப் பொருள்களைக் கொண்டே ஆழ்வார் இறைவனை வருணிக்கின்றார்.

## இறை இயற்கையின் உயிர்

ஆழ்வார், இறைவன் உலகு அதன்பாலுள்ள பலபொருள்கள் இவற்றின் உயிராக இருப்பதாக உணர்கின்றார். அக்கருத்தினையே இடையறாது நினைந்து அவனுக்குத் தன் சொல்லால் தொண்டு செய்ய விழைகின்றார். அதாவது அவன் புகழைப் போற்றிப் பாட விரும்புகின்றார். அவனது இயல்பு பண்பு செயல் மூன்றிலும் வேறுபாடு காணவில்லை. எல்லாப் பொருள்களும் ஒருவன் பெறத் தக்க பேறுகளாகவே அவர்க்குக் காட்சி தருகின்றன. அவற்றைத் தனித்தனி அநுபவியாது யாவும் அவ்விறைவனோடு ஒன்றாக இணைந்து காணப்பெறுவதாக எண்ணி அநுபவிக்கின்றார். இங்கே அவர் பாடலில் இயற்கை இடம் பெறுகின்றது. முன் குறித்தவாறு ஐந்து பூதங்களும் அவனுறையுமிடமாகக் குறிக்கப் பெற்றுள்ளன. இணையில்லாத மண்ணுலகோ, ஒளிமிக்க புகழ் சான்ற கடலோ, அன்றித் தீயோ காற்றோ அன்றி மற்ற பூதங்கட்கு இடமளிப்பதாக விரியும் விசும்போ யாதெனச் சொல்ல முடியாதவாறுளன் என்கிறார். அவனை உலகின் ஒளிமிக்க ஞாயிறு திங்கள் என்பேனோ அல்லது உலகம் அவன் செல்வமாதலின் வெறுத்து ஒதுக்கித் தள்ள முடியாத இப்பொருள்களெல்லாம் அவன் என்பேனோ என்று வியப்புற்றுப் பாடுகின்றார் ஆழ்வார் (3-4-1).

அடுத்த பாடலில் மலைகள்,அழகாலும் தன்மையாலும் பிறரைக் கவர்கின்ற மேகங்கள், மின்னும் நட்சத்திரங்கள், கலைகள், குற்றமற்ற ஒலி இவை இறைவனுடைய உறைவிடங்களாகக் குறிக்கப் பெற்றுள்ளன. இவை ஐம்பூதங்களின் காரியங்களாம். மூன்றாம் பாடலில் பங்கயக்கண்ணன், பவளச்செவ்வாயன், அங்கதிர் அடியன், அஞ்சனவண்ணன், செல்கதிர் முடியன் என்று அவன் திருமேனி அழகில் ஈடுபட்டு எதனைச் சொல்லி அழைப்பன் என்கிறார். நான்காவது பாடலில் இயற்கையில் கிடைக்கும் ஒளியமைந்த சில கற்களையும் மற்றும் சிலவற்றையும் அவன் உறைவிடமாகக் கூறுகின்றார். சாதி மாணிக்கம், ஒளியுடை முத்தம் சாதி நல்வயிரம், கெடுதலில்லாத விளக்கு, ஆதியஞ்சோதியாகிய பரமபதம் என வருகின்றது. ஒவ்வொன்றும் தக்க அடைமொழி

கொடுத்துச் சிறப்பிக்கப் பெறுதல் காணுகின்றோம். ஐந்தாவது பாடலில் சுவைமிக்க பொருள்களாக அவன் உள்ளமை தெரிவிக்கின்றார். வினைதீர்க்கும் நச்சுமாமருந்து, நலங்கடல் அமுதம், அச்சுவைக் கட்டி, அறுசுவை அடிசில், நெய்சுவைத் தேறல், கனி, பால் என வரும். அடியவர்களின் துன்பம் போக்கும் விரும்பத் தக்க உயர்ந்த மருந்து, கடலில் கடையாமல் வந்த நல்லமுது, அமுதென இனிக்கின்ற கரும்புக்கட்டி, அறுசுவை உணவு, சுவை மிக்க தேன், பழுத்தகனி, நல்ல பால் என்பது பொருள். மற்றபாடல்களில் ஒலியமைந்த வேதங்கள், மற்ற சாத்திரங்கள், தேவர் உலகுகள் இறைவனுக்கு அடுத்த நிலையிலுள்ள உயர்வுடைத் தேவர்கள் முறையே கூறப்பெறுகின்றன.

## இயற்கைக்கும் இறைவனுக்கும் உள்ள உறவு

மேலே காட்டிய பகுதிகளில் இயற்கை வருணிக்கப் பெற வில்லையே என்று எண்ணலாம். ஆழ்வார் பல்வேறு வகையான வீறுடைப் பொருள்களிலெல்லாம் இறைவனைக் காணுகின்றார் என்ற கருத்தை வலியுறுத்தும் பொருட்டே அவை இங்கு எடுத்துக் காட்டப் பெற்றன. இங்கே மற்றுமொரு ஐயம் எழுதல் கூடும். பாடல்களைப் படிக்குங்கால் நாராயணன் தோற்றத்தில் மலை ஒப்பான்; நிறத்தில் முகில் ஒப்பான்; சுவைப் பொருள்கள்போல் அவனும் அன்பர்க்கு இனியன் என்று கூறல் கூடும்.

அப்பொருள் பொருந்தாது. ஏனெனில் மற்ற சில பொருள்களைப் பொருததவரையில் அத்தகைய விளக்கம் தர இயலாது. எடுத்துக்காட்டாக ஊனமில் சுவர்க்கம் என்கோ என்றும், நான்முகக் கடவுள் என்கோ என்றும் வருகின்ற இடங்களில் அவ்விடத்தையும் அவ்விறைவனையும் அவன் ஒப்பான் என்பதாகக் கொள்வது ஏற்புடையதன்று. எனவே இவற்றிலெல்லாம் இறைவன் உறைகின்றான் என்ற வகையில் பொருள் கொள்வதே தக்கதாம். உலகத்துச் செயற்கைப்பொருள் பலவற்றையும் ஆழ்வார் எடுத்துக்கூறுமை இங்கு நினைவு கூர்தற்குரியது. அடிப்படையானவையும் இயற்கையில் அமைந்தவையும் மட்டுமே அடுக்கப் பெற்றுள்ளன. அவையும் இயன்ற இடங்களிலெல்லாம் தக்க சிறப்பு அடைகளுடன் சொல்லப் பெற்றிருக்கின்றன.

## ஏற்ற அடைமொழிகள்

கீழ்வரும் பாடலில் அமைந்த அடைகளை மேற்போக்காக நோக்கினும் ஆழ்வார் தரும் அடைமொழிகள் பொருத்தமானவை என்பதும் அவை கவிதை நயத்தை மிகுவிக்கின்றன என்பதும் நன்கு விளங்கும்.

(எ-டு) ''திரியும் காற்ருெடு, அகல் விசும்பு திணிந்த மண்
கிடந்தகடல்
எரியும்தீ யொடு இருசுடர்த் தெய்வம் மற்றும் மற்றும்
முற்றுமாய்'' (3-6-5)

காற்று எங்கும் சுற்றி அலேயும் இயல்பினது; விசும்பு பிற பூதங்களின் தோற்றத்திற்கு இடமானதும் மிக விரிந்ததும் ஆம்; மண்ணுலகு திண்ணிய மணலால் ஆனது; கடல் தன் எல்லேக்குட்பட்டுக் கிடப்பது; தீ எப்பொழுதும் மேல்நோக்கிச் சுடர்விட்டு எரியும் இயல்பினது; சூரியன் சந்திரன் அடையின்றி அமைந்துள்ளன. ஒளிமிக்க அவற்றிற்கு விளக்கம் வேண்டாமென விடப்பெற்றது போலும். மற்றும் மற்றும் என இருதடவை வந்தது உயிருடை மக்களேயும், உயிருடையனவும் இல்லனவும் ஆகிய பறவை விலங்கு தாவரம் முதலிய பிறவற்றையும் குறித்ததாம்.

## நுணுகிய நோக்கும் விளக்கமும்

இயற்கையைக் கூர்ந்து நோக்கும் பான்மையும் நுட்பமாக விளக்கும் திறமும் கீழ்வரும் வருணனேயில் காணலாம். ஆயர்களேயும் அவர்தம் ஆநிரைகளேயும் இந்திரனது மேகம் பொழிந்த கொடு மழையினின்று காக்கக் கண்ணபிரான் கோவர்த்தனமென்னும் குன்றெடுத்த நிகழ்ச்சி தெளிவாக வருணிக்கப் பெற்றுள்ளது. வருணனே:

''மேயும் ஆநிரைகள் வாயிற் புல்லுடன் மலேயின்
கீழ்வந்தன;
மலேமீ திருந்த விலங்குகள் தடுமாறி வீழ்ந்தன;
நீர்நிறைந்திருந்த மலேப்பொய்கைகளில் தண்ணீரானது
பேரிரைச்சலுடன் கீழே கொட்டத் தொடங்கியது'' (7-4-10)

கண்ணபிரான் ஒரு மழையைத் தடுக்க எண்ணினுன்; ஆனுல் அவன் செயல் பல மழை பொழியக் காரணமாயமைந்தது. இது ஒரு விநோதமே! அவன் தீமழையைத் தடுத்து ஆயர்களேக் காத்தற்காகக் குன்றத்தை ஏந்திய நாளில் பசுக் கூட்டங்களும் ஆயர் மக்களும் மலேயின் அடியிலே வந்து ஒடுங்கினர். இவ் வருணனே ஒரு ஓவியம்போல் இயல்பாக அமைந்துள்ளதன்ருே? புக, புரள, பிளிறிச்சொரிய, ஒடுங்க என்ற சொல் ஆட்சியும் கற்பனேத் திறமும் பாடலேச் சுவைமிக்கதாக்குகின்றன.

## உணர்வோடு இயங்கும் இயற்கை

தன் உணர்ச்சிகளுடன் தொடர்புபடுத்தாது இயற்கையின் நிகழ்ச்சிகளை நோக்குதலும் வருணித்தலும் செய்யும் திறம் அண்மைக்கால இலக்கியத்தில் அருகியே காணப்பெறுகின்றது." ஆழ்வார் இறைவனைக் காணும் வாய்ப்புப் பெறுத நிலையில் மாலைக் காலத்தை வருணிக்கின்றார். பிரிவின் தனிமை அவரைப் புலம்ப வைக்கின்றது. கண்ணனைப் பிரிந்த கோபியர் அனைவரும் அனுபவித்த துக்கமெல்லாம் இவர் ஒருவரே அடைந்தாற் போன்று அரற்றுகின்றார்.

அந்தணர்க்குச் சந்தியாவந்தனம்—அந்திவழிபாடு போன்று ஆயர்கட்கு ஆநிரை மேய்ப்பது முக்கியமான செயல். அவர் இனத்திற்குரிய தனிக்கடமை. ஆயர் குலத்தில் பிறந்த கண்ணன் பகற்பொழுதில் மாடுமேய்க்க வெளியே செல்வான்; அவன் மாலையில் உரிய நேரத்தே வீடு திரும்பவில்லை எனில் ஆய்ச்சேரி மகளிர் பிரிவுத் துன்பம் அடைவர். ஆயர்சேரிப் பெண்ணாகத் தன்னைப் பாவித்துக்கொண்டு ஆழ்வார் கண்ணன் பிரிவால் வருந்திப் புலம்புகின்றார் (9-9).

"மாலையில் மல்லிகை மணத்துடன் மெல்லென வீசும் தென்றற் காற்று என் உடலை அரத்தால் அறுப்பதுபோல் ஈர்க்கின்றது." மணம் மூக்கால் நுகர்வது; அது அவள் உடலையும் வருத்துகின்றதாம். அது கண்ணிற்குக் காணப்பெறாத பொருள். எனவே அதன் வருகையைக் கண்ணுற் கண்டு தப்பித்துக் கொள்ள முடியாது. அவன் உடனிருக்கும்போது இன்பமளிக்கும் பொருள்கள் இப்போது துன்பம் அளிக்கத் தொடங்கிவிட்டன. 'குறிஞ்சிப் பண்ணிசை தவழ்ந்து வந்து துன்புறுத்துகின்றது! காற்று உடலில் பட்டுப் புறத்துன்பமே தரவல்லது; இசை செவிவழியே உடலிற் புகுந்து விட்டது;காற்றும் இசையும் ஒருஒப்பந்தம் செய்து கொண்டு வந்து புறத்தும் அகத்தும் நலிகின்றனவாம். "சூரியன் மறையும் மாலைப்பொழுது என்னை மயக்குகின்றது; அறிவிழக்கச் செய்கின்றது. அக்காலத்து வானத்தே தோன்றும் செம்மேகங்கள் அவனுடைய கருநிறத்தையும் உடையவாய் என்னைச் சிதைக்கின்றன. தாமரைக்கண்ணன், ஆயர்களின சிங்கம், எம் தலைவன் எம்மைப் புல்லி அகன்றான். அவன் இல்லாத தனிமையால் இவை நலிகின்றன" என்கிறார்.

அடுத்த பாடலில் வேறு சில பொருள்கள் குறிக்கப் பெறுகின்றன. ஆழ்வார் நாயகி தன் தனிமையையும் புகல் இன்மையையும் கூறிவிட்டு ஒன்ருக இணைந்து தன்னை வாட்டும் பல பொருள்களின் பட்டியலை மட்டும் தருகின்ருர். அப்பெயர்கள் கொண்டு முடியும் பயனில் கூடத் தரப்பெறவில்லை. அவற்றின் காட்சியே அல்லது அவற்றின்பெயர் கேட்டலே அவரை நடுங்கவைக்கின்றது என்ற கருத்தாலாகலாம். அப்பொருள்களாவன: ஆக்களின் கழுத்தில் கட்டப்பெற்றுள்ள மணிகளின் ஓசை, தென்றல், ஆம்பலில் அமைத்த குழல், பகலின் இறுதியில் வரும் மாலைக்காலம், நறுமணச் சந்தனம், பஞ்சமம் முல்லை என்ற பண்கள், பருவமல்லாத காலத்தில் வீசும் வாடைக்காற்று ஆகியவை. மற்றும் சில பொருள்கள் வேருெரு பாடலில் வருகின்றன. தண்வாடை தன்னைப் பொறுத்த வரையில் வெவ்வாடை ஆய்விட்டது என்கிருள். இவளது அநுபவத்தில் வெம்மை மிக்கதாக உள்ளது; ஆனல் பிறர் அதனைத் தண்ணியது என்று சொல்வதைக் கேட்டவள் ஆகையால் தண்வாடை என்கின்ருள். விரும்பத்தக்க தண்ணிய மதியமும் எரிக்கும் கொடுமதியுமாயுள்ளது மெல்லிய மலர் பரப்பிய படுக்கையும் இப்போது அவட்கு வெம்மை மிக்கதாகத் தோன்றுகின்றது. காரணம் அது இருவர் படுத்தற்குரிய படுக்கை. ஆனல் இப்போது அவள் ஒருத்தி மட்டுமே அதில் இருப்பதால் (9-9-4).

ஒருபாடல் துன்புறுத்தும் பொருள்கள் பல ஒன்ருகச் சேர்ந்து போர் தொடுத்ததாகத் தெரிவிக்கின்றது. பொருத்தமான அடைமொழிகளால் அவை சிறப்பித்துச் சுட்டப்பெறுகின்றன. வாடை—கூர்தண் வாடை; அகில்—சீருற்ற அகில் புகை; சாந்து—தண்பசுஞ் சாந்து; மல்லிகை—தண் மல்லிகைப் புதுமணம். வாடைக்காற்று போர் செய்ய உற்ற துணைக் கருவிகளுடன் வந்துள்ளது. சிறந்த அகில் புகையைத் தழுவிக் கொண்டுள்ளது; அது கட்புலன் முகர்வு ஆய இரு புலன்கட்கும் துன்பம் தரும். யாழிசையும் பஞ்சமப் பண்ணும் செவிப்புலனை வாட்டுவன. மற்றும் அது தன்னுடன் மல்லிகைப் புதுமணத்தையும் தண்ணிய சந்தன நறுமணத்தையும் முகந்து கொண்டு வந்து தாக்குகின்றது என்கின்ருர் (9-9-7).

பத்தாவது பாடலில் பொதுவாகப் புதுமணமக்கட்கு மகிழ்வூட்டுவனவும் மாலைக் காலத்தில் தோன்றுவனவும் ஆய நான்கு பொருள்கள் நுட்பமான முறையில் வருத்தத்துக்குக் காரணமானவைகளாக வருணிக்கப் பெற்றுள்ளன.

1. அழகிய நல்ல பசுக்கள் தம் வலிய ஏறுகளுடன் சேர்ந்து களிப்போடு குதிபோட்டுக் கொண்டு வருகின்றன; அவற்றின் கழுத்தில் கட்டிய மணிகள் ஒலி எழுப்பு கின்றன.

2. இனிய இசை எழுப்பும் குழல்கள் கொடியனவாய்க் குழறு கின்றன.

3. ஒளிமிக்க தூய வெள்ளிய முல்லைகள், கருமுகைகள் மல்லிகை மலர்கள் இவற்றில் தேனுண்டு விட்டு வண்டுகள் இசைபாடுகின்றன.

4. கடலும் தன் அலைகளால் விண்ணுயரக் குதித்து அலறிக் கொண்டுளது. ஆநிரை, வண்டினம் இவை தாம் பெற்ற கலவியின்பத்தால் களிப்புடன் உள்ளன. அவனை இன்றி அவற்றின் இடையே அகப்பட்ட நான் என்ன சொல்லி உய்வேன்; எவ்வாறு வாழ்வேன் என்கிருள் தலைவி. (9-9-10)

இவ்வாறு அந்திப் போதில் கண்ணனைப் பிரிந்ததனுல் அடைந்த துன்பமிகுதி கவிஞரால் மிகநுட்பமாக வருணிக்கப் பெற்றுள்ளது. இயற்கை, வருந்தும் தலைவிபால் இரக்கமுடைய தாக இல்லை. உண்மையில் பிரிந்த காதலர் துன்பத்தை மிகுவிப்ப தாகவே உள்ளது. அல்லது அவ்வாறே அது அவர்கட்குத் தோற்றமளிக்கின்றது.

வேறு ஒரு பதிகத்தில் (10-3-1) இதே முறையில் அமைந்த சில, வரிகள் வருகின்றன. அங்கும் பிரிவாற்ருத தலைவி இயற்கைப் பொருள்களைக் கண்டு இரங்குகின்ருள். “வேயனைய என் தோள் கள் வாடுகின்றன; நாளுக்கு நாள் மெலிகின்றன. இன்பக் குயில் கள் இனிமையாகப் பாடிக் கொண்டுள்ளன; மயிற்கூட்டங்கள் இனம் இனமாக இணைந்து தோகை விரித்து ஆடுகின்றன” என்று காதற்றலைவி புலற்றுகின்ருள். இப் பேச்சு தலைவன் பிரிந்த நிலையில் பேசப் பெறுவது அல்ல. கண்ணன் அருகே இருக்கை யிலேயே ஆநிரை மேய்க்கப் போனுல் இவனைப் பிரிய நேரிடும் என்ற அச்சம் எழுகின்றது; அதனுல் அவன் போகக் கூடாது என வேண்டுகின்ருள். இச்செயல் காலையில் நிகழ்வது; காமம் மலரும் மாலையில் அன்று என்பது நினைவில் கொள்ளத் தக்கதாம்.

## மனித இனத்தின்பால் இயற்கையின் இரக்கம்

இறுதிக்கு முன்னமைந்த திருவாய்மொழியில் (10-9) அடியவர் பரமபதம் செல்லும் பயணம் பற்றிய வருணனை அமைந்துள்ளது. ஒவ்வொரு சிறு நுணுக்கமும் அதன்பால் தெளிவுறக் கூறப் பெற்றுள்ளன. முதல் இருபாடல்களில் அவர்பால் இயற்கை கொண்ட பரிவு இரக்க—உணர்வு விவரிக்கப் பெற்றுள்ளது தூரியங்கள் முழங்கின; கைநீட்டி வரவேற்பு அளிக்கப் பெறுகின்றது; மங்கலப் பொருள்கள் தரப்பெறுகின்றன. இவை பிறர் ஆணையால் செய்யப் பெறுவன அல்ல; உளம் விரும்பி உகப்பால் செய்வன. வாத்திய முழக்கமாய் அமைவது விண்ணெங்கும் பரவிய மேகங்கள் செய்யும் பேரொலி. கைநீட்டிச் செய்யும் வரவேற்பு ஆழ்கடல் தன் அலைக்கரங்களால் செய்வது; கைம் மாருன நன்கொடை ஏழு உலகுகளிலும் உள்ள வளம் மிக்க பயிர் களாம்.

அடுத்த பாடல் அடுத்த உலகுபற்றிக் குறிக்கின்றது. பொதுவாக விண்ணில் விளங்கும் மழை மேகங்கள் வரவேற்புக்காக மங்களகரமாக வைக்கப் பெறும் பூரண பொற்குடங்களாயின. கண்ணுக்கு இனிய கடல்கள் அவர்களை வரவேற்கத் தொடர்ந்து முழங்கின. பல உலக மக்களும் மலைகளாகிய மங்கள தோரணங்கள் அமைத்து அடியவர்கட்கு வழிபாடு செய்தனர் என்று பாடுகின்ருர்.

இவ்வாறு இயற்கை மனித இனத்தின்பால் காட்டும் இரக்கமும் மரியாதையும் ஏற்றவாறு வருணிக்கப் பெற்றுள்ளன. இயற்கை பரிவு கொள்ளுவது மட்டுமன்று: அது ஆசிரியரோடு ஒத்ததாகக் காட்சியளிக்கின்றது; ஏன் ஆசிரியரோடு தன்னை ஒன்ருக ஆக்கிக் கொண்டுவிட்டது என்னலாம்படி உள்ளது. ஆழ்வார் பாடல் களில் இயற்கையும் மனித உணர்வும் பிணைந்து ஒன்ருக விளங்கு தலைக் காண்கின்றோம்.

### அடிக்குறிப்புகள்

1. இலக்கியக் கல்விக்கு அறிமுகம்—ஹட்சன் டபிள்யூ., எச். 1960, பக் 329
2. திருவாய்மொழி (6-7-1)
3. ,, (2-10)
4. ,, (10-7)
5. ,, (4-10-5), (5-8-1)
6. திருவாய்மொழி—ஈட்டின் தமிழாக்கம்—புருடோத்தம நாயுடு பு. ரா தொகுதி II 1957, பக் 21.
7. இலக்கியக் கல்விக்கு அறிமுகம்—ஹட்சன் டபிள்யூ. எச்., 1960 பக். 330,

# யாப்பமைதியும் தொடை நயங்களும்

இலக்கியக் கலைப்படைப்பு என்பது முதன்மையாகச் சொற் பொருள் தோன்றுமாறு அமைந்த ஒலிகளின் தொகுதியாம்.[1] கவிஞனின் கருத்தை—கற்பனையை—உணர்ச்சியைப் படிப்பவர்க்கு அளிப்பன அவன் அமைத்த கவிதையின் சொற்களேயாகும். உரை நடையிலும் சொற்கள் உள்ளன. கவிதையும் சொற்களால் ஆனது தான். ஆயினும் இரண்டுக்கும் பெருத்த வேறுபாடுண்டு. கவிதை கூறும் பொருளை வேருகவும் சொல்லை வேருகவும் கருதிச் சிலர் ஆய்வர். ஆனல் அது முடியாத ஒன்று. சில பாடல்களில் வெறும் ஓசையால் இன்பம் உண்டாவதுபோல் தோன்றினலும் அவ்வின்பம் நிலைத்த இன்பமாகாது. எனவே சொல்லும் பொருளும் இணைந்து ஒன்று பட்டு நிற்றலை நாம் அறிதல் வேண்டும். ஓசை எல்லாக் கவிதைகளுக்கும் பொதுவானது ஆனலும் "ஓசையை நம்பித்தான் தமிழ்க் கவிதைகள் நடைபெறுகின்றன என்பதைத் தமிழர் வகுத்த பாடற் பிரிவாலும் அவற்றின் ஓசைப் பெயர்களிலும் கூட அறியலாம்; துள்ளலோசை, தூங்கலோசை, அகவலோசை, செப்பலோசை என்பன பாடல்களைக் கண்ணல் பார்த்து அறியக் கூடியன அல்லவே"[2] என்று எழுதி 'கவிதைக்கு ஓசை இன்றியமையாதது' என்ற நம் முன்னேர் கருத்தை அறிஞர் அ. ச. ஞானசம்பந்தம் விளக்குவர். தொல்காப்பியத்தின் பழைய உரையாசிரியராகிய பேராசிரியர் 'பா' என்ற சொல்லுக்குப் 'பரந்து பட்டுச் செல்வதோர் ஓசை'[3] என்று பொருள் எழுதுவது இக்கருத்தை உறுதிப்படுத்தும்.

ஓசை பற்றிய வரையில் இரண்டு வகையான வேறுபாடுகள் உள. ஓசையின் அடிப்படை வேறுபாடு ஒன்று. அதாவது மாத்திரையால் அல்லாமல் ஒவ்வொன்றிற்கும் தனித்தனி உரிய அ, ஒ என்றும்; க, ச என்றும் வரும் வேறுபாடு. இத்தகைய வேறுபாடு தான் இன்னேசை (Euphony) என்று குறிக்கப் பெறுகின்றது. இரண்டாவது வகை ஒன்ருேடு ஒன்று ஒப்பிட்டு உணரக்கூடிய குறில், நெடில், வன்மை, மென்மை முதலிய வேறுபாடு. இவை தாம் ஒலி நயத்திற்கும் (Rhythm), மோனே, எதுகை முதலிய தொடைகளுக்கும் அடிப்படை; ஒலியழுத்தம் (Stress), எடுத்தல்' படுத்தல், அளபெடை, வந்ததே திரும்பிவருதல் இவையும் அதற்குச் சேர்ந்தனவேயாம். இவ்விரண்டிற்கும் அப்பால் இசையால் வரும் இன்னேசை வேறுபட்ட தனியொரு பிரிவு ஆகும். அது 'பண்' என்ற பிரிவில் அடங்கும். தொல்காப்பியச் செய்யுளியல் முதல் நூற்பாவில் செய்யுள் உறுப்புக்கள் 34 தொகுக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் முதல் ஆறினே ஒரு பிரிவாகவும், அடுத்த இருபதினே ஒரு பிரிவாகவும், பின் எட்டினே மற்ருெரு பிரிவாகவும் கொள்ளலாமெனத் தோன்றுமாறு அந்நூற்பா அமைகிறது. அதன் கண் யாப்பு, தூக்கு, தொடை, பா என்பன தனித்தனி உறுப்புக்களாகக் குறிக்கப் பெற்றுள்ளன. ஆனல் பின்வந்த யாப்பருங்கலக் காரிகையின் உரையில் யாப்பெனினும், பாட்டெனினும், தூக்கெனினும், தொடர்பெனினும், செய்யுளெனினும், ஒக்கும் என்பது காணப்பெறுகின்றது.[4] இது காலப்போக்கில் இத்துறையில் ஏற்பட்ட மாறுதலேக் குறிக்கும். தொல்காப்பியர் 'வண்ணம்' என்ற உறுப்பினேக் குறிப்பிட்டு அதன் 20 வகைகளேயும் விளக்கி உரைக்கின்ருர்[5] பின்னேர் இதுபற்றிப் பேசுவது காணேம். அதற்கு மாருகச் சந்தம் என்று புதியதொரு வகை வடமொழியை ஒட்டித் தமிழில் நுழைந்து வளர்ச்சி பெற்றுள்ளது. வண்ணம், சந்தம் என்ற இவை ஓசையின் அடிப்படையில் அமைந்தனவேயாம்.

பாடலின் ஒலிநயத்திற்குக் கவிஞர் மேற்கொள்ளும் முறைகள் பலவாகும். சில சந்தங்களே (Rhyme) அமைத்தல், ஒரே ஒலிகளேயோ அல்லது ஒத்த ஒலிகளேயோ அமைத்தல்அல்லது ஒலிக்குறிப்புச் சொற்களே அமைத்தல் மற்றும் போலி ஒலிகளே அமைத்தல் இவை முதலியன சிலவாம்.[6] ஒரு அடியினுள் ஒலிகள் ஒத்து வரல், ஒன்றுக்கு மேற்பட்ட வரிகளில் அவை ஒத்து வரல் அடியின் முதல் இறுதி ஒலிகள் ஒத்தல் அல்லது வரிகளின் கடைசியில் மட்டும் ஒத்து வரல் என்றும் அமையலாம். இவ்வகையில் ஒவ்வொரு

மொழிக்கும் தனித்தனி இயல்புகள் உள. தமிழ்ச் செய்யுளிலக்கணம் கூறும் அடிகளிலும் சீர்களிலும் வரும் எட்டு வகையான தொடை விகற்பங்களெல்லாம் இதன் பாற்படுவனவே. அவையாவன:— மோனை, எதுகை, முரண் இயைபு, அளபெடை, செந்தொடை என்பனவும், நிரல்நிறை, இரட்டை யாப்பு என்பனவும் ஆம்.[7] இவற்றினைப் பல்வேறு வகையாகப் பெருக்கி உரைப்பர் பிற்கால இலக்கண ஆசிரியர்கள். இப்பொருள்பற்றி ஆங்கிலத் திறனாய்வாளர் தரும் கருத்துக்களை நினைவிலிருத்தல் நலம்.

'ஒத்திசைவும் யாப்பும், கருவிக்கேற்ற 'இசையமைப்பு'க்குரிய சிக்கல்களினின்று தெளிவாக வேறுபட்ட சிக்கல்களையே பெற்றுள்ளன. இவை பற்றி விரிவான ஆய்வு நடந்துள்ளது; பலநூல்களும் எழுதப்பெற்றுள்ளன'[8]. பொதுவாக ஆங்கிலத்தில் விவாதிக்கப் பெறுகின்ற முதன்மையான யாப்புக்கொள்கைகள் 1. மிகப் பழைமையான 'வரைபடச் செய்யுளிலக்கணம்', 2. இசை நிலைக் கொள்கை, 3. ஒலி நிலையாப்பு, 4. புள்ளிவிவர முறை என்ற நான்குமாம். இத்துறையில் பெரும்பணி செய்யப் பெற்றிருப்பினும் 'இலக்கியக் கொள்கை' என்ற நூலின் ஆசிரியர்கள் கூறும் முடிவை 'நாம் ஒத்துக் கொள்ளவே வேண்டியுள்ளது. அவர்கள் கருத்து; 'இவற்றில் பல தெளிவற்றும் மாறுபட்ட கருத்துக்களுக்கு இடமளித்தும் நிற்கின்றன. ஆனால் யாப்பு இன்று மொழியியலோடும் இலக்கியப் பொருளியலோடும் தனக்குரிய தொடர்பை மீண்டும் புதுப்பித்துள்ளது. ஓசையையும் யாப்பையும் பொருளினின்று பிரிக்காமல் கலைப்படைப்பின் முழுநிலையின் கூறுகளாகவே கொண்டு கற்கவேண்டும்."[9]

## யாப்பின் வளர்ச்சி

முதலில் யாப்பமைதியை ஆராய்ந்தபின் அவ்யாப்பின்கண் அமைந்துள்ள தொடை நயங்களை ஆராய்வதே முறை. எனவே முதலில் திருவாய்மொழி நூலில் உள்ள பல்வகை யாப்பு எவை எனக் காண்போம். தமிழ் யாப்பு சங்க காலத்திலிருந்து பல்வகை மாறுதல்களைப் பெற்று வளர்ந்து வந்துள்ளது. "பழைமையான இலக்கண ஆசிரியர் தொல்காப்பியர் பாவகைகளைப் பற்றி மட்டுமே தம் நூலில் பேசியிருக்கின்றார். சங்க காலத்திற்குப் பின் சிலப்பதிகார காலத்திலேயே பாவினங்கள் காணப்படுகின்றன. தொல்காப்பிய உரையாசிரியரான இளம்பூரணர் பண்ணத்தி என்று

தொல்காப்பியம் கூறுவது பாவினத்தையே என்று காட்டுவது பொருந்தாது'[10] என்று பேராசிரியர் அ. சிதம்பரநாதச்செட்டியார் தம் ஆராய்ச்சி நூலில் கூறுவர்.

சிலப்பதிகாரத்திலும் சைவ சமய குரவர்கள், ஆழ்வார்கள் இவர்தம் பக்திப்பாடல்களிலும் அவற்றிற்குப்பின் தோன்றிய சிந்தாமணி தொடக்கமான காவியங்களிலும் பாவினங்கள் இடம் பெறுவனவாயின. யாப்பிலக்கணம் கூறும் பல தமிழ் நூல்கள் காலப்போக்கில் மறைந்துபோக இன்றுள்ள பழையநூல்கள் தொல்காப்பியச் செய்யுளியல், வீரசோழிய யாப்புப்படலம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை ஆகிய நான்கு மட்டுமே இவற்றின் துணைகொண்டும், இவை பற்றிப் பின்னோர் எழுதியுள்ள ஆராய்ச்சி உரைகளின் துணைகொண்டும், 'விருத்தப்பாவியல்' என்று இந்நூற்றுண்டின் தொடக்கத்தில் தோன்றிய பாவின ஆராய்ச்சி நூலினைப் பின் பற்றியும் திருவாய்மொழி யாப்பமைதியை ஆராய்வோம்.

## யாப்பு வகை

பாக்களின் வகை பற்றித் தெளிவானதொரு வரையறை இலக்கண நூலில் காணப்பெறுகின்றது. ஒவ்வொரு பாவிற்கும் துறை, தாழிசை, விருத்தம் என்று உட்பிரிவுகள் பிற்காலத்தில் தோன்றின. அவை கம்பன் காலத்தில்—அதாவது 11,12வது நூற்றுண்டில் முழுவடிவம் பெற்று அமைகின்றன. இடைப்பட்ட காலத்தில் அதாவது பக்திப்பாடல் தோன்றிய காலத்தில் -10ஆம் நூற்றுண்டுக்குமுன் -தொடக்க நிலையில்தான் வளர்ச்சிபெறும் நிலையில்தான் -- இருந்திருக்கின்றன. அப்போது தோன்றிய பாவினங்களில் சில இருவேறு வகைகளுக்கும் உரியனவாகக் கொள்ளுமாறு அமைந்துள்ளன. சில பாடல்களை இருவேறு வகையாகப் பிரித்து வேறு வேறு பாவினத்தைச் சேர்ந்தன என்று காட்டுதல் கூடும். யாப்பிலக்கண ஆசிரியரால் "ஒருபாவிற்கு இனமென வகுக்கப்பெற்றவை மற்றொரு பாவிற்கும் இனமாம் எனக்கொள்ளுமாறு அவற்றின் இலக்கணம் தெளிவின்றி அமைந்திருத்தலால் அவற்றை இன்ன பாவிற்கு இனமாம் என வரையறைப்படுத்துதல் பொருந்தாது"[11] வீரசோழிய உரையாசிரியர் தாமும் கொச்சகக் கலிப்பாவின் வகைகளைக் கூறும் நூற்பாவிற்கு உரை எழுதுகையில் அதற்குரிய இரு உதாரணங்களைத் தந்துவிட்டு அதன் பின்னர் 'இவற்றைக் கலிவிருத்தமெனினும் இழுக்காது'[12] என்று எழுதுவதும் காண்கின்றேம்.

## இருபெரும் பிரிவுகள்

பழைய இருவகையான முதன்மைப் பாக்களில் ஆசிரியம் அல்லது அகவல் என்பது என்ன தளையையும் தன்னகத்தே பெற்றுவரும் ஒரு வகைப்பா என்பதும், வெண்பா என்பது மட்டுமே இன்ன தளைதான் வரவேண்டும் என்ற நியதி உடைய பா என்பதும் நாம் அறிவோம், இவ்விரு பாக்களை ஒட்டியனவே கலியும் வஞ்சியும் என்பர். பாவினங்களும் பெரும்பாலும் ஆசிரியப்பாவின் தன்மையில் தொடங்கி வளர்ந்தன என்று தெரிகிறது. ஆகையால் தொடக்ககாலத்தில் அவை எவ்விதக் கண்டிப்பான கட்டுப்பாடுகளும் இன்றியே வளர்ந்தன என்பதை மனத்தில் கொண்டே நாம் பாவின ஆராய்ச்சியில் இறங்க வேண்டும். இரண்டாவதாகத் திருவாய்மொழி பாடிய புலவரும் அவரனையவர்களும் தம் பாடல்கள் இசைக்குத் தக்கனவாக அமையவேண்டும் என்பதனைத் தம் மனத்தில் கொண்டிருந்திருக்கின்றனர். எடுத்தும் மொழிகின்றனர். ஆகையால் அவர்கள் இயல் தமிழின் யாப்பமைதியை மீறி (இசைக் கேற்பப் போலும்) சில இடங்களில் செல்ல நேர்ந்திருத்தலும் கூடும். எனவே அவர் தம் பாடல்கள் இயல் தமிழ் யாப்பமைதிக்கு எவ்வளவு ஒத்து அமைகின்றன அல்லது வேறுபடுகின்றன என்பதே இப்பொழுதைய ஆராய்ச்சி.

## பொது

திருவாய்மொழியில் உள்ள பாடல்களைக் கொச்சக ஒருபோகு என்று கூறுதல் வேண்டுமென்கிறார் நச்சினார்க்கினியராம் உரையாசிரியர்.[13] கொச்சகக் கலி என்பது கலிப்பாவின் ஒரு பிரிவாகும். கலிப்பாவின் இலக்கணத்தில் குறைவுபட்டுக் கலியோசை குறைந்து வருவனவற்றையெல்லாம் கொச்சகம் என்று வழங்கினர் எனத் தோன்றுகின்றது. கொச்சகக்கலி அமைப்பில் திருவாய்மொழியில் பத்துத் திருவாய்மொழிகள் உள்ளன. மற்றயவை யாவும் இனத்தைச் சேர்ந்தனவே. கலி, வஞ்சி, ஆசிரியம் ஆகிய மூன்றினையும் சேர்ந்த துறை விருத்தம் ஆகிய இனங்கள் இடம் பெற்றிருக்கின்றன. இவற்றுள்ளும் ஆசிரிய விருத்தத்தில் அறுசீர், எழுசீர், எண்சீர் என்ற மூன்று பிரிவுகள் அமைந்துள்ளன. ஆகவே மொத்தம் பெரும் பிரிவுகள் ஒன்பது உள்ளன என்னலாம். திருவாய் மொழியில் ஆசிரியம், வெண்பா, வஞ்சி என்ற பாவகைகளும், தாழிசை என்ற இனமும் இல்லை. (ஆனால்

நம்மாழ்வாரின் மற்ற மூன்று நூல்களும் ஆசிரியம், வெண்பா என்ற பாடல் வகைகளிலும் கட்டளைக் கலித்துறை என்ற பாவின வகையிலும் அமைந்தன என்பது நினைவு கொள்ளத் தக்கது.

திருவாய்மொழி நூலில் அமைந்துள்ள பாடல்களை யாப்பு அடிப்படையில் கீழ்க்கண்டவாறு தொகுத்துக் கூறலாம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | அளவடியால் இயன்ற கொச்சகக்கலியில் அமைந்தவை. | 10 | திருவாய் மொழிகள் |
| | பாவினங்களால் அமைந்தவை. | | |
| 2. | நாற்சீர் அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தம் | 24 | ,, |
| 3. | ஐந்துசீர்அடி ,, ,, கலிநிலைத்துறை | 23 | ,, |
| 4. | அறுசீர் அடி ,, ,, ஆசிரியவிருத்தம் | 22 | ,, |
| 5. | எழுசீர்அடி ,, ,, ,, ,, | 6 | ,, |
| 6. | எண்சீர்அடி ,, ,, ,, ,, | 5 | ,, |
| 7. | எழுசீர்களும் 5 சீர்களுமாக மிக்கும் குறைந்தும்வரும் நான்கடிப் பாடலான ஆசிரியத்துறை | 5 | ,, |
| 8. | முச்சீர் அடி நான்கு கொண்ட வஞ்சிவிருத்தம் கொண்டவை | 2 | ,, |
| 9. | இருசீர் ,, ,, ,, வஞ்சித்துறை ,, | 3 | ,, |
| | | 100 | |

இனி விரிவாக அவற்றில் ஒவ்வொன்றிலும் அமைந்துள்ள பல்வேறு பாகுபாடுகளைக் காண்போம்.

## I கொச்சகக் கலிப்பா—10

இது முன் கூறியவாறு யாப்பிலக்கண நூல்களில் கூறப்பெறும் பாவின் நான்கு முக்கியப் பிரிவுகளில் ஒன்றினைச் சேர்ந்ததாகும். இவ்வகையில் பத்துப் பதிகங்கள் அல்லது திருவாய்மொழிகள் உள்ளன. இவ்வகைப் பாடல்களின் சிறப்பியல்பு நான்கு அடிகளைக் கொண்டனவாக இருத்தலும் சீர்கள் மூவகைச் சீர்களாக அமைந்திருத்தலுமேயாம். பெரும்பான்மையும் கலித்தளை அல்லது வெண்டளையாக இருத்தலும் வேண்டும். திருவாய் மொழியில் அமைந்துள்ள பத்துப் பதிகங்களும் இருவகையாக உள்ளன. ஒரு பிரிவு மிகுதியாகக் கலித்தளை கொண்டவை; மற்றொரு பிரிவு பெரும்பான்மையாக வெண்டளை பெற்றிருப்பவையாம்.

I. கொச்சகக் கலிப்பா—கலித்தளை மிகுதியாகக் கொண்டவற்றின் விவரம்:

| | காய்ச் சீர் | கனிச் சீர் | ஈரசைச் சீர் | கலித் தளை | வெண் டளை | பிற |
|---|---|---|---|---|---|---|
| 1. (1-4) 'அஞ்சிறைய' | 161 | 2 | 13 | 65 | 62 | 5 |
| 2. (3-1) 'முடிச்சோதி' | 157 | 1 | 18 | 64 | 60 | 8 |
| 3. (4-8 'ஏளுளும்' | 161 | 2 | 13 | 109 | 10 | 13 |
| 4. (4-9)'நண்ணுதார்' | 166 | — | 10 | 99 | 28 | 5 |
| 5. (9-7) 'எங்கானல்' | 170 | — | 6 | 85 | 47 | — |
| 6. (10-6) 'அருள் பெறு' | 173 | — | 3 | 76 | 56 | — |

II. கொச்சகக்கலிப்பா—வெண்டளை மிகுதியாகக் கொண்டவற்றின் விவரம்.

| | காய்ச்சீர் | ஈரசைச்சீர் | இயற்சீர் வெண்டளை | வெண்சீர் வெண்டளை |
|---|---|---|---|---|
| 7. (2-1)'வாயுந்திரை' | 113 | 63 | 59 | 78 |
| 8. (2-5) 'அந்தாமத்' | 124 | 52 | 47 | 85 |
| 9. (2-8) 'அணிவது' | 85 | 91 | 71 | 61 |
| 10. (5-4)'ஊரெல்லாம்' | 128 | 48 | 41 | 91 |

இப்பாடல்கள் நூலின் முழுப்பகுதியிலும் கலந்து அமைந்திருப்பது நோக்கத்தக்கது. கலித்தளை பெரும்பான்மையாக அமைந்துள்ள பாடல்களைக் கொச்சகக்கலிப்பா என்னும் கலிப்பா வகையில் சேர்த்து எண்ணுவது தக்கதே. வெண்டளை மட்டும் அமைந்துள்ள பாடல்களை இவ்வகையில் சேர்த்து எண்ணுவது எவ்வாறு பொருந்தும்?

வெண்டளை பொருந்திய இப்பாடல்களில் ஈரசைச்சீர்கள் குறைந்தும் மூவசைச்சீர்கள் மிக்கும் உள்ளன. மற்றும் ஒரு அடிக்கும் மற்றொரு அடிக்கும் தளைப்பொருத்தம் அமையவில்லை. இவையே வெண்பாவிற்கும் இவ்வகைப் பாடல்கட்கும் இடையே உள்ள முக்கிய வேறுபாடு. இவ்வமைப்பு துள்ளல் ஓசை உண்டாவதற்குத் துணை செய்கின்றது என்னலாம். அக்காரணத்தாலேயே

இப்பாடல்கள் கலிப்பா வகையில் அடக்கப் பெற்றன போலும். திருவாய்மொழியின் கொச்சகக் கலிகள் இக்கொள்கைக்கு ஒத்தே உள்ளன.

## II கலிவிருத்தம் —24

அடுத்துப் பாவினத்தின் ஒரு பிரிவாகிய கலிவிருத்தம் பற்றிக் காண்போம். நாற்சீர் அடிகள் நான்கு கொண்டவை அவை. புலவர்களிடையே பயில வழங்கும் பான்மையது இவ்வகை. இதில் மூவசைச் சீர்களினும் ஈரசைச்சீர்களே மிகுதியாக வரும். இவ்வகையில் 24 பதிகங்கள் இந்நூலில் உள்ளன. அவை எட்டு வகையாக அமைகின்றன. ஒவ்வொரு வகையிலும் இரு உட்பிரிவுகள் உண்டு. ஒரு பிரிவு வெண்டளை பொருந்தி வருவன. மற்றொரு வகை நான்கு அடிகளிலும் ஒரே தன்மையான சீரமைப்பு உடையவை. முதல் வகைப் பாடல்களிலும் ஒத்த சீரமைப்பு இருப்பினும் தளை அடிப்படையில் அவற்றைப் பிரித்தல் சாலப் பொருந்தியதாக உள்ளது. ஏனெனில் அவ்வாறு கொள்ளும் போதுதான் எதுகை மோனைகள் சிறப்பாக அமைகின்றன. விளக்கம் பின்னிணைப்பு I ல் காணலாம். 'அ' பிரிவு சீரமைப்போடு தளையும் பொருந்திய பாடல்களைக் காட்டும். 'ஆ' பிரிவு முக்கியமாகச் சீரமைப்பு ஒத்த பாடல் கொண்ட பதிகங்களைச் சுட்டும். சில விதிவிலக்குகளும் அங்கே காட்டப் பெற்றுள்ளன.

இக் கலிவிருத்தப் பாக்களில் காணப் பெறும் சில குறிப்பிடத் தக்க செய்திகள்:

1. கீழ்க்காணும் ஏழு பதிகங்களில் ஒரே சீரான எழுத்து எண்ணிக்கை அமைந்துள்ளது. பாடல் நேரசையில் தொடங்கினுல் அடிக்கு12 எழுத்துக்களும், நிரையசையில் தொடங்கினுல் 13, எழுத்துக்களும் உள்ளன. பதிகங்கள் (4-2), (7-9), (8-7), (9-6), (9-4), (9-8), (10 8) என்பன. இதில் (9-6) ல் 4வது பாடல் 4 வது வரி மட்டும் விலக்கு.

2. (6-6), (7-4), (8-6), (1-7). ஆகிய நான்கு பதிகங்களில் ஒவ்வொரு வரியும் 12 எழுத்துக்களை மட்டுமே கொண்டுள்ளது. இவற்றில் பாடலின் இறுதி வரிகள் 11 எழுத்துடையனவாக உள்ளன. (9-3), (1-10), (3-2) இம் மூன்று பதிகப் பாடல்கள் நேரில் தொடங்கினுல் 11 எழுத்துக்களும் நிரையில் தொடங்கினால் 12 எழுத்துக்களும் கொண்டு விளங்குகின்றன.

விலக்குகள்:

(1-10) பதிகத்தின் 5வது பாடல் முதல்வரி

(7-4) பதிகத்தின் 5 வது பாடல் மூன்றுவது வரி மட்டுமே.

3. இப்பதினுன்கு பதிகங்கள் நீங்கலாக மற்றப் பத்துப் பதிகங்கள் இவ்வரையறைக்கு உட்படவில்லை.

## III கலிநிலைத்துறை—23

ஐந்துசீர் அடிகள் நான்கு கொண்டமைவது கலிநிலைத்துறை. திருவாய்மொழியில் அவ்வகைப் பதிகங்கள் 23 உள்ளன. அவற்றை இரு பிரிவுகளில் அடக்கலாம். ஒன்று ஒரு குறிப்பிட்ட. தனியமைப்புடைய பிரிவு. மற்றொன்று அவ்வாறில்லாதது. விளக்கம் பின்னிணைப்பு IIஇல் காணலாம்.

பொதுக் குறிப்புகள்

வகை I விருத்தப்பாவியல் என்ற நூலில் சந்தக்கலித்துறை என்ற தலைப்பின் கீழ்க் காட்டப்பெற்றுள்ள 3வது வகையை ஒத்து அமைவதாம். (பக்-47)

வகை V விருத்தப்பாவியல் முதல் விதியின் 'ஆ' பிரிவில் வருவதை ஒத்தது. (பக்-12)

வகை VII இது விருத்தப்பாவியல் முதல் விதியின்படி அமைவது (பக்-12)

வகை VI மேலே காட்டிய முதல்வகை போன்ற சீரமைப்பு மட்டும் பெற்று வருவது.

## IV அறுசீர் ஆசிரிய விருத்தங்கள்—22

இதில் ஒன்பது வகைகள் உள்ளன. விளக்கம் பின்னிணைப்பு III இல் கொடுக்கப்பெற்றுள்ளன.

பொதுக் குறிப்புகள்

வகை 1 — விருத்தப் பாவியலின் 2வது உதாரணத்தைப் போன்றது.

வகை 2 — விருத்தப் பாவியலின் முதல் உதாரணத்தை எல்லா வகையிலும் ஒத்தது.

வகை 3 — அந்நூலின் ஏழாவது உதாரணம் போன்றமைவது

வகை 4 — விருத்தப் பாவியலின் ஐந்தாவது எடுத்துக்காட்டுக்கும் இவ்வகைக்கும் முதற் சீரில் மட்டும் மாறுபாடு; இங்கு விளச்சீர் அதில் முதற்சீர் மாச்சீராகும்.

வகை 5 — இது ஏறக்குறைய விருத்தப்பாவியலின் ஐந்தாவது எடுத்துக்காட்டை ஒத்து வருகின்றது.

வகை 6 — விருத்தப்பாவியல் ஏழாவது உதாராணத்தினின்று சிறிதே மாறுபடுகின்றது; ஐந்தாம் சீர் மாச்சீரன்று விளச்சீர்.

வகை 7 — விருத்தப் பாவியலின் ஐந்தாவது எடுத்துக்காட்டிற்கும் இதற்கும் ஒரு மாறுபாடு உள்ளது. அதில் ஆருவது சீர் மாச்சீர்; இதில் காய்ச்சீர் அல்லது கனிச்சீர் வருகின்றது.

## V எழுசீர் ஆசிரிய விருத்தங்கள்—6

இதில் இருவகைகள் உள்ளன விளக்கம் பின்னிணைப்பு IVஇல் காணலாம்.

பொதுக் குறிப்புகள்

வகை 1 விருத்தப்பாவியலில் உள்ள உதாரணத்தை முழுக்க ஒத்தது.

வகை 2 முன்வகையில் கடைசிச் சீர் ‘மா’ இதன்கண் முதற் சீராக அமைகின்றது; விருத்தப்பாவியல் இதனை மத்த கோகிலம் என்று அழைக்கின்றது.

## எண்சீர் ஆசிரிய விருத்தங்கள்—5

இதிலும் இருவகைகள் உள்ளன; விரிவு பின்னிணைப்பில் காண்க.

### பொதுக் குறிப்புகள்

இசையுடன் பாடுதற்கும், கவிஞன் தான் கூற விரும்பும் கருத்தை எளிதிற் சொல்லுதற்கும் சில சீர்களைக் கொண்ட அடிகளைக் காட்டிலும் பல சீர்களைக் கொண்ட அடிகள் பெரிதும் ஏற்றனவாம். ஆகையால்தான் விரிவாகப் பேசவேண்டிய இடங்களில் ஆழ்வார் அறுசீர், எழுசீர், எண்சீர் ஆசிரிய விருத்தங்களைத் தேர்ந்து கொண்டார் எனத் தோன்றுகின்றது.

'அறுசீர் முதலா எண்சீர் காறும்
கூறும் நான்கடி ஆசிரிய விருத்தம்'

என்ற யாப்பருங்கல விருத்தி உரைமேற்கோள் நூற்பாவில்[14] குறிக்கப்பெறும் மூன்றுவகைப் பாடல்களை மட்டுமே திருவாய்மொழி பெற்றிருக்கின்றது. அவற்றிலும் பல்வேறு ஓசை வேறுபாடுகளை அமைத்து ஆழ்வார் பாடியுள்ளார்.

## VII ஆசிரியத்துறை—5

இது முன்னையவற்றினும் மாறுபட்ட அமைப்புடையது. இதன் கண் எல்லா அடிகளும் ஒரே அளவுடையனவாக இருக்க வேண்டுமென்ற நியதி இல்லை. சில அடிகள் நீண்டும் சில அடிகள் குறைந்தும் அமையும் தன்மை இதற்குண்டு. இவ்வகைப் பாடல்களையும் ஆழ்வார் தக்க இடத்தில் ஏற்றவாறு பயன்படுத்துகின்றார்.

ஒன்றிரண்டு உதாரணங்கள்:—

1. உன்னைச் சிந்தைசெய்து செய்துன் நெடுமா மொழியிசை பாடி,யாடியென்
முன்னைத் தீவினைகள் முழுவே ரரிந்தனன் யான்(2. 6 .7)

2. உகவை யால் நெஞ்சம் உள்ளுருகி உன் தாமரைத் தடங்கண் விழிகளின்
அகவலைப் படுப்பான் அழித்தா யுன்திரு வடியால் (6. 2. 9)

இரு பாடல்களின் முதலிரண்டு அடிகள் மேலே தரப் பெற்றுள்ளன. இறைவனுகிய தலைவனை நினைப்பதும் அவன் இசை பாடுவதும் பெரியதும் நீண்ட நாள் நடைபெற வேண்டுவதுமான செயல். ஆனுல் அவன் பாடுபவரது வினையைஅறிந்தது விரைவில் முடிந்த செயல். அதற்கேற்றவாறே தன் செயலைக் கூறும் அடியை நீட்டியும் அவன் செயலால் நிகழ்வதைக் குறிக்கும் போது அடியைக் குறுக்கியும் முதற்பாடலை அமைக்கின்றுர் ஆழ்வார். இரண்டாவது உதாரணத்தில் இறைவனது திருவிழிகளின் செயல் நீளப் பேசப் பெறுவது இயல்பானதே. அவன் தன் திருவடியால் சிற்றிலை அழித்த செய்கை விரைவாக நடந்தமை தோன்ற அதனைச் சொல்லும் அடியைக் குறுகலாக அமைந்துள்ள இயல்பு நினைந்து வியப்புறும் படி அமைந்துள்ளது. இவ்வாறே பல அடிகளும் பொருத்தமாக அமைதலை நுனித்து நோக்கின் உணரலாம்.

ஆசிரியத் துறை நான்கிற்கு மேற்பட்டு எட்டுசீர் வரை எத்தனை சீர்களைக் கொண்ட அடிகளாலும் வரும். ஆனால் மொத்தம் அமையும் நான்கு அடிகளில் ஈற்றயலடி குறைந்தும் இடை இடை குறைந்தும் வரும்.[15] அவற்றில் இரண்டாமடியும் நான்காமடியும் குறைதலும் அல்லது முதலடியும் மூன்றுமடியும் குறைதலுமுண்டு.[16] இரண்டாமடியும் நான்காமடியும் குறைந்து வந்துள்ள ஆசிரியத் துறைகள் திருவாய் மொழியில் ஐந்து காணப் பெறுகின்றன. இவற்றின் விரிவான விளக்கம் பின்னிணைப்பில் காணலாம்.

## VIII வஞ்சி விருத்தம்—2

1. 'பரிவதில்' (1·6)—இது மூன்று சீர்களைக் கொண்ட நான் கடிகளால் ஆகிய பாடல்களைக் கொண்டது. வெண்டளை பொருந்தி யுள்ளது. விலக்கு 10-1-1+2 } இரு சீர்த்தளை
10-4-1+2 } மட்டும்.

2. 'ஆடியாடி'—(2·4) இதன் தன்மை பிடிபடவில்லை—சில தனிச்சீர்களைக் கொண்டு வருகின்றது.

## XI வஞ்சித் துறை—3

வஞ்சிப்பா சங்ககாலத்திலேயும் கூட மிகுதியாக வழங்கவில்லை ஆயினும் அதன் இனமான துறையும் விருத்தமும் பொருத்தமான இடங்களில் ஆழ்வாரால் அமைக்கப் பெற்றுள்ளன. இருசீர் அடிகளைக் கொண்ட வஞ்சித்துறை மிகச் சிறிய பாட்டு. பெரும்பாலும் ஈரசைச் சீர்களையே (இயற்சீர்களையே) கொண்டு வருவது. அதனால் அறிவுரை கூறும் பகுதிக்கு அத்தகைய பாடலை ஏற்புடையதாகக் கொள்ளுகின்றார் ஆழ்வார். இரண்டாம் திருவாய்மொழியான 'வீடு மின்முற்றவும் (1-2)' என்பதில் முதன்முதலாக உபதேசம் தொடங்குகின்றார். அதே மாதிரி இறுதிப் பத்தில் நூலினை முடிக்கப் போகும் நிலையில் இது காறும் தான் கூறிய கருத்துக்களின் சாரத்தை ஒரு கையேட்டில் எழுதிக் கொடுப்பது போன்று சுருக்கமாகக் கூறும் அறிவுரையாகக் 'கண்ணன் கழலிணை (10-5)' என்ற திருவாய்மொழி அமைகின்றது. இவ்விரண்டும் வஞ்சித் துறை யாப்பில் அமைந்துள்ளன.

வீடுமுன் முற்றவும்:—(1-2)

இயற்சீர் வெண்டளையும் சில வெண்சீர் வெண்டளையும் மட்டும் வந்த பாடல்களைக் கொண்டிலங்குகின்றது. மூவசைச்சீ

இரண்டுள்ளன. கூவிளச்சீர்களே மிகுதியும். முதற்பாட்டின் இறுதிச்சீர் 'மினே' என ஓசையாக உள்ளது; அது 'மின்னே' என்று இருந்திருத்தல் கூடும். அதுவே யாப்பு இலக்கணத்திற்கும் ஒத்ததாகும்.

கண்ணன் கழலிணை:–(10-5)

இது வேறு ஒரு வகையாக அமைந்த வஞ்சித்துறை. முதற் சீர்கள் மாச்சீர்களாகவும் இரண்டாம் சீர்கள் விளம் அல்லது காய்ச் சீர்களாகவும் உள்ளன. தளை நியதி இல்லை.

ஒடும்புள் (1—8)

இது வேறு ஒரு வாய்பாட்டில் அமைந்த வஞ்சித்துறை. எல்லாப் பாடல்களிலும ஒரு அடியில் ஐந்து அசைகள் இருப்பின், அவை நேரசைகளாகவும் நான்கு அசைகள் இருப்பின், ஏதேனும் ஒன்று நிரையாகவும் அமைந்துள்ளன. இவ்வாறு எந்த யாப்பிலக் கணமும் வரையறை கூறவில்லை. ஆனாலும் ஆழ்வார் இசையை ஒட்டிப் பாடல் அமைத்தமையின் இவ்வாறு அசைகள் பொருத்த முற அமைதலைக் காணுகின்றோம். இது ஒரு புதுத்தன்மையே'

முடிவு: விருத்தப்பாவியல் என்ற நூலைப் பதிப்பித்த ஆசிரியர் தம் முகவுரையில் இவ்வாறு எழுதுகின்றார்.

"இடைக் காலத்தில் அதாவது கம்பனுக்கு முன்னர் விருத்தப் பாக்கள் தமிழில் சோதனை நிலையில்தான் இருந்தன; அதனால் நமது பலவான சமய இலக்கியங்களில் வரும் விருத்தங்கள் விருத்தம் என்று அழைக்கப் பெறும் தகுதியுடையன அல்ல"[17] என்கின்றார். திருவாய்மொழியைப் பொருத்த வரையில் யாப்பு நிலைமை அவ்வளவு மோசமில்லை என்று நாம் துணிந்து கூறலாம். இதுகாறும் செய்த ஆய்வு அதனைத் தெளிவுறுத்தும். பல பதிகங் கள் சீர்முறை அமைப்புக்கோ அன்றித் தளை விதிகளுக்கோ அப்படியே முற்றிலும் ஒத்துவரும் நிலையில் அமைந்துள்ளன. ஒரு சில மாறுபாடுகள் உள்ளன. அவை பார்த்தெழுதுதலில் ஏற்பட்ட தவறுதலாலோ அல்லது தப்பாகப் பாடுதலினாலோ காலப்போக்கில் நேர்ந்த மாறுதலாகக் கூடுமென நினைக்கத் தோன்றுகிறது. எப்படியாயினும் நம்மாழ்வார் தமிழில் விருத்தம் பாடும் ஆற்றலும் அதன் பல வகைகளும் கை வந்த வல்லமையும் மிக்கவராக இருந் திருக்கின்றார் என்பதில் ஐயமே இல்லை.

## தொடையமைப்பு

தொடை என்பது இன்னதென முதன்மையான இலக்கண ஆசிரியரான தொல்காப்பியர் கூறவில்லை. ஆனாலும் அவர் நான்கு முக்கிய தொடைகளை மோனை, எதுகை, முரண், இயைபு எனக் குறித்து, அதற்கடுத்தபடியாக ஐந்தாவதாக அளபெடையையும் வேறு சிலவற்றையும் சேர்க்கின்ற முறை கொண்டு ஓரளவு அதனை நாம் உணர்ந்து கோடல் கூடும். ஒரு அடியில் சீர்கள் தொடுத்து—தொடர்ந்து—வரும் போதும் அல்லது அடிகள் ஒன்றுடன் ஒன்று இணைந்து வரும்போதும் அவற்றிடையே காணப்பெறும் சில ஒலி ஒற்றுமையே தொடை எனப்படுகிறது எனலாம். அடி என்பது முக்கியமாக நாற்சீர் அடியை முதலில் குறித்தது.[18] ஆனால் பின்னர் அதனினும் குறைந்தும் மிக்கும் வரும் சீர்களைக் கொண்ட அடிகளும் ஏற்றுக் கொள்ளப் பெற்றுள்ளன. எழுத்து அல்லது மாத்திரை அளவு கொண்டு அடி அமைத்தலும் சீர் அளவு கொண்டு அமைத்தலும் என இருவகை அடி தொல்காப்பியர் காலத்து இருந்திருக்க வேண்டுமென எண்ண இடமிருக்கின்றது.[19] எனவே தொடைகளும் எல்லா வகை அடிகளிலும் கொள்ளுதல் ஏற்புடையதேயாம்.

திருவாய்மொழியில் இருசீரடி, முச்சீரடி, நாற்சீரடி, ஐந்து முதல் எட்டுச் சீர் வரை கொண்ட அடிகள் என்று எல்லா முக்கியமான அடிகளால் அமைந்த பாடல்களும் உள்ளன. அவற்றுள் எல்லா விதமான தொடை நயங்களும் அமைந்திருக்கின்றன. அவற்றை ஆழ்வார் அமைத்துள்ள தன்மையைச் சில எடுத்துக் காட்டுக்கள் மூலம் அறிவோம்.

### கொச்சகக்கலிப்பா

இது கலிப்பாவின் ஒருவகை. அளவடி நான்கு கொண்டது தான் (எடுத்துக்காட்டு) 1. ஆயும் அமருலகும் துஞ்சிலுநீ துஞ்சாயால் (2-1-1) இவ்(விரண்டாவது) அடியில் இணைமோனையும் கடைஇணை எதுகையும் மோனையும் அமைந்திருக்கின்றன. இவை சீர்களில் அமைந்தவை. இப்பாடலின் நான்கு அடிகளின் முதற் சீர்களின் இரண்டாமெழுத்தும் 'யு'வாக இருப்பதால் அது அடி எதுகை எனப்பெறும்.

(எ-டு) 2. அடல்கொள் படையாழி அம்மானைக் காண்பான் நீ (2-1-4) இந்த மூன்றும் அடியில் 'பொழிப்பு' மோனையும் அதன் அடுத்த அடியாகிய (எ-டு) 3. 'உடலம்நோ யுற்றாயோ ஊழிதோ

றூழியே' என்பதில் முற்று மோனையும், கடையிணை எதுகையும் அமைந்துள்ளன. கடைசிப் பாடலில் (எ-டு) 4 சோராத எப் பொருட்கும் ஆதியாம் சோதிக்கே' என்பதில் ஒரூஉ மோனை இருப் பதும் காணலாம். இப்படியே பலவிதமான தொடை அமைப்புக் களையும் எடுத்துக் காட்டுதல் கூடும்.

### கலிவிருத்தம்

பாவினத்தின் வகைகளில் முக்கியமானது விருத்தமாகும். அதனைப் பலரும் மேற்கொண்டு பாடல் அமைத்திருப்பது பற்றியே அது முக்கியமானது எனப் பெறுகின்றது. கலிவிருத்தம் என்பது அளவடி நான்கு கொண்டது. பெரும்பாலும் இயற்சீர் உடையதாயிருக்கும். இதற்குச் சிறப்பாகப் பொழிப்பு மோனையும், ஒரூஉமோனையும் வரல் வேண்டும்[20] என்பர் கவிஞர் குழந்தை. திரு வாய் மொழியின் முதல் பதிகமே இத்தகைய பாடலால் அமைந் தது தான். அதில் ஒவ்வொரு பாடலின் சீர்களும் விளச்சீர்களாகவே அமைந்துள்ளன. பாடலின் கடைசி ஒரு சீர் மட்டுமே மாச்சீர். 'உயர்வற' எனத்தொடங்கும் முதற் பாடலை எடுத்துக்கொண்டால் அடி எதுகை 4 வரிகளிலும் அமைந்திருப்பதோடு 1, 3 அடிகளில் முதல் மூன்று சீர்களிலும் மோனை உள்ளது. உ, அ என்ற உயிர்கள் தொடர்ந்து வந்துள்ளன. இவை கூழை மோனை எனப் பெயர் பெறும். 2வது அடி, 4வது அடி இரண்டிலும் இணைமோனை அமைந் துள்ளன. 'ம' என்பது 2வது அடியிலும், த், ச் என்பன 4வது அடி யிலும் மோனையாக உள்ளன. அடி எதுகை பதிகத்தின் எல்லாப் பாடல்களிலும் தவறாது அமைந்துள்ளது. நூலின் கடைசிக்கு முன் உள்ள கலிவிருத்தப் பாவான 'சூழ் விசும் பணிமுகில்' என்னும் திருவாய்மொழியிலும் முதல் பாடலில் முதல் அடியில் 'சூ, தூ என முதற் சீரிலும் மூன்றும் சீரிலும் பொழிப்பு மோனையும் இரண் டாவது மூன்றுவது அடிகளில் முறையே 3, 2 சீர்கள் நீங்கலாக மற்றைய மும்மூன்று சீர்களில் மோனையும் அமைந்து பாடல் ஓசை நயமுடையதாதலைக் காணலாம். ஒரு சில பாடல்களில விளக்க மாக எடுத்தோதிய பலவகை மோனை முதலிய தொடைகளில் எவையும் இல்லாவிட்டாலும் அவையும் செஞ்சொற்களின் சேர்க்கையால் ஒருவித ஓசையின்பம் தந்து நிற்கின்ற தன்மையும் காணலாம்.

இதனை யாப்பிலக்கணத்தார் செந்தொடை என்பர்.

(எ-டு) கனிவார் வீட்டின்பமே என்கடற் படாஅமுதே
தனியேன் வாழ்முதலே பொழிலேழு மேனமொன் ருய்
(2-3-5)

இவ்வடிகளில் சீர்களிடையே மோனே எதுகை வகைகள் எவையும் இல்லாவிட்டாலும் ஓசைநயம் உள்ளமை காணலாம்.

### கலித்துறை

ஐந்துசீர் அடிகளைக் கொண்ட கலித்துறையில் முதற்சீரிலும் நான்காம் சீரிலும் மோனே வருதல் சிறப்பு என்பர்.[21] திருவாய் மொழிப் பாடல்களில்,

(எ-டு) 1. நின்பசுஞ் சாம நிறத்தன் கூடுண்டு நீங்கினுன் (9-5-6) என 1, 3, 5 சீர்களிலும்,

(எ-டு) 2. காதல் மென்படையோடுடன் மேயும் கருநாராய் (6-1-2) என முதற்சீரிலும் ஐந்தாம் சீரிலும்,

(எ-டு) 3. தேறு நீர்ப்பம்பை வடபாலைத் திருவண் வண்டூர் (6-1-10) என முதற் சீரிலும் நான்காம் சீரிலும் மோனைகள் அமைந்திருப்பதைக் காண்கின்ருேம். கடைசி உதாரணத்தில் தகர மெய் மீது ஏறிய ஏகாரமும் இகரமும் இன எழுத்து மோனையாம். இப்படிப் பல வகைகளிலும் சீர்மோனை அமைதலும் இரண்டாம் எழுத்து ஒத்து வருதலாகிய அடி எதுகை தவருது நான்கு அடிகளிலும் அமைதலும் காண்கின்ருேம்.

சில இடங்களில் 1, 2, 4 சீர்களில் எதுகையும்[21] மற்றும் சில அடிகளில் 1, 2, 4, 5 சீர்களில் எதுகையும்[23] இவற்ருேடு வேறு பிற தொடைகளும் அமைந்திருத்தலும் காணலாம்.

### ஆசிரிய விருத்தங்கள்

6, 7, 8 சீர்கள் கொண்ட நான்கு அடிகளில் ஆகிய ஆசிரிய விருத்தங்களிலும் எல்லாவிதத் தொடைகளும் வருகின்றன. இப் பாடல்களில் பெரும்பாலானவற்றில் முதற்சீர்க்கேற்ற மோனே நான்காம் சீரிலும் அல்லது மூன்ரும் சீரிலும் அமைந்துள்ளது. நான்கில் அமைவது சிறப்பு என்பர். ஏனெனில் அச்சீரை

எடுத்துப் பாடும் போது ஓசை சிறக்க அது வாய்ப்பாகும். மூன்றும் சீரும் ஆறும் சீரும் ஓரேவாய்பாடாக அமைதலும் வேண்டும் என்ப. அப்படியே அமைந்துள்ளன பலபாடல்களில். அடி எதுகைவழக்கம் போல் எல்லாப் பாடல்களிலும் தப்பாது அமைந்துள்ளது.

(எ.டு) 1. 'அண்டா வண்ணம் மண்கரைய நெய்யூன் மருந்தோ மாயோனே (1-5-8)

இவ்வடியில் மோனையில்லை. ஆயினும் 1, 2, 3 சீர்களில் எதுகை அமைந்துள்ளமை அக்குறையை நிறைவாக்குகின்றது எனக் கொள்ளலாம்.

## இருசீர் முச்சீரடிகள்

அளவடிக்குக் குறைந்த மூன்று சீர்களாலும் இரண்டு சீர்களாலும் ஆன அடிகள் கொண்ட பாடல்களில் அமைந்த தொடை அமைப்பைக் காண்போம்.

(எ-டு) 1. ஈடும் எடுப்புமில் ஈசன்
மாடுவி டாதென் மனனே
பாடுமென் நாவவன் பாடல்
ஆடுமென் அங்கம ணங்கே (1-6-3)

முதலடியில் முற்று மோனையும், இரண்டு மூன்று அடிகளில் ஒரு சீர் இடையிட்ட மோனையும், கடைசி அடியில் இணைந்த சீர்களில் மோனையும் நான்கு அடிகளிலும் ஒரே எதுகையும் அமைந்துள்ளன.

(எ-டு) 2. ஆடியாடி அகம்க ரைந்திசை
பாடிப்பாடிக் கண்ணீர்மல் கியெங்கும்
நாடி நாடி நரசிங்கா வென்று
வாடி வாடுமிவ் வாணுதலே (2-4-1)

இதில் வந்த சொற்களே திரும்பவந்துள்ளன. 1, 3 வரிகளில் இணை மோனைகளும், 4வது அடியில் முற்று மோனையும், அடி நான்கிலும் அடியெதுகையும் உள்ளன. இசை கூட்டிப் பாடும் போது சிறு சிறு சொற்களால் அமைந்த இப்பாடல் வாணுதலின் வாட்டத்தை நன்குணர்த்தும் முறையில் உள்ளத்தை உருக்குவதாய் உள்ள இயல்பை நன்கு அறியலாம்.

## அடிஎதுகைத் தொடையில் காணப்பெறும் சில சிறப்பியல்புகள்

எதுகைத் தொடைக்கு மெய்யாயின் வந்த எழுத்தே வருதலும், உயிர் மெய்யாயின் ஒரே உயிரன்றி வெவ்வேறு உயிர் ஏறிய மெய் வருதலும் முறை. அவ்வாறன்றி ஒரே இன எழுத்துக்கள் வந்தும் எதுகை அமைதல் உண்டு. அது இன எதுகை எனப் பெறும். திருவாய்மொழியில் மெய்களில் வல்லினம், மெல்லினம், இடையினம் ஆகிய மூன்று இன எதுகைகளும் காணப் பெறுகின்றன. மெல்லினத்தில் நெஞ்சம், என்செய், மைந்த, துஞ்சும் என்று ஞ், ன், ந் (திரு 1-10-4) மூன்றும் எதுகையாக அமைந்துள்ளன. மற்றும் (5-5-4)இல் ங்,ன்,ந் என்ற மூன்றும், (3, 10, 1,) இல் ன், ண் இரண்டும்' (4-6-10) ல் ன், ம் இரண்டும் இது எதுகையாக வந்துள்ளன.

இடையினத்தில் தாள், நீள், கேழில், வாழ்வர் என ள, ழ இவ்விரண்டும் இன எதுகையாயமைந்துள்ளன. மற்றும் 4-2-1 8-3-10 இரண்டிலும் லி, ளி இரண்டும் இனவெதுகையாய் வந்துள்ளன.

வல்லின மெய்களுள்ளும் காக்கும், சேர்க்கை, வாய்த்த ஆக்கி என்ற சொற்களில் க், த் இரண்டும் எதுகைகளாம். இவ்வுதாரணத்தில் இரண்டாவது மூன்ருவது சொற்களில் இரண்டாம் எழுத்தாக அமைந்துள்ள ர், ய், இரண்டும் 'ஆசு' என்று பெயர் பெறும். இதனே ஆசெதுகை என்று கூறுவர். இவ்விரண்டு மெய்களும் லகர மெய்யுமன்றி ளி, ய என்ற உயிர் மெய்யெழுத்துக்களும் திருவாய்மொழியில் ஆசுகளாக வருகின்றன.[24] வல்லினத்தில் மற்றும் இனவெதுகையாக அமைந்துள்ள எழுத்துக்கள் ப், ட் என்பனவும், க், ற் என்பனவும்[25] ஆம். மற்ற நூல்களில் பெரும்பாலும் இவ்வாறு வருதல் காணேம்.

எதுகையமைப்பைக் கொண்டு திருவாய்மொழி தோன்றிய காலத்து வழங்கிய தமிழின் சில இயல்புகளை உணர்ந்து கொள்ள முடிகின்றது. அவற்றுள் முக்கியமானவை (அ) மெய்யுடன் வரும் 'ஐ' காரம் குற்றெழுத்தாகவே கொள்ளப்பெற்றுள்ளது. (உ-ம், (3-6-4); (5-7-11) காண்க.(ஆ) வைகலும், கைகலந்து, பொய்கல, மெய்கல—என்பன எதுகையாக உள்ளன. இதனுல் வை, கை என்ற எழுத்துக்கள் வய் என்றும் கய் என்றும் ஒலிக்கப் பெற்றும்

எழுதப் பெற்றும் வந்திருத்தல் வேண்டுமென உணரலாம். இத்தகைய எதுகை (5-2-5), (5-5-8) முதலிய பற்பல இடங்களிலும் வழங்கப் பெற்றுள்ளது.

(இ) 'ய' என்ற அகர மேறிய மெய் 'ச' கரத்துக்கு எதுகையாக மிகப் பல பாடல்களில் வருகின்றது.[26] (10 இடங்கள்) அவ்வெழுத்து 'க' கரத்துக்கு எதுகையாக இருபாடல்களில் அமைகின்றது.[27] அது மெய்யாக நின்று ஆய்த எழுத்தோடு எதுகையாகின்றது.[28] இவ்வாறு யகரமானது பின்னண்ண வெடிப்பொலியோடும் (Velar Stap) நடு அண்ண ஒலியான சகரத்தோடும், ஆய்தத்தோடும் எதுகையாக வருகின்ற குறிப்பு அக்கால மொழியாராய்ச்சிக்கு உதவக்கூடும்.

(ஈ) மற்றெரு குறிப்பு -ம, வ இரண்டும் மோனையாக வருமென்பர். தொல்காப்பியர் அவை மோனை எதுகை இரண்டிற்கும் உரிய என்பர்.[29] அதன்படி அவை இங்கு உமருகந்து, அவருகந்து அமரது, அமரர்தம் என்று எதுகையாகவும் வருதலைக் காணுகின்றோம். ஓசை ஒற்றுமையால் மோனையாக வரலாமென்றால் அவற்றை எதுகையில் அமைத்தலும் பொருத்தமேயன்றோ.

## இயைபுத்தொடை

ஒரு பாடலின் இரண்டு அடிகளின் இறுதி ஒன்றாக வருவது அடியியைபு. 'புகழும் நல் ஒருவன்' (3-4) எனவரும் திருவாய்மொழியின் முதல் ஐந்து பாடல்களும் ஏழாவது பாடலும் ஆக ஆறு பாடல்களின் முதல் மூன்று அடிகளும் 'என்கோ' என்று முடிகின்றன. எனவே இது அடியியைபுத் தொடையாம். மற்று அப்பாடல்களில் பெரும்பாலும் இறுதிச் சீரேயன்றி மூன்றும் சீரும் 'என்கோ' என அமைகின்றது. இதனைச் சீர் இயைபுத்தொடை எனல் பொருந்தும். மீண்டும் 'கடல்ஞாலம்' எனவரும் எண்சீர் ஆசிரிய விருத்தத் திருவாய்மொழியில் (5-6) பத்துப் பாடல்களின் முதல் இரண்டு அடிகளின் இறுதியிலும் 'என்னும்' என்ற சொல் வருகின்றது. அச்சொல்லே அவ்வெல்லா அடிகளின் நான்காவது சீராகவும் அமைகின்றது. முன்னது அடியியைபு, பின்னது சீர் இயைபுத்தொடைகளுக்கு ஏற்ற உதாரணமாகும். பத்துப்பாடல்களிலும் அத்தொடை அமையப்பெற்றுள்ளமை தெளிவு. 'மல்லிகை கமழ்' (9-9) என்றுவரும் திருவாய்மொழியின் 1,2,4,5 என்ற பாடல்களில் முதலிரண்டின் முதல் இரண்டு அடிகளிலும் மூன்றுவதன் நான்கு அடிகளிலும் நான்காவதன், மூன்று அடிகளிலும் இறுதிச்

சீர்களாகவும் நான்காவது சீர்களாகவும்'மாலோ' அல்லது 'ஆலோ' என்ற சொல் அமைந்துள்ளது. முன்போலவே இவற்றையும் அடி இயைபு என்றும் சீர்இயைபு என்றும் கூறல் தகும். 'பாமரு மூவு லகும்' எனத் தொடங்கும் திருவாய்மொழியின் (7-6) முதற்பாடலின் அடிகள் நாபாவோ, பாதாவோ, ஆளாவோ என்று 'ஓ' காரத்தில் இறுவதும் அடியியைபே யன்றோ. இரண்டாம் பாடலின் கடைசி இருஅடிகள் 'எந்தாயோ' 'கூத்தாவோ' என்று முடிகின்றன. இவ் வாறு இயைபுத் தொடைகள் இரண்டிரண்டு அடிகளில் அங்கங்கே வந்தமைந்து அழகு செய்கின்றன.

முரண்தொடை

நண்ணா அசுரர் நலி வெய்த நல்ல அமரர் பொலிவெய்த
எண்ணா தனகள் எண்ணுநன் முனிவரின்பம் தலைசிறப்ப
(10.7.5)

இப்பாடலில் 'நண்ணா அசுரர்' என்றும், 'நல்ல அமரர்' என்றும் 'நலி வெய்த' என்றும் 'பொலிவெய்த' என்றும் ஒரே அடியில் மாறுபட்ட பொருள் தரும் சொற்கள் அமைவது முரண்தொடை வகையைச் சேர்ந்ததாகும். அடுத்த அடியிலும் 'எண்ணா' என்றும் 'எண்ணும்' என்றும் மாறுபட்ட பொருள்தரும் சொற்கள் அண்மையில் அமைந்து மற்ற தொடைகளுடன் சேர்ந்து பாடலின் அழகை மிகுவிப்பது அறிந்து இன்புறத்தக்கது. இதே திருவாய்மொழியில்பின்னால் 7வது பாடலில் 'தெருள்' என்றும் 'இருள்' என்றும் இரு அடிகளிலும் 9 வது பாடலில் 'படைத்து' என்றும் 'கெடுத்து' என்றும் சீர்களிலும் முரண் தொடை வகைகள் அமைந்துள்ளன. 'நல்குரவும் செலவும்' எனத் தொடங்கும் திருவாய்மொழியில் (6-3) பத்துப் பாடல் களிலும் முரணான பொருள்களையே அடுக்கிக் கூறி அவையெல்லா மாகவும் இறைவன் இருக்கும் விசித்திரத் தன்மையை ஆழ்வார் விளக்குகின்றார். அதில் ஒவ்வொரு பாடலின் முதல் இரண்டு அடி களிலும் ஒவ்வொரு அடியின் சீர்களிலும் சீர் முரண்தொடை பல காணலாம்.

(உ.ம்) 'நல்குரவும் செலவும் நரகும் சுவர்க்கமுமாய்
வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய்' (6-3-1)

'நிழல் வெயில் சிறுமை பெருமை குறுமை நெடுமையுமாய்' (6-3-10) பாடலின் முதனின்று நோக்கின் முரண் என்றும், இறுதி யினின்று நோக்கின் கடை முரண் என்றும் இலக்கண ஆசிரியர் இதனைக் கூறுவர்.

வருவார் செல்வார் (8-3-7) என்றும், அங்குமிங்கும் (8-3-1) என்றும், தாள்களை—தலைத்தலை (8-1-10) என்றும், காலைமாலை (9-10-1)என்றும், இவ்வாறு இன்னும் பல பல இடங்களிலும் முரண் தொடை அமைந்துள்ளன.

### அளபெடைத் தொடை

இவ்வகைக்கு உதாரணமாக மிகச் சிலவே உள்ளன. ஒரு கலித்துறையின் (2-7-9) தொடக்கச் சீர் நான்கிலும் அளபெடை அமைந்து ஓசை கூட்டப்பெறுவது காண்கின்றோம். சிரீதரன், வெரீஇ, மரீஇய, இரீஇ என்பன அச்சீர்கள்.

### நிரல் நிறை

தொல்காப்பியர் சொல்லதிகார எச்சவியலில் செய்யுளில் பொருளமைக்கும் முறையைச் சொல்லுகையில் நிரல் நிறையையும், சொல்லடுக்காகிய இரட்டை யாப்பையும் தொடை வகையிலும் சேர்த்துக் கூறுகின்றார்.[50] நிரல் நிறையை அணியொடு சேர்த்தும் கூறுவர்.[51] இவ்வாறு மூன்று பிரிவுகளிலும் இடம்பெறும் நிரல் நிறை எவ்வாறு திருவாய்மொழியில் அமைகின்றது எனக் காண்போம். பொருளையும் பயனையும் தனித்தனியே சேர நிறுத்துவதே நிரல்நிறை. முதல் திருவாய்மொழியின்கண் இறைவனது தன்மைகளை விரிவாக விளக்கிக் கொண்டுவரும் ஆசிரியர் எட்டாவது பாடலிலும் பதினொன்றாவது பாடலிலும் இருநிரல் நிறைத் தொடைகளை அமைத்துள்ளார். 'புரமொரு மூன்று எரித்து' 'அமரர்க்கு அறிவு கொடுத்து' என்று இருவினைகளை ஒன்றாக நிறுத்தி இவ்வாறு செய்தவர் 'அரன் அயன்' என அவர்தம் பெயரை அடுத்து வரிசைப் பட நிறுத்திப் பின்னும் அவர்தம் செயலை முறையே 'உலகழித்து அமைத்து' என்று விளக்குகின்றார் எட்டாவது பாடலில்.

பதினொன்றாவது பாடலில் ஐந்துபூதங்களின் பெயர்களைத்தக்க அடையொடு வரிசைப்பட அமைத்து அவற்றின் சிறப்பியல்புகளை அடுத்த அடியில் நிரலே அமைக்கின்றார். இவ்விரண்டும் நிரல் நிறையே. மற்றும் 'எல்லியும் காலை' என்று தொடங்கும் திருவாய்மொழியில் (8-6-10) நாராயணன் நிற்பதும் மேவியிருப்பதும் ஆகிய இடங்களைச் சொல்லுகின்றவர் 'என் நெஞ்சகம்' 'கற்பகச் சோலைத் திருக் கடித்தானம்' என்று முடிக்கின்றார். இதனை முறையே நிற்பது திருக்கடித்தானம் என்றும், மேவியிருப்பது நெஞ்சகம் என்றும் எதிர் நிரல் நிறையாகக் கொள்ளல் வேண்டும். எனவே இது நிரல் நிறையின் ஒரு பிரிவாகிய எதிர்நிரல் நிறையாகும். வேறு இடங்களிலும் நிரல்நிறை உண்டு [பார்க்க (8-9-2)].

## இரட்டை யாப்பு

ஓரடி முழுவதும் ஒரு சொல்லே வருவது இரட்டை என்று எழுதுகிறார் தொல்காப்பிய உரையாசிரியர் இளம்பூரணர்.[32] அளவடிக்கு அது பொருந்தும். நெடில், கழிநெடில் அடிகளுள் எல்லாச் சீர்களாகவும் ஒரு சொல்லே வருதல் அருமை. "நாற்சீரின் மிக்கு வரப்பெறாது; ஈற்றெழுத்து ஒன்று குறையினும் இழுக்காது" என்பது இதுபற்றி யாப்பருங்கலக்காரிகை உரை[33] தரும் குறிப்பாகும். (எ.டு) 'பொலிக பொலிக' எனவரும் திருவாய்மொழியின் (5-2) முதல் பாடல் முதல் அடியில் பொலிக பொலிக பொலிக என்று அப்பாடலிலுள்ள ஆறு சீர்களில் முதல் மூன்று சீர்கள் ஒரே சொல்லாக வரும் அடுக்கும், அடுத்த பாடலில் 'கண்டோம் கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம்' என்று நான்குசீர் ஒரே சொல்லாக வருதலும், இரட்டையை ஒரு சார் ஒக்குமெனக் கொள்வதில் இழுக்கில்லையன்றே. ஒரு சொல் அடுக்கி வரும் பொழுது ஏற்படும் ஓசையின்பம் கருதித்தானே இதையும் தொடையாகக் காட்டுகின்றனர். இவ்வாறு இன்னும் சில இடங்களிலும் அமைகின்றது (7-1-11). 'ஓராயிரம்' எனத் தொடங்கும் திருவாய்மொழியில் (9-3) இரண்டாவது பாடல் மூன்றாவது அடி 'அவனே அவனும் அவனும் அவனும்' என வருவது இரட்டைத் தொடைக்கு முற்றிலும் பொருந்தியதேயன்றே.

## அந்தாதி

தொல்காப்பியர் அந்தாதித்தொடை என்று ஒன்று கூறவில்லை. நத்தத்தனார் போன்ற புலவர்களும் பிற்காலத்தெழுந்த யாப்பருங்கலம், காரிகை இவற்றின் ஆசிரியரும் அந்தாதித் தொடை பற்றிக் கூறுகின்றனர். அடிதோறும் இறுதிக்கண் நின்ற எழுத்தானும் அசையானும் சீரானும் மற்றையடிக்காதயாக வரத்தொடுப்பது அந்தாதித் தொடை எனப்பெறும்.[34] அவர்கள் அடியையும் இதனுடன் சேர்த்து எழுதுகின்றனர். அது எப்படிப் பொருந்துமெனத் தெரியவில்லை. அவ்வாறு வருதல் மடக்கு என்று பெயர் பெறும். ஒரு பாடலிலன்றி ஒரு நூலின் பாடல்களில் ஒரு பாட்டின் இறுதி எழுத்தானும் அசையானும் சீரானும் அடியானும் முறையே அடுத்த பாட்டின் எழுத்தாகவும் அசையாகவும் சீராகவும் அடியாகவும் அமையத் தொடுப்பதும் அந்தாதித் தொடையே என்று கொண்டு புலவர் தொன்று தொட்டுப் பாடிவருகின்றனர். தமிழ்ப் பேரகராதி தரும் விளக்கமாவது-ஒரு நூலின் ஒருபாடலின் கடைசி

அடியின் கடைசி எழுத்து, அசை அல்லது சீர் அடுத்துவரும் பாடலின் முதல் எழுத்து, அசை அல்லது சீராக வருதலும், இத் தொடர்பு நூலின் கடைசிப் பாடலுக்கும் முதற் பாடலுக்கும் இடையேயும் அமைதலும் அந்தாதியாம் என்பது.

இதன்படி பார்த்தால் இது ஒரு பாட்டில் அமையாது பல பாடல்களில் அல்லது நூலில் அமைவது என்று ஆகும். ஆகையினுல்தான் போலும் பிற்காலப் பாட்டியல் நூல்கள் அந்தாதி என்பதை ஒரு வகை நூலாக-96 வகை என அழைக்கப்பெறும் பிரபந்த வகைகளில் ஒன்ருகக்- கூறுகின்றன. எனவே அந்தாதி என்பதைத் தொடை வகைகளில் ஒன்ருகவும் நூல்வகைகளில் ஒன்ருகவும் இரண்டு வகையாகவும் நாம் கருத வேண்டியுள்ளது. சங்க இலக்கியங்களிலேயே அந்தாதியாக அமைந்தபாட்டு அடிகள் உள்ளன. பத்துப் பாட்டுக்கள் அந்தாதியாக அமைந்துள்ள தன்மையை பதிற்றுப்பத்து (31-40) ஐங்குறுநூறு (171-180) இவற்றில் காண்கின்ருேம். மற்றும் ஐந்தாம் நூற்ருண்டினது எனக் கருதப் பெறும் பெருங்கதைக் காவியத்தில் அதன் 131 பெரும் பாடல்களிலும் அந்தாதி அமைந்துள்ளது. ஆனுல் ஏறக்குறைய ஆயிரம் பாடல்களிலும் நூல் முழுவதும் ஒரே அந்தாதியாக அமைந்திருக்கும் சிறப்பைத் திருவாய்மொழி மட்டுமே கொண்டிலங்குகின்றது. இத்தன்மை முன்னுமில்லை. பின்னுமில்லை. இவ்வரிய செயலை ஆழ்வார் சாதித்துள்ளார்.

## திருவாய்மொழி முழுவதும் சொற்ருெடர் நிலைப்பாடலா?

இங்கு இன்னொரு கேள்வியும் எழுகின்றது. ஒவ்வொரு திருவாய்மொழியின் —பதிகத்தின் — பதினெருவது பாடலும் ஆழ்வார் பாடியதுதானு என்ற ஐயத்தைச் சிலர் எழுப்புகின்றனர் பல ஆண்டுகளுக்கு முன்னர்ச் செந்தமிழ்த் திங்களிதழில் இது குறித்து ஒரு விவாதம் எழுந்தது[35] அண்மையில் திருவாய்மொழியை மலிவுப் பதிப்பாக வெளியிட்ட எஸ். ராஜம் மர்ரே கம்பெனி வெளியீட்டிலும் என்ன காரணத்தினுலோ ஒவ்வொரு பதிகத்தின் 11வது பாடலையும் தனிப்பட்ட ஒரு எழுத்தில் அச்சிட்டுள்ளார்கள். சில பதிப்புக்களில் ஒவ்வொரு திருவாய் மொழியின் கருத்தையும் சுருக்கி அந்தாதியாக மணவாள மா முனிகள் பாடிய வெண்பாவொன்றினைக் காணலாம். அது நூலாசிரியர் பாடிய பாடலன்று. ஆனுல் 11வதுபாடல் அப்படிப்பட்ட தன்று; அதனைப் பாடியவர் ஆழ்வார்தான் என்று கொள்வதற்குக் கீழ்க்காணும் சான்றுகள் நமக்குத் துணை செய்வனவாம்.

1. ஒவ்வொரு பதிகத்தின் இறுதிப்பாட்டிலும் 'ஆயிரத்துளிப் பத்து' என்று ஆழ்வார் பாடுகின்றார். பதிகத்திற்கு 11 பாடல் என்று கணக்கிட்டால் மொத்தப்பாடல் ஆயிரத்துக்கும் மேலாகிறதே என்று எண்ண வேண்டுவதின்று. ஏனெனில் 1102 எண்ணுள்ள பாடல்களையும் ஆயிரம் என அழைத்தலும், சில குறையினும் ஆயிரம் என்றும், நாலாயிரம் என்றும் அழைத்தலும் மரபு. இது தொன்று தொட்டு வருவதொன்றே.

2. ஆழ்வார் தன்னைப் புகழ்ந்து பாடிக் கொள்ள மாட்டார். பதினொன்றும் பாடல் சில அவரை உயர்த்துக் கூறுகின்றன என்ற கருத்தும் ஏற்றுக்கொள்ளத் தக்கதல்ல. தன்னைப் பிறன்போல் வைத்துப் பாடுகையில் அவ்வாறு புகழ்ந்து கூறுவதும் மரபுக் கொத்ததே. ஆழ்வார் மற்ற இடங்களில் தன் கவியை 'இன்கவி, முதலியவாகப் புகழ்ந்து கொள்ளவில்லையா? ஞானசம்பந்தர் சுந்தரர் போன்றோர்களும், முதலாழ்வார்களும் திருமழிசை ஆழ்வாரும் நீங்கலாக மற்ற எல்லா ஆழ்வார்களும் இம்முறையில் பாடி இருப்பதால் இது அக்கால முறை எனவே தகும்.

3. நம் ஆழ்வார் பாடிய நூறுபாடல் கொண்ட திருவிருத்தத்தில் நூறுவது பாட்டே பயன் கூறுகின்ற பாட்டாகவும் மண்டலித்தலுக்கேற்ற இறுதிச் சொல் பெற்றதாகவும் உள்ளமை காண்கின்றோம். இது ஆழ்வார் பாடியதன்றெனக் கொள்ளின் கீழ்க் காணும் இரு குறைபாடுகள் திருவிருத்தத்திற்கு உண்டாம்.

(அ) திருவிருத்தம் மண்டலித்தலோடு வரும் அந்தாதித் தன்மையற்றதாக முடியும்.

(ஆ) கோவை என்பது 100பாடல் அல்லது அதனினும் மிக்க பாடல் உடையதாக வருதல் மரபு; திருவிருத்தம் அவ்விதிக்கு மாறாக வந்த நூலாகப் போகும். அக்குறையை அதற்கு ஏன் ஏற்ற வேண்டும்?

4. ஆச்சாரிய இருதயம் எழுதிய மணவாள நாயனார் காலத்திலேயே இப்பாடல்கள் ஆழ்வார் பாடல்களாகவே கொண்டு உரை செய்யப் பெற்றுள்ளமை தெளிவு.

5. திவ்வியப்பிரபந்தம் தொகுக்கக் காரணமாக இருந்ததாகச் சொல்லப்பெறும் 'குழலில் மலியச் சொன்ன ஓராயிரம்' என்னும் பாடலும் குடந்தை ஆராவமுதனைக் குறித்தெழுந்த திருவாய்மொழியின் பதினொன்றுவது பாடலே. அதனாலும் திவ்வியப் பிரபந்தம் தொகுத்தற்கு முன்பே இப்பாடல்கள் திருவாய்மொழியின் பகுதியாகக் கருதப்பெற்றமை விளங்கும்.

6. மற்றும் முன்பாடல்களோடு ஒத்த யாப்பமைதியையே இப்பதினொன்ருவது பாடலும் கொண்டிருக்கின்றது; ஒரு சில இடங்கள் ஒத்து வரவில்லை எனக் காட்டுவார்க்கு அத்தகைய விலக்குகள் ஆழ்வாரின் மற்ற பாடல்களிலும் உள்ளன எனக்காட்டி அக்காரணத்தால் இப்பாடல் ஆழ்வார் பாடியதாகாது என்பது யாரோ சிலர் உள்ளத்தில் தோன்றிய கற்பனையே அன்றி அதற்கு ஏற்ற சான்றுகள் இல்லை என்பதே முடிவு.

தன் நூலைச் சொல்தொடர்பாலும் பொருள் தொடர்பாலும் ஒரு முழு நூலாகக் காண வேண்டுமென்று அவாக்கொண்ட ஆழ்வார், உள்ளமறியாதவரே வேருகக் கூறுவர். 'திரை நிறை ஆயிரம்' (திரு. 1-1-11) அந்தாதி ஆயிரம் (திரு 1-4-11) என்பதே அவர் தம் நூலுக்கு இட்ட பெயராதலும் கூடும். இனி ஆழ்வார் அமைத்துள்ள அந்தாதி வகைகளைக் காண்போம்.

### அந்தாதியின் பல்வேறு அமைப்புகள்

(அ) இறுதிச் சீராயினும் அசையாயினும் அடுத்த பாட்டில் தொடர்தலே பெரும்பான்மை; உதாரணம். 1. முதல் திருவாய் மொழியின் 11வதுபாடல் 'வீடே' என்னும் இறுதிச்சீரைப் பெறுகின்றது. இரண்டாவது திருவாய்மொழியின் முதற்சீர் 'வீடு மின்' என்பது. முதற் பாடலின் இறுதிச்சீர் அடுத்த பாடலின் முதற்சீரின் ஒரு பகுதியாக அமைகின்றது. ஆனல் பொருள் முன்னதன்று; வேறுபடுகின்றது. இவ்வாறு பல இடங்களிலும் சொல் மட்டும்தான் தொடர்கின்றதே தவிரப் பொருள் அன்று என்பது அறியத்தக்கது.

2. முதல்பத்து 6வது திருவாய்மொழியின் 7வது பாடல் 'கழி மினே' என்று முடிகின்றது. அடுத்த 8வதுபாடல் 'கழிமின் தொண்டீர்கள்' எனத் தொடங்குகின்றது. ஙங்கு இறுதி ஒரு சீர் அதே பொருளில் அடுத்த பாடலின் ஆதிச்சீராக அமைகின்றது.

3. திருவாய்மொழி (4-3)ன் முதல் பாடல் 'எழுமையுமே' என முடிகின்றது. அதன் அடுத்த பாடல் 'மைய கண்ணள்' எனத் தொடங்குகிறது. இங்கு இறுதிச்சீரின் இடையமைந்த ஒரெழுத்து மட்டும் அடுத்ததில் தொடர்கின்றது.

4. சொல்லும், அசையும், எழுத்துமன்றி இறுதிச் சொற் பொருளின் தொடர்புடைய ஒரு பொருளைக் குறிக்கும் ஒரு சொல்லால் அடுத்த பாடல் தொடங்குவது மற்ருெரு வகை. அது ஆகுபெயர் அந்தாதி எனப் பெயர் பெறுகின்றது (எ.டு) திருவாய்

மொழி (1—6) இன் முதற்பாடல் 'பூவே' என முடிகிறது. அதன் அடுத்த பாடல் மதுவார்' எனத் தொடங்குகின்றது. இங்கு முன் அடியின் எந்த ஒரு பகுதியும் தொடராது பூவுடன் தொடர்புடைய தாகிய பூவிலிருப்பதாகிய 'மது' என்ற சொல்லால் அடுத்த பாடல் தொடங்குவது காண்க. இவ்வாறு இவ்வொரு இடத்தில் தான் வருகின்றது. இதுவும் இலக்கண அறிஞர் ஏற்றுக்கொண்ட ஒன்றே.

5. திருவாய்மொழி (5-7)ன் இரண்டாவது பாடல் 'தமியேனுக் கருளாயே' என்று முடிகின்றது. அத்தொடரின் கடைசிப் பகுதி யான 'கருளாயே' என்பதன் முதலெழுத்து கு+அ=க என ஆனது அடுத்த பாடல் 'கருளப்புட்கொடி' எனத் தொடர்கின்றது. இயல் பான ககரத்தில் தொடங்கும் 'கருளப்புள்' என்பது முதற்சீர். ஓசை ஒற்றுமை பற்றித் திரிந்த ககரமும் இயல்பான ககரமும் ஒரு தன்மை யாகக் கொள்ளப் பெற்றுள்ளன.

6. மற்றும் ஆக்கினையே (2.3.5) என்ற சீரில் முடியும் பாடற்கு. அடுத்த பாடலின் தொடக்கம் 'இனியார்' என்பதாக உள்ளது மிக நுட்பமாகக் கவனித்தால்தான் இது அந்தாதி என்பது புலப் படும். இப்படி அமைந்த வேறு சில இடங்களும் உள்ளன.

(ஆ) 1. இனி ஈற்றுச்சீரினை விட்டுவிட்டு ஈற்றயற்சீரோ அதற்கும் முன்னுள்ள கடைசியிலிருந்து 3வது சீரோ அல்லது 4வது சீரோ தொடர்தலும் காணப்பெறும். (2.2.2, 2.2.3. 2.2.4) 2. ஒரு சீர்க்கு மேற்பட்டு இரண்டு சீர்களோ மூன்று சீர்களோ அல்லது நான்கு சீர்களோ கூட அடுத்த பாடலின் பகுதிகளாக வருதலும் உண்டு. (7-2 2 7 9-5, 2-2-9) 3. திருவாய்மொழி (8.4) இன் 6வது பாடல் எழுசீர் கொண்டது. அதன் கடைசி அடியின் முதல் இரு சீர் தவிர மற்ற ஐந்து சீர்களும் அடுத்த 7வது பாடலின் தொடக்கமாக அமைகின்றன. 4. திருவாய்மொழி (9-9)இன் பத்து பாடல்களிலும் ஒவ்வொன்றின் எண்சீர்களில் பின் நான்கு சீர்களும் அடுத்த பாடலின் ஆதியாக அமைந்து மடக்குப் போன்றுள்ளது. இது தனி அழகு தருகின்றது 5. திருவாய்மொழி (9-2)இன் முதல் மூன்று பாடல்களும் 'திருப்புளிங் குடிக்கிந் தானே' என்று முடிகின்றன. எனவே இரண்டு மூன்று நான்காவது பாடல்களின் தொடக்கம் எப்படி அமைப்பது? அந்தாதியின் முக்கிய நோக்கம் எந்தப் பாவிற்குப் பின் எந்தப் பாடல் வருகின்றது என்பதனை நினைவு கொள்வதற்கு உதவுவதுதானே. ஆகையால் 'ஆழ்வார் நயமான ஒரு வழியை இங்குக் கடைப்பிடிக்கின்றார். இரண்டாவது

பாடலைக் 'குடிக்கிடந்து' என்றும், மூன்றாவது பாடலைக் 'கிடந்த நாள் கிடந்து' என்றும், நான்காவது பாடலைப் 'புளிங்குடிக்கிடந்து என்றும் தொடங்கி வைத்து அழகுபடுத்தும் தன்மை சிறப்பாக உள்ளது.

இவற்றிற்கெல்லாம் மேலாகத் திருவாய்மொழி 'உயர் வற' என்று தொடங்குகின்றது. கடைசியான 1102 வது பாடல் பிறந்தார் 'உயர்ந்தே' என்று தொடங்கிய சொல்லிலேயே முடிவுறுகின்றது. இவ்வாறு வருதலை மண்டலித்தல் என்பர். மண்டலித்தல் இல்லாத அந்தாதிகளும் உண்டு. இப்படியாக நன்கு கோத்ததொரு மாலையாகத்திருவாய்மொழி இலங்குகின்றது. ஆசிரியரே இதனைச் 'சோர்வில் அந்தாதி' (1-6-11, 5-3-11) என்றும், தமிழ் மாலை ஆயிரம் என்றும் (1-7-11, 5-6-11), இசைமாலை ஆயிரம் என்றும் (3. .11, 4 8.11) சொல் தொடை அந்தாதி ஓராயிரம் (10.4.11) என்றும் கூறுவது சாலப் பொருத்தமேயாகும்.

முழுவதையும் ஒரு மாலையாகக் கருதுவது ஒரு கருத்து. அப்படிக்கன்றி ஒவ்வொரு சொல்லையும் ஒரு மலராகக் கொண்டு அம்மலர்களாலாகிய மாலையாக ஒவ்வொரு பாடலையும் கருதினால் திருவாய்மொழி ஆயிரம் மாலைகள் கொண்டதாகும்.

**பண்**

திருவாய்மொழி ஆயிரத்தையும் மற்ற மூன்று ஆயிரம் பாடல்களையும் தொகுத்த பெரியவரான நாதமுனிகள் தம் உறவினரான சில பெண்மக்கள் துணைகொண்டு திருவாய் மொழிக்குப் பண் அமைத்தார் என்று மரபுவழிச் செய்தி கூறு கின்றது. சில பதிப்புக்களில் மட்டும் ஒவ்வொரு திருவாய்மொழிக்கும் உரிய பழைய பண்ணும் தாளமும் அவற்றிற்குரிய புதிய கர்நாடக இசைப் பண்ணும் தாளமும் குறிக்கப் பெற்றுள்ளன.[36] ஒரே வகைப் பாவினங்களும் கூட வேறு வேறு பண்ணில் பாடப்பெற வேண்டுமென்று அக்குறிப்பிலிருந்து தெரிகின்றது. எனவே யாப்பிலக்கண முறைக்கும் இசை வகுப்பிற்கும் யாதொரு தொடர்பும் இருப்பதாகத் தெரியவில்லை. பழைய பண் ஒன்றிற்கே வேறுவேறு புதிய இராகங்களும் அந்நூலில் குறிக்கப் பெறுகின்றன. தனிப்பட்ட ஆராய்ச்சி செய்தாலொழிய அதுபற்றி நாம் தெளிவாக அறிந்து கொள்ள முடியாத நிலையில் இருக்கின்றோம் இன்றன்று கோவில்களில் 'சாத்துமுறை'யின்போது பாடுதற்கும், அரை யர்கள் பாடும் முறைக்கும் இப்பண்ணமைப்பிற்கும் தொடர்பு இருப் பதாகத் தெரியவில்லை. இசையறிஞர்கள் இத்துறையில் ஆராய்ச்சி செய்தல் நலம்,

திருவாய்மொழிப் பாசுரங்கள் பாடுதற்குரியனவாக 19 பண்கள் குறிக்கப் பெற்றுள்ளன. தேவாரப் பாடல்கள் பாடுதற்குரிய பண்களாக அந்நூலில் 23 பண்கள் குறிக்கப்பெற்றுள்ளன. இரண்டிற்கும் பொதுவாக அமைந்துள்ளவை 14 ஆம். திருவாய்மொழிக்கு மட்டும் சிறப்பாக—தேவாரத்தில் காணப் பெருதனவாக உள்ள ஐந்து பண்களாவன :- முதிர்ந்த குறிஞ்சி, பாலையாழ், வியந்தம், பழஞ்சுரம், செருந்தி என்பவனாம்.

### பலவகைப் பண்களும் அவை அமைந்த திருவாய்மொழிப் பதிக எண்ணிக்கையும்

| | | | |
|---|---|---|---|
| 1 | நாட்டம் அல்லது நட்டராகம்— | 15 | பதிகங்கள் |
| 2.3 | நட்டபாடையும் இந்தளமும் தனித்தனி | 10 | ,, |
| 4-5 | கொல்லியும் சீகாமரமும் | ,, 7 | ,, |
| 6-8 | பஞ்சமம், தக்கராகம், முதிர்ந்த காஞ்சி | ,, 6 | |
| 9-11 | தக்கேசி, புறநீர்மை, பழந்தக்கராகம் | ,, 5 | ,, |
| 12-13 | பழம் பஞ்சுரமும் காந்தாரமும் | ,, 4 | ,, |
| 14 | பாலையாழ் | 3 | ,, |
| 15-16 | வியந்தமும் குறிஞ்சியும் ஒவ்வொன்றும் | 2 | ,, |
| 17-19 | கைசிகம், பழஞ்சுரம், செருந்தி | 1 | பதிகம்மட்டும் |

வெவ்வேறு தாளவகைகளும் அவற்றிற்குக் குறிக்கப் பெற்றுள்ளன.

இப்பகுதியைக் கவிஞராகவும் சிறந்த திறனய்வாளராகவும் திகழ்ந்த அரவிந்தரின் குறிப்பொன்றுடன் முடிப்பது பொருத்தமாம். அவர் கவிதைக்கும் பாடலுக்கும் விளக்கம் தருகின்ருர். திருவாய்மொழிப் பாசுரங்கள் அவர்தரும் இரு இயல்பையும் பெற்றுள்ளன.' "பாடல், என்பது இசையமைப்புக்கு ஏற்புடையதாக அமைவது; கவிதை என்பது செய்யுளோசைக்கும் சொல்லமைதிக்கும் ஏற்பக் காதிற்கு இனிமை தருமாறு எழுதப்பெறுவது. இதுவே இவ்விரண்டிற்கும் இடையே உள்ள உண்மையான வேறுபாடு. இதன்கண் குறிக்கப்பெறும் இருவகை இசையமைதியும் முற்றிலும் வேறானவை. அதனால்தான் ஒரு கவிதை அல்லது செய்யுள் இருவகை இசையமைதிக்கும் ஏற்றதாக அமைந்திருந்தாலன்றி அதற்கு இசை அமைக்க முடியாது. அல்லது ஆசிரியன் கருதாமலேயே அதன்கண் இசை கூட்டுவதற்கேற்ப ஒரு வகை இயக்கம் பொருந்தியிருக்கலாம்.

## அடிக்குறிப்புகள்

1. இலக்கியக் கொள்கை (ஆங்கிலம்)-ரெனே வெல்லக்கும் ஆஸ்டின் வாரனும்., (பதிப்பு III,1 963),
2. இலக்கியக்கலை·ஞானசம்பந்தம் அ. ச., 1956, பக் 88
3. தொல்காப்பியம்-செய்யுளியல்-பேராசிரியம், சூ 9
4. யாப்பருங்கலக்காரிகை-அமிதசாகரர்-பக் 3
5. தொல்காப்பியம்-செய்யுளியல், சூ 213
6. இலக்கியக்கொள்கை (ஆங்கிலம்)-ரெனே வெல்லக்கும் ஆஸ்டின்வாரனும்.,-பதிப்பு III 1963, பக் 159
7. தொல்காப்பியம்-செய்யுளியல், சூ 88 முதல் 91
8. இலக்கியக் கொள்கை (ஆங்கிலம்)-பக் 163
9. ,, -பக் 173
10. தமிழ் யாப்பியல் ஆய்வு, (ஆங்கிலம்)-சிதம்பர நாத செட்டியார் அ. சி., 1942-பக் 134
11. பன்னிரு திருமுறை வரலாறு-தொகுதி I - வெள்ளை வாரணனர்-க., (அண்ணமலைப் பல்கலைக் கழக வெளியீடு, 1962 பக் 338
12. வீரசோழியம்-புத்த மித்திரனர்-யாப்பியல் உரை சூ118
13. தொல்காப்பியம்-செய்யுளியல் நச்சினர்க்கினியர் உரை-சூ 149
14. யாப்பருங்கல விருத்தி உரை-(சைவ சித்தாந்தப் பதிப்பு 1973) பக் 288
15. யாப்பருங்கல விருத்தியுரை-சூ 76
16. யாப்பருங்கலக் காரிகை-அமித சாகரர்-பக் 100
17. விருத்தப்பாவியல் - வீரபத்திரமுதலியார். டி., 1938-முன்னுரை.
18. தொல்காப்பியம்-செய்யுளில், சூ 32
19. (அ) ,, ,, சூ 36-42-சூ 55
    (ஆ) இலக்கணக் கட்டுரைகள்-வேங்கடராஜுலு ரெட்டியார். வே., பக் 87
20. யாப்பதிகாரம்-புலவர் குழந்தை-பக் 74
    தொடை அதிகாரம்-புலவர் குழந்தை, 1967-பக் 122

21. தொடை அதிகாரம் புல்வர் குழந்தை பக் 140
22. திருவாய்மொழி (9-5-9) அடி 1.
23. ,, ,, அடி 4
24. திருவாய்மொழி (6-3-11), 10-3-9)
25. ,, (5-4-7), (9-5-4)
26. திருவாய்மொழி-பார்க்க (2-7-1), (3-8-3), (4-10-4) (6-4-11) (6-6-8), (7-5-9), (7-8-5), (8-5-1), (8-6-4), (10-10-2)
27. திருவாய்மொழி (6-4-6), 10-3-9),
28. ,, (4-1-11)
29. தொல்காப்பியம்-செய்யுளியல்-சூ 94
30. தொல்காப்பியம்-சொல்லதிகாரம் எச்சவியல், சூ 9,5; செய்யுளியல்-91
31 தண்டியலங்காரம். சூ 66
32. தொல்காப்பியம் சொல்லதிகாரம்-இளம்பூரணம்-சூ 87
33. யாப்பருங்கலக் காரிகை-பக் 49
34. யாப்பருங்கலக் காரிகை-பக்-48
35. செந்தமிழ்-தொகுதி 21-மதுரைத் தமிழ்ச் சங்கம்
36. திருவாய்மொழி-(அப்பாவு முதலியார் பதிப்பு, 1865); (கிருஷ்ணமாசாரியார் பதிப்பு, 1928)
37. கவிதையும் இலக்கியமும்-அரவிந்தரின் கடிதங்கள்-3வது தொகுதி-(பம்பாய், 1949) பக் 202

## புராணக் கதைகளை ஆளும் முறை

காவியக் கவிஞர்களில் பலரும் அவ்வம்மொழிக்குரிய பழமையான புராணக் கதைகளையும் இதிகாசக் கதைகளையும் தம் பாடல்களில் ஏற்ற பெற்றி எடுத்தாண்டு பொருள் புலப்பாட்டினைத் தெளிவாக்குவது தொன்று தொட்டு வரும்முறை, பறவை யொன்றுக்கு அதன் சிறகுகள் எவ்வாறு உயரப் பறப்பதற்கு உதவுகின்றனவோ அவ்வாறே புராணக் கதைகள் கவிதை நயத்தை உயர்த்தக் கவிஞர்க்கு உதவுகின்றன என்பர். நீதி நூல்களிலும் கூட அவை இடம்பெறுவதைக் குறளில் காணுகின்றோம்.[1] சமயப் பாடல்களில் அச்சமயச் சார்பான புராணக் கதைகள் மிகுதியும் இடம்பெறுவது இயல்பே. நம்மாழ்வார் திருவாய்மொழியில் குறிப்பிடும் கதைகள் எவை? அவற்றை எவ்வாறு பயன்படுத்தித் தம் கவிதையைச் சுவையும் நயமும் உடையதாக்குகின்றார் என்று காணும் முயற்சியில் முதலாவதாகக் கண்ணன் எம்பெருமான் பால் அவர் கொண்ட ஈடுபாட்டைக் காண்போம்.

ஆழ்வாரின் திருவாய்மொழியில் மிகப் பலவாக அமைந்து முதலிடம் பெறுவது கண்ணபிரானின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை ஒட்டியனவாக உள்ள கதைகளேயாகும். ஒருசில திருவாய்மொழிகள் தனிப்பட்ட வகையில் முழுமையும் கண்ணன் செயல் பற்றியனவாகவே அமைந்துள்ளன.[2] வேறு சிலவற்றிலும் பெரும்பாலும் கண்ணன் அவதாரம் பற்றிய பகுதிகள் மிகுதியாகக் காணப் பெறுகின்றன.

### கண்ணன் அவதாரம்

இவ்அவதாரத் தொடர்பான செய்திகள் 146 இடங்களில் வருகின்றன. சில திரும்பத் திரும்ப வருவதால் மொத்தம் வரும் நிகழ்ச்சிகள் இருபத்தொன்பது ஆகின்றன. ஆய்க்குலம்

புக்குப் பிறர் காண்டலின்றி வளர்ந்தது, வெண்ணெய் களவு செய்து உரலிடை யாப்புண்டது, பசுமேய்த்தது, குடக்கூத் தாடியது, தூது சென்றது, பாண்டவர்க்காக அருச்சுனன் தேர்ப் பாகனுகியது முதலியன கண்ணனின் எளிமைத் தன்மையை அறிவிக்கும் செயல்களாம். இவற்றில் ஆழ்வார் பெரிதும் ஈடு பட்டுப் பாடுகின்ருர். ''மத்துறு கடைவெண்ணெய் களவினில் உரவிடை யாப்புண்டு, எத்திறம் உரவினெடு இணைந்திருந்து ஏங்கிய எளிவே? (1-3-1) என்பதில் கூறப்பெறும் நீர்மை ஆழ் வாரை ஆறுமாதம் மோகித்துக் கிடக்கும்படி செய்தது என்பர். அமரர்க்கும் காண்டற்கரிய பெரியோன் எளிய வெண்ணெய் களவு செய்தான்; தாயார் மார்பில் தாம்புகொண்டு கட்டப்பெற்று உரலொடு ஒருசமமாக உருளுமாறு நேர்ந்தது; அவன் எளிமையின் நீர்மை எத்திறம்! என்று ஆழ்வார் உருகுகின்ருர். ஒரு இரவில் ஒருத்தி மகனுய்ப் பிறந்தவாறும், பின் வேறு ஒருத்தி மகனுய் ஒளித்து வளர்ந்தவாறும், பாரதப் போரில் அன்புடையார் பொருட்டு வித்தகச் செயல் விளைத்து நின்ற மாயங்களும் எண்ணும் தோறும் அவை ஊடுபுக்கு ஆவியை உருக்கி உண் கின்றன என்று மீண்டும் ஒருகால் மோகிக்கின்ருர் ஆழ்வார்! இதனைத்

> ''தாயம்செறும் ஒரு நூற்றுவர் மங்க ஓரைவர்க்காய்த்
> தேசமறிய ஓர் சாரதியாய்ச் சென்று சேனையை
> நாசஞ் செய்திட்டு நடந்த நல்வார்த்தை'' (7-5-9)

என்று அழகுற இயம்புகின்ருர். இதில், தனிமையில் பணிவு காட்டியதன்று; நாடறியப் பணியாளனுய் நடந்துகொண்ட சீர்மை எடுத்து விளக்கப் பெறுகின்றது. 'புக்கநல் தேர்த்தனிப் பாகா' (8-5-8) என்பர் பின்னும். இவ்வாறே தன் சீர்மை பாராது அவன் தூது நடந்த தன்மையை வியந்து 'நாடுடை மன்னர்க்குத் தூது செல் நம்பி' (6-6-4), என்கிருர். அவனது இந் நீர்மை கண்டு தன் மகள் தன் பண்பு இழந்ததாகத் தாய் பேசுவது நயமுடையதன்றோ? 'ஆயர் கொழுந்தாய் அவரால் புடை யுண்ணும் மாயப்பிரான்' (1-7-3) என்றும் 'அன்னை புலம்பப் போய் அங்கு ஓர் ஆய்க்குலம் புக்கதும் காண்டலின்றி வளர்ந்து கஞ்சனை வஞ்சம் செய்ததும், (6-4-5) என்றும் வருவன அவன் பட்ட பாடுகளைத் தெரிவிக்கும்.

குழந்தைக் கண்ணனின் வீரத்தையும் வலிமையையும் விளக்கும் பல நிகழ்ச்சிகளையும் அங்கங்கே எடுத்து அமைத்து ஈடு

படுகின்றார் ஆழ்வார். (தாயாக வந்த பேயைப் பாலுறிஞ்சி உயிர் மாய்த்தது, சகடம் உதைத்தது, குருத்தொசித்தது, நாகம் காய்ந்தது, மருதிடை போயது, வேழ மருப்பை யொசித்தது, விளவுக்குக் கன்றெறிந்தது முதலியனவும் குறிக்கப் பெறுகின்றன.) இவற்றுள் பொய்ம்மைத் தாயின் நிலை உணர்ந்து அவளை மாய்த்த தெளிவும், ஐயத்திற்கிடமின்றி இருந்த கட்டிலின் சக்கரமே கொல்ல வந்த காலை அதனைத் தன்சிறு செங்காலால் உதைத்து வீழ்த்திய சிறு வீரச்செய்கையும், வெண்ணெய் களவு செய்து உண்டதற்காகத் தாய் கோல்கொண்டு மிரட்டக் கண்களில் நீர் மல்கப் பதுங்கி நின்ற நிலையும் ஆகிய மூன்றையும் ஒரு படத்தில் தீட்டினாற் போன்று ஆழ்வார் கவியமைக்கும் அழகு அருமையாக உள்ளது. அக்காட்சிகள் தன் உள்ளத்தை உருக்குவதாகப் பாடி நம் உள்ளத்தையும் உருக வைக்கின்றார் அவர்.

"பெய்யும் பூங்குழல் பேய்முலையுண்ட பிள்ளைத் தேற்றமும் பேர்ந்தோர் சூடிறச்
செய்ய பாத மொன்றால் செய்த நின் சிறுச் சேவகமும்
நெய்யுண் வார்த்தையுள் அன்னை கோல் கொள்ள நீ உன் தாமரைக் கண்கள் நீர் மல்க
பையவே நிலையும் வந்து என் நெஞ்சை உருக்குங்களே.
(5-10-3)

பின்னைக்காக எருது ஏர் தழுவியது; வெற்பை எடுத்து நின்று ஆயர் அடிசில் உண்டது, வாணன் ஆயிரம் தோள் துணித்தது, அமர்வென்று உடுப்பிணி நங்கை தோள் புணர்ந்தது முதலிய வற்றையும் ஈடுபாட்டுடன் பாடுகின்றார்.

'பேய்முலையுண்ட பிள்ளைத்தேற்றம்' என்று குறித்தது போன்றே வேறு ஒரு இடத்தில் 'பேய்ச்சி விட நஞ்சமுலை சுவைத்த மிகு ஞானச் சிறுகுழவி' (4-8-3) என்று அக்குழந்தையை - அதன் அறிவை வியந்து போற்றுகின்றார். மலையெடுத்து மாரி தடுத்து மாடுகளைக் காத்த செயலை

'மலையை எடுத்துக் கல்மாரி காத்துப் பசுநிரை தன்னைத்
தொலைவு தவிர்த்த பிரான்' (3-5-3)

என்று பாடுகின்றார். கல்மாரி ஆகையால் கல்மலை யெடுத்துக் காத்தான் போலும் எனக் கருதுமாறு அமைகின்றது பாடல்.

'குன்றமெடுத்த பிரான் அடியா ரொடும்
ஒன்றி நின்ற சடகோபன் (7-4-11), என்ற பகுதியைப் படிக்கும் போது இப்போது அச்செயல் நடைப்பெறுவது போலவும் நாமும் சடகோபரோடு அம்மலையடியில் ஒன்றி நிற்பதாகவும்

தோன்றுமாறு பாடல் அமையும் நயம் உணரத்தக்கது. 'அமர் வென்று உருப்பிணி நங்கை தோள் புணர்ந்தான்' என்ற அரிய செய்தியையும் திருவாய்மொழி நமக்குத் தருகின்றது. பின்ளேயை மணக்க எருது ஏழ்தழீஇ அவற்றின் எருத்தம் இறுத்ததாகவும் பாடுகின்ருர். தான் பெண்நிலேயடைந்து புருடோத்தமனேப் பாடுகையில் அவன் காதலே உணர்த்தும் இத்தகைய குறிப்புகள் பொருட் பொருத்தமுற அமைக்கப்பெறுகின்றன. அவ்வாறே உஷை என்ற பெண்ணிற்கு உதவ வாணனுடன் போரிட்டு அவன் ஆயிரம் தோள் துணித்த கதையும் இவர்க்கு வாய்ப்பாக அமைகின்றது. பெருவிடாய்ப்பட்டு உன்னே என்று கொல் சேர்வது என்று பேசுகையில் அவனே,

'உள் வன்மைதீர ஓராயிரம் தோள்துணித்த
புள்வல்லாய்' (3-8-9) என்று விளிக்கின்ருர். நீ நினேத்தால் பகையை வீழ்த்துவது அரிதல்ல என்பதும், நீ வர நினேத்தால் உனக்கு அதற்கேற்ற ஊர்தி உண்டு என்பதும் குறிப்பாகப் புலப்படுமாறு இத்தொடர் அமைதல் காணலாம்.

கண்ணன் மேன்மையும் சீர்மையும் விளங்குமாறு ஏழுலகுண்டு ஆலிலேயைச் சேர்ந்தது, கீதையருளியது, பார்த்தனுக்குப் பாசுபதம் பெற அருளியது, வைதிகன் பிள்ளேகளேக் கொண்டு கொடுத்தது, சிசுபாலனுக்குத் தன் தாள்பால் இடம் அளித்தது இன்னபிற செய்திகளே அங்கங்கே அமைத்துப் பாடுகின்ருர்.

''தீர்த்தன் உலகளந்த சேவடிமேல் பூந்தாமம் சிவன் முடிமேல் தான்கண்டு
பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை
போர்த்தும் ஒருவரால் பேசக் கிடந்ததே" (2-8-6)

என்று நயமுறப்பைந்துழாயான் பெருமை ஆழ்வரால் பேசப்பட்டுள்ளது. சிசுபாலனின் சொற்களின் கொடுமையையும், அவன் பகைமையின் ஆழத்தையும், அவனுக்கும் திருவடியில் இடம் தந்த பெருமையையும் தெளிவுறக் கீழ்வரும் பாடல்.

'கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வையும்
சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன், திருவடி
தாட்பால் அடைந்த தன்மை அறிவாரை அறிந்துமே (7-5-3)
என விளக்குகின்றது.

கேட்ட பிறர் செவி சுடுமென்ருல் அவன் செவி எவ்வாறு ஏற்கும்? தனி வசவுகளே பேசினுன் என்பதை 'ஏ' காரத்தால்

உணர்த்துகிறர். அவன் பழைமையான பகைவன்; வழிவழிப் பகையான அவனுக்கும் திருவடியில் இடமுண்டு என்பது என்ன நீர்மை! இவ்வாருகக் கண்ணன் பற்றிய செய்திகள் அவர் பாடலில் மிகுதியும் காணப்பெறுவது ஆழ்வார் கண்ணன்பால் கொண்ட காதலின் வடிவம் (மெய்யுரு) ஆனவர் என்பதனை உறுதிப் படுத்தும். அவள் தாய்ப்பேச்சில் 'உண்ணும்சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்' எம்பெருமான் என்றவள் தானேயன்ரே?

## இராமாவதாரம்

இராமபிரானின் அவதாரம் கண்ணனின் அவதாரத்திற்கு முன்னதாயினும் தமிழ்நாட்டில் அவ்வவதாரம் பற்றிய செய்திகள் பரவியது பின்னர் என்பர். பரிபாடல் நூலில் இராமாவதாரம் பற்றிய செய்திகள் இல்லை. எனினும் திருவாய்மொழியில் முப்பத்து ஒன்பது இடங்களில் இராமசரிதம் பற்றிய குறிப்புகள் வருகின்றன. பலகாலும் திரும்பத் திரும்ப வரும் செய்திகளைத் தொகுத்தோ மாயின் காணப்பெறும் நிகழ்ச்சிகள் ஒன்பதாகின்றன. 'கற்பார் இராமபிரானையன்றி மற்றும் கற்பரோ! (7-5-1) என்பது ஆழ்வார் வாக்கே. எனினும் அப்பதிகத்தின்கண்ணும் ஆழ்வார் வேறு அவ தாரங்களின் செயலைப்பற்றிச் சொல்லாமலில்லை. மானிடமாக வந்த அவதாரம் மூன்றில் இராமாவதாரம் முழுத்தன்மை உடையது என்ற காரணம் பற்றி மற்றவற்றைப் பற்றிக் கூறுவதும் இதனுள் அடக்கம் என்ற கருத்தில் அதனைக் கோடல் வேண்டும் போலும்!

இராமனுடைய வீரமும் ஆண்மைச் செயலும் இங்குப் பரக்கப் போற்றப் பெறுகின்றன. இலங்கை எரியூட்டியது, அதன் இறையையும் அரக்கர் குலத்தையும் நீருகுமாறு அம்பு தொட்டது, மராமரம் ஏழுருவ ஒரு வாளி கோத்தது, அரக்கியை மூக்கு ஈர்ந்தது, மாசினமாலி மாலிமான் என்பவர்படக் கனன்றது— இவை முதன்மையாகக் கூறப்பெறுபவை. இவற்றைத் தவிர தம்பிக்கு இலங்கை அருளியதும் (7-6-9), தசரதற்கு மகனுயதும் (10-1-8), அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் நற்பாலுக்கு உய்த்ததும் (7-5-1), கூனே சிதைய உண்டைவில் தெறித்ததும் (1-5-5) ஆகியவையும் குறிக்கப்பெற்றுள்ளன. 'கூனே சிதைய உண்டைவில் நிறத்தில் தெறித்தாய் கோவிந்தா!' என்பது ஒரு அரிய கருத்து. இது இராமன் மந்தரையின் மீது சிறுவயதில் வில்லால் எய்ததைக் குறிக்குமென்றே கொள்ள வேண்டும்.

ஏனெனில் 'வில்' அவனுக்கே உண்டு. 'கோவிந்தா' என வரும் பெயரைக் கொண்டு இது சாந்து நல்கியவளின் கூனினைக் கண்ணன் போக்கியதனைக் குறிப்பதாகக் கொள்வாரும் உண்டு. பின்னதனினும் முன்னதே வலியுடையதாகும். வில் குறிக்கப் பெறுவதனால் இராமன் அம்பு எய்ததும் கூன் சிதைவதற்காக என்று காரணத்தொடு கூறப்பெறுவது இராமனுக்கு ஏற்றமளிப்ப தாகவே அமைகின்றது. இராமன் நாட்டில் பரவிய புல் முதலிய யாவும் ஒரு காரணமும் இன்றியே அவனால் நன்மையடைந்தன என்று பின் கூறப்பெறுதற்கும் இது பொருத்தமானதாகஆகின்றது. தயரதற்கு மகன், நாட்டில் தம்பிக்கு அரசளித்த கதை நாடறியும்; காட்டிற்குச் சென்றும் தம்பிக்கே அரசளித்தான் என்ற நயமும் தம்பிக்கு விரிநீர் இலங்கையருளி' (7-6-9) என்ற தொடரால் போதரும். குலசேகர ஆழ்வாரும் 'இளையவர்கட்கருளுடையாய் இராகவனே'[3] என்பர். மாலியையும் மாலிமானையும் அழித்த செயல் இரு இடங்களிலும், அரக்கியை மூக்கீர்ந்த செயல் ஒரு பாடலிலும் குறிக்கப்பெறுகின்றன.

'மாறில் போரரக்கன் மதில் நீறெழச் செற்றுகந்த ஏறுசேவகன்' (6-1-10) இராவணனது மதிலை அழித்து மகிழ்ந்தான்; எப்போதும் உயரும் வீரமுடையவன்; என்பது பரிவால் துன்புற்றுத் தூது அனுப்புமொரு தலைவியின் பேச்சில் அமைகின்றது. இராமன் இலங்கை அழித்ததும், இராவணனைக் கொன்றதும் 'கொம்புபோல் சீதை பொருட்டு (4 2-8) என்றுபாடுகின்றார் ஆழ்வார். எனவே முன் ஒரு பெண்ணின் பொருட்டு அத்தகைய பெருமுயற்சி செய்த பெரு வீரன், என் பொருட்டு ஏன் அருள் காட்டக் கூடாது? என்ற கருத்துடனேயே இங்கு இத்தொடர்கள் அமைக்கப் பெறுவதாகக் கோடல் வேண்டும். இராமனது ஆற்றற் சிறப்புப் பலபடியாக அவனது வில்லாற்றலை எடுத்து விளக்குவதால் அறிவிக்கப் பெறு கின்றது. 'தென்னிலங்கை எரியெழச் செற்ற வில்லி' (3-6-2) என்றும்', மராமரம் பைந்தாள் 'ஏழுருவ ஒரு வாளி கோத்த வில்லா' (2-6-9) என்றும் வருவது காண்க. சுக்ரீவன் உன்பால் ஐயம் கொண்டான்; அதனை நீக்க நீ அம்பு எய்தாய்; ஐயம் கொள்ளாத எனக்கு உதவலாகாதா? என்ற பொருளைக் 'கணை யொன்றாலே ஏழ் மரமும் எய்த எம் கார்முகிலை' (9-1-2) என்று பாடுகையில் தெரிவிக்கின்றார். 'கார்முகில்' என்று அழைப்பதனால் அது உறுதிப் படுகின்றது. இலங்கை முழுவதையும் அழித்தது நீயாம்தானே என்ற கேள்வி எழுப்பின் அதற்கு ஆழ்வார் தரும்

விடை 'இலங்கை அரக்கர் குலம் முருடு தீர்த்த பிரான் '(2-7-10) என்பதே. கொடிய அரக்கரையே அழித்தான் என்பதும் அக்குலத்தவர்களுடைய முருடு-முரட்டுத்தனத்தையே-தீர்த்தான்; வீடணன் முதலியோரை அழிக்கவில்லை என்பதும் கருத்தாகக் கொள்ளவேண்டும். மேலும் இத்தொடரால் அவ்விறைவன் இவருடைய இந்திரியங்களினுடைய விபரீதப் போக்கினை மட்டும் போக்கினதாகவும் குறிபாற் பொருள் கொள்ளுமாறு பாடல் அமைகிறது.

## வாமனன் செயல்

கண்ணனுக்கு அடுத்தபடி இராமனைக் காட்டிலும் கூட வாமனனின் செயல்தான் ஆழ்வாரை மிகவும் கவர்ந்துள்ளது என அறிய முடிகிறது. இந்த ஒன்று பற்றி மட்டும் 45 இடங்களில் குறிப்புளது. வாமன வடிவின் அழகுபற்றியும், அக்கால்களின் திறம் குறித்தும், அவன் செய்த செயலின் தன்மை குறித்தும், வசிட்டன் சண்டாளன் என்ற வேறுபாடின்றி உலகத்து அனைவர் தலையிலும் அடியிட்ட சீலம் குறித்தும், ஆழ்வார் ஈடுபட்டுப் பாடுகின்றார். கவிதைச் சுவைபட வரும் அடிகளைக் காண்க. 'இவ்வுலக மூன்றும் உடன் நிறையச் சிறுமா மேனி நிமிர்த்த என் செந்தாமரைக்கண் திருக்குறளன்' (8-10-3) என்றும்,

'திருமா நீள் கழல் ஏழுலகும் தொழ
ஒருமாணிக் குறளாகி நிமிர்ந்த அக்கருமாணிக்கம்' (1-10-1)

என்றும், வருமிடங்களில் சிறுமா மேனி நிமிர்ந்த திருக்குறளன், 'மாணிக் குறளாகி நிமிர்ந்த கருமாணிக்கம்' என்ற தொடர்களின் அழகு அறியத் தக்கது. அவன் அடிகளைப் 'பெருநிலம் கடந்த நல்லடிப் போது' (1-3-10) 'மண் விண் முழுது அளந்த ஒண் தாமரை' (8-6-7) என்று பாராட்டுகின்றார். செயலைக் குறிக்கையில் 'மாய அம்மான்' (6-9-2), 'வன்கள்வன்' (6-1-11), 'ஞாலம் கொள்வான் குறளுருவாகிய வஞ்சனே' (3-8-2), 'மதியினால் 'குறள்மாணாய் உலகிரந்த கள்வற்கு (1-4-3) என்று அதன் மாயத்தன்மை சுட்டப் பெற்றுள்ளது. மற்றும் எல்லார்க்கும் எல்லாமும் வழங்கும் அருளாளனாகிய அவன் யாசிக்க அறியாது யாசகம் கேட்ட முறையையும், அவன் கால்கள் கிடைத்தவற்றை விரைவுடன் வாரிக்கொண்ட திறத்தையும் கவிதை நலம் சிறக்கப் பாடுகின்றார் ஆழ்வார். அவற்றை அறியாமைக் குறளாய் நிலமாவலி மூவடி என்று அறியாமை வஞ்சித்தாய் (2-3-3) என்றும்,

'குன்றேழ் பாரேழ் சூழ்கடல் ஞாலம் முழுஏழும்
நின்றே தாவிய நீள்கழல் ஆழித் திருமால்' (8-3-8)

என்றும், ஈரடிச் செயலை இரண்டிரணடு அடிகளால் அமைத்தலி னின்று அறியலாம். இச்செயலில் ஆழ்வாரது உள்ளம் மிகவும் ஈடுபட்டது; அதனை எண்ணி எண்ணிக் கரைகின்ரூர் என்பது தெளிவு.

'அடியை மூன்றை இரந்தவாறும் அங்கே நின்று ஆழ்கடலும்
மண்ணும் விண்ணும்
முடிய ஈரடியால் முடித்துக் கொண்ட முக்கியமும்
நொடியுமாறவை கேட்குந் தோறும் என் நெஞ்சம்
நின்தனக்கே கரைந்துகும்' (5-10-9)

என்ற வரிகள் அச்செயலைப் பிறர் கூறக் கேட்குந் தோறும் ஆழ்வார் உள்ளம் உருகிக் கரைந்தது என்பதற்குச் சிறந்த சான்ரும்.

நரசிங்கம்

மற்ரேர் அவதாரமான, நரனுகவும் சிங்கமாகவும் ஈருருவும் ஒருருவாய் நரசிங்கமென்ற பெயரில் தோன்றி, வலிமை சான்ற கொடிய இரணியனது அகத்தைத் தன் கூரிய நகங்களாற் பிளந்து அவனுடைய மகன் பிரகலாதற்கு அருளிய செய்கையை ஆழ்வார் 14 இடங்களில் பாடுகின்ரூர். தந்தையின்பால் சீற்றம்; தனயன் பால் அன்பு—இரண்டும் ஒருசேர அமைந்த தன்மையை இவ்வாறு பாடுகின்ரூர்.

'ஒரு மூர்த்தியாய்ச் சீற்றத்தோடு அருள்பெற்றவன் அடிக்
கீழ்புக நின்ற செங்கண் மால்' (3-6-6)

சீற்றத்தோடு இருக்கையில் அருள் பெற்றவன் பிரகலாதன்; அவன் தன் அடிக்கீழ் புகுமாறு நின்றவன் செங்கண்மால் என்கின்ரூர். மனித வடிவமும் விலங்கு வடிவமும் சேர்ந்ததற் கேற்பப் பண்பும் இரண்டாக இணைந்து நின்றது என்னுமாறு அமைகின்றது பாடல். கண்ணின் சிவப்பு இரணியன்பால் கொண்ட சீற்றத்தாலும் ஆகலாம்; பிரகலாதன்பால் கொண்ட அருளாலும் ஆகலாம். இவ்வாறு செய்ய நின்றது அவனது 'மால்' தன்மையாலேயே ஆம். இச்செயலை வேறு ஒரு பாடலில் ஈடுபாட்டுடன் எடுத்துரைத்து அவன் பெருமையை ஆராய்வது

அருமை என்று முடிக்கின்றார். எங்குமுளன் கண்ணன் என்றான் மகன்; அவனைக் காய்ந்து இங்கு உண்டா என்று அவன் தன் மாளிகைத் தூணைப் புடைப்ப அன்று அவ்விடத்து அப்பொழுதே அவன் வீயத் தோன்றினான் சிங்கப்பிரான். அன்பன் சொல் பொய்யாகாமலும், வரம் பெற்றவன் வரத்திற்கு மாறின்றியும் அந்திப்பொழுதில் நகத்தால் இரணியன் ஆகம் பிளந்து அவன் மகனுக்கு அருளினான். (2-8-9) அத்தகையது அவன் சீர்மை என்று வியக்கின்றார்.

அவனை இவ்வாறு கொன்றது சரியா என்று வாதிடும் வல்லார்க்கு உண்மை அறிவிப்பது போன்று,

என் நெஞ்சத் துள்ளிருந்து இருந்தமிழ் நூல் இவை மொழிந்து
வன் நெஞ்சத் திரணியனை மார்விடந்த வாட்டாற்றான்
(10-6-4)

என்கின்றார்.

அவனது வன்நெஞ்சம்; அன்பு நெஞ்சம் அவனுக்கு இருப்பிட மாகின்றது. அன்னோர்க்கு அவன் அருள் தானாக வருகின்றது என்பது கருத்து. மற்றும்,

'உன்னைச் சிந்தையினால் இகழ்ந்த இரணியன் அகல்மார்வம் கீண்ட என்
முன்னைக் கோளரியே (2-6-6)

என்று பாடுகின்ற பகுதிக்கு ஒரு சுவையான பொருளை ஈட்டின் உரையாசிரியர் சுட்டுகின்றார். அது சுவைத்து இன்புறத்தக்கது. மலைக்கும் மலைக்கும் உள்ள வேறுபாடு தோன்ற ஒரு மலையைத் 'திருமாலிருஞ் சோலை மலை' என்று சொல்ல, இறைவன் இவன் என் மலையைச் சொன்னான் என்று ஏறிட்டுக் கொண்டு வந்து அருள் புரிபவன். இங்கும் இரணியன் தன்னை இகழ்ந்தது உளத்தொடு பட்டதா? என்று அறிவதற்காகவே அவன் மார்வம் கீண்டு நோக்கியதாகவும், அது உளத்தொடு பட்டதன்றாயின் அவனையும் மன்னிக்கும் இயல்பினனே என்பதையும் உய்த்துணரு மாறு பாடல் செய்வது நயமுடையதன்றோ? நெஞ்சினாலும் இகழ்ந் தவனாதலின் அவன் அறிவுற்றான் என்பதாம். அவனைக்கொன்றதும் தமக்காகச் செய்தது என எண்ணி 'என் கோளரி' என்று கூறு கின்றார். இனி மற்றோர் இடத்தில் பிரிவால் வாடும் தலைமகள் புலம்பும் தன்மையை அவள் தாய் கூறுகையில் அவனைத் தேடும் தாய் 'அன்று தூணில் அன்பன் கூறியவாறே வந்த அவன்,

இன்று தனக்கும் ஏன் அருளலாகாது?' என்ற எண்ணத்தினுல் 'நாடிநாடி நரசிங்கா' (2-4-1) என்று கூப்பிடுவதாகப் பேசுகின்ருர். மற்ருெரு தாய் தன் மகளின் ஆர்ருமை மிகுதியை அரங்கத்து அண்ணலிடம் எடுத்துப் பேசுகையில் 'அவன் எப்பொழுதும் எங்கும் வரக்கூடுமென்ற நம்பிக்கையில் பெரிய நிலத்தைக் கையால் தடவிப் பார்க்கின்ருள்' என்ற பொருளில் 'இரு நிலம் கைதுழாவிருக்கும்' (7-2-1) என்று பேசுகின்ருர். இவ்வாறு இக் கதைகள்' பாடலில் அமைந்த உணர்வை மிகுவிப்பதற்கு உதவி யாக அமைகின்றன.

## வராகம்

வராகம் அழகுடையதன்று. பலராலும் விரும்பத்தகாத ஒன்று. கருமம் காரணமாகவன்றிக் கருணை காரணமாக அவதரிக் கையில் அவன் எவ்வுருவும், வேண்டுமாற்ருல் ஆவான். அதனுல் கேழலாகவும் ஆனுன். அக்கேழல் நம்மாழ்வார் பாடலில் அழகுடையதாக அமைகின்றது. உலகை இடந்து எடுத்துத் தன் கோட்டில் கொண்டு நின்ற கேழலின் காட்சியைக் கடைசித் திருவாய் மொழியில்,

> 'கோலவராக மொன்ருய் நிலம் கோட்டிடைக் கொண்ட
> எந்தாய்' (10-10-7)

என்று பாடுகின்ருர். அத்தகையோன் தன்னையும் ஏற்றுக்கொள் ளுதலில் தடையிராது என்பது கருத்தாகலாம். ஆகையாலேயே எந்தாய்' என்று உறவையும் நினைவூட்டுகின்ருர். இவர் தமது திருவிருத்தத்தின் கடைசிக்கு முன் பாடலிலும் இவ்வாறே வராக அவதாரத்தைக் கூறி அவ்வுருவமே ஞானப்பிரான் என்றும், அஃதல்லால் தான் கண்ட நல்லது இல்லை' என்றும் அறுதியிட்டு உரைப்பதும் ஈண்டு நினைவு கொளற்குரியதாகும். வராகமாய்க் கொணர்ந்த நிலமகளை அவன் மணந்து கொண்டதாகக் கூறுவ துண்டு. தன் காதலியைப் பெறவே அவன் கேழலாய்ச் சென்று நிலத்தினை அண்ட பத்தியினின்று மீட்டு வந்தான். அத்தகை யோன் இன்று வடிவெடுக்க வேண்டா; தேடிச் செல்ல வேண்டா; இங்குள்ள தனக்கு அருளலாகாதா என்ற கருத்தில் ஒரு பெண் மகள் புலம்புகையில் 'நின் திரு எயிற்றில் இடந்து நீ கொண்ட நில மகள் கேள்வனே' (7-2-9) என்று கூறுவதாகப் பாடுகின்ருர். தனக்காக மட்டுமன்று; அச்செயல் செய்தது உலக நன்மையின் பொருட்டு என்ற கருத்துப் புலப்பட 'பெருநிலம் எடுத்த பேராளா!'

(8-1-2) என்றும் பாடுகின்றார். உன்பால் வேண்டிக் கொள்ளாத நிலத்தைச் சென்று மீட்டு வந்தாய்; 'காணுமாறு அருளாய்' என்று நான் கலங்கிக் கேட்கவும் எனக்கு அப்பேறு கிட்டாதா என்ற கருத்தும் அப்பாடலில் அமைந்துள்ளது. கேழலின் செயல்பற்றி வருமிடங்கள் பதினொன்று உள்ளன.

## வேறு அவதாரங்கள்

மேற் குறித்த ஐந்து அவதாரங்கள் தவிர ஆழ்வார் பெயரளவில் குறிப்பிடும் மற்ற அவதாரங்கள் ஆமை மீன், மா (ஹயக்ரீவன்) என்ற மூன்றுமாம். 'கற்கியாம் இன்னம் கார் வண்ணனே' (5·1-10) என்பதனால் இனி வருகின்றதாகக் கூறப் பெறும் அவதாரமும் அவரால் குறிக்கப் பெறுகின்றது. கண்ணனைப் பற்றிப் பேசுகையில் 'இராமனையும் உவர்த்தலை' (10-3-10)-இராமனுடன் நீவிரும்பிச் செல்லுதலில்லை' என்று கூறுகையில் பலராமன் குறிக்கப்பெறுகின்றான். மற்றும் பரசுராமன் இருபத்தொரு தலைமுறை சூரியகுல மன்னர்களை அழித்த வீரச்செயலைக் கூறி 'இருபத்தோர்கால் அரசுகளை வென்றி நீள் மழுவா' (6-2-10) என்று அவனைப் புகழ்வதையும் காணுகின்றோம். அன்னம் பற்றிய குறிப்புக் காணப்பெறவில்லை.

## அலைகடல் கடைந்தது

திருமால் பாற் கடலைக் கடைந்த நிகழ்ச்சியை ஆழ்வார் பதினைந்து இடங்களில் குறிப்பிட்டுப் பாடுகின்றார். ஆனால் ஒரு இடத்திலேனும் பாற்கடல் என்று குறிக்கவில்லை. 'ஆழ்கடலைக் கடைந்த துப்பனே'(4·7-5)'அலைகடல் கடைந்த அப்பனே'(8-1-1) 'குரைகடல் கடைந்த கோல மாணிக்கமே' (8-4·4) என்ற தொடர்களால் அவன் வலிமையையும் அச்செயலால் அவன் பெற்ற ஏற்றத்தையும் குறிப்பதாகக் கொள்ளலாம். கடல் கடைந்தது அமரர் பொருட்டே என்றும், அரவம் பிணைத்துக் குன்று நாட்டி,அச்செயல் செய்யப் பெற்றதெனவும் குறிக்கின்றார். அமுதம் பெற்றது அதன் சிறப்பு. அதனை நயம் தோன்ற 'அலைகடல் கடைந்த ஆரமுதே' (7-2-5) என்று கடல் கடைந்து அமுது தந்த அரிய அமுது என்று பாடுகின்றார். இச் செயல் அமரர் தொழுதெழச் செய்யப் பெற்றது; பின் அமுதும் அவர்க்கே ஆயிற்று என்றும் பாடுகின்றார். நல்லவர்க்கு உதவ எத்தகைய செயலும் செய்பவன் என்பது இதன்

கருத்து. தான் தாழ நிற்பதை அவன் பெருமையாகக் கருதுவான். அதனால்தான் 'அமரர்க்கு அமுதீந்த ஆயர் கொழுந்து' (1 7-9) என்றும் போற்றியுரைக்கின்றார் ஆழ்வார்.

## ஆனை இடர் கடிந்தது

கஜேந்திரன் என்னும் யானைக்கு உதவப் பரம பதத்தினின்று திருமால் ஓடிவந்து அதனை முதலை வாயினின்றும் காத்து, யானை முதலை ஆகிய இரண்டிற்கும் காட்சி தந்தார். அவற்றிற்கு நற்பேறு நல்கினன் என்பது பலகாலும் கூறப்பெறும் கதை. இதனைப் படிப்பார் கண்முன் இக்காட்சி தோன்றுமாறு ஆழ்வார் விளக்க மாக அமைக்கின்றார். எட்டு இடங்களில் இது பற்றிய வருணனை வருகின்றது. சோலையிலமைந்த பொய்கையின் இயல்பும் அவதிப் படும் யானை தும்பிக்கை தூக்கி நிற்கும் தன்மையும் அருள் செய் தவன் கார்முகில் இயல்பினன்; வண்ணத்தன் என்ற பண்பும் புலப் படுமாறு அமைகின்றது பாடல்.

"மொய்ம்மாம் பூம்பொழில் பொய்கை முதலைச் சிறைப்பட்டு நின்ற
கைம்மாவுக்கு அருள் செய்த கார்முகில்போல் வண்ணன் (3-5-1)

களிற்றுக்கு அருள் செய்தற்குப் பரம பதத்தினின்று அரை குலையத் தலைகுலைய விரைந்து ஓடி வந்தான் என்றும், வந்து தன் ஆடையை வாயில் ஒற்றித் துன்புற்ற யானைக்கு வேது தந்தான் என்றும் புராணிகர்கள் பேசுவதுண்டு.

தான் இருந்த இடத்தே இருந்து கொண்டே தன் சங்கல்பத் தால்-ஞானமே படையாக யானையைக் காத்திருக்க முடியாதா? ஓடி வருவானேன்? என்ற கேள்வி எழுகின்றது. அதற்குரிய விடையை ஆழ்வார் பாடல் தருகின்றது என்று காஞ்சிபுரம் மகாவித்வான் அண்ணங்கராச்சாரியார் எடுத்துக் காட்டுவது[5] சாலவும் பொருத்த முடையதாகவுள்ளது. பாடல்களில் 'தொழுங்காதல் களிறு அளிப்பான்' (3-1-9) என்றும் 'தன் நீள் கழல் ஏத்திய ஆனையின் நெஞ்சிடர் தீர்த்தபிரான்' (7.10.8) என்றும் வருகின்றது. ஆனையின் விருப்பம் யாது? அதன் இடர் யாது? இடர் முதலை வாய்ப்பட்டது. அதனால் அது உயிர் இழக்க நேருமல்லவா? அதுவே இடர் என்றாலும் இங்கு யானை அடைந்த இடர் அதினினும் இன்னும் பெரியது. அது 'தொழும் காதல் களிறு' ஆதலின் தான் பறித்த மலர்களை இறைவன் அடியிணையில் இடமுடியவில்லையே என்று

தன் விருப்பம் நிறைவேருமையால் யானை பேரிடர் உற்றது. அந்த இடர் நீங்க வேண்டுமென்ருல் அதற்காக அவன் அங்கு வந்துதானே ஆகவேண்டும். அவ்யானையின் காதல் நிறைவேறுதற்காகவே இறைவன் அங்கு ஓடி வந்தான். அவன் பரம பதத்திலேயே தங்கி விட்டால் இது கூடாதன்ருே? முதலை வாயினின்று மீட்டல் வேண்டுமானுல் வேறு வகையிலும் இயன்றிருக்கலாம். அப்படி அவன் வராதிருந்தால் அது 'இறைவன் பக்தர்களுக்காகவே உள்ளான்' என்ற அவன் பண்புக்கு இழுக்காதலும் கூடும். அவ் விழுக்கு நேராதவாறு அவன் நடந்து கொண்டான். இதனைத்தான் ஆழ்வார்,

''மழுங்காத ஞானமே படையாக மலர் உலகில் தொழும்பா யார்க்கு அளித்தால், உன் சுடர்ச் சோதி மறை யாதே? (3-1-9)'' என்ற வினவின் மூலம் காட்டுகின்ருர். இக்கருத் தை இராமாநுசரும் தம் பகவத்கீதை உரையில் அழகுற அமைத் துள்ளார் என்று காட்டுவர்.[6] இது இன்பமளிப்பதாயுள்ளது. இச் சிறப்பு நோக்கியே ஆழ்வாரும் அவனைப் 'பூந்தண் புனல் பொய்கை யானை இடர் கடிந்த என் தனி நாயகன்' (2.8.2) என்று பாராட்டி ஒப்பற்ற தலைமையை அவனுக்கு அளிக்கின்ருர். 'ஆதி மூலமே' என்று அலறிய யானைக்கு ஆதியாகவும் மூலமாகவும இருக்கின்ற அவனே வந்து அருளினன் என்பதாம்.

### மற்ற கதைகள்

மார்க்கண்டேயனுக்கு அருளியதுபற்றி மூன்று இடங்களில் வருகின்றது. நாம் சிவபிரானே மார்க்கண்டேயனைக் காப்பாற்றிய தாகப் பல காலும் கேட்டிருக்கின்ருேம். ஆழ்வாரும் அதனைக் கேட் டிருக்கின்ருர் போலும். அதனுல்,

புக்கடி மையினுல் தன்னைக் கண்ட
 மார்க்கண்டேயன் அவனை,
நக்கபிரானும் அன்று உய்யக் கொண்டது
 நாராயணன் அருளே (4.10.8)

என்று முடிக்கின்ருர். நாராயணன் அருளாலேயே சிவபெருமானுல் அதனைச் செய்ய முடிந்தது என்பது அவர் கருத்து. மற்ற இரு இடங்களும் இதனையேதான் தெரிவிக்கின்றன.

சிவபெருமான் திரிபுரம் எரித்த செயலையும் ஆழ்வார் குறிப்பிடு கின்ருர். மற்ற தெய்வங்கள் யாவற்றிற்கும் கூடத் திருமாலே

அந்தர்யாமியாக இருப்பதாக அவர் கொள்வதால் திரிபுரம் எரித்தது திருமாலின் செயலே என்று பாடுகின்றார். (1-1-8) அதனை 'வெள்ளநீர்ச் சடையானும் நின்னிடை வேறலாமை விளங்க நின்றதும்' (5-10) என்றும் விளக்கி உரைப்பர். வேறு இடங்களில் சிவ பெருமானைக் குறிக்கையில்,

'நுண்ணுணர்வின் நீல்ஆர் கண்டத்து அம்மான்' (6-10-8)

என்றும் 'மாகத்து இளமதியம்சேரும் சடையானைப் பாகத்து வைத்தான் (10-4-6) என்றும், நீலகண்டம் பெற்றமை, இளமதியம் உற்றமை இரண்டையும் குறிப்பிடுவர். தன் அடி சேர்ந்த இளமதியத்திற்குச் சிவபெருமான் முடியில் இடமளித்தான்; அவன்தன்னை நினைக்க அவனுக்குத் தன் வலப்பாகத்தில் இடமளித்தான் பரமன் என்பது ஆழ்வார் எண்ணம். அதனால்தான் 'வலத்தனன் திரிபுரமெரித்தவன்' (1-3-9) என்று பாடுகின்றார்.

சிவபெருமானைப் பற்றிய இன்னொரு கதையையும் திருவாய்மொழியில் மூன்று இடங்களில் நாம் காணுகின்றோம். இம்மூன்றும் பரோபதேசம் செய்யும் திருவாய் மொழிகளாகவும், அவற்றில் இரண்டு திருமாலுக்குப் பரத்துவம் கூறும் பகுதிகளாகவும் உள்ளன. எனவே அப்பாடல்களில் சிவபெருமானிலும் திருமாலின் உயர்வு தோன்றப் பேசுதலில் வியப்பில்லை யன்றோ.

'மாபாவம் விட அரற்குப் பிச்சை பெய்கோபால கோளரி ஏறு' (2-2-2) — அரனது பாவம் பிரமனது தலையை அறுத்ததால் வந்தது. அப்பாவம் நீங்க -அவன் கையில் இருந்த பிரமனது கபாலம் நீங்க- அரிபிச்சையிட்டதாகக் கதை. அதுவே இங்குக் குறிக்கப் பெறுவது. இதனையே பின்னர் அர்ச்சையில் நாராயணனது பரத்துவம் பேசுகையில்,

''பேசநின்ற சிவனுக்கும் பிரமன்தனக்கும் பிறர்க்கும்
நாயகன்அவனே; கபாலநன் மோக்கத்துக்கண்டு கொள்மின்''
(4-10-4)

என்று கபால மோக்ஷம் திருமாலின் தலைமையை நிலைநாட்டும் என்று பாடுகின்றார். பின்னர் இறுதியில் திருவனந்தபுர இறைவனைப் பாடி அவனைச் சென்றடையுமாறு உபதேசிக்கையில் மிகச் சுருக்கமாக 'குமரனார் தாதை துன்பம் துடைத்த கோவிந்தனார்'

(10.2:6) என்றும், அவரே 'உலகுயர் தேவும் மற்றும் படைத்த எம் பரம மூர்த்தி' (10.2 7) என்றும் பாடிச் செல்கின்றார். சமய நெறியில் செல்லுகின்ற எவரும் ஒரே தெய்வத்திடம் நிலையாகப் பற்றுதல் கொள்வதே சாலச் சிறந்தது. சமய நெறி வற்புறுத்தும் ஸ்ரீராம கிருஷ்ண பரம ஹம்சர் போன்றவரும் இதனை வற்புறுத்துவர். 'பல இடங்களில் கிணறு தோண்டி நீர் பெறாது போதற்கு மாறாக ஒரே இடத்தில் ஆழத் தோண்டுதல் நீர் பெற நல்வழி'[7] என்ற உவமை மூலம் இதனை வற்புறுத்துவர் அவர். அம் முறையை ஒட்டியதே ஆழ்வார் போக்கு. அதனாலேயே மற்ற தெய்வங்கட்கு நாராயணன் அந்தர்யாமியாகஉள்ளதாகப்பேசுகின்றார். இதுஏற்புடையதேயாகும். பிற தெய்வங்களை இகழ்ந்து பேசாமை, அருவராமை ஒன்றுமே வேண்டுவது. அக்குறை ஆழ்வார்பால் யாண்டும் காணாமை அறியத்தக்கது. 'குமரனார்தாதை' என்றும், நுண்ணுணர்வின் அம்மான் என்றும் மதிப்புக்குறைவின்றிப் பேசியிருத்தலும் காண்க. இவை தவிர மற்றைக் கடவுளவர் மூவரும் கழல்பணிந்து ஏத்துவ தாயும், திருமால் தேவாசுரம் செற்றதாயும், சிவன், மகன், அங்கி போர் தொலையப் புள்ளைக் கடாவியதாகவும் வேறு சில குறிப்பு களும் திருவாய் மொழியில் வருகின்றன.

தத்துவக் கருத்தைக் கூறுகையில் அதனைப் படிப்பவர் மனத்தில் நன்கு பதியச் செய்வதற்கு ஆழ்வார் புராணக் கதைக் குறிப்புக்களைப் பயன்படுத்தும் முறையைக் காண்போம். இவ்வுலகம் முழுவதும் இறைவனுடைய செல்வம் (விபூதி) என்பது ஒரு உண்மை. அதனை வரட்சியான கருத்தாகக் கூறாமல் இறைவனைப் பிரிந்து ஆற்றாமையால் வருந்தும் ஒரு தலைவியின் பேச்சில் அக் கருத்துப் புலப்படுமாறு அமைக்கப் பெறுகின்றது. இவ்வுலகத்துப் பல பொருள்களையும் பார்த்து அவள் அவற்றை அவனோடு தொடர் புடையனவாகக் கருதுகின்றாள் என்கின்றார். மண்ணைக் கையால் துழாவிப் பார்த்து 'இது வாமனன் மண்' என்கின்றாளாம். செல் கின்ற ஆனிளங் கன்றுகளைப் பார்த்து அவற்றைத் தழுவிக் கொண்டு 'இவை கோவிந்தன் மேய்த்தன' என்கின்றாளாம் ஆய்ச்சியர்பால் வெண்ணெய் கண்டால் 'ஈது அவனுண்ட வெண்ணெய்' என்கின்றாளாம். அழகுடைய பலவண்ண வடிவங் களைக் கண்டால் ஒருசார் ஒப்புமை கருதி 'உலகளந்தான்' என்று கூறிக் கொண்டு குதூகலத்துடன் துள்ளுகின்றாளாம். பெரும் புலத்தில் ஆனிரைகள் மேய்தல் கண்டால் அங்குக் கண்ணபிரான் இருப்பான்என்று அவற்றின் பின் செல்கின்றாளாம். இவள்தெளிந்த

நிலையிலும், மயங்கிய நிலையிலும் மாயோன்பால் ஈடுபட்ட தன்மை யளாக உள்ளாள் என்று எடுத்துக் கூறும்போது இவளுடைய மாயோன் ஈடுபாட்டை மட்டுமன்றி 'இவ்வுலகு அவனது உடைமை' என்ற உண்மையை நம்மையுமறியாதே நம்முள்ளம் உணர்ந்துவிடு கின்றது. ஒப்பற்ற அழகுடனும் உணர்ச்சி வெளிப்பாட்டுடனும் அமைந்துள்ளன இச் செய்திகளைத் தரும் திருவாய்மொழிப் பாடல்கள் (4-4).

இவ்வாறே இன்னொரு திருவாய்மொழியில் இறைவனைத் தன்னை அநுகரித்து, அவனைப் பிரிந்த தன் ஆற்றாமையைத் தரிக்கும் ஒரு பெண்ணின் பேச்சில் 'எல்லாம் அவன் மயம்; 'இறைவனும் உயிர்களும் ஒன்றே' என்ற கருத்து மிளிர்வதைக் காணலாம். தன் மகளின் நிலைமையை ஒரு தாய் கூறுவதாக ஆழ்வார் பாடுகின்றார். கடல்ஞாலம் அளந்துகொண்ட அது தன் செயல் என்றும், அதனை அண்ட பித்தியினின்றும் கீண்டதும், உண்டதும் தானே என்றும் அவள் கூறுவதாகப் பாடுகின்றார்' மலை எடுத்ததும், அசுரரைக் கொன்றதும், திறம் காட்டி ஐவரைக் காத்ததும், கடல் கடைந்ததும் தன் செயல்கள்தாம் என்றும் தன் மகள் புலம்புவதாகத் தாய் கூறுகின்றாள். கடல் வண்ணன் அவள் மீது ஆவேசம் கொண்டதுதான் காரணமோ என்கின்றாள் அவள்.

மலை ஏந்தியதும், பின்னையை மணக்க ஏறுகள் செற்றதும், இளைஞனாய் ஆன்கன்று மேய்த்ததும், பின் வளர்ந்த நிலையில் ஆநிரை காத்ததும் தான் என்றும், தானே கூட்டமான ஆயர் கட்குத் தலைவன் என்றும், அவள் அலற்றுகின்றாளாம். தென் னிலங்கை செற்றதும் தானே என்கின்றாள். இவ்வாறு வருகின்ற இடங்களில் ஆழ்வார் பெண்பாவனையில் கடவுளின் பல அவதாரங்களாகவும் தன்னைக் கருதிக் கொண்டு புலற்றுவதாகப் பாடுதல் காணப்பெறுகின்றது இப்பாடல் இறைவனைப் பற்றிய ஒருண்மையை—எல்லாமாக அவன் உள்ள தன்மையை— விளக்கும். அதற்குப் புராணக் கதைகள் உதவியாக அமைதலைக் காணுகின்றோம்.

ஆழ்வார் தனிக் கதைகளையன்றி வேறு வேறு கதைகளை ஒரு சேர இணைத்து அழகுறப்பாடுவதையும் காண்கின்றோம். குன்ற மேந்திக் குளிர்மழை காத்ததும், அன்று ஞாலம் அளந்ததும் ஒன்றாக வருகின்றன. மீண்டும் ஆநிரை காத்ததும், உலகம்

தாவியதும் ஒன்று சேருகின்றன. இலங்கை செற்றதும், குறளுரு வானதும் கூடியமைகின்றன. இரணியன் மார்விடந்ததும், பாண்டவர்க்காகப் படை தொட்டதும்; அவ்வாறே மராமரம் ஏழுருவ ஒரு அம்பு கோத்ததும், மரமிரண்டின் நடுவே போனதும் ஒரு பாடலில் இடம் பெறுகின்றன. இவ்வாறு இறைவன் பல அவதாரங்களில் செய்த பல செயல்களைச் சொல்லிச் சொல்லி, அவன் பண்புகளை நினைந்து நினைந்து அநுபவித்து இன்பம் கண்டார் கவிஞர் என்பது அறியற்பாற்று. அக்கதைகளும் பாடல்களில் அமைந்து அவற்றை வளமுடையனவாகவும் நயம் நிறைந்தனவாகவும் ஆக்குகின்றன என்பது தெளிவு. அச்சுவை கருதியே ஆழ்வாரும் தம் பாடல்களைத் 'தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்' (9-4-9) என்பாராயினர் போலும்.

## அடிக்குறிப்புகள்

1. திருக்குறள் 25.
2. திருவாய்மொழி(6-4), (9-9), (10-3).
3. பெருமாள் திருமொழி—குலசேகர ஆழ்வார்—(8-9).
4. திருவிருத்தம்—நம்மாழ்வார் பா .(99).
5. அண்ணங்கராச்சாரிய சுவாமிகள்—ஒரு சிறு புத்தகம்.
6. பகவத்கீதை—அத்தியாயம் 4–8.
7. ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் – (இராமகிருஷ்ண மடம், 1940) 529, 530.

# ஒரு சார் ஒப்பாய்வு

ஒரு புலவனுக்கும் அவனுக்கு முன்னும் பின்னும் வாழ்ந்த புலவர்க்கும் உள்ள தொடர்பை—உறவு முறையை—நாம் தெரிந்து கொள்வது ·ஆராய்ந்து உணர்வது—அப்புலவனுடைய தகுதியை அறுதியிடுவதற்கு நமக்குப் பெரிதும் உதவும். அப்புலவனின் நூலில் காணும் கருத்துக்கள், சொற்றொடர் ஆட்சி, அமைப்பு—இவற்றினை ஒத்த பகுதிகள் (Similarities) இணையான பகுதிகள் (Parallels) மற்ற புலவர் நூல்களில் கண்டு அப்புலவோர் இடையே உள்ள தொடர்பை நிச்சயித்தல் வேண்டும்; இவ்வாறு செய்யும் போது மிக எச்சரிக்கையாக ஆய்தல் வேண்டும்; மேற்போக்காக வும் தற்செயலாகவும் அமைந்துள்ள சில ஒப்புமைகளைக் கண்டு ஒரு முடிவு செய்தல் ஆகாது. மற்றும் இரு புலவர்களும் வேறு ஏதேனும் ஒரு மூல நூலிலிருந்து கருத்தையோ சொற்களையோ எடுத்துக் கொண்டிருக்கின்றனரா என்பதையும் நன்கு தெளிதல் வேண்டும். இதனை "இலக்கியக் கொள்கை" என்ற நூலின் ஆசிரியர்கள் கீழ்க் கண்டவாறு தெரிவிப்பார்கள்.[1]

"இணைகள் என்பன பிறவற்றினின்று தனித்த இணைகளாக இருக்க வேண்டும். அதாவது அவை ஒரு பொது மூலத்திலிருந்து வந்திருக்க முடியாது என்று உறுதி கொள்ளுமாறு அமைந்திருக்க வேண்டும். அம்முடிவுக்கு வரவேண்டுமானல் ஆய்வாளனுக்குப் பரந்த இலக்கியப் புலமை இருக்க வேண்டும்; அல்லது அவை தனிப் பட்ட சொல்லாகவோ நோக்கமாகவோ அல்லாமல் பொதுவாகக் காணப்பெருத ஒன்றியிணைந்த இணைகளாக இருத்தல் வேண்டும்."

ஒற்றுமைப் பகுதிகளை ஒன்று சேர்ப்பது முதற்பணி; அதனை நன்கு அலசிப் பார்த்து ஆசிரியர் தம் தொடர்பு பற்றி முடிவு

கட்டுதல் வேண்டும் என்பதனை மனத்தில் கொண்டு நம்மாழ்வர் கவிதையான திருவாய்மொழிக்கும் அவர்க்கு முன்னும் அவர் காலத்தை ஒட்டியும் வாழ்ந்த புலவர்களின் நூல்கட்கும் உள்ள ஒற்றுமைப் பகுதிகளை ஆராய்வோம்.

ஒப்புமைகளைக் கருத்து ஒற்றுமை, சொற்றொடர் ஒப்புமை இவ்விரண்டின் கூட்டு அமைப்பு முறை என்ற பிரிவுகளில் காணலாம். முன் நூலில் ஒரு கருத்து அமைந்திருக்க ஆழ்வார் பாடலிலும் அதே கருத்து அதே மாதிரியாகவோ சிறிது மாற்றத்துடனே அமைந்திருக்குமானல் முன்னவரைப் பார்த்துத்தான் பின்னவர் எழுதியிருக்க வேண்டுமென்ற நியதி இல்லை. சொல்லும் முறையின் அடிப்படை கொண்டே நாம் அதனைத் தீர்மானித்தல் வேண்டும். காலப்போக்கில் ஏற்பட்ட கருத்து மாறுதல்களையும் இவ்வொப்புமை ஆராய்ச்சியால் நாம் அறிந்து கோடல் கூடும் அதே மாதிரியானதுதான் பிற்கால வளர்ச்சியும்.

## தொல்காப்பியம்

தொல்காப்பியம் தமிழிலுள்ள மிகப் பழைய இலக்கண நூல் பல புலவர்களும் தொல்காப்பிய இலக்கணத்தை வரிச் சட்டமாகக் கொண்டே பெரும்பாலும் தங்கள் நூல்களை யாத்திருக்கின்றனர். சிலமுறைகளில் அவ்விதிகட்கு மாறுபட்டும் சென்றுள்ளனர். தொல். அகப் பொருள் இலக்கணத்திற்கும், திருவாய்மொழியிற் காணும் அகப்பொருள் சார்பான பாடல்கட்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை முன்னொரு பகுதியில் கண்டோம். பாடல் இலக்கணம் பற்றியும் அப்படியே. கருத்தொற்றுமை என்று பார்க்கையில் தொல்காப்பியர் அகத்திணையைப் பற்றிப் பேசுகையில் முல்லை நிலத்தெய்வமாக மாயோனைக்குறிப்பிடுகின்றார்.[2] புறத்திணை பற்றிப் பேசுகையில் அதன் பொது வகைகளில் "மாயோன் மேய மன் பெருஞ்சிறப்பில் தாவா விழுப்புகழ் பூவைநிலை"[3] என்ற துறையில் மாயோனைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். இங்கே சிறப்பாக மாயோனின் அழியாத புகழ் குறிக்கப் பெறுகின்றது. மற்றும் அவனை நாடாளும் மன்னனுடன் ஒப்பிடக் காணுகின்றோம். மாயோனுக்கும் மன்னவனுக்கும் தொடர்புண்டென்று அக்கால மக்கள் எண்ணியிருந்தமை விளங்கும். திருவாய் மொழியிலும் ஆழ்வார் ஆகிய தலைவி இறைவனோடு தொடர்புடைய பொருள் களைக்கண்டு அவனாகவே மயங்கிப் பேசும் பேச்சில்,

"திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே" (4-4-8)

என்று பேசக் காணுகின்றோம். இதனால் தொல்காப்பியர் காலத்திருந்ததொரு கருத்து நம் ஆழ்வார் காலத்தும் இருந்தமை தெளியலாம். அதே கருத்தை இவ்விருவர்க்கும் ஏறக்குறைய இடைப்பட்ட காலத்தவராகக் கருதப்பெறும் திருக்குறள் ஆசிரியர் எடுத்துரைப்பது யாவரும் அறிந்ததொன்று.

## பத்துப்பாட்டு

சங்க இலக்கியங்கள் எனப்பெறும் பத்துப்பாட்டு எட்டுத்தொகை நூல்களில் தெய்வம் பற்றிய பகுதிகள் குறைவே. அங்கங்கே வரும் தனிக் குறிப்புக்களைத் தவிர முருகனை—சேயோனைப்—பற்றித் திருமுருகாற்றுப்படை என்ற நெடும் பாட்டிலும் பரிபாடல் நூலின் எட்டுப் பாடல்களிலும் பாடப் பெற்றுள்ளது. அவ்வாறே மாயோனை திருமாலைப் பற்றியும் அங்கங்கே வரும் குறிப்புக்களைத் தவிர முழுமையாகக் குறிக்கத் தக்க பகுதி பரிபாடலில் அடங்கிய ஏழு பாடல்களேயாம்.

பெரும்பாணாற்றுப்படை ஆசிரியர் 'பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன்'[5] என்று கச்சியின் பகுதியான திருவெஃகாவில் அமர்ந்துள்ள மாயோனைக் குறிப்பர். அவரே கச்சியில் அமர்ந்தவனை 'நீல் நிற உருவின் நெடியோன்'[6] என்பர். இவ்விரு தலங்களில் அமர்ந்துள்ள இறைவனைப் பற்றி நம்மாழ்வார் குறிப்பிடாதது வியப்பே. அவர் மிக நெடுந்தூரத்தே இருந்த தென் சீமையில் வாழ்ந்ததால் இவற்றினைக் குறிக்கவில்லை போலும்! முல்லைப் பாட்டு ஆசிரியர் அதன் தொடக்க வரிகளிலேயே, மாயோன் நிலமளக்க அடி உயர்த்திய செயலை உவமையாகக் குறிப்பிடுகின்றார். இச் செயல் பல இடங்களிலும் ஆழ்வார் பாடல்களிலும் இடம் பெறுகின்றது. மாயோனின் இச்செயலை எண்ணும் தோறும் தன்நெஞ்சு அவனுக்காகக் கரைந்து உருகுவதாகப் பாடுகின்றார்[7] ஆழ்வார்.

அறிவுரைப் பகுதியில் ஆழ்வார் நிலையாமையை விளக்குகையில் 'நினைக்கப் புகுந்தால் பல யுகங்களும் இவ்வுலகினை ஆண்டு இறந்தவர்கள் கடலில் உள்ள மணல் மேட்டைச் சேர்ந்த நுண் மணல்களைக் காட்டிலும் பலராவர்' என்று பாடுகின்றார். இதே கருத்தினை இவ்வாறே மதுரைக் காஞ்சியில் காணுகின்றோம்.

''நினைப்பான் புகில் கடல் எக்கரின் நுண்மணலிற் பலர்
எனைத்தோ ருகங்களும் இவ்வுலகாண்டு கழிந்தவர்'' (4-1-4)

''திரையிடு மணலினும் பலரே உரைசெல
மலர்தலை யுலகம் ஆண்டு கழிந்தோரே''[8]

மலைபடுகடாம் என்னும் பாட்டினும் தம்பெயர் தம்மொடு கொண்டு மாய்ந்தவர்கள் மலையினின்று இழிதரும் அருவியை உடைய வேகமாகச் செல்லும் கலங்கிய செந்நிற ஆறிடும் மணல் மேட்டின் மணலினும் பலராவர் என்று பேசப் பெறுகின்றது.[9]

திருமுருகாற்றுப்படையிற் காணும் வழிபாட்டு முறைகளிற் சிலவும் இறைவனுக்குரியனவாகக் கூறப்பெறும் குணங்கள் சிலவும் ஆழ்வார் பாடலிலும் இடம் பெறுகின்றன. முருகனை வழிபடும் ஏரகத்து அந்தணர் பற்றி வருணிக்கையில் ஆற்றுப்படையாசிரியர் அவ்வந்தணர் உச்சிக் கூப்பிய கையினராக உள்ளனர்[10] என்கிறார். ஆழ்வார் இறைவனை எண்ணிப் புலம்புகையில் 'கைதலை பூசலிட்டு'[11] என்று கைகளைத் தலை மீது வைத்துக் கொண்டு கூவுவதாகக் குறிக்கின்றார். 'நாவியல் மருங்கில் நவிலப்பாடி' (187) என்று பாடுதலைக் குறிக்கின்றார் முருகின் ஆசிரியர். ஆழ்வார் தாம் பாடிய நூலைக் குறிப்பிடுகையில் 'நாவியல் பாடல் ஆயிரம்' (9-2-11) என்று பகர்கின்றார். மற்றும் 'நாவியலால் இசை மாலைகள் ஏத்தி' (4-5-4) என்றும் குறிப்பர். இறைவனைப் பற்றிப் பாடுகையில் 'நின் அளந்து அறிதல் மன் உயிர்க்கு அருமை'[12] என்கிறார் நக்கீரர். ஆழ்வார் இவ்வாறே அவனை அறிதலின் அருமையைப் பல இடங்களில்[13] பேசுகின்றார். அதனினும் ஒருபடி மேற்சென்று இறைவனுக்கும் அவன் தன் தன்மை அறியவரிது என்றும் கூறுகின்றார் (8-4-6).

### பரிபாடல்

இனிச் சிறப்பாக அமைந்துள்ள பரிபாடல் ஒப்புமைகளை நோக்குவோம்.

#### அ. சேயோன்

சேயோனைப் பாடும் 8வது பாடலிலும் 21வது பாடலிலும் காணப்பெறும் சில வழக்குகள் நம்மாழ்வார் நூலிலும் அமைதலைக் காணலாம். அக்காலத்தில் கடவுளர் நிலையில் உயர்வு தாழ்வு பற்றிய எண்ணம் அவ்வளவாக மக்கள் உள்ளத்தில் இல்லை. ஆயினும் 8வது பாடலில் நல்லந்துவனுர் துழாயை உடைய

திருமாலும் மற்ற தேவர்களுடன் சேர்ந்து சேயோனைக் காணச் சென்றதாகப் பாடுகின்றார். பாடலின் தொடக்கமே அதுதான். இவர்தம் பாடலில் ஒருவர் பேசும் போது ஆணையிட்டு உறுதி கூறும் வழக்க முண்மையை அறிகின்றோம். திருவாய்மொழிப் பாடலிலும் அம்மரபு இடம் பெற்றுள்ளது. சூள் என்பதும் ஆணை என்பதும் ஒரு பொருளன. பல பொருள்களின் மீதும் ஆணையிடு வதாக அந்துவனார் பாடல் தெரிவிக்கின்றது. 'குறமகளான வள்ளியின் மீது ஆணையிடுகின்ற தோழா! நீ அவ்வாறு கூறாதே' (69) எனவும் வருகின்றது. ஆணையிடுவது உறுதியைக் காட்டும். திருவாய் மொழியின் இறுதியில் ஆழ்வார் 'தன்னோடு அன்பு பாராட்டி அன்று கலந்தவன் இன்று தன்னை விட்டுவிடலாகாது, தன்பால் அழைத்துக் கொள்ள வேண்டும்' என்று வற்புறுத்திக் கேட்கின்ற இடத்தில் திருமகள் மீது ஆணையென்றும், அவன் மீதே ஆணையென்றும் கூறுகின்றார் (10-10-2). இவ்விரண்டும் ஒரே வழக்கத்தை ஒட்டியனவே. வேறு சில இடங்களிலும் ஆணை யிடுதல் பற்றி வருகின்றது.

போரிலே வெற்றி உண்டாகுக என்று சிலர் முருகனை அருச்சித்ததாகப் பரிபாடலில் வருகின்றது. அந்த 'அருச்சித்தல்' என்ற சொல் ஆழ்வார் பாடலிலும் அமரர்கோன் திருவனந்தபுரத்து ஆதியை அர்ச்சிப்பதாகப் பாடுமிடத்தில் அமைகின்றது (10-2-6). முருகனைப் பாடும் மற்றொரு பாடலில்[14] 'அவன் அடியில் உறைதல் இன்று போல இயைக' என்று பரவுகின்றார் ஒரு புலவர். ஆழ்வாரும் இத்தன்மைத்தாகவே பல இடங்களில் 'அவன் அடி சேருவது என்று கொல்'[15] என்றும், 'அடியேன் உன் அடி சேர் வண்ணம் அருளாய்'[16] என்றும் பரவுவது காணலாம். இச்சில வொற்றுமைகள் சங்ககாலச் சமயவழிபாட்டு முறை முதலியன நம்மாழ்வார் பாடலிலும் பிரதிபலிக்கின்றன என்பதற்காகவே இங்குக் காட்டப் பெற்றுள்ளன. ஒருவரிடமிருந்து மற்றவர்க்கு வந்தன என்று உணர்த்தவன்று. ஆழ்வார் 'எம்பெருமான் வைத்து வளர்க்கின்ற சோலை காண்மின் பெரிய தெய்வங்களை உடைய இந்த மூன்று உலகங்களும்' என்று பொருள்படும்படி, 'பெய்த காவு கண்டீர் பெருந்தேவுடை மூவுலகே' (6-3-5) என்று பாடுவர். பரிபாடலில் முருகன்பால் ஊடல் கொண்டு நீங்கும் தெய்வயானையின் பேச்சாக வரும் பகுதியில் அவள் முருகனை நோக்கி "நின்னை அறியாது அகப்பட்ட அவ்வை எயிற்று மகளிர் திறம் இனி மழை பெய்ய வேண்டி வருந்தும் காவை யொக்கும்'[17] என்று கூறுகின்றாள். தனக்கு இன்றியமையாத மழையைத்

தான் வருவித்துக் கொள்ள மாட்டாது அது தானாக வந்தவிடத்துப் பொலிவுற்று, வாராத இடத்து முடிந்த அளவு பொறுத்திருந்து, முடியாத நிலையில் அழிந்து படுதல் சோலையின் இயல்பு; அத்தகையள் அவனை நாடி நிற்கும் மகளிர் என்பது இங்கு அறிவுறுத்தப் பெறுகின்றது. இவ்வுலகிற்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பும் அத்தகையது தானே யன்றோ?

''வையெயிற்று எய்யா மகளிர் திறம் இனிப்
பெய்ய உழக்கும் மழைக்கா மற்றுஜயா''

## ஆ. மாயோன்

மாயோனைப் பற்றிய பரிபாடற் கருத்துக்கள் பல திருவாய் மொழியில் அமைதல் இயல்பானதே. இரு சாரார்க்கும் மூலம் வேதமாதல் வேண்டும். பரிபாடல் ஆசிரியர்கள் வேதம் போற்றும் முறையில் தாம் பாடுவதாகத் தெளிவுறத் தெரிவிக்கின்றனர்.[18] ஆனால் நம்மாழ்வார் அவ்வாறு தெரிவுறக் கூறவில்லை. எனினும் ஆழ்வாருக்குப் பின் அடுத்து வந்தவர்கள் அவ்வாறு விளக்கிக் கூறுகின்றனர்.[19] வேத உண்மைகளை இறை அருளால் உணர்ந்து மதிநலம் அருளப் பெற்ற பேற்றினால் நம்மாழ்வார் பாடுகின்றார் என்ற ஒரு கருத்தும் தொன்று தொட்டு உள்ளது.

''திங்களும் கனலும் நீ;
சிவனும் பிரமனும் நீ;
அவர் தொழிலும் நீ;
எழிலி, விசும்பு, நிலம், இமயம் நீ''

எனப் பாடிச் செல்கின்றார் முதற் பரிபாடலின் ஆசிரியர். இக் கருத்து, திருவாய்மொழியில் பல இடங்களில் வருகின்றது. ''அரன் அயன் என உலகழித்து அமைத்து உளன்'' (1-1-8) எனப் பாடுவதில் உள்ளது பரிபாடற் கருத்தன்றோ? மற்ற கருத்துக்கள் ''நீராய் நிலனாய்'' (6-9-1) எனவரும் பாடலிலும் பிற இடங்களிலும் பரக்கப் பேசப் பெறுவதனைக் காணலாம்.

இரண்டாவது பரிபாடலில் திருமால் கேழலாக வந்து நிலம் கீண்ட வரலாறு போற்றப் பெறுகின்றது. இதனைத் திருவாய் மொழி பல இடங்களில் குறிக்கின்றது (5-7-6). தனித்துத் தான் மட்டும் வழிபட்டுப் பயன் அடையாது சுற்றத்தாருடன் சேர்ந்து பரவுவதாகப் புலவர் பாடும் சில இடங்கள்[20] பரிபாடலில் உள்ளன அம்முறையை ஒட்டியதாக உள்ளது. ஆழ்வார் இறை வழிபடு முறையையும் பெறும் பலனையும் சொல்லும் பொழுதெல்லாம் பலர்

சேர்ந்து செய்வதாகவே பாடுகின்ற அமைப்பு.[21] மாயோனைப் பாடும் மூன்றும் பாடலில் வரும் பல கருத்துக்கள் திருவாய் மொழியில் அமைகின்றன. இறைவன் சேவடி மறு பிறப்பறுக்கும் என்பது பரிபாடல்.[22] ஆழ்வார் இறைவனை நோக்கி ''என்னால் இனித் தரிக்க இயலாது; உனது சரணம் தந்து என்னுடைய துன்பத்தை நீக்குக''[23] என்று வேண்டுகிறார். 'தீயுள்வெம்மை' முதலியவற்றை எடுத்துரைத்து மற்றும் எல்லாப் பொருளும் அவற்றின் உள் இருப்பதும் நீயே என்று அவனைப் பார்த்துக் கூறுவ தாக அமைகின்றது பரிபாடல்.[24] இக் கருத்தின் ஒருபகுதி,

''சுரவிசும்பு எரிவளி நீர் நிலம் இவை மிசை
வரநவில் திறல்வலி அளிபொறை யாய்நின்றபரன்'' (1-1-11)

என்பதில் காணலாம்.

''கரந்தஇல் இடந்தொறும் இடம்திகழ் பொருள்தொறும்
கரந் தெங்கும் பரந்துளன்'' (1-1-10)

என்பதும் இக்கருத்தே. மாயோனாகிய இறைவன் எல்லாப் பிறவி களையும் எடுத்தானென்றும் ஆனால் அவனை அவ்வாறு பிறக்கச் செய்தவர் யாருமில்லை என்றும், அது வினை காரணமாக வந்த தன்று; அருள் காரணமாக அமைந்தது என்றும் விளங்குமாறு பரி பாடல்[25] பகர்கின்றது. இக்கருத்தை ஆழ்வார் ''பிறப்பில் பல் பிறவிப் பெருமான்'' (2-9-5) என்று மிகச் சுருக்கமாக அறிவித்து விடுவது தனியழகுடையதாகத் திகழ்கின்றது. 25 தத்துவங்களா லும் நாலுவகை யுகங்களிலும் ஆராயப் பெறும் பெருமையை உடையன் இறைவன் என்று தெரிவிக்கின்றது பரிபாடல்[26] ஆனால் 25 தத்துவங்களையும் விடுமாறு இறைவனுக்கு அறிவுறுத்து வதாக அமைகின்றது ஆழ்வார் பாடல் (10-7-10). பாழ்-புருடன் (பரிபாடல் உரை) பாழ்-மூலப்பகுதி (திருவாய்மொழிஉரை). இந்த வேறுபாடு இங்கு உள்ளது.

நான்காவது பரிபாடலில் பிரகலாதன் வரலாறு கூறப் பெறு கின்றது. அத்துடன் இணைத்தே திருமால் நரசிங்கமாய் இரணியனை நகத்தால் உரம் கிழித்துக் கொன்ற தன்மையும் புலப் படுத்தப் பெறுகின்றது. இதனை ஆழ்வார் பல இடங்களில் தெரி விக்கின்றார். வாட்டாற்று இறைவனைப் பற்றிப் பாடுகையிலும் இதனைக் கூறுகின்றார். (10-6-4). வேறு ஒரு இடத்தில் இவ் வரலாற்றை அழகுற எடுத்து விளக்கி அச் சிங்கப்பிரான் பெருமை ஆராயும் சீர்மைத்தே?' (2-8-9) என முடிப்பர். இறைவனுக்கு வடிவு உண்டா இல்லையா? என்பது தொன்று தொட்டு எழுப்பப்

பெறும் ஒரு கேள்வியே. அதற்குப் பரிபாடல் தரும் விடை, "இறைவா! மனக்கோள் நினக்கென வடிவு வேறிலை"[27] என்பது. அன்பர் மனத்தாற் கொள்ளும் வடிவே அவனுக்கு வடிவு; மற்று அவனுக்கெனத் தனித்த வேருனதொரு வடிவம் இல்லை என்பது அதன் பொருள். ஆழ்வாரும் பல இடங்களில் அவ்வாறு பாடுவர். பரிபாடல் "எவ்வயினேயு நீ"[28] என்று குறிப்பது அவன் எவ்விடத்தும் பரந்துள்ளான் என்ற குறிப்பினது. விட்ணு என்று அவனுக்குரிய சிறப்புப் பெயர்களுள் ஒன்று இப்பொருளினது என்பர். ஆழ்வாரும் 'எங்கும் பரந்துளன்' என்று முதல் திருவாய்மொழியிலேயே இருமுறை இவ்வியல்பைக் குறிக்கின்றார்.

நல்வெழுநியார் பாடிய 13 வது பாடலில் வரும் ஒப்புமைகள் பெரும்பாலும் திருமாலின் தோற்றம் பற்றிய வருணனையில் அமைந்துள்ளன. கார் காலத்துப் பெரிய மேகமொன்று இரு பக்கங்களிலும் இருசுடர்களை அணிந்து விளங்குதல் போல ஒளியையுடைய நேமியையும் சங்கையும் தாங்கிய கை[29] (யையுடையவன்) என்று திருமாலது வடிவம் வருணிக்கப் பெறுகின்றது. ஆழ்வாரும் சிறு மாறுதல்களுடன் இவ்வுவமையை ஆளுகின்றார். அழகிய நல்லதொரு நீலமலை இருபக்கங்களிலும் ஒளிமிக்கதாகிய ஞாயிற்றையும் வெள்ளிய மதியையும் ஏந்திக் கொண்டு வருவது போல நேமியும் சங்கும் இருகையிற் கொண்டு மாயோன் இருப்பது தோன்றுகின்றது என்று வருணிக்கின்றார் (8-2-10). (இவ்வாறே திருமாலைப் பற்றிப் பேசுகையில் இளங்கோவடிகளும்[30] கம்பனும்[31] இதே உவமையை ஆளுதல் இங்கு நினைவு கூரத்தக்கது.) மற்றும் திருமாலின் வடிவு இலையினின்று மேல் விரிந்த வளவிய இதழ்களை உடைய தாமரைப் பூவை யொக்கும் திருவடியும் கண்ணும் வாயும் உடையது[32] என்கிறார் புலவர். உடலுக்கு இலையும் மற்ற உறுப்புகட்குத் தாமரை மலரும் உவமைகளாம். மலரைப் பலரும் உவமை கூறுவர்; இலையை ஒத்தது திருமேனி என்பது அரிய ஆட்சி. அது இங்கு அமைகின்றது. ஆழ்வார் இறைவன் திருமேனி கமலத்தினது இலை போலும் (9-7-3) என்று பாடுகின்றார். அதற்கு முன் அடியில் தாமரைமலர் போன்றது அவனது கண், கை, கால், செங்கனிவாய் என்பதும் சேர்த்தே இங்கும் உள்ளது. இப்புலவர் பாடலின் இறுதியில் தாம் இறைவனைப் பலகாலும் இறைஞ்சி வாழ்த்தப் பெற்றது தாம் முன் செய்த தவத்தின் பயனே[33] என்று முடிக்கின்றார். ஆழ்வாரும் இதே கருத்துப்படத்

திருவனந்தபுரத்து இறைவனை மலர்கள் தூவிப் பூசனை செய்கின்றவர்கட்கு அப்பேறு கிட்டியது, அவர்கள் முன் செய்த புண்ணியத்தாலேயே யாம் என்று பாடுகின்றார் (10-2-4).

பரிபாடல் எண் பதினைந்தில் இளம்பெருவழுதி என்ற பாண்டிய மன்னன் திருமாலிருஞ்சோலை அழகரைப் பாடுகின்றான். ஆழ்வாரும் திருமாலிருஞ் சோலை அழகர்பால் ஈடுபாடு கொண்டு இரண்டு திருவாய்மொழிகள் (பதிகங்கள்) பாடுகின்றார். இருநூல்களிலும் வியக்கத்தக்கவாறு சில ஒற்றுமைகள் அமைந்துள்ளன. தென் திசைக்குத் திலதமாய்—அழகு செய்வதாய்—முதன்மையாய் நின்றது திருமாலிருஞ்சோலை என்பது ஆழ்வார் கூறும் கருத்து (10-7-4). பரிபாடல் ஆசிரியரோ உலகத்துள்ள புகழ்பெற்ற மலைகள், பசித்துன்பம் துடைக்கும் மலைகள், தெய்வம் விரும்பியுறையும் மலைகள் இவற்றிலெல்லாவற்றினும் மாயோனும் அவன் முன்னும் சேர்ந்து இருத்தற்கு இடமான திருமாலிருஞ்சோலை சிறந்தது என்று பாடலின் தொடக்கத்திலேயே பாடுகின்றார். மற்றும் அவர் சிறந்ததான வீடு பேற்றைத் துழாய் மாலை அணிந்து மாயோனல் அன்றிப் பிறரால் பெற இயலாது என்றும், அத்தகைய பெறுதற்கரிய பேற்றை எளிதிற் பெறும் உரிமையை மாலிருங் குன்றம் நல்குமென்றும், அதனல் பலவாக அதனை ஏத்துவோம் என்றும் பாடுகின்றார். அம்மலையே தன்னைக் கண்டு வழிபடு வாரது மயர்வைப் போக்குகின்ற கடவுள் என்றும் கூறி அதனை ஏத்துகின்றார். இதனை ஒத்த தன்மைத்தாக அமைகின்றது ஆழ்வார் வேங்கடத்தைப் பற்றிப் பாடும் வரிகள். வேங்கடம் இறைவனை ஒத்த தன்மையதான வீடுபேற்றை நல்கும் குன்றம் என்றும் (3-3-7), அம்மலை ஒன்றையுமே தொழத் தொழுவாரது வினைகள் யாவும் ஒழியும் என்றும் (3-3-8) பாடல் அமைகின்றது. மலை வேறுபடுகின்றது; மற்றபடிக் கருத்து ஒன்றே. மூன்றாவதாக, வழுதி மாயோனை ஒத்த தன்மையதான மலையைச் சென்று தொழுங்கள்; இயலாதவர்கள் இருந்த இடத்தே இருந்தேனும் பணியுங்கள் என்ற கருத்தில்,

"சென்று தொழுகல்லீர் கண்டு பணிமின்மே" (34) என்று பாடுகின்றார். ஆழ்வாரும் திருமாலிருஞ்சோலைப் பதிகத்தில் முதற் பாடலில் சோலைமலையை வருணித்து அம்மலையைச் சார்வது சதிர் (நல்ல உபாயம்—சிறப்பு) என்று கூறி அதற்கு அடுத்த இரண்டாவது பாடலில் 'பதியது ஏத்தி எழுவது பயனே' என்று பாடுகின்றார் (2-10-2). மலையைச் சென்று சேருவது இயலாதாயின் தூர

இருந்தேனும் அம்மலையை—அல்லது ஊரைப்—போற்றி உரைத்து உயர்வதே—உய்வதே நற்பயன் என்று தெளிவிக்கின்றார். இது பரிபாடலிற் காணும் முறையை ஒத்து விளங்குவது தெளிவு. இதே பாடலில் காணும் இன்னொரு ஒற்றுமை பண்டைய வழக்கு ஒன்றினை நமக்குத் தெளிவிக்கின்றது; 'தென்னன் நாட்டில் உள்ள திருமாலிருஞ் சோலைமலையை அது உள்ள திசை நோக்கிக் கை கூப்பிக் கொண்டு சென்று சேர்ந்த யான்' (10-7-3) என்று பாடுகின்றார் ஆழ்வார். திசை நோக்கித் தொழுது சேரல் அம்மலையின் பால் ஆழ்வார் கொண்ட ஈடுபாட்டின் மிகுதியையும் அன்பினையும் புலப்படுத்துவதாகும். ஆழ்வார் இவ்வாறு செய்வது பரிபாடலில் இளம்பெருவழுதி கூறிய வேண்டுதலை ஏற்றுச் செய்வது போல் தோன்றுகின்றது. ஏனெனில் பரிபாடல் அம்மலையைத் தெய்வமாக அறிவிக்கின்றது.[84]

பரிபாடலில் திருமாலின் வராக அவதாரம், அன்ன அவதாரம், நரசிம்ம அவதாரம், பலராமன் கண்ணனைப் பற்றிய ஒரு சில குறிப்புக்கள் இவையே குறிக்கப் பெறுகின்றன. ஆனால் ஆழ்வார் காலத்து மற்றும் பல அவதாரங்களைப் பற்றிய செய்தியும் கண்ணன் இராமன் வாமனன் ஆகிய இவ்வவதாரங்களின் பல்வேறு நிகழ்சசிகளும் விரிவாகப் பேசப் பெறுவது காலப் போக்கில் தமிழ் இலக்கியத்தில் ஏற்பட்ட மாறுதல் என்று கோடல் பொருந்தியதாகும்.

## புறநானூறு

முரஞ்சியூர் முடிநாகராயர் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனைப் பாடுகையில் அவனது பண்புகளைக் கூறி அவனை விளிக்கையில் ஐம்பூதங்களின் தனிச் சிறப்புக்கள் ஐந்தினையும் அவன் உடையவன் என்று எடுத்துரைக்கின்றார். நிலத்தின் பொறுமையும், விண்ணின் அகலம் போன்ற பரந்த சூழ்ச்சியும், காற்றின் வலிமையும், தீயினை ஒத்த அழிக்கும் தன்மையும், தீயினுக்கு மாறுபட்ட நீர் போன்ற அருளும் உடையோய்! என்று பாடுகின்றார்.

''மண்டிணிந்த நிலனும், நிலனேந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும், வளித் தலைஇய தீயும்
தீமுரணிய நீருமென்றாங்கு ஐம்பெரும் பூதத்தியற்கைபோலப்
போற்றார்ப் பொறுத்தலும், சூழ்ச்சியதகலமும்
வலியும் தெறலும் அளியும் உடையோய்'' (2-1-8)

ஆழ்வார் முதல் திருவாய் மொழியிலேயே இறைவன் இயல்புகளைப் பாடுகையில் கரவிசும்பு, எரி, வளி, நீர், நிலம் இவற்றின் மீது அவற்றின் பண்புகளான ஒலி, தெறல், வலி, அளி, பொறையாக இறைவன் விளங்குகின்றான் என்று பாடுகின்றார். ஆகாயத்தின் பண்பு தவிர மற்றைய ஒத்து விளங்குதல் காணுகின்றோம். சொற்களும் ஒரே தன்மையனவாக அமைந்துள்ளன.

"கரவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசை
வரநவில் திறல்வலி அளிபொறையாய் நின்ற, பரன்"
(1-1-11)

இன்னொரு பாடலில் பொய்கையார், சேரமான் கோக்கோதை மார்பன் நானிலத்தையும் தன் நாட்டில் உடையன் என்று அவன் சிறப்பினைக் கூற வருகின்றார். அவனைக் குறிஞ்சியும் முல்லையும் ஆகிய நிலமுடைமையால் நாடன் என்று சொல்லுவேனோ? மருத நிலமுடைமையால் ஊரன் என்று சொல்லுவேனோ? நெய்தல் நிலமுடைமையால் ஒலி முழங்குகின்ற குளிர்ந்த கடலையுடைய சேர்ப்பன் என்று சொல்லுவேனோ? எவ்வாறு பாராட்டிச் சொல்லு வேன் என்று பாடுகின்றார்.

"நாடன் என்கோ ஊரன் என்கோ
பாடிமிழ் பனிக்கடல் சேர்ப்பன் என்கோ
யாங்ஙனம் மொழிகோ ஓங்குவாட் கோதையை" (புறம் 49)

இவ்வமைப்பு முறையிலேயே ஆழ்வார் எல்லாவற்றிலும் அவற்றின் ஆத்மாவாக இருக்கும் இறைவனைப் பாடுகையில்,

"புகழும் நல்லொருவன் என்கோ பொருவில் சீர்ப்பூமி என்கோ
திகழும் தண்பரவை என்கோ தீ யென்கோ வாயுவென்கோ
... ... ... ... ...
எண்ணுமாறு அறியமாட்டேன் யாவையும் யாவரும் தானே"
(3-4)

என்று இவ்வாறு 52 முறை என்கோ என்கோ என்று ஐயப் பொருளில் பாடுகின்றார்.

## குறுந்தொகை

தமிழ்ச்சங்க அகப் பாடல்களில் வரும் பல பகுதிகளை ஒத்த பாடல் அமைப்பு ஆழ்வார் தம் தெய்வீகக் காதல் பாடலிலும் இடம் பெறுகின்றது. பறவைகளைத் தூது விடும் ஆழ்வாராகிய தலைவி தான் வளர்த்த இளங்கிளியை நோக்கி அவன் பால் சென்று ஒரு வாய்ச் சொல் கூறுமாறு வேண்டுகையில் 'தன்

எலும்பில் துவாரம் செய்து நூலிழையைக் கோப்பது போலக் குளிர்ந்த வாடைக் காற்று ஈர்கின்றது' (1-4-7) என்று தன்னை வருத்தும் வாடையின் கொடுமையை இயம்புகின்றாள். இதே தன்மையாகக் குறுந்தொகைப் பாடல் ஒன்றில், 'குளிர்ந்ததாகத் துன்பம் தந்து கொடிதாக வீசும் வாடைக் காற்றால் அவள் என் நிலையள் ஆயினளோ? என்று கேட்காத தலைவர்' (110) என்று வருகின்றது. மற்றும் நெடுநல் வாடை போன்ற பெரும்பாடல் களும் வாடையின் கொடுமையைக் கூறும்.

தன் நட்பின் தன்மையை எடுத்து விளக்கும் ஒரு குறுந் தொகைத் தலைவி அது நிலத்தினும் பெரிது; வானினும் உயர்ந்தது; நீரினும் ஆழ்ந்த அளவினது என்று பேசும் பாடல் (3) பலரும் அறிந்தது. அவ்வாறே ஆழ்வார் ஆகிய தலைவி தன் காதலின் தன்மையைத் தோழியின் பால் சொல்லுகையில்,

''மண்திணி ஞாலமும் ஏழ்கடலும் நீள்விசும்பும் கழியப்
பெரிதால்'' (7-3-8)

என்று பகர்வது காணுகின்றோம். ஒன்றுக்கு ஒன்று விளக்கம் கூறும் முறையில் இரு பாடல்களும் அமைந்துள்ளன.

தலைவனைப் பிரிந்த நிலையில் மாலைக் காலம் தரும் துன்பத்தை ஆழ்வாருடைய ''மல்லிகை கமழ்தென்றல்'' (9-9) எனவரும் திருவாய்மொழி தெளிவுற விளக்குகின்றது. மாலைக் காலக் காட்சிகள் பல அதில் இடம் பெறுகின்றன. மாலையில் மேய்ச்சலுக் குப் பின் தன் கன்றுகளை உள்ளி வீடு திரும்பும் பசுக்களின் காட்சி தங்கள் தலைவரைக் காணாது தவிக்கும் தலைவியர்க்குத் துன்பத்தை மிகுவிப்பதாகப் பாடுவது மரபு. அது இயல்புமாம்.

''ஆபுகு மாலையும் ஆகின்றதலோ!
யாமுடை யாயன் தன் மனம் கல்லாவோ!'' (9-9-5)

என்று குறுந்தொகையில் இந்தக் காட்சி மிக அழகாகத் துன்பம் மிகுவிக்கும் வகையில் விவரிக்கப்பட்டுள்ளது.

''புலம்பயர் அருந்த அண்ணல் ஏற்றொடு
நிலம் தூங்கு அணல் வீங்கு முலை செருத்தல்
பால் வார்பு குழவி உள்ளி நிரை இறந்து
ஊர் வயிற் பெயரும் புன்கண் மாலை.'' (344)

ஆழ்வார் இறைவன்பால் மிக்க பக்தி கொண்டு அவனைச் சேரும் வேட்கை மிக்கவராய்ப் பலவாறு ஓலமிட்டு அழைக்கின்றார். அவனோ வரவில்லை. ஆயினும் அவர் அன்பு உண்மையான, ஆழ

மான அன்பு ஆகையால் இவர் அவனை வெறுக்கவில்லை. 'நீ வரா விட்டாலும் இறைவா! உன் கழலணிந்த தாமரைத் திருவடிகள் என் சென்னிக்கு அணியாம்' (4-3-6) என்றே பாடுகின்றார்: அவர் தன்னை மறந்தாலும் தான் அவரை மறப்பது இயலாது என்று பாடும் ஒரு தலைவியின் பேச்சுப் போல் இப்பாடல் அமைகின்றது. குறுந்தொகை அதனை இப்படிச் சுருக்கமாக வெளியிடுகின்றது.

''மறந் தோர் மன்ற; மறவோம் நாமே'' (200)

கலித்தொகை

இந்நூலில் ஒரு அழகான உவமை, காதலரிடையே உள்ள அன்பின் தன்மை குறித்ததொரு கருத்து, திருமால் பற்றிய வருணனை ஆகிய மூன்றில் ஒப்புமைப் பகுதி காணப் பெறுகின்றது. திருமால் ஐந்து தலைகளை உடைய அரவாகிய அணையின் மீது பாற்கடலில் உறங்குவது போல் உலகைக் காக்கும் சிந்தையராக உள்ளார் என்று கூறுதல் உண்டு.

''ஐந்து பைந்தலை ஆடரவணை மேவிப் பாற்கடல் யோக நித்திரை
சிந்தை செய்த எந்தாய் (2-6-5)
பாடிமிழ் பரப்பகத்து அரவணை அசைஇய ஆடுகொள் —நேமியான்'' (கலி 105)

உலக வழக்கிலும் வருகின்றதொரு உவமை, 'வெந்த புண்ணில் வேல் நுழைந்தாற் போன்ற' என்பது. இது இவ்விரு நூல்களிலும் இடம் பெறுகின்றது. ஆழ்வார் பாடலில் பிரிந்து வருந்தும் தலைவி பேச்சில் அவள் வண்டுகளையும் தும்பிகளையும் பார்த்து அவற்றின் இனிய குரல் இன்று இந்நிலையில் தனக்கு முன் உள்ள துன்பத்திற்கும் மேலே மிகுதியான துன்பம் விளைவிப்பது புண்ணின் தொளையில் வேலைக் கொண்டு குத்துவது போல் உள்ளது என்று கூறுவதாக அமைகின்றது.

''வண்டொடு தும்பிகாள் புண்புரை வேல்கொடுகுத்தால் ஒக்கும் —நும் இன் குரல்' (9-5-9)
'வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான் போல' (கலி 120)

''ஏறு சேவகனுர்க்கு என்னையும் உளள் என்மின்களே'' (6-1-10) என்பது ஆழ்வாராகிய தலைவி தலைவன் பால் தூது விடும் போது சொல்லி அனுப்பும் செய்தி. இதன் பொருள் நாளும் உயரு

கின்ற வீரம் பொருந்திய தலைவருக்கு அவரால் காப்பாற்றப்பட வேண்டியவர் கூட்டத்திலே நானும் ஒருத்தி உள்ளேன் என்பதைத் தெரிவியுங்கள் என்பது. நான் ஒருத்தி உயிருடன் உள்ளேன் என்பது அவர்க்கு அறிவிக்க வேண்டா; ஏனெனில் அதனை அவர் அறிவர். எவ்வாறெனில் காதலர் இருவரில் ஒருவர் உயிருடன் இருந்தால் மற்றவரும் இருக்கின்றார் என்பது தமிழ் நூல் உணர்த்தும் மரபு—இன்றியமைதாத ஒன்று — என்று—ராமானுசர் எடுத்துக் காட்டுவர்.[85] இக்கருத்து அகப்பொருள் நூல்களிலும் காணப் பெறுகின்றது. கலித்தொகை அதனைக் கூறுகின்றது. காதலனைப் பிரிந்த ஒரு தலைவி தன் தலைவனுக்கு எந்தத் தீதும் இல்லை; அவன் உயிருடன் இருக்கின்றான் என்பது உறுதி என்று ஒருவாறு ஆறுத லடைகின்றாள். அச்செய்தியை அவள் எவ்வாறு அறிந்தாள்? தான் உயிருடன் இருக்கும் போது தன் உயிர் அனைய காதலரும் இருக்க வேண்டும். அவ்வாறில்லையெனில் தன் உயிர் தன்னை விட்டுப் போயிருக்கும் என்பது அவள் துணிபு. போகாமையால் அவர் உயிருடன் உள்ளார் என்று உறுதி கொள்கிறாள்.

''இன்னுயிர் அன்னாற்கு எனைத்தொன்றும் தீதின்மை
என்னுயிர் காட்டாதோ மற்று'' (கலி.நெய்.26)

இதே கருத்து சிந்தாமணியிலும் வருகின்றது. அங்குத் தலைவன் பேச்சில் இச்செய்தி அமைகின்றது.

''காதலாள் உடலுள் உயிர் கைவிடின்
ஏதமென்னுயிர் எய்தி இறக்குமற்று
ஆதலால் அழிவொன்றிலள்'' (1631)

## திருக்குறள்

திருக்குறள் தமிழர் தம் பொதுமறை. திருவள்ளுவர் திருக்குறள் எழுதியதற்குப் பின்னர் வந்த புலவர்களில் அவர்தம் கருத்துக்களை எடுத்தாளாதவர் இல்லை என்றே சொல்லலாம். திருவாய்மொழிக்கும் திருக்குறட்கும் உள்ள ஒப்புமைக் கூறுகள் பல.

## இறை இயல்பு

குறளின் முதல் அதிகாரமான கடவுள் வாழ்த்தில் பொதுப் படையான முறையிலேயே இறைவன் குறிக்கப் பெறுகின்றான். இறைவனைக் குறிக்கும் பெயர்கள் அவன் இயல்புகளைப் புலப்படுத் துவனவாக உள்ளன. அவனை வழிபடுதலின் இன்றியமையாமை

யையும் அதனுல் பெறும் பலனையும் சுருக்கமாகவும் தெளிவாகவும் வள்ளுவர் தெரிவிக்கின்ருர். இவ்வியல்புகள் யாவும் திருவாய் மொழியிலும் காணப் பெறுகின்றன. முதல் குறள் இறைவனை 'ஆதிபகவன்' என்கிறது. ஆழ்வார் 'அந்தமில் ஆதியம் பகவன்' (1-3-5) என்று பாடுகிருர். ஆதி என்று அழைத்தால் அவனுக்கு அந்தமும் (முடிவும்) உண்டு என்று பொருள்படும் என்பர். அதனை உடன்படாது அக்குறையை மறுத்துரைப்போர் போன்று 'அந்தமில்' என்று அடைமொழி கொடுத்து 'அம்' என்பதனையும் இணைத்துப் பெயர் அமைத்துள்ள திறம் பாராட்டப் பெறுமுறை யில் உள்ளது. இறைவனை முதலாகக் கொண்டது உலகு என்பது இக்குறளில் அறிவுறுத்தப் பெறும் கருத்து. இதனை ஆழ்வார் பல இடங்களில் வெளியிடுகின்ருர்.[86]

'முழு மூவுல காதிக் கெல்லாம் முதல்தனி' (10-10-9) மற்று 'இறைவன்' என்ற பெயரும், அறவாழி அந்தணன்' என்ற பெயரும், குறளில் (5,8,10) காணப் பெறுகின்றன. ஆழ்வார் 'இறை' என்ற சொல்லை முதற்பத்து இரண்டாவது திருவாய் மொழியில் சில இடங்களிலும் 'இறையோன்' என்ற பெயரை மூன்ருவது திருவாய்மொழியில் சில இடங்களிலும் அருளுகின்ருர். இரண்டாவது பெயரை விளக்கும் முறையில் 'அறவனை, ஆழிப் படை அந்தணனை' (1-7-1) என்று ஆளுகின்ருர் இம்மூன்று பெயர் தவிர மற்ற பெயர்களை ஆழ்வார் அப்படியே ஆளவில்லை. ஆனுல் அப்பெயர்களின் பொருள்தரும் தொடர்களை அமைக்கின்ருர். 'வாலறிவன்' என்பது தூய ஞான வடிவினன் என்று பொருள் படும். இப்பொருள்படும் தொடர்கள் திருவாய் மொழியில் பல இடத்தும்[87] வருகின்றன. 'மலர்மிசை ஏகினுன்' (குறள்.3) தண்தாமரை சுமக்கும் பாதப் பெருமான்' (திரு. 4-5-8). குறள் தரும் சொல் இறந்த காலத்தில் அமைந்துள்ளது. அவ்வாறு வரும் சொல் வாய்மொழியில் இல்லை. 'வேண்டுதல் வேண்டாமை (இலான்' (குறள்.4) 'கொள்கை கொளாமை இலாதான்' (திருவாய். (1-6-5) 'தனக்குவமை இல்லாதான்' (குறள் 7) 'இனன் இலன்' 'திருவாய். 1-1-2) 'ஈடு மெடுப்புமில் ஈசன்' (திருவாய். 1-6-3) 'எண் குணத்தான்' என்ற தொடரும் 'பொறிவாயிலைந்தவித்தான்'. என்ற பெயரும் (குறள். 9, 6) வாய்மொழியில் வரவில்லை. 'இருடீகேசன்' என்பது (2-7-9) பொறிகளை அவித்தவன் என்று பொருள்தரும் வடசொல் ஆகும். திருக்குறளின் பிற அதிகாரங் களில் தெய்வம் (50, 55), அடியளந்தான் (610), தாமரைக்

கண்ணன் (1103) என்ற பெயர்களால் இறைவன் சுட்டப் பெறுகின்றான். இவற்றுள் அடியளந்தான் என்பது மாயோனையும், தாமரைக் கண்ணன் என்பது பெரும்பாலும் திருமாலையும் குறிக்கவே வழங்கும் தொடர்கள். அடியால் உலகளந்த செயலைப் பல பாடல்களில் ஆழ்வார் ஈடுபாட்டுடன் பாடுகின்றார் (5-10-9). 'உலகமளந்த அடியானை' (திருவாய் 9-4-10) தாமரைக் கண்ணன் (திருவாய். 2-2-5, 2-6-2) தெய்வம் (திருவாய் 5-2-7) இவ்விடங்களிலும் பிற இடங்களிலும் இப்பெயர்கள் வழங்கப் பெறுகின்றன.

பலன்

இறைவன் நற்றாள் தொழுதலே கற்றதன் பயன் என்கிறது திருக்குறள். ஆழ்வார் கற்கும் கல்வியின் சாரம் இறைவன் (5-6-2) என்றும், 'கல்வியெல்லாம் கண்ண பிரானே' (6-5-4). என்றும் பாடுகின்றார். அத்துடன் அமையாது உலகில் முழுவதும் உணர்ந்த தன்மையரானவர் பிறப்பில்லாத இறைவனைப் போற்றிக் கொண்டு நடனமிடும் உள்ளம் படைத்தவரே (3-5-6) என்று கூறுவதன் மூலம் அவனை வழிபடுவதனால் தான் முழுமை ஏற்படுகின்றது. அதுவே கல்வியின்—வாழ்வின்—முடிந்த பயன் என்பதை வலியுறுத்துகின்றார் ஆழ்வார். மற்றும் இறைவனின் அவதார குணங்களை உலகத்தவர்க்கு எடுத்துரைக்கும் ஒரு திருவாய் மொழியில் (7-5) முதலில் 'கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ?' என்று எடுத்துரைத்து அதற்கடுத்த பாடலில் 'நாட்டில் பிறந்தவர் நாரணற்காளன்றி யாவரோ?' என்று பாடுகின்றார். இப்பாடல்களின் போக்கை ஆராய்ந்தால் கற்பதன் பயன் அவனுக்கு நாரணனுக்கு ஆளாகை—அடிமையாகை என்பது விளங்குகின்றது. குறள் உணர்த்தும் கருத்தின் விரிவு தானே யன்றோ இது.

இறைவன் அடி சேர்ந்தார்க்கு இடும்பையும் (4) மனக்கவலையும் (7) இல்லை என்கிறார் வள்ளுவர்; ஆழ்வார் 'கண்ணனைத் தாள் பற்றி யான் என்றும் கேடிலனே' (3-10-10) என்றும், 'அவன் திறத்துப்பட்ட பின்னை இறையாகிலும் யான் என் மனத்துப் பரிவிலனே' (3-10-3) என்றும் பலகாலும் பாடுகின்றார். 'தாளை வணங்காத் தலை குணம் இல' (9) என்கிறார் வள்ளுவர். ஆழ்வார் உடன்பாட்டு முகத்தால் 'தாள்கள் தலையில் வணங்கி நாள் கடலைக் கழிமின்' (1-6-7) என்று அறிவுரை வழங்குகின்றார் இறைவனுடன் தொடர்பு கொண்டவரை இருள் சேர்ந்த இருவினை

யும் சேரா என்பது குறள் (5). ஆழ்வார் 'இருமை வினைகடிந்து, (10-4-2) என்னை ஆள்கின்றான் என்றும், இருவினை கடிவார் (1-6-9) என்றும் பாடுகின்றார். கடிவனவற்றில் தீவினையையன்றி நல்வினையையும் குறித்ததோடு நில்லாமல் குறளிற் காணுமாறே அவ்வினைகளை 'இருள்' என்றும் கூறுவதை 'வினைவல்லிருள் என்னும் முனைகள்' (10-5-10) என்ற தொடரில் காணலாம். இறுதியாகப் பத்தாவது குறளில் இறைவன் அடிசேர்ந்தார் பிறவிப் பெருங்கடலை நீந்துவர் என்றும், சேராதவர் நீந்தார் என்றும் வள்ளுவர் குறிப்பதை ஆழ்வார் இறைவனே பிறவிக் கடல் நீந்துவார்க்குப் புணை என்ற பொருளில் 'புணைவன் பிறவிக் கடல் நீந்துவார்க்கே' (2-8-1) என்று பாடுகின்றார்.

## அகச் சார்பான பாடல்கள்

நம்மாழ்வார் 'உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனெம் பெருமான்' (6-7-1) என்று கொண்டொழுகியவராதலின் மற்ற பொருள் பற்றி அவர் மிகுதியாகப் பேசவில்லை. வள்ளுவர் எப்படிப் பெண்ணை மாயப் பிசாசு என்பன முதலாகக் கூறி ஏசவில்லையோ அப்படியே நம்மாழ்வாரும் பெண்ணை ஏசுதலை எங்கும் நாம் காண முடியாது. தாமே பெண்ணாக நின்று 'தமிழ்நெறி' யின்படி தெய்வீகப் பாடல் பாடின சிறப்பினர் அல்லரோ? அதனால் திருக்குறள் காமத்துப்பால் குறட்பாக்களின் சொற்றொடர்களும் கருத்துக்களுமே மற்றவற்றினும் காட்டில் திருவாய்மொழியில் அதிகமான அளவு காணப்பெறுகின்றன.

> "ஊரவர் கௌவை எருவாக அன்னை சொல்
> நீராக நீளுமிந் நோய்" (1147)

என்று 'அவர் அறிவுறுத்தல்' அதிகாரக் குறள் அவ்வாறே எடுத்தாளப் பெற்றுள்ளது திருவாய் மொழியில். காமநோய் ஆகிய பயிர்க்கு ஏதோ ஒரு கால் ஊரவர் கூறும் அவர் மொழி எருவாகவும், பலகாலும் இடித்துரைக்கும் அன்னை சொல் பாய்ச்சும் நீராகவும் உருவகிக்கப்பட்டுள்ளன இக்குறளில். பிரிவாற்றாமை மிக்கு ஆழ்வார் ஆகிய தலைவி பழிக்கு அஞ்சாது மடலேறுதற்குத் துணிந்ததாகக் கூறும் திருவாய்மொழிப் பாடலில் இக்குறளின் சொற்களும் உருவகமும் அப்படியே அமைகின்றன. இரண்டு வரி கொண்டது குறள். தான் நான்கு வரிகளில் பாடுதலினால் அதனை இன்னும் விரித்து நெஞ்சமாகிய வயலில் அன்பாகிய நெல்லை விதைத்து முளைத்த மிக்க காதல் என்கிறார் ஆழ்வார். அக் காதலை விளைவித்தவனும் மேகமொத்த கண்ணன். அதனால் அவ்

விளைவு செழித்துக் கடல் போல உள்ளது என்று நயம்பட அமைக்கும் அழகு இன்பம் தருகின்றது.

''ஊரவர் கௌவை யெருவிட்டு அன்னைசொல் நீர்படுத்து
ஈரநெல் வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செய்யுள்
பேரமர் காதல் கடல் புரைய விளைவித்த
காரமர் மேனிநம் கண்ணன் தோழி! கடியனே'' (5-3-4)

அடுத்து, காதலரிடையே அன்பு காரணமாகப் பேசும் முறையில் காணப்படும் ஒரு தன்மையை இறைவனோடு தாம் பேசும் பேச்சிலும் ஆழ்வார் அமைத்துப் பாடுதலைக் காணுகின்றோம். தலைமகனைப் பிரிந்த நிலையில் துன்புறும் தலைவி தன் துன்ப மிகுதியால் 'என்னால் விரும்பப்பட்ட காதலர் என்பால் அன்பு இல்லாமையால் வாராராயினும் அருள் செய்யாராயினும் அவர் பாலிருந்து ஏதேனுமொரு சொல்லைத் தூது கொண்டுவரின் அதுவும் என் செவிக்கு இனியவாம்' என்று பேசுவதாக அமைகின்றது ஒரு குறள் (1199). இதே கருத்துப்பட இறைவனை நோக்கிப் பேசும் ஆழ்வார் 'இறைவா! நான் உன் நாமங்களைச் சொல்லிக் கூவிக் கூவி நெஞ்சுருகிக் கண்களில் நீர் சோர நின்றும் நீ எனக்கு அருளவில்லையானாலும், என் கண் காண வந்து 'நீ என் அருள் பெறுதற்குத் தகுதி உடையை அல்லை பாவி' என்று சொன்னாலும் அதுவே போதும் என்பதாகப் பாடுகின்றார் (4-7-3). இது அவனைக் காண வேண்டுமென்று கொண்ட வேட்கையின் மிகுதியைக் காட்டுவதாகும். குறளின் கருத்தும் இதுவும் ஒரே தன்மையன அல்லவா?

பொழுது கண்டிரங்கல் என்ற அதிகாரத்து, மாலைப்பொழுது வர அதனைக் கண்டு தலைவனைப் பிரிந்ததொரு தலைவி இரங்குதல் கூறப் பெறுகின்றது. ஆற்றியிரு என்ற தோழியைப் பார்த்து 'காதலர் அருகிருந்த பொழுது என் உயிர் தளிர்ப்ப வந்த மாலை அவரில்லாத இப்பொழுது கொலைக்களத்திலே கொலைஞர் வருமாறு போலே உயிரைக் கொள்ளுதற்கு வருகின்றது' (1224) என்று கூறுகின்றாள். மற்றும் 'ஆயன் ஊதும் குழலோசையானது அழல் போலச் சுடுவதாய மாலைக்காலம் வருதலை உணர்த்துகின்ற தூதுமாய் அது வந்தபின் என்னைக் கொல்லும் படையுமாயிற்று' (1228) என்று கூறுகின்றாள். இவ்விரண்டு கருத்துக்களையும் ஒருசேர இணைத்து ஆற்றாமையை விவரிக்கும் தலைவியின் பேச்சில் ஆழ்வார் இவ்வாறு பாடுகின்றார்.

''யாமுடை நெஞ்சமும் துணையன்றுலோ
ஆபுகு மாலையும் ஆகின்றுலோ
யாமுடை ஆயன்தன் மனம் கல்லாலோ
அவனுடைத் தீங்குழல் ஈருமாலோ''[39] (9-9-5)

இன்னெரு குறளில், பிரிந்து வந்த தலைமகனெடு நிறையழிந்து கூடிய தலைவி தோழிக்கு அதன் காரணம் கூறுகையில் 'தன் நிறையாகிய அரணை அழிக்கும் படை, பல பொய்களைவல்ல கள்வனுகிய தலைவனுடைய பணி மொழியன்றே' என்று கூறுகின்றுள்.

''பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றேநம்
பெண்மை உடைக்கும் படை'' (1258)

ஏறக்குறைய இதே கருத்துப்பட இச்சொற்களைக் கொண்டே ஆழ்வாரும், 'பிரிந்த நிலையில் தன்னை வருத்துவன—தன் ஆவியை வேகும்படி செய்வன—அவன் செங்கனி வாயின் கள்வப் பணி மொழிகளே' என்று தலைவி பேச்சில் அமைத்துப் பாடுகின்றுர்.

''நின் செங்கனிவாயின் கள்வப் பணிமொழி
நினைதோறும் ஆவி வேமால்'' (10-3-4)

தன்நெஞ்சு தன்னைவிட்டு அது விரும்பியவாறே அவர் மாட்டுச் செல்லுதற்குக் காரணம் 'கெட்டார்க்கு இவ்வுலகத்து நட்டார் இல், என்னும் நினைவோ அல்லது நின்னியல்போ நெஞ்சே! கூறுக (1293) என்று நெஞ்சை நோக்கி ஒரு தலைவி பேசுகின்றுள். அவ்வாறே ஆழ்வார் பாடலிலும் தலைவியின் ஆற்றுமையைக் கூறும் மேற்குறித்த பாசுரத்தில் ஆழ்வாராகிய தலைவி தன் நெஞ்சினை நோக்கி,

''யாமுடை நெஞ்சமும் துணையன்றுலோ'' (9-9-5)

என்றும்

''நம் கண்ணன் கள்வம் கவர்ந்த அத்தனி நெஞ்சம்
அவன்கணஃதே''(9-9-7)

என்றும் பாடுவது ஒருபுடை ஒப்புமை உடையதாக அமைகின்றது.

நாணும் நல்லாண்மையும் தான் பண்டு பெற்றிருந்ததாகவும் இன்று அவற்றை இழந்து காமம் கொண்டவர் ஏறுகின்ற மடல் ஏறத் துணிந்ததாகவும் சொல்லுகின்றுன் ஒரு தலைவன் (1133). அவனுல் மடலேறுதல் முடியாது என விலக்கலுற்ற தலைவிக்கு அவன் கூறும் விடையிது. ஆழ்வார் ஆகிய தலைவியும் மடலேறத் துணிந்து, தன்னுடைய நாணையும் நிறையையும் கவர்ந்து

கொண்டதொடு தன் நெஞ்சையும் கூவிக் கொண்டு அத்தலைவன் —தேவபிரான்—நெடுந்தொலைவிலுள்ள வானுலகில் சென்று இருப்ப தாகவும் அதனால் உலகெங்கும் அலர் தூற்றிக் கொண்டு அடங்காப் பெண்ணாகத் தான் மடலூரத் துணிந்ததாகவும் பேசுகின்றார் (5-3-9). ஆண் பேச்சுக் கேற்ப ஆண்மை இழந்ததாகக் குறள் குறிப் பிடப் பெண் பேச்சிற்கேற்ப நிறை அழிந்ததாக ஆழ்வார் அமைக் கும் மாறுபாடு தவிர மற்ற யாவும் ஒத்திருப்பது நோக்கத்தக்கது.

இறைவனுக்கும் உயிர்களுக்கும் உள்ள உறவு முறை பலவற்றில் 'உயிர்க்கும் உடம்பிற்கும் உள்ள தொடர்பு போன்றது அது' என்பது வைணவ சித்தாந்தம் சிறப்பாக எடுத்துரைக்கும் ஒரு கருத்து. நம்மாழ்வாரும் அவ்வியல்பை 'உடல் மிசை உயிர் எனக் கரந்தெங்கும் பரந்துள்ளான்' (1-1-7) இறைவன் என்று பேசுவர். அவ்வாறே வள்ளுவர் வாக்கில் 'உடம்பிற்கும் உயிர்க்கும் உள்ள தொடர்பு ஒத்தது மடந்தைக்கும் எனக்கும் உள்ள தொடர்பு' என்று ஒரு தலைவன் பேச்சு அமைந்துள்ளது (1122).

இறுதியாக இன்னுமொரு முழுக்குறள் ஏறக்குறைய அப்படியே திருவாய் மொழியில் ஆளப் பெற்றுள்ளமையை நோக்குவோம். ஒரு தலைவியொடு புணர்ச்சி பெற்ற தலைவன் அதில் மகிழ்ந்து பாராட்டிப் பேசுகையில் வேறு வேறு காலங்களில் வேறு வேறு பொருள்களால் பெறும் இன்பங்கள் அனைத்தும் ஒரு காலத்து ஒரு சேர இவள் கண்ணே கிட்டின என்ற கருத்துத் தோன்ற,

> ''கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும்
> ஒண்டொடி கண்ணேயுள'' (1101) என்று பாராட்டுகின்றான்.

இக் குறளின் சொல்லமைப்பை ஒட்டியே ஆழ்வாரும்,

> ''கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவி
> கண்ட இன்பம்'' (4-9-10) என்று பேசுகின்றார். ஆழ்வார்

அதனைப் பாராட்டவில்லை. அவ்வின்பத்தினை விட்டுவிட்டு இறைவன் திருவடியைத் தாம் அடைந்த தன்மையைத் தான் கூறுகின்றார். எனினும் இன்பம் பற்றிக் குறிக்கையில் அமைந்த சொல்லமைப்பு ஒப்பு நோக்கத்தக்கது. வேறு ஒரு இடத்திலும் இறைவன்பால் பெறும் இன்பத்தைக் கூறுகையில் இச்சொற்களையே முறைமாற்றி,

"பலபல கண்டு உண்டு கேட்டுஉற்று மோந்து இன்பம்" (2-5-6) என்று அமைக்கின்ருர். இதுகாறும் காமத்துப்பால் குறட் பாக்களுடன் திருவாய்மொழிக்குள்ள ஒப்புமை கண்டோம்.

### பொருளும் அறமும்

இனி அறமும் பொருளும் பற்றிய பகுதியைக் காண்போம்.

பொருளின் சிறப்பை வள்ளுவர் பெரிதும் பாராட்டி உரைக் கின்ருர்.

"இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு" (752)

இதனையே இன்னும் சிறிது விளக்கமான முறையில் ஆழ்வார்,

"பொருள்கை உண்டாய்ச் செல்லக் காணில் போற்றியென் றேற்றெழுவர்
இருள் கொள் துன்பத் தின்மை காணில் என்னே என்பாரும் இல்லை" (9-31-)

என்கிருர். உலக மக்களின் குறைபாட்டைப் புலப்படுத்துவதற் காக ஆழ்வார் இதனை எடுத்துரைக்கின்ருர்; வள்ளுவர் பொருளின் சிறப்புணர்த்தி அதனைச் சேர்க்க வேண்டுமென்பதற்காகவே அவ்வாறு உரைக்கின்ருர். பெரியோர்களது துணை ஒருவர்க்கு அரிய பேறுகளிலெல்லாம் சிறந்த பேறு (443) என்றும், அது வன்மையுள் எல்லாம் மேலான வன்மை என்றும் குறள் (444) கூறுகின்றது. ஆழ்வாரும் இக்கருத்தினை உணர்ந்தவராய் அதனை ஏற்றுக் கொள்ளும் முறையில், பெரியார்க் கெல்லாம் பெரியராய இறைவனைச் சார்ந்ததனுல் தான் பெற்ற பேற்றைக் குறிக்கையில்,

"பெரியார்க் காட் பட்டக்கால் பெருதபயன் பெறுமாறு
வரிவாள்வாய் அரவணைமேல் வாட்டாற்ருன் காட்டினனே" (10-6-10)

என்று பாடுகின்ருர். இறைவனுக்கு ஆட்பட்ட காரணத்தால் அவன் தன்னைப் பற்றிக் கவிபாடும் பெருமையைத் தனக்கு நல்கிப் பெருமைப் படுத்தினுன்; இது தான் பெற்ற பெரும் பேறு என்று ஆழ்வார் உவந்து பாடுகின்றார்.

நீதி தவருது செவ்வனே மக்களைப் பாதுகாக்கின்ற மன்னன், மக்களால் இறைவனென்று கருதி மதிக்கப்படுவான் (388) என்று

அறிவுறுத்துகின்றார் வள்ளுவர். இக்கருத்தை உடன்படுவார் போன்று மன்னனுக்கும் காக்கின்ற கடவுளாகிய திருமாலுக்கும் உள்ள ஒற்றுமையை விளக்குகையில், போலி கண்டு வருந்தும் தலைவியின் நிலையைப் பேசும் தாய் பேச்சில்,

''திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்'' (4-4-8) என்று அமைக்கின்றார் ஆழ்வார்.

நாடு பற்றிப் பேசுகையில் திருவள்ளுவர் மிக்க பசியும் நீங்காத நோயும் அழிவு செய்யும் பகையும் அண்டாது இருப்பது அதன் இயல்பு என்கின்றார்.

'உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்,
சேரா தியல்வது நாடு' (734)

ஆழ்வார், உலகினின்று கொன்று உயிர் உண்ணும் விசாதி, பகை, பசி, தீயனவெல்லாம் கடிவதற்காகவே நேமிப்பிரான் தமர் எங்கும் பரந்துள்ளனர் என்று பாடுகின்றார் (5-2-6). நாட்டை நாடாகச் செய்யும் நல்லவரே வைணவர்—அடியவர்— என்பது அவர் கருத்தாகின்றது. ஒரு நாட்டிற்குத் தீமை செய்வன—நாட்டினின்று கடியப்படத்தக்கன எவை என்பதில் இருவர் கருத்தும் ஒன்றேயன்றோ?

தன் தலைவனைக் கண்டு தன் நிலைமை உரைத்து வருமாறு பறவைகளைத் தூது விடும் ஒரு பிராட்டியின் பேச்சு திருவாய்மொழியில் கீழ்க்காணுமாறு அமைகின்றது. அத்தலைவன் வானுலகில் உள்ளான்; அவன்பால் தூது அனுப்பித் தன்னிலை உரைத்து வந்தால் அப்பறவைகட்குத் தான் பொன்னுலக ஆட்சியையும் புவனி ஆட்சியையும் அளிப்பதாகக் கூறுகின்றாள் தலைவி (6-8-1). இங்கு அவள் முதலில் அளிப்பதாகக் கூறுவது பொன்னுலக ஆட்சியையே. அவளே புவனியில்தான் உள்ளாள். அணிமையில் உள்ள புவனியை விட்டுச் சேய்மையில் உள்ள ஆட்சியைத் தருவதாக முதலில் கூறுவான் ஏன் என்றதொரு கேள்வி எழுகின்றது. இதற்குக் காரணம் அவள் இன்று தெளிவாக இறைவனின் நிலையை உணர்ந்து இருக்கின்றமையால் அவட்கு வையத்தைக் காட்டிலும் வானம் அணிமையில் இருப்பதாகத் தெரிகின்றது போலும்! என்று நாம் எண்ண வேண்டியுள்ளது. இக்கருத்தை வள்ளுவர் தம் குறளில் நாம் காணுகின்றோம்.

"ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து" (353)

ஐயத்தின் நீங்கி மெய்யுணர்ந்தாருக்குத் தாம் இருக்கின்ற நில வுலகத்தினும் சென்று சேரக்கடவ வீட்டுலகம் அண்மையாதல் உடைத்து என்பது இதன் பொருள்.

'துறவு' பற்றிய இரு குறட்பாக்களின் கருத்தை, ஆழ்வார் அறிவுரை கூறும் திருவாய்மொழியில் அமைக்கின்றார்.

'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு' (350)

உலகப் பற்றுகளை விடுதற்கு வள்ளுவர் கூறும் வழி பற்றற்றவனான இறைவன் பற்றினைப் பற்றுதலே என்பது குறளின் பொதுக் கருத்து.

"அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்
செற்றது மன்னுறில் அற்று இறைபற்றே" (1-2-5)

என்ற உபதேசத்திலும் பற்று அறுத்தல் வேண்டுமென்பதும், இறைவனைப் பற்றுதலே அதற்கு வழி என்பதும் புலப்படுதல் காணலாம். இதே பதிகத்தில் வேறு ஒரு பாடலில் ஆழ்வார் 'நீர் நுமது என்னும் அகப்புறப் பற்றுகளை அடியுடன் மாய்த்து இறைவனைச் சேருங்கள்' (1-2-3) என்று அறிவுறுத்துகின்றார். இதே கருத்தைத்தான் வள்ளுவரும்,

"யான் எனது என்னும் செருக்கு அறுப்பான்
வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும்" (346)

என்று பாடுகின்றார். இதே திருவாய் மொழியின் தொடக்கம், 'வீடுமின் முற்றவும்' என்பது. எல்லாப் பற்றுகளையும் விடுங்கள் என்பது இதன் பொருள். இக்கருத்தையே திருக்குறளும் 'விடல் வேண்டும் வேண்டிய வெல்லாம் ஒருங்கு' (343) என்று செப்புகின்றது எனலாம்.

## இல்லறம்

தம் மக்களின் மழலைச் சொல் இன்பத்தை வள்ளுவர் பாராட்டி உரைப்பர். குழலிசை இனிது யாழிசை இனிது என்று சொல்லு வார்கள் தம் மக்களுடைய குதலைச் சொற்களைக் கேட்காதவர் என்று பொருள்படும் பாடலை அமைத்துள்ளார்.

''குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச் சொற்கேளா தவர்' (66).

ஆழ்வார் மணம் செய்து கொண்டு மக்களைப் பெருதவர். ஆயினும் இக்குறளில் ஈடுபட்டனர் போலும். திருவல்லவாழ் என்ற திவ்விய தேசத்தின் சோலை வளத்தைப் பாடுகையில் அங்குக் குழலிசை போலவும் யாழின் இசை போலவும் குளிர் சோலையுள் தேனருந்தி விட்டு மழலைவரி வண்டுகள் இசை பாடுகின்றன என்று அமைக் கின்ருர். அப்பாடல்,

''குழலென்ன யாழுமென்னக் குளிர்சோலையுள் தேனருந்தி
மழலைவரி வண்டுகள் இசைபாடும் திருவல்லவாழ்'' (5-9-9)

என்பது. இங்குச் சொல்லமைப்பு முறையில் ஒற்றுமையைக் காணலாம்.

பழியில்லாத பண்புடைய மக்களைப் பெற்ற பெரியோர்களை அவர் தம் எழு பிறவியிலும் தீயன தீண்டா என்று திருவள்ளுவர் பாடுகின்ருர் (62). அம்முறையில் ஆழ்வாரும் நாராயணன் அருள் பெற்ற காரணத்தால் தம்முடைய உறவினர்கள் கீழும் மேலும் ஏழு ஏழு பிறவிகளிலும் இறைவனுக்குத் தமர் ஆனுர்கள் (2-7-1) என்றும், 'உலக முண்டவன் உகந்து வந்து தன்னுட் புகுந்த காரணத்தால் கீழ் ஏழு பிறப்புகளிலும் மேல் ஏழு பிறப்புகளிலும் உள்ள தன் உறவினர்கள் துன்பங்களெல்லாம் நீங்கி ஒரு நாளும் விடியாத நரகத்தில் சேர்தலையும் நீங்கினர்' (2-6-7) என்றும் மகிழ்ந்து பாடுகின்ருர். நன்மக்களைப் பெற்ற நன்மை ஏழு ஏழு பிறவிக்கும் தொடர்வது போலத், தான் பெற்ற இறைவனருள் ஏழு ஏழு பிறவிகட்கும் நன்மை செய்தது என்று நன்மையின் விரிவு கூறுவதில் இரு புலவர்க்கும் ஒப்புமை இருத்தல் அறியத் தக்கது.

ஒரு கற்புடைப் பெண் தெய்வம் தொழாஅள் கொழுநனையே தெய்வமென்று தொழுது எழுவாள் என்று குறள் (55) தெரிவிக் கின்றது. ஆழ்வார் தெய்வத்தையே—மாயோனையே கணவனுக மதிக்கும் ஒரு பெண்ணைப் பற்றிப் பேசுகையில்,

'உன்னித்து மற்றொரு தெய்வம் தொழாள் அவனை அல்லால்'
(4-6-10)

என்று பாடுகின்ருர். இரண்டும் ஒன்று அல்லவா?

## சிலப்பதிகாரம்

முதல் தமிழ்க் காப்பியமான சிலப்பதிகாரத்தில் ஆய்ச்சியர் குரவையிலும் பிற இடங்களிலும் மாயோனைப் பற்றிய பல செய்திகள் அழகுறக் கூறப் பெற்றுள்ளன; அவன் புகழ் ஏத்தப் பெற்றுள்ளது. 'நாராயணா என்னா நா என்ன நா' என்றும், 'கரியவனைக் காணாத கண் என்ன கண்' என்றும் 'திருமால் சீர் கேளாத செவி என்ன செவி' என்றும் ஆய்ச்சியர் குரவையில் அமைந்த வாழ்த்துக்களின் பான்மையில் தான் ஆழ்வார் பாடுகின்ற. 'கற்பார் இராமபிரானை அல்லால் மற்றுங் கற்பரோ? என்றும், 'நாட்டில் பிறந்தவர் நாரணற் காளன்றி ஆள் ஆவரோ' என்றும், 'கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றும் கேட்பரோ' என்று வரும் பாடல்கள் (7-5) அமைந்துள்ளன என்பதில் ஐயமில்லை. சிலம்பு கானல் வரியில் தலைவி கூற்றாக அமைந்த பாடலில் அவன் தன்னை மறந்தாலும் தான் அவனை மறக்க இயலாது என்ற கருத்தில்,

'நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டேமால்'—கானல்வரி

என்று வருகின்றது. இக் கருத்தை ஒத்த முறையிலேயே ஆழ்வாரும் 'பலவாறாக நான் ஓலமிட்டு அழைத்தும் அவன் வரவில்லை; வராவிடினும் அவனுடைய திருவடிகள் என் சென்னிக்கு அழகு செய்வனவேயாம்' (4-3-6) என்று பாடுகின்றார். 'என்கோ' என்ற சொல்லாட்சி திருவாய்மொழியில் அமைந்திருப்பது போன்று சிலம்பிலும் இருக்கக் காணுகின்றோம்.[40]

## திருமந்திரம்

திருமூலர் பாடிய திருமந்திரம் மூவாயிரத்திற்கும் நம்மாழ்வார் பாடிய திருவாய்மொழி ஆயிரத்திற்கும் ஒரு சில ஒற்றுமைகள் உள்ளன. இரு புலவர்களும் தீர்க்கதரிசிகள்; அவர்கள் சென்ற நெறிகள் வேறு வேறானவை. ஆயினும் அந்நெறியிலமைந்த சில ஒற்றுமைகள் அவர் தம் நூல்களில் காணப் பெறுகின்றன. பாடல்களில் காணப்பெறும் சில தொடர் ஒற்றுமைகள் சிந்திக்கத் தக்கனவாக உள்ளன. சைவ சமயத்திற்குத் தமிழில் முதன் முதலில் தோன்றிய தத்துவநூல் திருமந்திரம். வைணவர்க்குத் தமிழில் உள்ள சிறந்த தத்துவம் உணர்த்து நூல் திருவாய்மொழியே. அக்காரணம் பற்றித்தான் அவ்வொற்றுமைகள் ஏற்பட்டன போலும். இரு நூல்களிலும் தத்துவமும் தோத்திரமும் உபதேசமும் இடம் பெறுகின்றன. திருமந்திரத்தின் தொடக்கத்தில் அமைந்த பாயிரத்தில் காணப்பெறும் மூன்று செய்திகள் நம்மாழ்வார்

வரலாற்ருேடும் செய்கையோடும் ஒத்துள்ளன. ஆழ்வார் இறைவனுல் 'மதிநலம்' அருளப் பெற்றவர் என்பதும், வேதத்தைத் தமிழில் செய்த வித்தகர் என்பதும், தன் மிக்க கருணையினுல் உலகவர்க்கு உபதேசம் தொடங்கினுர் என்பதும், தன் பாடல்களை அவர் 'ஒண் தமிழ்கள்' என்று கூறிக்கொள்கின்ருர் என்பதும் முன் சுட்டப் பெற்றுள்ளன. அது போன்றே திருமூலரும் தான் நந்தியின் அருள் பெற்றவர் என்றும், நந்தியே தனக்கு வழிகாட்டி[41] என்றும் கூறிக்கொள்கின்ருர். தான் 'வேதத்தைச் செப்ப வந்த தாகவும், ஆகமம் செப்பலுற்ற'[42] தாகவும் அவரே தெரிவிக்கின்ருர். திருமூலர் தம் கருணை உள்ளத்தை 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'[43] என்று அவர் பாடுவதால் நாம் தெளிவுற அறிய லாம். அதனுல்தான் ஆழ்வாரைப் போன்று அவரும் பலருக்கும் பலபல அறிவுரைகளைக் கூறுவதை நாம் காணுகின்ருேம்' ஆழ்வார் தன்னைக் கொண்டு இறைவன் தன் புகழ்களைப் பாடிக் கொண்டான் (7-9-2) என்று கூறுவது போலத் திருமூலரும் இறைவன் தன்னைப் படைத்ததே அவனைக் குறித்துத் தமிழ் நன்ருகச் செய்தற்காகவே[44] என்று பாடுகின்ருர். வேறிடத்தில் ஆழ்வாரும் தன் புகழ் ஏத்தவே இறைவன் தனக்கு அருள் செய்த தாகப் பாடுகின்ருர் (9-5-11).

இறைவனைப் பற்றிப் பாடுகையில் 'எங்கள் அண்ணல் பெருமையை யார் அறிவார்?' (81) என்று வியக்கின்ருர் திருமூலர்; ஆழ்வார் நான்முகன் செஞ்சடையான் என்ற இவர்களிலும் எம்பெருமான் தன்மையை அறியகிற்பார் யார்? (8-3-9) என்று கேள்வி எழுப்புகின்ருர்.

இனித் திருமந்திரத்தின் பிற்பகுதியில் திருவாய்மொழியோடு ஒத்ததாக அமைந்துள்ள சொல் தொடர்கள் சிலவற்றைக் காண் போம். ஆழ்வார் இறைவனைப் பாடுகையில்,

'ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன்' (2-5-10)

என்கின்ருர், திருமூலர்.

'பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல' (1872)

என்கின்ருர்.

'மெய் கலந்தாரோடு மெய் கலந்தான் மிகப்
பொய் கலந்தாருட் புகுதாப் புனிதன்' (2601)

என்கிருர் திருமூலர்.

ஆழ்வார்,

'மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க் கெல்லாம்
பொய்யனாகும் புறமே தொழுவார்க் கெல்லாம்' (9-10-7)

என்பர்.

'இல்லனுமல்லன் உளனல்லன் எம்மிறை'—திருமந்திரம் (3015)

ஆழ்வார்,

'உளனல்லன் இல்லையல்லன்' (2-5-10)

என்று பாடுகின்றார்.

## பக்தி

பக்தி பற்றிப் பாடுகையில் திருமூலர்,

"அடியார் அடியார் அடிய ர்க் கடிமைக்
கடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டேன்" (2624)

என்பர். ஆழ்வாரும் தான் அடியார்க் கடியனாக இருக்க விரும்பும் தன்மையை இரண்டு திருவாய்மொழிகளில் பேசுகின்றார்.

"அடியார் அடியார் தம்மடியார் தமக்
கடியார் அடியார்தம் அடியார் அடியோங்களே" (3-7-10)

என்கிறார்.

இறைவன் தன்னுள் வந்து இடம் கொண்ட காரணத்தால் தான் பெற்ற பேற்றை வியந்து ஆழ்வார் பாடுகின்றார்.

"முடியாத தென் எனக் கேல் இனி? முழுஉலகமும் உண்டான்
உகந்துவந்து
அடியேனுள் புகுந்தான் அகல்வானு மல்லன்" (2-6-7)

திருமூலரும் இதே கருத்துப்பட,

"ஆராலும் என்னை அமட்ட வொண்ணாதினிச்
சீரார்பிரான் வந்து என்சிந்தை புகுந்தான்" (2960)

(அமட்ட-மயக்க, அச்சுறுத்த) என்று பாடுகின்றார்.

மற்றுமோர் இடத்தில் அவன் தன்னை வந்தடைந்த தன்மையை ஆழ்வார்,

"திருமாலிருஞ் சோலை மலை என்றேன், என்னத்
திருமால் வந்து என் நெஞ்சு நிறையப் புகுந்தான்" (10-8-1)

என்கின்றார். திருமூலர் ஏறக்குறைய அதே போன்று, அவன் வாழும் மலையையன்றி அவன் பேரைச் சொன்ன அளவில் அவன் வந்து முன் நின்றதாகப் பாடுகின்றார்.

''சிவபெருமா னென்று நானழைத் தேத்தத்
தவபெருமா னென்று தான்வந்து நின்றான்'' (2971)

என்பது காண்க.

இறைவன் தன்னைச் சேர்த்துக் கொண்ட தன்மையைத் திருமூலர் இரும்பை அடைந்த நீர் போலத் தன்னை அவன் உள்ளே வாங்கிக் கொண்டான்; இழுத்துக் கொண்டான் என்று பாடுகின்றார் (2592). ஆழ்வாரும் இறுதித் திருவாய்மொழியில்,

''தீர இரும்புண்ட நீரதுபோல என்னாருயிரை
ஆரப் பருக எனக்கு ஆராவமுதானான்'' (10-10-5

என்று பாடுகின்றார். ஒரே உவமையை இருவரும் எடுத்துரைப்பது வியத்தற்குரியதொரு ஒப்புமையன்றோ! இவற்றினைக் கொண்டு ஒருவரைப் பார்த்து ஒருவர் பாடியிருக்க முடியுமென்று கூற இயலாது. ஏனெனில் இருவர் போக்குகளும் வேறு வேறாக உள்ளன. ஆயினும் ஏதேனும் ஒரு மூல நூலிலிருந்து இச்சில வொற்றுமைகள் அமைந்திருத்தல் கூடுமென்பதையும் உறுதியாக மறுப்பது இயலாததாக உள்ளது.

## அறிவுரைகள்

பற்றற வேண்டு மென்று எல்லாச் சமய நூல்களும் அறிவுறுத்தும். திருமூலர் 'பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்' (298) என்கின்றார். அவ்வாறே ஆழ்வாரும் பற்று அற்றது எனில் வீடு கிடைக்குமென்று கூறி அதற்கும் மேலே 'அற்று இறைபற்று' (1-2-5) என்று அறிவுறுத்துகின்றார். மேலும் இறுதிப் பகுதியில் 'பெரியார்க்கு ஆட்பட்டக்கால் பெறுதபயன் பெறுமாறு' (10-6-10) வாட்டாற்று இறைவன் தனக்குக் காட்டியதாகப் பாடுகின்றார். அம்முறையிலேயே திருமூலர் சுருக்கமாகப்,

'பெரியாருடன் கூடல் பேரின்பமே' (545) என்று பகர்கின்றார்.

இவை சில முக்கிய ஒற்றுமைகள். இன்னும் நுணுகிக் கண்டால் பல கருத்து ஒற்றுமைகள் தென்படுதலும் கூடும். அவற்றால் விளையும் பலனும் ஒன்றே. ஆகையால் அவற்றினைத் திரட்ட முயற்சி மேற்கொள்ளப் பெறவில்லை.

## தேவாரம்-அப்பர்

ஏழாம் நூற்றுண்டுப் புலவரான திருநாவுக்கரசர் தம் தேவாரத் திற்கும் திருவாய்மொழிக்கும் உள்ள ஒப்புமைகளைக் காண்போம். அப்பர் தேவாரத்தில் தத்துவக் கருத்து விளக்கம் மிகுதியாக இல்லை. மற்றபடி தோத்திரமும் உபதேசமும் அகப்பாடல் வகையும் உள்ளன. ஒவ்வொன்றிலும் சில வொப்புமைகள் காட்டப் பெறுகின்றன.

## இறை இயல்பு

இறைவனைப் பற்றிப் பலபடப் போற்றிப் பாடுகையில் அவன் உயர்வை நாவுக்கரசர்,

''மேலார்கள் மேலார்கண் மேலார் தாமே'' (ப. 383) என்றும்

''பெரியார் கட்கெல்லாம் பெரியாய் நீயே" (ப. 387) என்றும்

''தேவர்க்கும் தேவனுய் நின்ருய் போற்றி'' (ப. 419) என்றும் பாடுகின்ருர். இது நம்மாழ்வார் இறைவனை நோக்கி,

''மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்கும் தேவாவோ'' (8-1-5)

என்று பாடுவதை ஒத்ததே. முன் பிரிவில் எடுத்துக்காட்டியவாறு போலத் திருநாவுக்கரசர்,

''மெய்யானைத் தன்பக்கல் விரும்புவார்க்கு, விரும்பாத அரும்
பாவியர்கட்கு என்றும் பொய்யானை'' (ப. 440)

என்று பாடுவதும், ஆழ்வார்,

''மெய்யனுகும் விரும்பித் தொழுவார்க் கெல்லாம்
பொய்யனுகும் புறமே தொழுவார்க் கெல்லாம்" (9-10-7)

என்று பாடுவதும் ஒரே தன்மையனவாம். இவ்வாருக ஆழ்வார் இறைவன் இயல்புகளாகப் 'புண்ணியம் பாவம்' (6-3-4) என்று குறிப்பதும், நாவுக்கரசர், 'நல்வினையும் தீவினையுமானுன்' என்று இறைவனைப் பாடுவதும் ஒரே தன்மையனவே. முன் எடுத்துக் காட்டியவாறு போலவே "ஆணல்லன் பெண்ணல்லன் அல்லா அலியுமல்லன்''[46] என்பது இருவர் பாடல்களிலும் இடம் பெறு கின்றது. 'தன்னெப்பா ரில்லாதானை' (ப. 369) என்று படர்க்கை யிலும், 'தன்னெப்ப ரில்லாதானே', (ப. 397) என்று முன்னிலைப் படுத்தியும் நாவுக்கரசர் குறிக்கும் கருத்து ஆழ்வார் பாடல்களில்

'தன்னொப்பாரில்லப்பன்' (6-3-9) என்றும், 'ஒத்தாரை மிக்காரை இலையாய மாமாயா!' (2-3-2) என்றும் அமைந்துள்ளமை காணு கின்றோம். மற்றும் இறைவன் தம் நெஞ்சிலும் தாம் விரும்பும் திருப் பதியிலும் இருக்கின்றான் என்பதை இருவரும் பாடுகின்றனர்.

''கண்ணினாற் கழல் காண்பிட மேதெனில்
புண்ணியன் புகலூருமென் நெஞ்சுமே'' (ப. 224)

''திருக்கடித் தானமும் என்னுடைச் சிந்தையும்
ஒருக்கடுத்து உள்ளே உறையும் பிரான் கண்டீர்'' (8-6-2)

இறைவன் அன்பர்க்கு எளியவன்; பிறர்க்கு அரியவன் என் கின்றனர் இருவரும்.

''காட்சி பிறர்க்கெலாம் அரியர்; தொண்டர்கெளிபர்
ஐயாறரே'' (ப. 206)

''பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய
வித்தகன்'' (1-3-1)

அடியவர்கட்கு அப்போதைக்கப்போது ஆராவமுதமாக ஆரூரன் இருப்பன் (ப. 10) என்கின்றார் அப்பர். ஆழ்வார்,

''அப்பொழுதைக் கப்பொழுது என் ஆரா அமுதமே'' (2-5-4) என்று இறைவன் இயல்பை வெளியிடுகின்றார்.

## அடியவர் இயல்பு

ஆழ்வார், ''நீசனேன் நிறைவொன்று மிலேன் என்கண்
பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதிக்கே'' (3-3-4)

என்று தன்னைத் தாழ்த்திப் பேசுகின்றார். அப்பரும்,

''நிறைவிலேன் நேசமிலேன் நினைவிலேன்'' (ப. 117)

என்று தன் குறை கூறிக் கட்டற அருளுமாறு வேண்டுகின்றார்.

'நீசனேன்' என்றும் பாடுவர். (ப. 403).

## வழிபடு முறை

'வானோர் உலகமெல்லாமும் வந்து இறைஞ்சி மலர்கொண்டு நின்று போற்றும் வித்து அவன்' (ப. 396) என்று அப்பர் பாடு கின்றார். நம்மாழ்வாரும் தான் வழிபடும் இறைவனைக் குறிப்பிடு கையில் மாமலர், நீர், சுடர், தூபம் இவற்றைச் சுமந்து கொண்டு வந்து விருப்பத்தோடு வானவர்கள் தம் தலைவனோடும் வழிபட்டு

உயரும் இடம் திருவேங்கடம் (3-3-7) என்று பாடுகின்றார். மற்றொரு இடத்தில் அவன் திருவடிகள் மீது எட்டுத் திக்குகளிலுமுள்ள பூக்கொணர்ந்து ஏத்தி விருப்பத்தோடு தொண்டர்களாகிய தாங்கள் பாடியாட அவன் இவ்வுலகத்திற்கு வரவில்லையே (4-7-8) என்று ஏக்கத்தோடு ஆர்வம் தோன்றப் பாடுகின்றார். மன்னவராயினும் விண்ணவராயினும் அவர் புரியும் வழிபாட்டில், அக்காலத்தில் மலர் இடம் பெற்றமை இவ்விரு அடியவர் பேச்சால் விளங்கும். அவன் அருள் புரிதலைச் செப்பும் இடத்திலும் இருவர் பாடலிலும் ஒற்றுமை காணக் கிடக்கின்றது. அப்பர்,

"ஆவாவென் றருள்புரியும் ஐயாறன்
என்றென்றே நானரற்றி நைகின்றேன்" (ப. 384) என்பர்.

ஆழ்வார் பல இடங்களிலும் 'ஆவாவென்று அருள் செய்து அடியேனொடும் ஆனானே' (5-1-9) என்றும், 'ஆவாவென்று எனக்கு அருளி (1-4-1) என்றும், என்றுனைவன் அடியேனே' (1-5-6) என்றும் பாடுகின்றார். ஆவாவென்று இரக்கம் காட்டி அருள வேண்டுமென்று கேட்கும் மரபு அன்று இருந்தமை இதனால் தெளியலாம்.

## அறிவுரை

பிறர்க்கு உபதேசிக்கின்ற இடத்திலும் இருவர் பாடல்களிலும் கருத்தேயன்றிச் சொற்களும் ஒரே தன்மையதாக அமைந்துள்ளன.

"தொண்டராகித் தொழுது பணிமினோ
பண்டை வல்வினை பற்றற வேண்டுவீர்" (ப. 199)

என்று பாடுகின்றார் அப்பர். ஆழ்வார்,

"பாடுசாராவினை; பற்றற வேண்டுவீர்
...................................................
பாடியாடிப் பணிமின் அவன் தாள்களே" (9-10-11) என்றும்

"பண்டை வினையாயின பற்றோடறுத்து,
தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்"
(9-4-9)

என்றும் பாடுகின்றார். சொன்மாலை சூட்டுதலும் அவனைப் பணிதலில் ஒருமுறையே. ஆகவே அவனைத் தொழுது, பற்றும் பண்டை வல்வினையும் அறுமாறு செய்து கொள்ளலாமென்பதே இருவரும் வற்புறுத்தும் அறிவுரை.

## அகப் பாடல் சார்பு

தாயானவள் தன் மகளின் நிலையைத் தோழியரைப் பார்த்துக் கூறும் பாசுரத்தில் இருபுலவரும் பாடும் அடிகள் ஒரே தன்மையாக அமைந்துள்ளன.

"நங்கைமீர்இதற்கென் செய்கேன் நாளுமே" (ப.294)—அப்பர்

"நான் இதற்கு என்செய்வேன் நங்கைமீர" (4-2-8)

## தேவாரம்-சுந்தரர்

இவர் நம்மாழ்வாரின் சமகாலத்தவராகவோ அன்றிச் சிறிது பிற்பட்டவராகவோ இருந்தவராதல் கூடும்.[47] ஏழாம் திருமுறை யாக அமைந்துள்ள இவர்தம் பாடல்கள் ஆயிரம் உள்ளன. கால ஒற்றுமை காரணத்தாற் போலும் இவ்விரு புலவர் பாடல் நடையும் பல இடங்களில் ஒப்புமை மிகுதியும் பெற்றிருக்கின்றது. சில சொல்லாட்சி இருவர் பாடலிலும் ஒன்றுபோல் உள்ளது. அகச் சார்பான பாடல்கள் சுந்தரர் தேவாரத்திலும் ஓரளவு உள்ளன. பாடல்களில் சந்த வேறுபாடுண்டு; இயற்கை வருணனை உண்டு; ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும் பலன் கூறும் பாடலும் அமைந் துள்ளது. நகைச்சுவை அமையப் பாடுதல் சுந்தரர்பால் காணப் பெறும் தனிச் சிறப்பாகும்.

## இறை இயல்

இறைவனைப் பாடும் போது ஆரூரர்,

"சூழொளி நீர் நிலம் தீத்தாழ்வளி ஆகாசம்
வானுயர் வெங்கதிரோன் வண்தமிழ் வல்லவர்கள்
ஏழிசை ஏழ் நரம்பின் ஓசையை" (ப.216) என்று பாடுகின்றார்[5]

நம்மாழ்வார்,

"நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்
சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாய் அயனானாய்" (6-9-1)

என்றும், "முன் நல் யாழ்பயில் நூல் நரம்பின் முதிர் சுவையே" (2-3-7)

என்றும் பாடுகின்றார். ஏறக்குறைய இரண்டும் ஒரே கருத்துத் தானே. இறைவனை விளிக்கும் தொடர்களும் இருவர் பாடலிலும் ஒரே தன்மையவாக அமைகின்றன.

"தேனே இன்னமுதே திருமேற்றளி உறையும் கோனே"
(ப. 174)—ஆரூரர்

"தேனே இன்னமுதே என்றென்றே சில கூத்துச் சொல்ல"
(5-1-2)

அன்பர்கள் பொய்யாகப் புகழ்ந்தாலும் இறைவன் தன் கருணை யால் அதனையும் உண்மையென்றே கொண்டு அவர்க்கு அருள் புரிவான் என்பதை ஆரூரர் இவ்வாறு கூறுகின்றார்.

"பொய்யே யுன்னைப் புகழ்வார் புகழ்ந்தால் அதுவும்
பொருளாக் கொள்வானே" (ப. 172)

தன்னிலை பேசுகையில் இதே கருத்தமைய அவர்,

"பொய்யே செய்து புறம்புறம் திரிவேன் தன்னைப் போகாமே
மெய்யே வந்திங் கெனையாண்ட மெய்யா" (ப. 209)

என்று விளிக்கின்றார். இக்கருத்துக்கள் இதே போக்கில் மாறு பாடின்றி நம்மாழ்வார் பாடலிலும் அமைந்துள்ளன.

"பொய்யே கைம்மை சொல்லிப் புறமே புறமே ஆடி
மெய்யே பெற்றொழிந்தேன்" (5-1-1)

## வழிபடு முறை

சுந்தரர் ஆரூர் அமர்ந்த இறைவனைப் பாடுகையில் இரு பொழுதும் மலரிட்டு அவன் கோயில் சுற்றி வலம் வருதலைக் குறிப்பர் (ப. 215). ஆழ்வாரும் காலை மாலை கமல மலரிட்டு வழி படுதல் பற்றிக் குறிக்கின்றார் (9-10-1).[49] சொல்லாகிய மாலையால் இறைவனைத் தன்மனத்தில் கட்டியதாக ஆரூரர் பாடுகின்றார்.

"வாக்கென்னும் மாலை கொண்டு உன்னை என்மனத்து ஆர்க்
கின்றேன்" (ப. 231)

திருவாய்மொழியில் ஆழ்வார், 'நான் வாசக மாலைகொண்டு உன் அடி காண எத்தனை காலம் புலம்புவேன்' (3-8-10) என்றும்,

"சொல்லால் இசைமாலைகள் ஏத்தி உள்ளப் பெற்றேன்'(4-5-6)

என்றும் பாடுகின்றார். இரு கருத்தும் ஒத்தனவேயன்றோ?

## தம் தன்மை கூறல்

இடைமருது உறைகின்ற இறைவன் பால் தமக்கு உய்வகை கூறுமாறு வேண்டுகின்ற ஆரூரர் தம் குறைபாடுகளை இவ்வாறு

வெளியிடுகின்றார். 'நான் பிறர்க்குக் கொடுப்பதில்லை. குற்றங்களையும், பகைமையையும், வேட்கையையும், சினத்தையும் நான் விடுகின்றேனில்லை; என் ஐந்து புலன்களும் என் வசமல்ல.

''கொடுக்ககில்லேன் ஒண்பொருள் தன்னைக் குற்றம் செற்றம்
இவை முதலாக
விடுக்க கற்றிலேன் வேட்கையும் சினமும் வேண்டில்
ஐம்புலன் என்வசமல்ல'' (பக். 65)

ஆழ்வார் மிகச் சுருக்கமாக,

''இடகிலேன் ஒன்று அட்டகில்லேன் ஐம்புலன் வெல்ல
கில்லேன்'' (4-7-9)

என்று பாடுகின்றார். மற்றுமோரிடத்தில் ஆரூரர் அஞ்சைக் களத்தப்பனைப் பாடுகையில்,

''வெறுத்தேன் மனை வாழ்க்கையை விட்டொழித்தேன்''
(ப. 301)

என்கிறார்.

ஆழ்வாரும்,

''மடித்தேன் மனைவாழ்க்கையில் நிற்பதோர் மாயையை''
(10-8-3)

என்பர். இவ்வாழ்க்கையைப் பற்றிப் பேசுகையில்,

''மானிடப் பிறவி வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்''
(277) —ஆரூரர்

''இருள் தருமா ஞாலத்துள் இனிப்பிறவி யான் வேண்டேன்''
(10-6-1)

தான் அடியார்க்கு அடியனாக ஆக வேண்டுமென ஆரூரர் வேண்டுகின்றார்,

''அத்தா! ஆலங்காடா! உன் அடியார்க்கு அடியேன்
ஆவேனே'' (ப. 209)

வேறு இடத்தில் அவர் இறைவன் அடியவர், தம்மை ஆளுகின்ற தலைவர் என்றும் கூறுகின்றார்.

''ஆனைக் காவுடை ஆதியை நாளும்
இறைவனென் றடி சேர்வார் அம்மையும் ஆளுடையாரே''
(பக். 81)

ஆழ்வார்,

"ஆழிப்பிரான் தன்னைப் பணியுமவர் கண்டீர் நாளும் பிறப்பிடை தோறும்
எம்மை யாளுடை நாதரே" (3-7-2)

என்றும்,

"பொன்னாழிக்கை என்அம்மான் நீக்கமில்லை அடியார்தம்
அடியார் அடியார் எங்கோக்கள்" (8-10-10)

என்றும் பாடுகின்றார். முன்னவரினும் ஆழ்வாரின் உள்ளம் எல்லை வரை செல்லுகின்றது போலும்.

## உறவு

இறைவனுக்கும் தனக்கும் உள்ள தொடர்பைக் குறிப்பிடுகையில் காய்ந்த இரும்பில் நீர் வற்றிச் சுவரி விடுதல் போல் இறைவன் தன் உள்ளத்தில் ஒன்றுபட்டு விடுகின்றான் என்ற பொருளில்,

'ஏதிலன் மனத்துக்கு ஓரிரும்புண்ட நீரை' (ப-20)

என்று பாடுகின்றார் ஆரூரர். திருவாய்மொழி இறுதிப் பகுதியில் 'தீர இரும்புண்ட நீரது போல'த் (10-10-5) தன் உயிரானது முழுமையாக அநுபவிக்க இறைவன் அமுதமானான் என்று பாடுகின்றார் ஆழ்வார். 'நீரது உண்ட இரும்புபோல' என மாற்றிக் கூட்டிக் கொள்ள வேண்டும்.

## பயன் கூறல்

ஆரூரர் தான் உரைத்த தமிழ்ப் பாடல் வல்லார் வானுலகாள்பவர் என்கிறார்.

'ஆரூரன் உரைத்த, வழுவிலா மாலைவல்லார் வானோருலகாள்பவரே' (ப-165)

ஆழ்வார் தான் சொன்ன தமிழ் ஆயிரம் வல்லார் தொண்டராவர் என்றும், அன்னோர் பொன் விசும்பு ஆள்வர் என்றும் பலன் கூறுகின்றார்.

"சொல்லார் தமிழ் ஆயிரத்துள் இவை பத்தும்
வல்லார் தொண்டர் ஆள்வர் சூழ் விசும்பே" (10-8-11)

அறிவுரை

ஆரூரர் தன் நெஞ்சிற்கு உபதேசிக்கையில் நிலையாமையை அறிவுறுத்துகின்றார்; பற்றுவிடற்கு அவர் கூறுவது அது. அழியு மவரை விட்டு இறைவனைத் தொழ உள்ளத்தை அழைக்கின்றார்.

'பதியும் சுற்றமும் பெற்ற மக்களும் பண்டையரல்லர்
பெண்டிரும்
நிதியில் இம்மனை வாழும் வாழ்க்கையும் நினைப்பொழி
மடநெஞ்சமே' (ப-59)

ஆழ்வார் பிறர்க்கு உபதேசிக்கையில் காதல் என்பது யாதுமில்லை என்று வற்புறுத்தி அன்புடையரென்று எண்ணிக் கொண்டிருப்ப வரை விட்டு உண்மை அன்பரான இறைவனைப் பற்றுமாறு கூறுகின்றார்.

''கொண்ட பெண்டிர் மக்கள் உற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்டதல்லால் காதல் மற்று யாதுமில்லை''
(9-1-1)

ஆழ்வாரைப் போன்றே புலவர்களை நோக்கிப் பொய்மையாளரைப் பாடாது இறைவனையும் அவன் உறைவிடத்தையும் பாடுமாறு அறிவுறுத்தும் வேறு ஒரு புலவர் ஆரூரரேயாவர். இவ்விருவரும் அதற்கென ஒரு பதிகமே ஒதுக்கியுள்ளனர். கொடாத பொய்மை யாளரைப் பாடுதலும் இச்சகம் பேசுதலும் அவரைச் சார்ந்திருத்த லும் செய்யாது இறைவன் வாழும் புகலூரைப் பாடுக என்கிறார் ஆரூரர்.

''தம்மையே புகழ்ந்து இச்சை பேசினும் சார்விலும் தொண்டர்
தருகிலாப்
பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின்
புலவீர்காள்'' (ப.45)

குப்பை கிளறினாற் போன்ற செல்வத்தைப் பெறுதலாற் பயனில்லையென்றும், இல்லாத குணங்களை உள்ளனவாக ஏற்றிக் கூறி வள்ளல்களென்று சிலரைப் பாடுவதால் புலவர் தம் வாய்மைக்குத்தான் இழுக்கு என்றும் எடுத்துக் கூறி குறைவில்லா நிறைவுடையவனும் வேண்டிய வெல்லாம் தருபவனும் ஆன மணி வண்ணனைக் கவிபாடுமாறு புலவரை அழைக்கின்றார் ஆழ்வார் (3-9-5). இதனால் இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் பெற

லாம் என்கின்றனர் இருவரும். சோறும் கூறையும் தரும் என்று ஆரூரர் கூற ஆழ்வார் அவ்வாறு கூருது 'வேண்டிற்றெல்லாம் தரும்' என்று பொதுப்பட மொழிதலும், மெய் வருத்திக் கைசெய்து உய்ம்மின் என அறிவுறுத்தலும் (3-9-6) அழகு மிக்கதாகும். இவ் வியல்பு அவர்தம் வேறு கவிதைகளிலும் காணப் பெறுகின்றது. ஆரூர நாகைக் காரோணத்து இறைவனைப் பாடுகையில் தனக்குப் பொன்னுலான பூவும் வட்டிகையும் வேண்டுமென்றும், கறிகலந்த சோறு மூன்று வேளையும் வேண்டுமென்றும் பாடுகின்ருர் (ப-251). ஆனுல் ஆழ்வார்க்கோ,

> "உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம்
> கண்ணன் எம்பெருமான்" (6-7-1)

என்று ஆழ்வார் ஆய தலைவியின் தாய் கூறுவதாக அமைகின்றது ஓர் ஒப்பற்ற பாடல். இது வேறுபாடு. இதனுல் அவ்விரு வருடைய வாழ்க்கை இயல்பு நமக்கு ஒருவாறு புலப்படும்.

### ஊர் வருணனை

ஆரூரர் கலியநல்லூர் என்ற பதியைப் பாடுகையில் அவ்வூரில் வேதம் ஓதும் ஒலியும், பேரியும் முழவும் விழாக் காலங் களில் கொட்டுமொலியும், சிறுகுழந்தைகள் கூட்டமாகத் துள்ளிக் கொண்டு விளையாடுமொலியும் பெருகக் கேட்குமென்று (பக். 72) தெரிவிக்கின்ருர். இவ்வாறே ஆழ்வார் தென் திருப்பேரையைப் பாடுகையில் வேத ஒலியும் விழாவொலியும் பிள்ளைகளின் குழுக்கள் விளையாடுமொலியும் அருத திருப்பேரையை என்று சென்றுசேர்வன் என்றுபாடுகிருர்(7-3-1). பாடலில் அமைந்திருக்கும் கருத்துக்கள் மட்டுமின்றிச் சொல்லொற்றுமை பெரிதும் வியத்தற் குரியதாயுள்ளது.

### பாடல் நடையும் போக்கும்

ஆரூரர் திருவன் பார்த்தான் பனங் காட்டூர்ப் பதிகத்தில் ஒவ்வொரு பாடலிலும் இறைவன் இயல்புகளையும் பெருமைகளையும் எடுத்துரைத்து அத்தகையோனைச் சாராதார் சார்பு பயனற்றது (ப. 183) என்றும், அவ்வாறே அவனை உணர்தல், பேசுதல், பரவுதல், அவனடியாரொடு பயிலுதல், அவனை அறிதல், நினைதல், அவனடிமைக் கண் குழைதல்—ஆகிய இவ்வியல்புகளை ஒழித்து மற்ற வேறு பிறர்பாற் செய்யும் இவ்வுணர்தல் முதலியன பயனற்றவை என்றும் பாடுகின்ருர். ஆழ்வாரும் இதே பாங்கில்

கண்ணனைப் பற்றிப் பாடித் துள்ளி ஆடாதவர்களால் பயனில்லை (3-5-1) என்றும், புகழ்ந்து பாடிக்கொண்டு ஆரவாரத்தோடு ஆடாதவர் பிறப்பால் பயனில்லை என்றும் கூறுவதோடு மேலும் அவனை உணர்த்தல், அவனுக்கு நெஞ்சு குழைதல், உளம் குழைந்து ஆடுதல் முதலியன செய்வதன் சிறப்பையும் எடுத்து உரைக்கின்றார் ஒரு பதிகத்தில் (3·8). ஆரூரர் திரு ஆமாத்தூர்ப் பதிகத்தில்; தேடுவன் தேடுவன் என்றும், நாடுவன் நாடுவன் என்றும், மாடுவன்மாடுவன் என்றும் ஆடுவன் ஆடுவன் என்றும் நான்கு வரிகளிலும் அடுத்து வருமாறு அமைத்திருப்பது (ப. 220) ஆழ்வார் ஆடிஆடி பாடிப்பாடி, நாடிநாடி, வாடி வாடும் என வருமாறு அமைத்துள்ள தலைவியின் நிலை கூறும் தாய்ப்பாசுரத்தோடு (2-4-1) ஒப்புமை உடையதாகும். திருவாய்மொழியில் இவ்வொரு பாடல் மட்டும் இவ்வாறு அமைந்துள்ளது. ஆரூரர் இப்பாணியில் ஒரு பதிகமே அமைக்கின்றார்.

இவை தவிர இன்னும் சில சொற்றொடர் ஆட்சியும், சொல் வழங்கு முறையும் இருவர் நூல்களிலும் காணப் பெறும் பொது இயல்பாக உள்ளமை அக்காலத் தன்மையைக் காட்டுவதாகக் கோடல் சாலும்.

| | ஆரூரர் | | ஆழ்வார் | |
|---|---|---|---|---|
| 1. | அடிகளாகிய அடிகளே | (ப. 133) | அடியார் தம்மடியார் எம் அடிகளே | (3-7-9) |
| 2. | மண்ணுலகும் விண்ணுலகும் உம்மதே ஆட்சி | (ப. 247) | உலகம் மூன்றுடைய ஆட்சி | (8-1-1) |
| 3. | கட்டனேன் | (ப. 201) | கட்டமே காதல் | (7-2-4) |
| 4. | தீர்த்தன் | (ப. 244) | தீர்த்தன் | (2-8-6) |
| 5. | அர்ச்சித்தார் | (244) | அர்ச்சிக்கின்று | (10·2-6) |
| 6. | தன் பாடல்களைத் 'தமிழ்' எனல் | (ப. 245) | பந்தலையில் சொன்ன தமிழ் ஆயிரம் | (2-8-11) |

### திருவாசகம்

திருவாசகம் பாடிய மணிவாசகர் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டினர் என்பதே இன்று அறிஞர் பலரும் கண்டுள்ள முடிவு[48] இவர் நம்மாழ்வாருக்குச் சிறிது பிற்பட்டவராகலாம். இவர் தம் கவிதை

உள்ளம் உருக்கும் தன்மையது என்பதும், தத்துவங்கள் அதன் கண் இடம் பெற்றுள்ளன என்பதும், பல விளையாட்டு நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு பாடுவது இவர்தம் தனிச் சிறப்பு என்பதும், சில பகுதிகள் அந்தாதியாக உள்ளன என்பதும் அறிஞர் அனைவரும் ஒப்பும் செய்திகள். அன்னார்தம் திருவாசகத்திற்கும் ஆழ்வார்தம் திருவாய்மொழிக்கும் உள்ள ஒப்புமைகள் பல பெரும் பாலும் இறைவன் இயல் கூறுவதிலும் அடுத்து இறைவன் அடியாரை ஏற்றுக்கொள்ளும் முறையை வெளிப்படுத்துவதிலுமே அமைகின்றன. அவற்றைக் காண்போம்.

### அந்தாதி

மணிவாசகரின் திருவாசகத்தில் திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம் என்ற பகுதிகளும் மற்றும் சில பகுதிகளும் சேர்ந்து ஏறக்குறைய 210 பாடல்கள் அந்தாதியாக உள்ளன. திருவாய் மொழி முழுவதும் அந்தாதியாக அமைகின்றது.

### இறை இயல்

மணிவாசகர் இறைவனை ஆராஅமுதே என்று விளித்து அவன் தன்னை நீராய் உருக்கித் தன் ஆருயிராய் நின்றதாகப் பாடு கின்றார்.[49] ஆழ்வாரும் ஆராஅமுதே எனத் தொடங்கும் குடந்தைப் பதிகத்தில் நெடுமாலாகிய ஆரா அமுது தன் உடலை நீராய் அலைந்து கரைய உருக்குவதாகப் பாடுகின்றார்.(5-8-1). அடுத்து முன் எடுத்துக் காட்டியபடி இறைவன் பக்தர்க்கு எளியனாகவும் பிறர்க்கு அரியனாகவும் விளங்குகின்ற தன்மை யையும் இவ்விரு ஆசிரியர்களும் பல இடங்களிலும் எடுத்துப் பேசு கின்றனர்.

1. ''பக்தி வலையிற் படுவோன் காண்க''
(திருவாசகம். அண். வரி. 43)
''அளவறுப்பதற் கரியவன் இமையவர்க்கு, அடியவர்க்
கெளியான்'' (திருச்சத. 35)
''தன்னை யாவரும் அறிவதற் கரியவன் எளியவன்
அடியார்க்கு'' (ஆசைப்பத்-3)
''பத்துடை அடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய
வித்தகன்'' (திருவாய். 1-3-1)

2. ''பொய்யர்தம் பொய்யனை மெய்யர் மெய்யை''
(திரு. திருப்பொற்-12)

''மெய்யனாகும் விரும்பித் தொழுவார்க்கெல்லாம்
பொய்யனாகும் புறமே தொழுவார்க் கெல்லாம்''

(திருவாய். 9-10-7)

மற்றும் இறை இயல்பு பற்றிப் பேசுகையில் காணப்பெறும் ஒப்புமைகள்:

1. அருவமும் உருவமும் ஆனாய் (திரு. போற்றி. 194)
உருவும் அருவும் நீயே (திருவாய். 7.8. 10)
(5.10.6)

2. பேராயிர முடைப் பெம்மான் (திரு. போற்றி. 200)
ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமிலார்க்கு
ஆயிரம் திருநாமம் பாடி (திரு. திருத்தெள்--1)
நாமங்கள் ஆயிரம் உடையநம் பெருமான் (திருவாய். 5-9.11)
பேராயிரங் கொண்டதோர் பீடுடையன் (திருவாய். 5.3.1)

3. ஏழுலகும் முழுதாளி (திரு. குயில். 6)
மூவுல காளி (திருவாய். 7-2-10; and 8-9-5, 9-8-9)

4. பொல்லா மணியேயோ (திரு. ஆசை. 1.)
பொல்லாக் கருமாணிக்கமே (திருவாய் 7-6–5, 10·10-1)

5. வெளிய நீருடு மேனிவேதியன் (திரு. அச்சப்-4)
வெளியே நீறு சிறிதேயிடும் பெரிய கோலத்
தடங்கண்ணன் (திருவாய்.4.5-6)

6. ஆழ்வார் இறைவன் இயல்பு பேசுகையில் பல்வேறு வகைப் பட்ட மாறுமாறான பொருள்களாகவும் அவன் விளங்குகின்றான் என்று இரண்டு திருவாய் மொழிகளில் வியந்து பாடுகின்றார். அத் தன்மையில் ஒரு கூறு மாணிக்கவாசகர் பாடலிலும் அமைகின்றது.

''மெய்ம்மையும் பொய்ம்மையு மாயினார்க்கு
சோதியுமாய் இருளு மாயினார்க்குத்
துன்பமுமாய் இன்ப மாயினார்க்கு'' (திரு. திருப்பொற். 20)

''உண்மையுமாய் இன்மையுமாய்ப் பூத்தானே''
(திரு. திருவேசறவு. 8)

நல்குரவும் செல்வும்- (6-3) - மாயா வாமன ·(7-8)
திருவாய்மொழிகள்.

தன் இயல் கூறல்

1. நீசனேனை யாண்டாய்க்கு (திரு. திருச்சதகம். 6. 51)
நீசனேன் (திருவாய். 3-3-4)

2. சீலமின்றி நோன்பின்றிச் செறிவே இன்றி
அறிவின்றி (திரு. ஆனந்த-4)
சீலமில்லாச் சிறிய னேலும் (திருவாய். 4.7-1)
நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன் (திருவாய். 5-7-1)

## இறைவனுடன் உறவும் அவனை ஆட்கொண்ட நிலையும்

1. 'என் வாழ்முதலே' என இறைவனைக் குறிக்கின்றனர்.[51]

2. இறைவனை 'என் தொழுகுலமே' என்கின்றார் மணிவாசகர் (திரு. திருச்ச. 28)
ஆழ்வார் இறைவனை வழிபடும் அடியவர்களே தனக்கும் தன்னைச் சேர்ந்தவர்க்கும் 'தொழுகுலம்' என்று பாடுகின்றார். (திருவாய். 3-7-8)

3. "தன்னைத் தந்த என் ஆரமுதை" என்பர் மணிவாசகர் (திருப். புணர்ச்சி. 1)
'எனக்கே தன்னைத் தந்த கற்பகம் என் அமுதம்' ஆழ்வார். (திருவாய். 2-7-11)

4. "ஊனுருடல் புகுந்தான் உயிர்கலந்தான் உளம்பிரியான்" (திரு. உயிருண்ணி-2)
"என்உடலும் எனதுயிரும் புகுந்து ஒழியா வண்ணம்
நிறைந்தான்" (திரு. உயிருண்ணி.9)
"நானேயோ தவஞ்செய்தேன் சிவாய நம வெனப் பெற்றேன்
தானே வந்தென துள்ளம் புகுந்தடியேற்கருள் செய்தான்" (திரு. திருவேச. 10)

இவற்றையொத்த கருத்துக்களை ஆழ்வார் பாடலிலும் காணுகின்றோம்.

"என் முடிவு காணாதே என்னுள் கலந்தேனே?" (திருவாய். 2-5.8)

"என் நெஞ்சும் உயிரும் உள்கலந்து......அவையுண்டு தானே யாகி நிறைந்தானே" (திருவாய். 10.7.1)

"இன்றுவந்து பேரேன் என்று என் என்நெஞ்சு நிறையப் புகுந்தான்" (திருவாய். 10.8.2)

"தானொட்டி வந்து என்தனி நெஞ்சை வஞ்சித்து
ஊனொட்டி நின்று என்னுயிரில் கலந்து இயல்வான்" (திருவாய். 1.7.7)

5. இறைவன் தனக்கு இனிக்கின்ற தன்மையையும் அவன் தன் உள்ளத்தை உருக்கும் இயல்பையும் மணிவாசகர் இவ்வாறு பாடுகின்றார்.

"தேனையும் பாலையும் கன்னலையும் அமுதத்தையும் ஒத்து
ஊனையும் என்பினையும் உருக்காநின்ற ஒண்மையனே"
(திரு. நீத்தல். 21)

ஆழ்வாரும்,

"தேனும் பாலும் கன்னலும் அமுதுமாகித் தித்திப்ப
யானும் எம்பிரானை ஏத்தினேன்" (திருவாய். 4 3.10)

என்று அதே பொருள்களை அம்முறையிலேயே அடுக்கிப் பேசுகின்றார். வேறு ஒரு இடத்திலும் அவனைக் குறிப்பிடுகையில் இவ்வாறே, தேனை நன்பாலைக் கன்னலை அமுதை என்று பாடுகின்றார் ஆழ்வார். (திருவாய். 8.4.11)

6. 'தழலது கண்ட மெழுகது போலத்' தொழுது உருகுவதாகப் பாடுகின்றார் மணிவாசகர். (திரு. போற்றி, 60, 61)

ஆழ்வாரும் பல இடங்களில் இதே உவமையை ஆளுகின்றார். மாயன் செய்த மாயங்களை எண்ணுந்தோறும் தன் உள்ளம், 'எரிவாய் மெழுகொக்கும் நின்றே' என்கிறார், (5-10-5).

7. இன்னொரு ஒப்புமை, கடலும் நாவாயும் பற்றியது. ஆனால் இருவரும் அதனைப் பயன்படுத்துமுறை வேறுபடுகின்றது. நடுக்கடலுள் தான் அழுந்திய காலை பெருந்துறை என்னும் தோணி கிடைத்து அதனைச் செலுத்த அக்காலை இறைவன் தன் கோலத்தைக் கழுக்குன்றிலே வந்து காட்டித் தன்னை ஆட்கொண்டதாக மணிவாசகர் பாடுகின்றார் (4). பெருந்துறையில் குருவாகவந்து ஆண்டவன் செய்த நன்மையை அவர் பாராட்டுகின்றார். ஆனால் ஆழ்வார் கடலுள் அழுந்தும் நாவாயையே உவமை சொல்லுகின்றார். அந்த நாவாயில் இருக்கின்றவராகப் பிறவிக்கடலுள் அழுந்தும் தன்னைக்கொண்டு, தனக்கு உதவத் தேவார் கோலத்தோடு இறைவன் தோன்றியருளியதாகப் பாடுகின்றார். உவமை ஒன்றே. ஆனால் பயன்படுத்து முறையில் நடுக்கடலுளும் தோணி பயன் தந்ததாக மணிவாசகர் பாடக் கடலில் நாவாயும் பயன்படவில்லை என்கிறார் ஆழ்வார். (5-1-9).

முறையிடல்

இறைவனை நோக்கி, அவன் தன்னை ஆட்கொள்ள வேண்டுமென்றும் தான் அவனை அடைக்கலமடைவதாகவும் பாடுகையில் மணிவாசகர் அரியதோர் உருவகம் அமைக்கின்றார். 'இறைவா! நான் உன் அருள் அமுதை வாரிக்கொண்டு விழுங்குகின்றேன். அப்பொழுது எனக்கு விக்கிற்று நல்விதியின்மையால். தேன் போன்ற தண்ணீரைத் தந்து நீயே அதனைப் போக்கி என்னை உய்யக் கொள்ள வேண்டு'மென்று பாடுகின்றார்.[52] அவனை அடைக்கலமடைவதால் அது அவன் கடமை என்று அவர் அமைக்கின்றார். அவர் ஆளும் சொற்களையே ஆழ்வார் பாடலிலும் காணுகின்றோம். ஆனால் ஆளும் முறை வேறுபடுகின்றது. கண்ணிற்பட்டால் அவனை வாரிக்கொண்டு விழுங்குவேன் என்று ஆழ்வார் ஆர்வமுற்றார். ஆனால் அவன் இவரினும் அதிகமாக ஆர்வம் கொண்டு விரைந்துவந்து இவரை முற்றிலும் பருகி விட்டதாகப் பாடுகின்றார். இப்படிச் செய்தவன் மேகத்தை ஒத்த பண்பும் நிறமும் உடைய காட்கரைக் கண்ணுள்ள அப்பன் என்பது அவர் பாடல் (9-6-.0). இறைவனும் ஆழ்வாரும் ஒருவரே ஆகையால் ஆழ்வார் விழுங்கினாலும் அவர்க்கு விழுங்காதே விக்கல் தோன்றினாலும் அவன் (இறைவன்) பருகினால் இவர்தம விக்கல் நீங்கிவிடும் போலும். இதில் ஒரே தன்மையான சொற்கள் வரினும் அவற்றை அமைப்பதில் இரு புலவர்தம் தனிச்சிறப்புக்களும், கவிதா சக்தியும் தெற்றென விளங்குதல் காண்க.

2. இன்னொரு பாடலில் இறைவன் இரக்கம் காட்டாத நேரத்தில் அவனை நோக்கி இவ்வாறு முறையிடுகின்றார் மணிவாசகர்.

"ஒன்றுக்கும் பற்றாத கடையனான என்னைமுன் உய்யக் கொண்டாய்; உன் கருணை இன்று இல்லாது போய்விட்டதா என்ன? என் பல குற்றங்களையும் குணமாகக் கொண்டால் என்ன கெட்டுவிடும்? இரங்குவாயாக'[53] என்று வேண்டுகின்றார். ஆழ்வாரும் அதே தன்மையில், அன்று குன்றமெடுத்து நின்று ஆயரையும் ஆனிரைகளையும் காத்தவனை நோக்கி இன்று தனக்கு உதவாமையால் அவன் கருணையற்று விட்டதா? (9-4-3) என்று மயங்குவதாகப் பாடுகின்றார். அவன்பால் கருணை குறைந்து போய்விட்டதா என்றும் அல்லது அவன் கருணை தனக்கு மட்டும் இல்லாது போய் விட்டதா என்றும் இரு பொருளும் கொள்ளும்படியே இரு பாடல்களும் உள்ளன.

3. மணிவாசகர் தன் ஆசையை இவ்வாறு வெளியிடுகின்றார். 'இறைவா! உன்னுடைய முகவொளி நோக்கி உன் முறுவல் நகையைக் காண நான் மிகவும் ஆசைப்பட்டேன்! என்னை உன்பால் அழைத்துக் கொள்க' என்பது அது.

"முகவொளி நோக்கி முறுவல் நகை காண
அத்தா! சால ஆசைப்பட்டேன்" (திருவாசகம் ஆசை-6)

ஆழ்வாரும் தலைவி நிலையில் நின்று பேசுகையில் தலைவனாகிய இறைவன் தன் சிற்றிலை அழித்தது தக்கசெயல் அன்று என்று எடுத்துரைத்துவிட்டுத் தங்கள் சிற்றிலையும் சிறு சோற்றையும் கண்டும் உண்டும் முகவொளி திகழ முறுவல் செய்து நிற்க வேண்டும்; அவ்வாறு செய்கின்றானில்லையே என்று கூறுவதாகப் பாடுகின்றார்.

"நின் முகவொளி திகழ முறுவல் செய்து நின்றிலையே"[54]

4. மணிவாசகர் திருப்பெருந்துறையுறை சிவன் தன் உடலை இடங்கொண்டு தனக்கு ஆனந்தம் அளித்த தன்மையை நினைந்து அவனுக்குத் தன்னால் செய்யக்கூடிய கைம்மாறு ஒன்றுமில்லை என்று பாடுகின்றார்.

"எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யான் இதற்கிலன் ஓர் கைம்மாறே" (திரு. கோயில்-10)

ஆழ்வார் பொருளல்லாத தன்னைப் பொருளாக்கி அடிமை கொண்டதற்குச் சீவரமங்கலநகர் உறையும் இறைவனுக்குச் செய்யக்கூடிய கைம்மாறு அறியாத தம் தன்மையை அறிவிக்கின்றார் (5-7-3). அவன் பாதங்களையே உபாயமாகவும் (ஆறாகவும் சரணாகவும்) தந்தமைக்கு ஒரு கைம்மாறும் இல்லை; தம் உயிரும் அவனதே என்றும் கூறுகின்றார்.

"உனக்கு ஓர் கைம்மாறு நான் ஒன்றிலேன்"[55]
(திருவாய் 5-7-10)

## இன்னும் சில ஒற்றுமைகள்

### வாழ்த்துவது ஏன்?

வானவர்கள் இறைவனை வாழ்த்துவது தாம் உயர்ந்த வாழ்வு பெறுதற்காக என்கிறார் வாசகர். அவ்வாறே ஆழ்வார் தன்னையே

உட்படுத்தித்தான் எம்பிரானை ஏத்தியதாகவும் அது தான் உய்தற் பொருட்டுச் செய்ததெனவும் பாடுகின்றார்.

''வாழ்த்துவதும் வானவர்கள்தாம் வாழ்வான்''
(திரு. சதகம். 2-15)

''யானும் எம்பிரானை ஏத்தினேன் யானுய்வானே''
(திருவாய். 4-3-10)

வணங்குவது எதனால்?

இறைவனை வணங்குவதென்பதும் யாவர்க்கும் வாய்ப்ப தொன்றன்று. அதற்கு அவனது அருள் வேண்டும் என்பர். மணிவாசகர் ''அவனருளாலே அவன் தாள் வணங்கி'' (திரு. சிவபு. 18) என்கிறோம். ஆழ்வார் அவனது அருளால் அவனை அடைதற் பொருட்டு விரும்பினேன். அவ்விருப்பம் பிறந்ததும் அவனது திருவருளாலே என்று கூறுகின்றார்.

''அவனது அருளால் உறற் பொருட்டு என்
உணர்வினுள்ளே இருத்தினேன், அதுவும் அவனது
இன்னருளே'' (திருவாய். 8-8-3)

## வழிபடுமுறை

அக்காலத்து வழிபாட்டு முறையில் மலர் முக்கிய இடம்பெற்ற தென்பது இருவர் பாடல்களிலும் புலப்படுகின்றது. ஆழ்வார் பல இடங்களில் அதனைப் பன்னிப்பன்னிப் பேசுகின்றார். மணிவாசகர் எதிர்மறையில் வைத்து,

'பன்மலர் பறித் தேத்தேன்' (திரு. அதிச.5) என்கிறார்.
'காலந்தோறும் பூப்பறித் தேத்த கில்லேன்' (4-7-9) என்று பாடுகின்றார் ஆழ்வார்.

## முடிவு-பலன்

மணிவாசகர் சென்னிப்பத்தில்,

''சோதியான் துய மாமலர்ச் சேவடிக்கண் நம்சென்னி மன்னிச் சுடரும்'' என்று பாடுகின்றார். இப்பதிகம் முழுவதும் இப்படியே அமைகின்றது. ஆழ்வார் தம் பாடலை ஒருவன், ''நித்தலும் விண்ணபபம செய்தால் இறைவன் கழல் அன்னோன் சென்னி பொரும்'' (1-9-11) என்று பதிக இறுதிப் பாடலின் பலன் கூறுகின்றார்.

## சில சொல்லாட்சி

| மணிவாசகர்-திருவாசகம் | ஆழ்வார்-திருவாய்மொழி |
|---|---|
| 1. சுறந்த பால் (சிவபுராணம்) | (8-1-7, 8-5-10) |
| 2. கிற்றிலேன் கிற்பன் உண்ணவே (திருச்சதகம்-5) | கிற்பன் கிலேன் என்றிலேன் (3-2-6) |
| 3. தென்னு தென்னு என்று தெள்ளேனங்கொட்டாமே (தெள்ளே. 9,19) | தென்னுதென எனவண்டு முரல் திருவேங்கடம் (3-9-1) |
| 4. கூவிக் கொள்ளாய் (திரு.ஆசை2) | (திருவாய் 10-10-3) |
| 5. அறுசமயம் பணிவகை செய்து (திரு. திருவார் 3) | பரமன் பணித்த பணிவகை (10-4-9) |
| 6. ஆவ என்றருளாயே (திரு எண்ணப்பதி.6) | அடியேற்கு ஆவா என்னுயே (6-10-3) |
| 7. அறையோ (திரு. திருவெண்பா.5) | (திரு.5.1.1) |
| 8. தொழுதெழுதல் (திரு. போற்றி.1) | (திரு. 1.1.1.) |

9. திருவாசகம் திருக்கழுக்குன்றப் பதிகத்தில் பிணக்கி, இணக்கி, உணக்கி, கணக்கில் என்று நான்கு வரிகளின் தொடக்கம் அமைவதும், திருவாய்மொழி மின்னிடை மடவார்ப் பதிகத்தில் அதேபோல் பிணக்கி, கணக்கில், இணக்கி, உணக்கி என்று வருவதும் (6-2-8) தற்செயலாக அமைந்தது என்று கொண்டாலும் ஒப்புமைதானே.

இதுகாறும் விரிவாகப் பல பக்கங்களில் எடுத்துக் காட்டிய ஒப்புமைப் பகுதிகள் இரு பயன் கருதியன. ஒன்று நம்மாழ்வார் தம் பாடல்கள் அவர்க்கு முன்னிருந்த அருந்தமிழ்ப் புலவர்தம் நெறியை ஒட்டியனவே; அவர்தம் இலக்கியப்புலமை ஆழமானது. பரந்து விரிந்தது என்று உணர்த்துவது. மற்றொன்று ஆழ்வார் தமிழ்நாட்டில் வாழ்ந்த காலத்தை ஒட்டிச் சமய எழுச்சி ஒன்று தோன்றியிருந்தது; அந்த இயக்கத்தில் முழுப்பங்கு கொண்டு அதனை நிறைவுடையதாக்கித் தலைமையிடம் பெற்ற கவிஞர் திலகம் நம்மாழ்வார்; அது அவர் பாடல்கள் அவர் காலச் சமய அறிஞர் பாடல்களோடு கொண்டுள்ள ஒப்புமைகளால் ஓரளவு விளங்கும் என்பதாம்.

தமிழின் தொடக்ககால இலக்கியம் காதலையும் வீரத்தையும் பற்றிய சிறப்பான தனிப்பாடல்களைக் கொண்டிருந்தது. பின்னர்ச் சங்ககால இயற்கைக் காதல் பற்றிய கற்பனை நயம் செறிந்த கவிதைகளும் தன்னியல்பான வீரப்பற்றிய பாடல்களும் குறையத் தொடங்கின. சமணர் பௌத்தர் வரவாலும் ஆட்சி மாற்றங்களாலும் வேறு பிற காரணங்களாலும் தமிழ் இலக்கியம் அறம் கூறும் நூல்களை மிகுதியும் பெற்றது. ஒன்றிரண்டு காப்பியங்களும் தோன்றின. அறநூல்கட்குத் தளர்ச்சியும் மாற்றமும் அமைவது அடுத்த காலம். அப்போது பக்தி இயக்கம் தமிழ் நாட்டில் தழைத்து ஓங்கியது. அதன் பயனாக எழுந்த இலக்கிய நயமமைந்த பாடல் எத்துணையோ பல. சைவ வைணவக் கவிஞர் பாடல்கள் பிற்காலத்தில் தொகுக்கப்பெற்றன. ஆழ்வார் அவ்வியக்கம் தந்த ஒரு முழுமணி என்பது உணரத்தக்கது.

இவர் சங்ககால இயற்கைக் காதலை தெய்வீகக் காதலாக மாற்றி அதற்கு மீண்டும் புத்துயிர் தந்து சுவை மிகும்படி செய்தார். பலர் அவ்வழிச் சென்றிருந்தாலும் அதனைப்பல கூறுகளும் அமைய முழு அளவில் ஒரு முறைப்படி கவிதையில் அமைத்துச் சிறப்பித்தமை இவர்பால் காணப்பெறுகின்றது. அறநூல்களில் தலைமையிடம் பெறுவது திருக்குறள்; அது அறநெறியின் உட்பொருளையும் சமூக நலனையும் இல்லற இன்பவாழ்வினையும் விளக்குவது. இம்முப் பகுதிகளிலும் திருவாய்மொழி எத்துணையளவு குறளோடு ஒத்துள்ளது என்பது காட்டப்பெற்றது. பக்தி இயக்கத்தின் தொடக்க காலத்தில் உள்ளமுருகி இறைவனைப் பாடும் பாடல் அமைந்தன. அவற்றில் சமய எழுச்சியும் ஆர்வ மிகுதியும் இருத்தல் இயல்பே. அதற்குமேலும் தத்துவக் கருத்துக்களை-மெய்ப்பொருட் கருத்துக்களைப் பிணைத்துத் தம் கவிதையைச் சிறப்புடையதாக்குகின்றார் ஆழ்வார். இறைஇயல்பும், வழிபடு முறையும், அடியவர் நிலைமையும், அடைய விரும்பும் பேறும், தடையும் முதலானவை பற்றிய தத்துவக் கருத்துக்களை வேண்டிய அளவு விளக்கிச் செல்கின்றார். திருவள்ளுவர், திருமூலர், திருநாவுக்கரசர், சுந்தரர், மணிவாசகர் பாடல்கட்கும் நம்மாழ்வார் பாடல்கட்கும் உள்ள ஒற்றுமையால் ஆழ்வார் தம் காலத்துப் புலவர்கள், தத்துவவாதிகள் இவர்களிடையே வகித்த உயர்நிலையை அறிதல் கூடும்.

ஆழ்வார் மற்ற புலவர்களைப் பின்பற்றியும் அவர் முறைகளை ஒட்டியும் தம் பாடலைப் பாடினர் என்பதோ அல்லது மற்றவர் ஆழ்வாரைப் பின்பற்றினர் என்று அறுதியிட்டு உரைப்பதோ இந்

நூலாசிரியர் நோக்கமன்று. அதற்கு நேர்மாறுனது அவர் எண்ணம். இவர்காலப் புலவர் அல்லது சற்றே முன்னர் வாழ்ந்த புலவர் பாடல்களோடு உள்ள ஒற்றுமை வியப்பளிப்பதாயுள்ளது. சமகாலப் புலவர் பாடல்களோடு உள்ள ஒற்றுமை அளவில் மிகுந்தும் நெருங்கிய தன்மையதாயும் உள்ளது. யார் யாரிடம் கடன் பெற்ருர் என்று கூறுவது கடினம். துணிந்து இன்னுர் இன்னுரைப் பார்த்துப் பாடினுர் என்று கூறுவதிலும் தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி என்ற நூலாசிரியர் தரும் விருப்பு வெறுப் பற்ற கருத்தை ஒத்துக்கொள்வது சாலச் சிறந்தது. "ஆழ்வார் களும் திருமுறைகளை ஆக்கிய கவிஞர்களும் கி.பி. ஆரும் நூற்ருண்டிலிருந்து பத்தாம் நூற்ருண்டு வரையிலுள்ள ஐந்நூறு ஆண்டு காலத்தில் இருந்தார்கள். ஆகையால் அவர்களின் பாடல்களின் அமைப்பிலும், ஓசைப்பண்பிலும், வாக்கின் மென்மை யிலும், கற்பனை முறைகளிலும், சொல்லடைவிலும், கவிதை நடை யிலும், இசைத்தமிழின் சிறப்பியல்புகளிலும் பொதுமையிருப்பதில் விந்தையொன்றும் இல்லை."[56] எவர் உயர்ந்தவர் எவர் தாழ்ந்தவர் என்பது கேள்வியன்று. பாடலின் நயமும் உயர்வும் படிப்பவர் தாமே உணர்ந்து அனுபவிக்கவிட்டு விடுவதே நன்று.

இப்பகுதியின் மற்ருெரு நோக்கம் சமயநெறியை அணுகும் முறையிலுள்ள ஒருமைகளை எடுத்துக் காட்டுவதே. இவ் வொருமைப்பாடு ஆழ்வாரின் தமிழ் நெஞ்சினை அறிய உதவு கின்றது. இவர் காலத்தில் எதனையும் தமிழில் தரவேண்டும் என்ற உணர்வு பொங்கி எழுந்திருத்தல் கூடும். அதனுல்தான் பலரும் 'தமிழ்' எனத் தனித்துக்கூறி மகிழ்கின்றனர்.

ஆழ்வார் வடமொழி வல்லுநரும் மகிழுமாறு மறைப்பொருளை ஐயமற அருந்தமிழில் தந்த தமிழ்ப்பெருங் கவிஞர். புத்தர், வயது வந்தபின் ஆசையை வெறுத்து ஞானம் பெற்று உலகிற்கு அறிவுரை வழங்கியவாறு இளமையிலேயே விளங்கிய 'மிகுஞானச் சிறு குழவி' இவர்; சங்கரர் சில ஆண்டுகளே வாழ்ந்தாலும் பாரத நாடெங்கும் சுற்றித் திரிந்து அத்துவிதக் கொள்கையை நிலை நாட்டியது போன்று இவர் வைணவக் கொள்கையைத் தமிழில் ஆணித்தரமாக எடுத்து விளக்கி வெற்றிகொண்ட 'நிறைஞானத் தொரு மூர்த்தி'. தம் அறிவுரைகள் பிற்காலத்தவர்க்கும் அவ்வாறே கிட்ட வேண்டுமென்றும், அன்னுர் இறைவனை உள்ளம் குழைந்து இசையொடு பாடிப் போற்றி ஒய்வுபெற வேண்டுமென்றும் எண்ணி

அவற்றை அழியாத கவிதையில் அந்தாதியாகத் தந்த தீர்க்கதரிசி அவர்தம் காலத்தின் தன்மை கவிதையில் நிழலிட்டாலும் புலவர்க்குக் கூறும் அறிவுரையாலும் தத்துவத்தைத் தமிழிற்கூறும் சிறப்பாலும் தம் காலக் கவிஞர்க்கெல்லாம் தலைமை தாங்கும் தகுதி சான்ற வான் கவிஞராக விளங்குகின்ருர் என்பது இவ்வொப்புமைகளை நுனித்து நோக்குவார்க்கு விளங்காமற் போகாது.

## அடிக்குறிப்புகள்

1. இலக்கியக் கொள்கை-ரெனே வெல்லக்கும் ஆஸ்டின் வாரனும், 1963- பக் 358
2. தொல்காப்பியம்-அகத்திணை இயல்-சூ 5
3. தொல்காப்பியம்-புறத்திணை இயல் சூ 5
4. திருக்குறள்-388
5. பெரும்பாணுற்றுப்படை-உருத்திரங்கண்ணனுர்-வரி 373
6. பெரும்பாணுற்றுப்படை-உருத்திரங்கண்ணனுர்-வரி 402
7. திருவாய்மொழி (5-10-9), (2-2-3)
8. மதுரைக்காஞ்சி-மாங்குடி மருதனுர்-வரி 236, 37
9. மலைபடுகடாம்-பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனுர்-553 –56
10. திருமுருகாற்றுப்படை—நக்கீரர்-வரி 185
11. திருவாய்மொழி (4-7-1), (5-1-7)
12. திருமுருகாற்றுப்படை—நக்கீரர்-வரி 278
13. திருவாய்மொழி—(5-5-10), (1-5.7), (4–10-9)
14. பரிபாடல்—நல்லச்சுதனுர்—பாடல் 21, வரி 68–69
15. திருவாய்மொழி (5-9-1)
16. திருவாய்மொழி (6-10-2)
17. பரிபாடல்—குன்றம்பூதனுர்—பாடல் 9, வரி 33, 34
18. பரிபாடல்—கடுவன் இளவெயினனுர்--பா 3, வரி 11, 62
19. கண்ணிநுண் சிறுத்தாம்பு—மதுரகவி ஆழ்வார்-தனியன், பாடல் 8, 9

20. பரிபாடல்—கீரந்தையார்—பாடல் 2, வரி 75
21, திருவாய்மொழி (5-2.2), (10-1-7), (3-3-1), (10-9)
22. பரிபாடல்—கடுவன் இளவெயினனார்—பா-3 வரி 2
23. திருவாய்மொழி (5.8.7) பார்க்க (6-3-7), (7-10-5,) (10-4-9), (10-6-1)
24. பரிபாடல்—க. எயினனார்—பா.3 வரி 63-68
25. பரிபாடல்—க. எயினனார்—பா 3 வரி 72
26. பரிபாடல்—க. எயினனார்—பா 3 வரி 77-80.
27. பரிபாடல்—கடுவன் இளவெயினனார்—பா 4. வரி 56
28. பரிபாடல்—கடுவன் இளவெயினனார்—பா 4 வரி 70
29. பரிபாடல்—கடுவன் இளவெயினனார்—பா 13 வரி 7-9
30. சிலப்பதிகாரம்—இளங்கோவடிகள், 11-43முதல் 51
31. இராமாவதாரம்—கம்பன்—அவதாரம், பா. 13
32. பரிபாடல்—நல்லெழுரியார்—பா. 13 வரி 50, 51
33. பரிபாடல்—நல்லெழுரியார்—பா. 13 வரி 63
34. பரிபாடல்—இளம்பெருவழுதி—பா. 15—வரி 48
35. திருவாய்மொழி—ஈட்டின் தமிழாக்கம்—புருடோத்தம நாயுடு பு.ரா, தொகுதி-6, 1955— பக்.56
36. திருவாய்மொழி (10-10-9), (2-8-10), (10-5-3)
37. திருவாய்மொழி (2.6.2), (3-10-10), (4-7-1), (48-6), (3-10-8)
38. திருவாய்மொழி (1-6-3), (2-3-2), (6-3-9)
39. திருவாய்மொழி பார்க்க (9-9-8,10), (10-3-5)
40. சிலப்பதிகாரம்—இளங்கோவடிகள், மணிபறம்,வரி 77-79
41. திருமந்திரம்—திருமூலர்—பாயிரம் பா 67, 68
42. திருமந்திரம்—திருமூலர்—பா 77, 73
43. திருமந்திரம்—திருமூலர்—பா 85
44. திருமந்திரம்—திருமூலர்—பா 81
45. தேவாரம்—அப்பர்—
46. தேவாரம்—அப்பர்—பக், 400 திருவாய்மொழி—(2-5-10)

47. ஒன்பதாம் நூற்றுண்டு என்பர் தஞ்சை சீனிவாசபிள்ளை, டி. ஏ. கோபிநாதராவ், டாக்டர், இராசமாணிக்கனர். திருமுறைவரலாறு—வெள்ளை வாரணம்—8ம் நூற்றுண்டு என்பர்.

48. பன்னிரு திருமுறை வரலாறு—வெள்ளை வாரணம். க., பக் 104

49. சிவபுராணம்—மாணிக்கவாசகர்—வரி 67, 69

50. திருவாய்மொழி (5-3.1) பார்க்க (1-3-4), (3-9-7), (10.2,3) (10-1-2),

51. திருவாசகம்—திருச்சதகம்—மணிவாசகர்—பா. 23, 29, 40 திருவாய்மொழி—(2-3-5)

52. திருவாசகம்—அடைக்கலப்பத்து—பா 10

53. திருவாசகம்—குழைத்தபத்து—பா 3

54. திருவாய்மொழி—(6-2-9), (9.2.5)

55. திருவாய்மொழி (5-7-10,) பார்க்க (7-9-10), (8-1-10)

56. தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி—ஏ.வி. சுப்ரமணிய அய்யர், 1971—பக்-201

# முடிவுரை

இவ்வாசிரியர் தமக்கென முதலில் அமைத்துக்கொண்ட நோக்கமும் அதனால் ஆய்வில் நேர்ந்த வரையறைகளும் குறித்த ஒரு சிறுகுறிப்புடன் இவ்வாய்வு முடிவுறும்.

பொருள்பற்றி எண்ணாமல் பாடலின் புறஅமைப்புப்பற்றி மட்டும் ஆய்வது இயலுமா என்பது தொல்லையான தொரு கேள்வி எனினும் திருவாய்மொழியின் இலக்கிய நயம் குறித்ததுதான் இங்கு எடுத்துக்கொண்ட ஆய்வு. இந்நோக்கத்தை முதன்மையாகக் கொண்டு திருவாய்மொழியின் அமைப்பு, நடைஇயல், கவிதைநயம் இவை குறித்துக் கூடிய அளவு அலசப்பெற்றுள்ளது. நடையும் செய்யுளமைப்பும், கூறப்பெறும் சிறந்த பொருளின் தொடர்புடனேயே எண்ணிப் பார்க்க வேண்டியிருத்தலின் ஆங்காங்குப் பொருள் பற்றியும் பேசப் பெற்றிருக்கின்றது. மெய்யுணர்வுக் கவிதை ஆய்வில் சிக்கல் பகுதியும் உண்டு. ஏனெனில் மனிதன் தன் அளவைக்கொண்டே பரம்பொருளினைக் குறித்துப் பேச வேண்டியிருத்தலின்.

நம்மாழ்வாரைத் தொன்றுதொட்டு வரும் மரபுடன் தொடர்பு படுத்துப் பார்க்கையில் மாறுபாடுகளையும் ஒப்புமைகளையும் நூற் கருத்துக்களுடன் இணைத்தே நோக்க வேண்டியுள்ளது. இதனால் சில இடங்களில் சில பகுதிகள் கூறியது கூறலாகக்கூடத் தோன்றலாம். ஆனால் அவை தவிர்க்க முடியாத நிலையில் தெளிவு கருதியே அமைக்கப் பெற்றுள்ளன.

இவ்வாய்வு பிற சமய அறிஞர்களின் கவிதை நூல்களையும் இலக்கிய நோக்கில் ஆராயத் தூண்டுமெனின் ஆசிரியரின் ஒரு

நோக்கம் நிறைவேறியது போலாம். தமிழில் பக்தி இலக்கியங்களைப் பாடிய புலவர்கள் ஆன்மீகத் துறையில் உயர்ந்து விளங்கியவர் மட்டுமல்லர்; அவர்கள் தலைசிறந்த கவிஞர்களாகவும் திகழ்ந்தவர் என்பது இவ்வாய்வினால் தெரியவரும். எனவே அவர் தம் கவிதையை உணர்ந்து கொள்வது அவரது தத்துவ விளக்கத்தை அறிந்து கொள்வதோடு உறுதியாக வாழ்வின் விடுதலைக்கும் துணையாம் என்பது தெளிவாகும்.

